

# லெனின்

# நூல் திரட்டு

சோவியத் அரசாங்கத்தின்
உடனடிப் பணிகள்

அமெரிக்கத் தொழிலாளர்களுக்கு
எழுதிய கடிதம்

சோவியத் ஆட்சியதிகாரம் என்பது என்ன?

பாட்டாளி வர்க்க சர்வாதிகார சகாப்தத்தில்
பொருளியலும் அரசியலும்

3

# வி. இ. லெனின்

# நூல் திரட்டு

## மூன்றும் பாகம்



முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ

## பதிப்பாளர் குறிப்பு

நான்கு பாகங்களில் வெளியிடப்படும் இந்தத் தமிழ்ப் பதிப்பு, வி.இ. லெனின், முழு நூல் திரட்டு, ஐந்தாவது ருஷ்ய மொழிப் பதிப்பிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது.


**В. И. Ленин**

ИЗБРАННЫЕ ПРОИЗВЕДЕНИЯ

Часть третья

*На тамильском языке*





Л $\frac{10102-484}{014(01)-78}$ 676—78

சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

## பொருளடக்கம்

# சமரசங்கள் குறித்து

அரசியல் துறையில் சமரசம் என்கிற சொல், இன்னொரு கட்சியுடன் உடன்பாடு செய்து கொள்வதற்காக சில கோரிக்கைகளை விட்டுக்கொடுப்பது, தன்னுடைய கோரிக்கைகளில் ஒரு பகுதியைக் கைவிடுவது என்பதைக் குறிக்கிறது.

போல்ஷிவிக்குகளைப் பற்றி சாதாரணமாய் நிலவும் கருத்து என்னவெனில்—அவர்களை அவதூறு செய்கிற பத்திரிகைகள் ஊக்கி வளர்த்துள்ள கருத்து இது—போல்ஷிவிக்குகள் யாருடனும் சமரசம் செய்ய என்றைக்கும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பதே.

புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் கட்சி என்கிற முறையில் நமக்கு இந்தக் கருத்து பெருமையளிப்பதாயிருக்கிறது; ஏனெனில், புரட்சியின், சோஷலிஸத்தின் அடிப்படையான கோட்பாடுகளிடம் நமக்குள்ள விசுவாசத்தை நமது பகைவர்களுங்கூட ஒத்துக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது என்பதை இது நிரூபிக்கிறது. இருப்பினும் இந்தக் கருத்து தவறு என்பதை நாம் குறிப்பிட்டாக வேண்டும். பிளாங்கியக் கம்யூனிஸ்டுகளின் கொள்கை அறிக்கை (1873) பற்றிய தமது விமர்சனத்தில், "சமரசங்கள் கூடாது!"[1] என்கிற அவர்களின் பிரகடனத்தை எங்கெல்ஸ் கேலிசெய்தது முற்றிலும் நியாயமே ஆகும். இது ஒரு வெற்றுச் சொல் என்றார் அவர், ஏனெனில், சந்தர்ப்பங்கள் போராடும் கட்சிமீது அடிக்கடி தவிர்க்க முடியாதபடி சமரசங்களைத் திணிக்

கின்றன, மேலும் ''கடனைப் பகுதி பகுதியாகப் பெறுவதை'' என்றைக்கும் ஏற்கமாட்டோம் என்று மறுப்பது அபத்த மாகும். மெய்யான புரட்சிக் கட்சியின் கடமை எல்லா சமரசங்களையும் கைவிடுவது சாத்தியமல்லவெனப் பிர கடனப்படுத்துவதல்ல, ஆனால் அவை தவிர்க்க முடியாதவை யாகிவிடும்போது, எல்லா சமரசங்களினூடேயும் தனது கோட் பாடுகளுக்கும், தமது வர்க்கத்துக்கும், தனது புரட்சிகர நோக்கத்துக்கும், புரட்சிக்கு வழியைச் செப்பனிடுதல், புரட்சி வெற்றி பெற மக்களுக்குப் போதமளித்தல் ஆகிய தனது பணிக்கும் விசுவாசமாய் இருந்துவரச் சக்தி பெற்றிருப்பதேயாகும்.

எடுத்துக்காட்டாக, மூன்றாவது நான்காவது டூமாவில்[2] பங்கெடுத்துக் கொள்ள ஒத்துக்கொண்டது ஒரு சமரச மேயாகும், தற்காலிகமாகப் புரட்சிகரமான கோரிக்கை களைக் கைவிடுவதேயாகும். ஆனால் இந்தச் சமரசம் முற்றி லும் நம் மீது நிர்ப்பந்தமாகச் சுமத்தப்பட்டதேயாகும்; ஏனெனில், சக்திகளின் பரஸ்பர நிலையானது நாம் வெகு ஜனப் புரட்சிப் போராட்டத்தை நடத்துவதைத் தற்காலி கமாக அசாத்தியமாக்கி விட்டிருந்தது, மேலும் இந்தப் போராட்டத்துக்குத் தயாரிப்பு செய்யும் பொருட்டு நாம் நீண்ட காலம் இப்படிப்பட்ட ஒரு ''பன்றிப் பட்டியின்'' உள்ளேகூட இருந்து வேலை செய்யத் திறமை பெற்றிருக்க வேண்டியிருந்தது. ஒரு கட்சி என்கிற முறையில் போல்ஷிவிக்குகள் இப்பிரச்சினையை இவ்விதம் அணுகியது முற்றிலும் சரியே என்பதை சரித்திரம் நிரு பித்துள்ளது.

இப்பொழுது எழும் பிரச்சினை தன்னிச்சையான சமர சமே அன்றி நிர்ப்பந்தமாய்த் திணிக்கப்படும் சமரசமல்ல.

வேறு எந்த அரசியல் கட்சியையும் போலவே, நமது கட்சியும் தனக்கு அரசியல் ஆதிக்கம் கிடைப்பதற்காகப் பாடுபட்டு வருகிறது. நமது குறிக்கோள் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம். புரட்சியின் ஆறு மாத காலம் இந்தக் கோரிக்கையானது இந்தக் குறிப்பிட்ட புரட்சியின் நலன்களையொட்டி சரியானதே, தவிர்க்க

இயலாததே என்று மிகத் தெளிவாக, பலமாக, ஏற்கத்தக்க விதத்திலே நிரூபித்துள்ளது; ஏனெனில், வேறு எவ்வழியிலும் மக்கள் ஒரு ஜனநாயகப் பூர்வமான சமாதானத்தை என்றைக்கும் பெற முடியாது, விவசாயிகள் நிலம் பெற முடியாது, முழுமையான சுதந்திரம் (முழுநிறை ஜன நாயகக் குடியரசு) பெற முடியாது. நமது புரட்சியின் ஆறு மாத நிகழ்ச்சிகளால், வர்க்கங்களின், கட்சிகளின் போராட்டத்தால், ஏப்ரல் 20 — 21, ஜூன் 9 — 10, 18 — 19, ஜூலை 3 — 5, ஆகஸ்டு 27 — 31 தேதிய நெருக்கடிகளின்[3] வளர்ச்சியால் இது நிரூபிக்கப்பட்டுள்ளது.

ருஷ்யப் புரட்சி இவ்வளவு திடீரெனவும், தனி வகையிலும் திருப்பம் பெற்றுவருவதின் காரணத்தால், நாம் ஒரு கட்சி என்கிற முறையில், தன்னிச்சையான சமரசம் செய்து கொள்ள முற்படலாம்—நமது நேரடியான, பிரதானமான வர்க்க விரோதியாகிய முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் செய்து கொள்ள முடியாதுதான், ஆனால் நமக்கு நெருங்கிய நிலையிலுள்ள எதிரிகளாகிய, ''ஆட்சிபுரிகிற'' குட்டி முதலாளித்துவ-ஜனநாயகக் கட்சிகளாகிய சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுடனும்[4] மென்ஷிவிக்குகளுடனும்[5] சமரசம் செய்து கொள்ள முன்வரலாம்.

ஒரு விதிவிலக்காக மட்டுமே, இந்தக் குறிப்பிட்ட நிலைமையின் விசேஷத்தால் மட்டுமே—இது மிகவும் குறுகிய காலத்துக்குத்தான் நீடிக்கும் என்பது வெளிப்படை — இந்தக் கட்சிகளுடன் நாம் ஒரு சமரசம் செய்து கொள்ள முன்வரலாம். அவற்றுடன் சமரசம் செய்து கொள்ள வேண்டும் என்றுதான் நான் கருதுகிறேன்.

அனைத்து அதிகாரமும் சோவியத்துக்களுக்கும் சோவியத்துக்களுக்குப் பொறுப்பான சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகளின் அரசாங்கமும் என்கிற ஜூலைக்கு முந்திய நமது கோரிக்கைக்கு திரும்பிச் செல்வதே நாம் செய்து கொள்ள முன்வரும் சமரசம்.

இப்பொழுது, இப்பொழுது மட்டுமே, சில நாட்களுக்கு மட்டுமே, அல்லது இரண்டொரு வாரங்களுக்கு மட்டுமே, இப்படிப்பட்ட அரசாங்கம் முற்றிலும் சமாதான பூர்வ

மான வழியிலே நிறுவப்பெற்று வலுப் பெற முடியும். அநேகமாக ருஷ்யப் புரட்சி முழுவதும் சமாதானபூர்வமாக முன்னேறுவதை இது சாத்தியமாக்கலாம், சமாதானத்தையும் சோஷலிசத்தின் வெற்றியையும் நோக்கிச் செல்லும் உலக இயக்கம் வெகுவாய் முன்னேற மிகச் சிறந்த வாய்ப்பினை அளிக்கக் கூடும்.

என் கருத்தில், உலகப் புரட்சிக்காகவும், புரட்சி வழிமுறைகளுக்காகவும் போராடுவோரான போல்ஷிவிக்குகள் புரட்சியின் சமாதான பூர்வமான இந்த வளர்ச்சிக்காக வேண்டி—இது சரித்திரத்தில் மிகமிக அபூர்வமான வாய்ப்பு, மிகமிக உயர்மதிப்புக்குரிய வாய்ப்பு, எப்போதாவது ஒரு தடவைதான் கிடைக்கிற வாய்ப்பு—இந்தச் சமரசத்துக்கு ஒத்துக்கொள்ளலாம், ஒத்துக்கொள்ளவும் வேண்டும்.

அந்தச் சமரசம் பின்வருமாறு அமைவதாயிருக்கும்: அரசாங்கத்தில் தாங்கள் பங்கெடுப்பதாக போல்ஷிவிக்குகள் கோராமலும் (பாட்டாளி வர்க்கத்தின், ஏழை விவசாயிகளின் சர்வாதிகாரம் அமையாத வரையில் சர்வதேசியவாதிகளுக்கு இது சாத்தியமில்லை), உடனடியாக அதிகாரம் பாட்டாளி வர்க்கத்துக்கும் ஏழை விவசாயிகளுக்கும் மாற்றப்பட வேண்டுமென்று கோராமலும், இந்தக் கோரிக்கைக்காகப் போராடுவதில் புரட்சிகர வழிமுறைகளைப் பயன்படுத்தாமலும் இருப்பார்கள். ஒரு நிபந்தனை—இது வெளிப்படை, சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுக்கும் மென்ஷிவிக்குகளுக்கும் இது புதிதல்ல—என்னவெனில் பிரசாரத்திற்கு முழு சுதந்திரம் வேண்டும், மேற்கொண்டு தாமதங்கள் செய்யாமல், அல்லது குறித்த தேதிக்கு முன்பேகூட அரசியல் நிர்ணய சபை கூட்டப்பட வேண்டும்.

மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும், அரசாங்கக் கூட்டணி என்ற முறையில் (சமரசம் ஏற்பட்டு விட்டது என்று வைத்துக்கொண்டால்), சோவியத்துக்களுக்கு மட்டுமே முற்றாகப் பொறுப்புள்ள ஒரு அரசாங்கத்தை அமைக்க ஒத்துக் கொள்வார்கள், சோவியத்துக்கள் ஊராட்சியிலும் வட்டார ஆட்சியிலும் எல்லா அதிகாரத்தையும் எடுத்துக் கொள்ளும். இதுவே ''புதிய'' நிபந்

தனையாக இருக்கும். உண்மையிலேயே முழுமையான பிரசார சுதந்திரம் இருக்குமாதலாலும், சோவியத்துக் களின் அமைப்பிலும் (புதிய தேர்தல்கள் மூலம்) அவற்றின் செயல்பாட்டிலும் புதிய ஜனநாயகம் உடனடியாக நிறுவப் படும் காரணத்தாலும், புரட்சி சமாதானபூர்வமாக முன் னேறும், சோவியத்துக்களில் கட்சிப் போராட்டம் சமா தானபூர்வமாகத் தீர்க்கப்படும் என்கிற நம்பிக்கை பெற்று போல்ஷிவிக்குகள் வேறு எந்த நிபந்தனையையும் முன் வைக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

இது ஏற்கனவே அசாத்தியமாகி இருக்குமோ? இருக் கலாம். ஆனால், நூற்றில் ஒன்றாக வாய்ப்பு இருந்தாலும், அந்த வாய்ப்பை நடைமுறையாக்கிக் கொள்ளும் முயற்சி பயன் உள்ளதே.

''உடன்பாடு காணும்'' இரு தரப்பினரும்—அதாவது, ஒருபுறம் போல்ஷிவிக்குகளும், மறுபுறம் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளுமான கூட்டணியும்—இந்த ''சமரசத்தால்'' பெறக்கூடிய லாபம் என்ன? இரு தரப்பினருக்குமே எந்த லாபமும் கிடைக்கவில்லையென்றால், அந்த சமரசம் அசாத்தியம் என்பது அங்கீகரிக்கப்பட வேண்டும், அதற்கு மேல் பேசுவதற்கு ஒன்றுமில்லை. எவ்வளவு தான் கடினமானதாக இந்த சமரசம் இன்று (ஜூலை—ஆகஸ்டுக்குப் பிறகு, ''சமாதானபூர்வமான'', தூங்கிவழிகிற காலத்தில் இருபது ஆண்டுகளுக்குச் சமான மானவை இந்த இரண்டு மாதங்கள்) இருந்தபோதிலும் அதை நடைமுறையில் காண்பதற்கு ஒரு சிறு வாய்ப்பு இன்னமும் இருக்கிறது என்றே நினைக்கிறேன். காடேட்டு களுடன்[6] சேர்ந்து அரசாங்கத்தில் பங்கெடுப்பதில்லை என்று சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் எடுத்துள்ள முடிவு இந்த வாய்ப்பைத் தந்திருக்கிறது.

போல்ஷிவிக்குகள் தம்முடைய கருத்துக்களை முற்றி லும் சுதந்திரமாகச் சொல்வதற்கும், உண்மையிலேயே முழுமையான ஜனநாயகத்தின் கீழ் சோவியத்துக்களில் செல்வாக்கு பெற முயல்வதற்கும் வாய்ப்பு பெறுவார்கள். போல்ஷிவிக்குகளுக்கு இந்தச் சுதந்திரம் உண்டு என

''எல்லோருமே'' இன்று வார்த்தையளவில் ஒப்புக்கொள்கிறார்கள். எதார்த்தத்திலோ, முதலாளித்துவ அரசாங்கத்தில் அல்லது முதலாளித்துவ வர்க்கம் பங்குகொள்கிற அரசாங்கத்தில், சோவியத்துக்கள் அல்லாத மற்ற எந்த அரசாங்கத்திலும், இந்தச் சுதந்திரம் சாத்தியமற்றது. ஒரு சோவியத் அரசாங்கத்தில் அப்படிப்பட்ட சுதந்திரம் சாத்தியமே (நிச்சயமாக இருக்கும் என்று நாம் சொல்லவில்லை, சாத்தியம் என்றே சொல்கிறோம்). இப்படிப்பட்ட கடினமான காலத்தில் இப்படிப்பட்ட சாத்தியப்பாட்டிற்காக, சோவியத்துக்களில் இன்றுள்ள பெரும்பான்மையினருடன் சமரசம் செய்துகொள்வது பயனுள்ளதேயாகும். உண்மையான ஜனநாயகத்தைக் கண்டு நமக்குப் பயப்படுவதற்கு ஒன்றும் கிடையாது, ஏனெனில் எதார்த்தம் நம் தரப்பில் இருக்கிறது, நமக்கு எதிரியாகவுள்ள சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சிக்குள்ளும், மென்ஷிவிக் கட்சிக்குள்ளும் வளர்ந்து வரும் போக்குகளே நமது நிலை சரியென்று நிரூபிக்கின்றன.

மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் லாபமடைவார்கள், எப்படியெனில் வெளிப்படையாக மிகப் பெரிய பெரும்பான்மையான மக்களின் ஆதரவோடு அவர்கள் தங்களுடைய கூட்டணியின் வேலைத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கு எல்லா வாய்ப்பும் உடனே பெறுவார்கள், மேலும் சோவியத்துக்களில் தங்களுக்குள்ள பெரும்பான்மை நிலையை அவர்கள் ''சமாதானபூர்வமாகப்'' பயன்படுத்திக் கொள்ளவும் வாய்ப்பு பெறுவார்கள்.

இந்தக் கூட்டணியிலிருந்து அநேகமாக இரண்டு குரல்கள் கேட்கக்கூடும்தான்; ஒரு கூட்டணி என்பதினாலும், முதலாளித்துவ வர்க்கத்தையும் பாட்டாளி வர்க்கத்தையும்விட எப்போதும் குட்டி முதலாளித்துவ ஜனநாயகம் குறைந்த அளவுக்கே ஒரே சீரானது என்பதினாலும் அது கதம்பத் தொகுப்பாகவே இருந்து வருகிறது.

ஒரு குரல் சொல்லக்கூடும்: ''போல்ஷிவிக்குகளும் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கமும் போகிற அதே பாதையை நாம் பின்பற்றிச் செல்ல முடியாது. எப்படியிருந்தாலும்

அது அளவுக்கு மிஞ்சிக் கோரும், வாய்வீச்சு மூலமாக ஏழை விவசாயிகளை அது கவர்ந்து இழுத்துக் கொள்ளும். அது சமாதானத்தையும் நேசநாடுகளிடமிருந்து முறித்துக் கொள்வதையும் கோரும். அது சாத்தியமில்லை. முதலாளித் துவ வர்க்கத்தாருடன் இருப்பதில் நாம் மேலான நிலை யிலேயே இருக்கிறோம், பத்திரமாயும் இருக்கிறோம்; என்ன இருந்தாலும், நாம் அவர்களிடமிருந்து பிரிந்து சென்றுவிட வில்லை, கர்னீலவ் நிகழ்ச்சியை வைத்து மட்டுமே நாம் ஒரு தற்காலிகமான சண்டை போட்டுக் கொண்டோம். நாம் சண்டை போட்டுக் கொண்டோம் என்றாலும், சரி செய்து சமாதானம் செய்து கொண்டு விடுவோம். மேலும், போல்ஷிவிக்குகள் நமக்கு எதையும் 'விட்டுக் கொடுக்க வில்லை', ஏனெனில் புரட்சி எழுச்சிக்கான அவர்களின் முயற்சிகள் 1871ஆம் ஆண்டுக் கம்யூன்[7] போலவே தோல்வி யுறுவது திண்ணம்.''

மற்றொரு குரல் சொல்லக்கூடும்: ''கம்யூனைக் குறிப் பிட்டது மிகவும் மேலோட்டமானது, முட்டாள்தனமான துங் கூட. ஏனெனில், முதலாவதாக, 1871க்குப் பிறகு போல்ஷிவிக்குகள் கொஞ்சம் விஷயம் தெரிந்து கொண் டிருக்கிறார்கள்; வங்கிகளைப் பிடுங்கிக் கொள்ள அவர்கள் தவற மாட்டார்கள், வெர்சேய்மீது[8] படையெடுத்துச் செல்ல மறுக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட நிலைமை களில் அந்தக் கம்யூன்கூட வெற்றி பெற்றிருக்கும். மேலும், போல்ஷிவிக்குகள் அதிகாரத்துக்கு வந்தால் வழங்கக் கூடி யதை—அதாவது, விவசாயிகளுக்கு நிலம், சமாதானம், உற்பத்திமீது உண்மையான கண்காணிப்பு, உக்ரேனி யர்களுடன், பின்லாந்து மக்களுடன், மற்றவர்களுடன் நேர்மையான சமாதானம் — கம்யூனால் உடனடியாக மக்களுக்கு வழங்க முடியவில்லை. அப்பட்டமாகச் சொல்வ தென்றால், கம்யூனைவிட போல்ஷிவிக்குகள் பத்து மடங்கு அதிகமான 'துருப்புச் சீட்டுகள்' வைத்திருக்கிறார்கள். இரண்டாவதாக, என்னதான் இருந்தாலும், கம்யூன் என் றாலே கடுமையான உள்நாட்டுப் போர் என்று பொருள், வெகு காலத்திற்குச் சமாதான பூர்வமான கலாசார

வளர்ச்சிக்குத் தேக்கம் என்று பொருள், பல வகையான மாக்மஹோன்களுக்கும் கர்னீலவ்களுக்கும் இன்னும் அதிகச் சுளுவுடன் வேலை செய்யவும் சதிகள் புரியவும் — அப்படிப்பட்ட காரியங்கள் நமது முதலாளித்துவ சமுதாயம் பூராவுக்கும் ஆபத்தாகும் — வாய்ப்பு என்று பொருள். கம்யூன் ஆபத்துக்கு இடம் தருவது விவேகமானதுதானு?

''நம் கைகளிலேயே அதிகாரத்தை நாம் எடுத்துக் கொள்ளா விட்டால், மே 6க்கும் ஆகஸ்டு 31க்கும் இடையே இருந்த அதே மோசமான நிலையில் விவகாரங்கள் இருந்து வருமேயாஞல், ருஷ்யாவில் இன்று கம்யூன் தவிர்க்க முடியாததாகும். புரட்சிகரமான ஒவ்வொரு தொழிலாளியும் போர்வீரனும் தவிர்க்க முடியாதபடி கம்யூனைப் பற்றி நினைப்பான், கம்யூன் மீது நம்பிக்கை வைப்பான், தவிர்க்க முடியாதபடி அதைக் கொண்டுவர முயல்வான்; ஏனெனில், அவன் பின்வருமாறு வாதிப்பான்: 'மக்கள் செத்துக் கொண்டிருக்கிருர்கள், போரும் பஞ்சமும் நாசமும் பரவிக் கொண்டிருக்கின்றன. கம்யூன் ஒன்று தான் நம்மைக் காப்பாற்றும். ஆகவே நாம் அனைவரும் அழிந்தாலும் பரவாயில்லை, உயிர்போனுலும் பரவாயில்லை, கம்யூனை அமைப்போம் வாருங்கள்' என்பான். தொழிலாளர்களிடம் இப்படிப்பட்ட கருத்துக்கள் தவிர்க்க முடியாதவை, மேலும் 1871ல் செய்தது போல் கம்யூனை நசுக்குவது இன்று அவ்வளவு சுலபமல்ல. உலகமெங்கும் ருஷ்யக் கம்யூனுக்கு நேச சக்திகள், 1871ல் கம்யூனுக்கு இருந்ததைவிட நூறு மடங்கு அதிக பலமுள்ள நேச சக்திகள் இருக்கும்... நாம் கம்யூன் ஆபத்துக்கு இடம் தருவது விவேகமானது தானு? போல்ஷிவிக்குகள் தம்முடைய சமரசம் மூலம் நமக்கு அநேகமாக ஒன்றுமே விட்டுக் கொடுக்கவில்லை என்கிறதையும் நாம் ஒத்துக் கொள்ளவில்லை. ஏனெனில், நாகரிகமடைந்த எல்லா நாடுகளிலும், போர்க் காலத்தில் பாட்டாளி வர்க்கத்துடன் செய்து கொள்கிற ஒவ்வொரு உடன்பாட்டையும், அது எவ்வளவு சிறியதாக இருந்தாலும் சரி, நாகரிகமுள்ள அமைச்சர்கள் மிக உயர்வாக மதிக்கிருர்கள். அவர்கள் மிகமிக உயர்வாக

மதிக்கிறார்கள். அவர்கள் செயல் வீரர்கள், உண்மையான அமைச்சர்கள். போல்ஷிவிக்குகள், அடக்குமுறை இருந்த போதிலும், அவர்களுடைய பத்திரிகைகள் பலவீனமாக இருந்தபோதிலும், வேகமாக மேன்மேலும் பலம் அடைந்து வருகிறார்கள்... நாம் கம்யூன் ஆபத்துக்கு இடம் தருவது விவேகமானதுதானா?

''நமக்கு நிச்சயமான பெரும்பான்மை இருக்கிறது; கொஞ்ச காலத்துக்கு ஏழை விவசாயிகள் விழித்தெழ மாட்டார்கள்; நம் ஆயுட்காலத்துக்கு நாம் பத்திரம்தான். விவசாயிகளின் நாட்டில் பெரும்பான்மையினர் அதிதீவிர வாதிகளைப் பின்பற்றுவார்கள் என்று நான் நம்பவில்லை. மேலும், மெய்யான ஜனநாயகக் குடியரசில், வெளிப் படையான பெரும்பான்மைக்கு எதிராக, எந்தப் புரட்சிக் கலகமும் சாத்தியமில்லை.'' இப்படித்தான் இரண்டாவது குரல் சொல்லும்.

மார்த்தவ் அல்லது ஸ்பிரிதோனவா ஆகியோரின் ஆதர வாளர்களிடமிருந்து வரும் மூன்றாவது குரலுங்கூட கேட்கக் கூடும். அது சொல்லும்: '' 'தோழர்களே', கம்யூனைப் பற்றியும் அது வரக்கூடிய சாத்தியப்பாடு பற்றியும் பேசும் போது நீங்கள் இருவரும் தயக்கமின்றி அதன் எதிரிகளின் பக்கம் போவதைக் கண்டு எனக்கு ஆத்திரம் வருகிறது. ஏதாவது ஒரு வடிவத்தில், நீங்கள் இருவரும் கம்யூனை நசுக்கியவர்கள் பக்கம் போகிறீர்கள். கம்யூனுக்காக நான் கிளர்ச்சி நடத்த மாட்டேன், ஒவ்வொரு போல்ஷிவிக்கும் செய்யப் போவதைப் போல் நான் அதன் அணிகளில் நின்று போரிட முன்கூட்டியே வாக்குறுதி தர முடியாது. ஆனால் என்னுடைய முயற்சிகளையும் மீறி கம்யூன் தொடங்குமே யானால், அதன் எதிரிகளுக்கு உதவுவதை விட அதனைப் பாது காத்து நிற்பவர்களுக்கே உதவுவேன்...''

''கூட்டணியில்'' இருக்கிற குரல்களின் குழப்பம் பெரிது, தவிர்க்க முடியாததுங்கூட; ஏனெனில் குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளிடையே பலப்பல சாயல்கள் பிரதிநிதித்துவம் பெற்றுள்ளன — அரசாங்கத் தில் பதவிபெற முழுக்க லாயக்கான முழு முதலாளி

முதலாகப் பாட்டாளி வர்க்க நிலையை இன்னமும் மேற் கொள்ளச் சக்தியற்றிருக்கிற அரைப் பஞ்சைப் பகுதி வரை. எந்த ஒரு குறிப்பிட்ட தருணத்திலும் இந்தப் பலவிதக் குரல்களின் விளைவு எப்படி இருக்குமென்று யாருக்கும் தெரியாது.

* * *

மேற்கண்ட வரிகள் செப்டம்பர் 1ஆம் தேதி வெள்ளிக் கிழமை எழுதப்பெற்றவை; ஆனால் எதிர்பாராத சந்தர்ப்பங்களால் (கேரென்ஸ்கியின் கீழ், போல்ஷிவிக்குகளில் எல்லோரும் தங்கள் இருப்பிடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள சுதந்திரம் பெற்றிருக்கவில்லை என்பதை வர லாறு கூறும்) அவை அதே நாளில் ஆசிரியர் அலுவலகத் திற்குப் போய்ச் சேரவில்லை. சனிக்கிழமை பத்திரிகைகளை யும் இன்றைய, ஞாயிற்றுக்கிழமை, பத்திரிகைகளையும் படித்த பிறகு எனக்கு நானே சொல்லிக் கொள்வதாவது: ஒரு சமரசத் திட்டத்திற்குரிய காலம் ஏற்கனவே கடந்து விட்டது என்றே சொல்ல வேண்டும். சமாதான பூர்வ மான வளர்ச்சி இன்னமும் சாத்தியமாயிருந்திருக்கக் கூடிய அந்தச் சில நாட்களுங்கூடக் கடந்து விட்டன போ லும். ஆம், அவை ஏற்கெனவே கடந்து விட்டன என்றுதான் தோன்றுகிறது.[9] ஏதாவது ஒரு வழியில், கேரென்ஸ்கிய் சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சி, சோஷலிஸ்டு-புரட்சி இயக்கம் ஆகிய இரண்டையுமே கைவிட்டு, அவர்கள் செயலற்று நிற்கும் நிலையின் காரணத்தால் சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் இல்லாமலேயே முதலாளித்துவ வர்க் கத்தின் உதவியைக் கொண்டு தன்னுடைய பதவியைப் பலப்படுத்திக் கொள்வார்... ஆம், சந்தர்ப்பவசமாக சமாதான பூர்வமான வளர்ச்சிப் பாதையைச் சாத்திய மாக்கிய அந்த நாட்கள் ஏற்கனவே கடந்துவிட்டன என்று தோன்றுகிறது. இனி செய்வதற்கு மிச்சமிருப்பது இந்தக் குறிப்புக்களை, ''காலங்கடந்த சிந்தனைகள்'' என்று அவற் றிற்குத் தலைப்பு கொடுக்குமாறு கேட்டுக் கொண்டு ஆசிரிய

ருக்கு அனுப்ப வேண்டியதுதான்... காலங்கடந்த சிந்தனைகளும் சில சமயங்களில் சுவையற்றதாகி விடுவதில்லை அல்லவா?

*1917, செப்டம்பர் 3*

*1917, செப்டம்பர் 1-3 (14-16)* தேதிகளில் எழுதப்பட்டது

*1917, செப்டம்பர் 19(6),* ரபோச்சிய் பூத், இதழ் 3ல் வெளிவந்தது

கையொப்பம்: நி. லெனின்

நூல் திரட்டு, தொகுதி 34, பக்கங்கள் 133-39

# மார்க்சியமும் புரட்சி எழுச்சியும்

## ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் (போல்ஷிவிக்குகள்) கட்சியின் மத்தியக் கமிட்டிக்கு ஒரு கடிதம்

ஆதிக்கமுள்ள ''சோஷலிஸ்டுக்'' கட்சிகள் ஆக விஷமத்தனமாகக் கையாண்டும், பெரும்பாலும் மிகப் பெருமளவு விரிவாகப் பரப்பியும் வரும் மார்க்சியம் பற்றிய புரட்டுகளில் ஒன்று, புரட்சி எழுச்சிக்கான தயாரிப்பும், பொதுவாக புரட்சி எழுச்சியை ஒரு கலையாகக் கருதிவருவதும் ''பிளான்கிவாதம்''[10] என்று கூறும் சந்தர்ப்பவாதப் பொய்யேயாகும்.

சந்தர்ப்பவாதத்தின் தலைவரான பெர்ன்ஷ்டைன் மார்க்சியத்தினை பிளான்கிவாதம் என்று குற்றம் சாட்டியது மூலம் ஏற்கெனவே அவப்பேறுன புகழினை ஈட்டியிருந்தார். நமது இன்றைய சந்தர்ப்பவாதிகள் பிளான்கிவாதம் என்று கூக்குரலிடுவது மூலம் பெர்ன்ஷ்டைனின் அற்பமான கருத்துக்களைக் கிஞ்சிற்றும் மேம்படுத்தவோ அல்லது ''செழுமைப்படுத்தவோ'' இல்லை.

புரட்சி எழுச்சியை ஒரு கலையாகக் கருதுகிறுர்கள் என்பதால் மார்க்சியவாதிகள் மீது பிளான்கிவாதம் என்று கூறிக் குற்றம் சாட்டப்படுகிறது! மார்க்ஸ் இந்த விஷயத்தில் மிகவும் திட்டவட்டமாக, துல்லியமாக, ஐயத்திற்கிடமற்ற தன்மையில் தமது கருத்தை வெளியிட்டுள்ளார், புரட்சி எழுச்சியை குறிப்பாயும் ஒரு கலை என்று குறிப்பிட்டு அது ஒரு கலையாகக் கட்டாயம் கருதப்பட வேண்டும் என்றும் முதல் வெற்றியை நீங்கள் போராடி அடைய வேண்டும் பிறகு வெற்றியிலிருந்து வெற்றியை நோக்கிச் செல்ல வேண்டும், எதிரியின் குழப்பத்தைச் சாதகமாக எடுத்துக்

கொண்டு, எதிரியை எதிர்த்த தாக்குதலை என்றுமே நிறுத்தி விடக்கூடாது என்றும் கூறியுள்ளார் என்பதை ஒரு மார்க்சியவாதி எவரும் மறுக்க மாட்டார் என்றிருக்கும் பொழுது இதைவிட உண்மையைப் படுமோசமாகப் புரட்டும் செயல் வேறுண்டா?

புரட்சி எழுச்சி வெற்றிக்கு வழிவகுக்க வேண்டுமானல் அது சதியாலோசனை மீதோ மற்றும் ஒரு கட்சியினையோ நம்பிச் சார்ந்திருக்கக் கூடாது, மாருக முன்னேற்றமான வர்க்கத்தின்மீது நம்பிக்கை வைக்க வேண்டும். இதுவே முதல் நிபந்தனை. புரட்சி எழுச்சி மக்களின் புரட்சிகரமான கிளர்ச்சியைச் சார்ந்திருக்க வேண்டும். இது இரண்டாவது நிபந்தனை. புரட்சி எழுச்சி வளர்ந்துவரும் புரட்சியின் வரலாற்றின் திரும்பு முனையைச் சார்ந்திருக்க வேண்டும்; அப்பொழுது மக்களின் முன்னேற்றமான அணிகளின் செயல்பாடு அதன் உச்சத்தில் இருக்கும், எதிரியின் அணிகளிலும் புரட்சியின் பலவீனமான அரை-மனது மற்றும் உறுதியற்ற நண்பர்களின் அணிகளிலும் ஊசலாட்டங்கள் ஆகவலுவாக இருக்கும். இது மூன்ருவது நிபந்தனை. புரட்சி எழுச்சி பற்றிய பிரச்சினையை எழுப்புவதற்கான இந்த மூன்று நிபந்தனைகளும் மார்க்சியத்தை பிளான்கிவாதத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன.

ஆயினும் இந்த நிபந்தனைகள் நிலவும் போது, புரட்சி எழுச்சியை ஒரு கலையாகக் கருத மறுப்பது மார்க்சியத்திற்குத் துரோகம் செய்வதாகும் புரட்சிக்குத் துரோகம் செய்வதாகும்.

நிகழ்ச்சிகளின் முழுமையான போக்கும், புரட்சி எழுச்சியை நாள் நிகழ்ச்சி நிரலில் புறநிலை நோக்கில் வைத்திருக்கும் ஒரு தருணம் குறிப்பாயும் இன்றைய தருணமே. இதைக் கட்சி கட்டாயம் உணர வேண்டும் என்பதையும், புரட்சி எழுச்சியை ஒரு கலையாகக் கருத வேண்டும் என்பதையும் எடுத்துக் காட்ட ஒப்புநோக்கும் முறையினைப் பயன்படுத்துவதும், ஜூலை 3-4 மற்றும் செப்டம்பர் நாட்களுக்கிடையேயான வேறுபாட்டை ஆய்வு செய்வதும் சிறப்பானதாக இருக்கும்.

ஜூலை 3-4ல் செய்ய வேண்டிய சரியான காரியம் ஆட்சி அதிகாரத்தை மேற்கொள்வதே என்று உண்மையை மீருமல், வாதிட்டிருக்க முடியும், காரணம் நமது விரோதிகள் நம்மை எப்படியும் புரட்சி எழுச்சியில் ஈடுபட்டதாகக் குற்றம் சுமத்தி, நம்மைக் கலகக்காரர்களாக இரக்கமின்றி நடத்தியிருப்பார்கள். எனினும் இந்தக் காரணத்தால் அந்த நேரத்தில் ஆட்சி அதிகாரத்தை மேற்கொள்ள ஆதரவாக முடிவு செய்வது தவருக இருந்திருக்கும், புரட்சி எழுச்சியின் வெற்றிக்கான எதார்த்த நிலைமைகள் அன்று இருக்கவில்லை.

1) புரட்சியின் முன்னணிப் படையான வர்க்கத்தின் ஆதரவு இன்னும் நமக்கு இருக்கவில்லை.

பெத்ரொகிராத் மற்றும் மாஸ்கோவின் தொழிலாளர் படைவீரர்களிடையே பெரும்பான்மையினர் இன்னும் நம் பக்கம் இருக்கவில்லை. இப்போது நமக்கு இரண்டு சோவியத்களிலும்* பெரும்பான்மை இருக்கிறது. இது முற்றிலும், ஜூலை ஆகஸ்ட் வரலாற்ருலும், போல்ஷிவிக்குகள் ''இரக்கமற்ற முறையில் நடத்தப்பட்ட''தால் ஏற்பட்ட அனுபவத்தாலும் கர்னீலவ் கலகத்தின் அனுபவத்தாலும் உருவாக்கப்பட்டது.

2) அந்த சமயத்தில் நாடு தழுவியதான புரட்சிகர கிளர்ச்சி இல்லை. கர்னீலவ் கலகத்திற்குப் பிறகு இப்போது இருக்கிறது; மாகாணங்களிலுள்ள நிலைமையும், பல ஸ்தலங்களில் சோவியத்துகள் ஆட்சி அதிகாரம் மேற்கொண்டிருப்பதும் இதை நிரூபிக்கின்றன.

3) அந்த சமயத்தில் எமது விரோதிகளிடையிலும், உறுதியற்ற குட்டிமுதலாளித்துவ வர்க்கத்தினரிடையிலும் எந்தவொரு முனைப்பான அரசியல் அளவுக்கும் ஊசலாட்டம் இருக்கவில்லை. இப்போது ஊசலாட்டம் மிகப் பெரிய அளவில் இருக்கிறது. நமது பிரதான விரோதி ''கூட்டணி நாடுகள்'' மற்றும் உலக ஏகாதிபத்தியம் (உலக ஏகாதி

* மாஸ்கோ மற்றும் பெத்ரொகிராத் தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகள் இங்கே குறிப்பிடப்படுகிறது.—ப-ர்.

பத்தியத்திற்குக் ''கூட்டணி நாடுகள்'' தலைமை தாங்கு கின்றன) வெற்றிகரமான முடிவுவரைப் போரை நடத்து வது, அல்லது ருஷ்யாவுக்கு எதிராகத் தனி உடன்படிக்கை செய்து கொள்வது என்பவற்றுக்கிடையே ஊசலாடத் தொடங்கியுள்ளது. மக்களிடையே பெரும்பான்மையைத் தெளிவாக இழந்துவிட்ட எமது குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகள், மிகப் பெருமளவுக்கு ஊசலாடத் தொடங்கியுள்ளனர், காடேட்டுகளுடனை கூட்டணியை அதாவது ஒரு கூட்டாட்சியை அவர்கள் நிராகரித்து விட்டார்கள்.

4) எனவே ஜூலை 3-4ல் புரட்சி எழுச்சி என்பது தவருக இருந்திருக்கும்; நாம் ஆட்சி அதிகாரத்தை புலப்படும் வகையிலும் அரசியல் முறையிலும் நீடித்து வைத்திருக்க முடியாது. சில சமயங்களில் பெத்ரொகிராத் நமது கரங் களில் இருந்தபோதிலும் அதை நாம் புலப்படும் வகையில் நீடித்து வைத்திருக்க முடியவில்லை, காரணம் அந்த சமயத் தில் நமது தொழிலாளர்களும் போர்வீரர்களும் பெத்ரொ கிராதுக்காகப் போராடி உயிரிழந்திருக்க மாட்டார்கள். கேரென்ஸ்கிகள் தெஸெரெத்தேலிகள் மற்றும் செர்னேவ் கள் மீது அந்த சமயத்தில் அந்த ''கொடூரத் தன்மை'' அல்லது மூர்க்கமான பகைமை இருக்கவில்லை. சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் பங்கு பற்றிய அடக்குமுறை வேட்டைக்கு போல்ஷிவிக்குகள் இலக்கான தால் ஏற்பட்ட அனுபவத்திலிருந்து நமது மக்கள் இன்னும் உறுதிப்பட்டிருக்கவில்லை.

ஜூலை 3-4ல், அரசியல் முறையில் நாம் ஆட்சி அதி காரத்தை நீடித்து வைத்திருந்து இருக்க முடியாது, கார ணம் கர்னீலவ் கலகத்திற்கு முன்னுல் சேனையும் மாகாணங் களும் பெத்ரொகிராதை எதிர்த்து அணிவகுத்துச் செல்லக் கூடும், சென்றிருக்க முடியும்.

இப்போது சித்திரம் முற்றிலும் வேருக உள்ளது.

நமக்கு ஒரு வர்க்கத்தின் பெரும்பான்மையினது ஆதரவு, புரட்சியின் முன்னணிப்படையின், மக்களின் முன்னணிப் படையின் ஆதரவு இருக்கிறது. அது மக்களைத் திரட்டிச் செல்லும் ஆற்றல் கொண்டது.

நமக்கு மக்களில் பெரும்பான்மையினரது ஆதரவு இருக்கிறது, காரணம் செர்னேவின் ராஜினுமா, இது விவசாயிகள் சோஷலிஸ்டு-புரட்சியாளர் கூட்டணியிடமிருந்தோ (சோஷலிஸ்டு - புரட்சியாளர்களிடமிருந்தோ) நிலத்தைப் பெற மாட்டார்கள் என்பதற்கான ஒரே அடையாளமல்லாவிடினும் மிகவும் எடுப்பான தெளிவான அடையாளமாகும். இதுவே புரட்சியின் பொது ஜன ஆதரவுத் தன்மைக்குப் பிரதான காரணம்.

ஏகாதிபத்தியம் முழுவதும் மென்ஷிவிக்குகள் மற்றும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் கூட்டணி முழுவதும் நம்புதற்கரிய விசித்திரமான பாணியில் ஊசலாடிக் கொண்டிருக்கும் ஒரு சமயத்தில் எந்த வழியில் செல்வது என்பதை நிச்சயமாக அறிந்துள்ள ஒரு கட்சியின் சாதகமான நிலைமையில் நாம் இருக்கிறோம்.

நமது வெற்றி உறுதிப்பட்டுள்ளது, காரணம் மக்கள் முழுமையாகப் பொறுமை இழந்து விட்டார்கள், எல்லா மக்களுக்குமான உறுதியான மீள்வழியை நாம் காட்டுகிறோம்; ''கர்னிலவ் நாட்களில்'' நமது தலைமையின் மதிப்பை மக்கள் அனைவருக்கும் எடுத்துக் காட்டினோம், கூட்டணி அரசியல்வாதிகளிடம் ஒரு சமரசத்திற்கான யோசனைகளை முன்மொழிந்தோம் அவர்களது ஊசலாட்டத்தில் எவ்விதக் குறைவும் இல்லாவிடினும் அவற்றை (யோசனைகளை) அவர்கள் நிராகரித்தார்கள்.

நமது சமரச யோசனை இதுவரை நிராகரிக்கப்படவில்லை என்றும், ஜனநாயக மாநாடு[11] அதை இன்னும் ஏற்றுக் கொள்ளலாம் என்றும் நினைப்பது மாபெருந் தவறாகும். இந்தச் சமரச யோசனை ஒரு கட்சியால் கட்சிகளிடம் முன்மொழியப்பட்டது, இது வேறு எந்த வழியிலும் முன்மொழியப்பட்டிருக்க முடியாது. அது கட்சிகளால் நிராகரிக்கப்பட்டது. ஜனநாயக மாநாடு ஒரு மாநாடு என்பது தவிர வேறு எதுவுமல்ல. ஒரு விஷயத்தை மறந்துவிடக் கூடாது, அதாவது, பெரும்பான்மையான புரட்சிகர மக்கள்—வெறுப்படைந்த ஏழை விவசாயிகள் இதில் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கவில்லை. இது மக்களில் சிறுபான்மையினரின்

மாநாடு ஆகும். இந்தக் கண்கூடான உண்மையை மறந்து விடக் கூடாது. ஜனநாயக மாநாட்டை ஒரு நாடாளு மன்றம் என்று நாம் கருதுவோமானால் அது பெருந்தவறு கும், அது நமது நாடாளுமன்ற மூடத்தனத்தையே அறவே காட்டுகிறது; அது தன்னைத் தானே புரட்சியின் ஒரு நிரந் தரமான சர்வசுதந்திர நாடாளுமன்றம் என்று பறை சாற்றிக் கொண்டாலும் கூட அது எதையும் முடிவுசெய்ய முடியாது. முடிவு செய்யும் அதிகாரம் அதற்கு வெளியே, பெத்ரொகிராத் மாஸ்கோ தொழிலாளி வர்க்க குடி யிருப்பு வட்டாரங்களில் அமைந்திருக்கிறது.

எமக்கு முன்னால் வெற்றிகரமான புரட்சி எழுச்சிக்கான, எதார்த்த நிலைமைகள் அனைத்தும் உள்ளன. உலகிலேயே மிகவும் வேதனையானதும் மக்களை சலிப்புக்குள்ளாக்கி விட்டதுமான ஊசலாட்டத்திற்கு புரட்சி எழுச்சியில் நாம் பெறும் வெற்றி மட்டுமே முடிவுகட்ட முடியும், புரட்சி எழுச்சியில் நாம் பெறும் வெற்றி மட்டுமே விவசாயிகளுக்கு உடனடியாக நிலம் வழங்கும், இதற்கான நிலைமையின் தனிச் சிறப்பு வாய்ந்த சாதகம் நமக்கு இருக்கிறது. புரட்சி எழுச்சியில் நாம் பெறும் வெற்றி மட்டுமே புரட்சிக்கு எதிராக முடுக்கப்படும் தனியான சமாதானம் என்ற சூழ்ச் சியைத் தோற்கடிக்கும், முழுமையான மேலும் நீதியான மேலும் முன்னதான சமாதானத்தை, புரட்சிக்கு அனு கூலமான ஒரு சமாதானத்தைப் பகிரங்கமாகப் பிரேரணை செய்வது மூலம் இதைத் தோற்கடிக்கும்.

இறுதியாக நமது கட்சி மாத்திரமே வெற்றிகரமான புரட்சி எழுச்சி மூலம் பெத்ரொகிராதைப் பாதுகாக்க முடியும்; ஏனென்றால் சமாதானத்திற்கான நமது யோசனை நிராகரிக்கப்படுமானால், நாம் ஒரு போர்நிறுத்தத்தைக்கூட நாடிப்பெற முடியவில்லையானால், அதன்பின் நாம் ''பாது காப்புவாதிகள்'' ஆகிவிடுவோம், போர்க் கட்சிகளின் தலைமையில் நாம் இருப்போம், நாமே மிக மேம்பட்ட ''போர்க்'' கட்சியாகி விடுவோம், போரை உண்மையிலேயே புரட்சிகரமான முறையில் நடத்துவோம். முதலாளிகளிட மிருந்து எல்லா ரொட்டிகளையும் (உணவையும்) காலணி

களையும் பறித்து எடுத்துக் கொள்வோம். அவர்களுக்கு ரொட்டிப் பொருக்குகளை மட்டுமே விட்டு வைத்து மரப் பட்டைக் காலணிகளை அணிவிப்போம். எல்லா உணவையும் காலணிகளையும் போர் முனைக்கு அனுப்பிவைப்போம்.

அதன்பின் நாம் பெத்ரொகிராதைப் பாதுகாப்போம்.

ருஷ்யாவில் உண்மையிலேயே ஒரு புரட்சிகரப் போரை நடத்துவதற்கான பொருளாயத ஆன்மிக இருவகை மூல வளங்களும் இன்னும் அளவற்றதாக இருக்கின்றன; ஜெர் மானியர் நமக்குக் குறைந்த பட்சம் போர்நிறுத்தத்தை யாவது அனுமதிப்பார்கள் என்பதற்கான வாய்ப்புகள் ஒன்றுக்கு நூறு இருக்கிறது. தற்போது ஒரு போர்நிறுத் தத்தை உறுதியாகப் பெறுவது உலகம் முழுவதையும் வென்று பெறுவதாகும்.

* * *

புரட்சியைப் பாதுகாக்கவும், இரு கூட்டணிகளையும் சேர்ந்த ஏகாதிபத்தியவாதிகளும் "தனித்தனியாக" துண் டாட விடாமல் ருஷ்யாவைப் பாதுகாக்கவும் பெத்ரொ கிராத் மற்றும் மாஸ்கோ தொழிலாளர்களின் புரட்சி எழுச்சி முற்ற முழு அவசியம் என்பதைக் கண்டுணர்ந்து விட்ட நாம், முதலில் வளர்ந்து வரும் புரட்சி எழுச்சியின் நிலைமைகளுக்கு ஏற்ப மாநாட்டில் நமது அரசியல் போர்த் தந்திரங்களை மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டும்; இரண்டாவதாக புரட்சி எழுச்சியை ஒரு கலையாகக் கருத வேண்டும் என்ற மார்க்சின் கருத்தை நாம் சொல்லள வோடு மட்டும் ஏற்கவில்லை என்பதை நாம் காட்ட வேண்டும்.

மாநாட்டில் ஆள் தொகையைத் தேடித் திரியாமல், ஊசலாட்டக்காரர்களை ஊசலாட்டக்காரர் முகாமிலேயே விட்டுவைக்க அஞ்சாமல் நாம் உடனடியாக போல்ஷிவிக் குழுவை உறுதியாக இணைக்க வேண்டும். ஊசலாட்டக்காரர் கள் உறுதியான பற்றுர்வமுள்ள போராட்ட வீரர்கள் முகாமில் இருப்பதை விட அங்கேயே இருப்பது புரட்சி லட்சியத்திற்கு அதிகப் பயனுடையதாக இருக்கும்.

நீண்ட பிரசங்கங்களின், பொதுவான ''பிரசங்கங்களின்'' ஒவ்வாத தன்மையினை மிகவும் உறுதியான முறையில் வலியுறுத்தியும், புரட்சியைக் காக்க உடனடிப் போராட்டம் அவசியம் என்பதையும், முதலாளித்துவ வர்க்கத்துடன் முற்றாக முறித்துக்கொள்ள வேண்டுவதன் அடிப்படை அவசியத்தையும், இன்றுள்ள அரசாங்கத்தை முழுமையாக அகற்றி எறிவதற்கும், ருஷ்யாவை ''தனித்தனியாக'' துண்டாடுவதற்கு ஆயத்தம் செய்துவரும் ஆங்கில - பிரெஞ்சு ஏகாதிபத்தியவாதிகளுடன் பூரணமாக முறித்துக் கொள்ளவும் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தால் தலைமை தாங்கப்படும் புரட்சிகர ஜனநாயகவாதிகளிடம் உடனடியாக அனைத்து ஆட்சியதிகாரமும் மாற்றியளிக்கப்பட வேண்டும் என்பதையும் எல்லாம் வலியுறுத்தும் ஒரு சுருக்கமான பிரகடனத்தை போல்ஷிவிக்குகளிடமிருந்து உருவாக்கிப் பெற வேண்டும்.

மக்களுக்குச் சமாதானம், விவசாயிகளுக்கு நிலம், தகாத லாபங்களைப் பறி முதல் செய்தல், உற்பத்தியை முதலாளிகள் இழிவான முறையில் சீர்குலைப்பதைத் தடை செய்தல் ஆகிய வேலைத்திட்டப் பிரேரணைகள் தொடர்பான இந்த முடிவு குறித்த ஆகச் சுருக்கமான மிகவும் கூரியதான வகைமுறை விளக்கத்தை நமது பிரகடனம் வழங்க வேண்டும்.

இந்தப் பிரகடனம் எவ்வளவுக்கு எவ்வளவு மேலும் சுருக்கமானதாகவும் அதிகக்கூரியதாயும் இருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு மேலும் நல்லது. வேறு இரண்டு உயர் முக்கியத்துவமுள்ள முடிவுகள் மட்டும் இதில் தெளிவாகச் சுட்டிக் காட்டப்பட வேண்டும், அதாவது, மக்கள் ஊசலாட்டங்களால் சலிப்படைந்திருக்கிறார்கள், சோஷலிஸ்டு - புரட்சியாளர் மற்றும் மென்ஷிவிக்குகளின் உறுதியின்மையால் வெறுப்படைந்திருக்கிறார்கள்; அவை புரட்சிக்குத் துரோகம் செய்துவிட்டன, எனவே இந்தக் கட்சிகளிடமிருந்து திட்டவட்டமாக விலகி முறித்துக் கொள்கிறோம் என்பதே.

மற்றும் இன்னொரு விஷயம். பிரதேசங்களைப் பறித்துக் கொள்வது இல்லாத சமாதானத்தை உடனடி முன் வைப்பது மூலமும், கூட்டணி ஏகாதிபத்தியவாதிகளுடனும் எல்லா ஏகாதிபத்தியவாதிகளுடனும் உடனடியாக முறித்து கொள்வது மூலமும் ஒருக்கால் நாம் உடனே ஒரு போர்நிறுத்தத்தைப் பெறலாம், இல்லையேல் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் முழுதும் நாட்டைப் பாதுகாக்க ஒன்று திரளும், பாட்டாளி வர்க்கத்தின் தலைமையின் கீழ் புரட்சிகர ஜனநாயகவாதிகள் உண்மையில் நீதியான உண்மையில் புரட்சிகரமான போரைத் தொடுப்பார்கள்.

இந்தப் பிரகடனத்தைப் படித்த பிறகு, பேச்சு வேண்டாம் முடிவுகள் வேண்டும் தீர்மானம் எழுதுதல் வேண்டாம் செயல் வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தபின் நாம் நமது குழு முழுவதையும் ஆலைகளுக்கும் பாசறைகளுக்கும் அனுப்ப வேண்டும். அவர்களுக்குரிய இடம் அங்குதான், அங்குதான் வாழ்க்கையின் துடிப்பு இருக்கிறது, அங்குதான் நமது புரட்சியின் தாரகத்தின் மூலாதாரம் உள்ளது, அங்குதான் ஜனநாயக மாநாட்டின் இயக்கு சக்தி உள்ளது.

அங்கு, ஆர்வமிக்க, உணர்ச்சியான உரைகளில் நாம் நமது வேலைத்திட்டத்தை விளக்கி, ஒன்று, மாநாடு இதை முற்றிலுமாக ஏற்க வேண்டும் இல்லையேல் புரட்சி எழுச்சி தான் ஏற்படும் என்ற மாற்று யோசனையை முன்வைக்க வேண்டும். நடுப்பாதை இல்லை. தாமதம் சாத்தியமல்ல. புரட்சி செத்துக் கொண்டிருக்கிறது.

பிரச்சினையை இந்த வழியில் முன்வைத்து, நமது குழு முழுவதையும் ஆலைகளிலும் பாசறைகளிலும் ஒரு முகப் படுத்துவது மூலம் நாம் புரட்சி எழுச்சியைத் துவக்குவதற்கான சரியான தருணத்தை நிர்ணயிக்க முடியும்.

புரட்சி எழுச்சியை மார்க்சிய வழியில், அதாவது ஒரு கலையாகக் கருத வேண்டுமாயின் நாம் அதே சமயம் ஒரு விநாடியைக் கூட வீணாக்காமல் புரட்சிப் படைப்பிரிவுகளின் தலைமையகத்தை அமைக்க வேண்டும், நமது படைகளை வினியோகம் செய்ய வேண்டும், நம்பகமான படை அணி

களை மிகவும் முக்கியமான முனைகளுக்கு அனுப்ப வேண்டும், அலெக்சாண்ட்ரின்ஸ்கி அரங்கைச் சுற்றி வளைத்து பீட்டர்-பால் கோட்டைகளைக்[12] கைப்பற்றி ராணுவத் தலைமையையும் அரசாங்கத்தையும் கைது செய்து, எதிரி நகரின் கேந்திர முனைகளை அணுக இடந்தருவதை விட அழிவதே மேல் என்று கருதும் படைப்பிரிவுகள் யூங்கர்களுக்கும்[13] கொடிய டிவிஷனுக்கும்[14] எதிராக முன் செல்ல வேண்டும். ஆயுதமேந்திய தொழிலாளர்களை அணிதிரட்டி இறுதியான மூர்க்கமான போரில் போராடும் படியும், உடனே தந்தி தொலைபேசிச் செயலகங்களைக் கைப்பற்றுமாறும் அறைகூவல் விட வேண்டும். நமது புரட்சி எழுச்சித் தலைமையகத்தை மத்தியத் தொலைபேசிச் செயலகத்திற்கு மாற்றி, அதைத் தொலைபேசி மூலம் எல்லா ஆலைகள், எல்லாப் படைப் பிரிவுகள், ஆயுதந் தாங்கிப் போராடும் எல்லா முனைகள் ஆகியவற்றோடு தொடர்பு படுத்த வேண்டும்.

இன்றைய தருணத்தில் புரட்சி எழுச்சியை ஒரு கலையாகக் கருதாவிட்டால் மார்க்சியத்தின்பால் மெய்ப்பற்றுடன் இருப்பதோ, புரட்சியின் பால் மெய்ப்பற்றுடன் இருப்பதோ சாத்தியமல்ல என்ற உண்மையைச் சித்தரித்துக் காட்ட மட்டுமே இது உதாரணமாகக் காட்டப்பட்டது.

நி. லெனின்

*1917*ல் செப்டம்பர் *13-14 (26-27),*
எழுதப் பெற்றது

*1921*ல் புரொலிதார்ஸ்காயா
ரெவலியூசியா, இதழ் 2இல்
முதன் முறையாக வெளியிடப்பட்டது

நூல் திரட்டு,
தொகுதி *34,*
பக்கங்கள் *242-247*

## போல்ஷிவிக்குகள் நீடித்து அரசாள முடியுமா?

### இரண்டாம் பதிப்பிற்கு முன்னுரை

இப்பிரசுரம், இதன் உள்ளடக்கத்திலிருந்தே தெரிகிறபடி, 1917ம் ஆண்டு செப்டம்பர் முடிவில் எழுதப் பெற்று அக்டோபர் முதல் தேதி முடிவடைந்தது.

அக்டோபர் 25ம் தேதி நடந்த புரட்சி இப்பிரசுரத்தில் எழுப்பியுள்ள கேள்வியை, தத்துவத் துறையிலிருந்து நடைமுறைத் துறைக்கு கொண்டு வந்திருக்கிறது.

இப்பொழுது இக்கேள்விக்கு சொற்களால் அன்றிச் செயல்களால் விடையிறுக்க வேண்டும். போல்ஷிவிக்குகளின் ஆட்சிக்கு எதிரான வாதங்கள் எல்லாம் மிக மிகப் பலவீனமானவை. இவை தவிடுபொடியாக்கப்பட்டுவிட்டன.

முன்னணி வர்க்கமாகிய பாட்டாளி வர்க்கத்தின் இப்போதைய கடமை தொழிலாளிகள், விவசாயிகள் ஆகியோரின் இந்த அரசாங்கம் உயிரூட்டம் உள்ளது என்பதை நடைமுறையில் மெய்ப்பித்துக் காட்ட வேண்டியதேயாகும். வர்க்க உணர்வுள்ள தொழிலாளர்கள் அனைவரும், உயிர்ப்புள்ள, நேர்மையான விவசாய மக்கள் அனைவரும் உழைப்பாளிகள், சுரண்டப்படுவோர் அனைவரும், இந்தப் பிரம்மாண்டமான, வரலாற்றுச் சிறப்புள்ள பிரச்சினையை நடைமுறையில் தீர்ப்பதற்கு எல்லா முயற்சிகளும் செய்வார்கள்.

வேலையில் இறங்குங்கள். அனைவரும் வேலையில் இறங்குங்கள். அகில உலக சோஷலிஸ்டு புரட்சி எனும்

*இலட்சியம் வெற்றி பெற்றுத் தீரவேண்டும், அது வெற்றி பெற்றே தீரும்.*

*செயின்ட் பீட்டர்ஸ்பர்க்,*
*நவம்பர் 9, 1917*

**நி. லெனின்**

*1918 ஆண்டு,*
*செயின்ட் பீட்டர்ஸ்பர்க்,*
*''போர்வீரர்கள், விவசாயிகள்*
*நூல்நிலையம்'' என்ற தொடரில்,*
*நி.* **லெனின், போல்ஷிவிக்குகள்**
**நீடித்து அரசாள முடியுமா?**
*என்ற பிரசுரத்தில்*
*முதன் முறையாக*
*வெளியிடப்பட்டது*

ரேச் பத்திரிகையிலிருந்து நோவயா ஷீஸ்ன்[15] பத்திரிகை வரையும், காடெட் - கர்னீலோவ் குழுவினர் தொடங்கி அரைகுறை போல்ஷிவிக்குகள் வரையும், போல்ஷிவிக்கு களைத் தவிர ஏனைய போக்குகள் அனைத்தும், எந்த விஷயத்தில் ஏகோபித்து நிற்கின்றன?

போல்ஷிவிக்குகள் ஒருக்காலும் அரசாங்க அதிகாரம் அனைத்தையும் தனியாக ஏற்றுக்கொள்ளத் துணிய மாட்டார்கள், அன்றி அவ்வாறு துணிந்து கைப்பற்றினுலும் மிக மிகக் குறுகிய காலத்திற்குக்கூட அதைக் கையில் வைத்திருக்க அவர்களால் இயலாது என்ற விஷயத்தில்தான் அவையனைத்தும் ஒன்றுபட்டுள்ளன.

போல்ஷிவிக்குகள் தனியாக அரசாங்க அதிகாரம் அனைத்தையும் ஏற்பதென்பது முற்றிலும் காரிய சாத்திய மற்ற அரசியல் பிரச்சினை என்றே, அகந்தை கொண்ட ''வெறியன்'' எவனுவது தான் அது நடக்கக் கூடியதாய் எண்ண முடியும் என்றே, எவரேனும் சாதிப்பார்களே யானல், நாம் அதை மறுக்கிறேம்; மிகவும் பொறுப்புள்ள, மிகவும் செல்வாக்குள்ள, பல்வேறு ''தோற்றங்களில்'' உள்ள அரசியல் கட்சிகள், போக்குகள் ஆகியவற்றின் அறிக்கைகளை அப்படியே மேற்கோள் காட்டி நாம் அதை மறுக்கிறேம்.

ஆனல், மேலே கூறப்பட்டுள்ள கேள்விகளில் முதல் கேள்வியான, போல்ஷிவிக் கட்சியினர் தனியாக அரசாங்க அதிகாரம் அனைத்தையும் ஏற்றுக்கொள்ளத் துணி

வார்களா என்பதுபற்றி முதலில் இரண்டொரு வார்த்தைகள் கூற வேண்டும். அனைத்து ருஷ்ய சோவியத்துக்களின் மகாநாட்டில் மந்திரி தெஸெரெத்தேலியின் பிரசங்கத்தின் நடுவே, என் இடத்திலிருந்தபடியே நான் உரக்கக் கூவித் தெரிவித்த ஒரு கூற்றின் மூலமாக இந்தக் கேள்விக்குத் திட்டவட்டமாக ''ஆமாம்'' என்று ஒரு சந்தர்ப்பத்தில் ஏற்கெனவே பதில் அளித்துள்ளேன்.[16] மேலும், நாம் தனியாக அரசாங்க அதிகாரத்தை எடுத்துக்கொள்ளக் கூடாது என்று பொருள்பட, போல்ஷிக்குகள் ஏதாவது அறிக்கைகள் விட்டதாக நான் பத்திரிகைகளில் பார்க்கவுமில்லை, காதால் கேட்கவுமில்லை. இன்னுங்கூட நான் சாதிக்கிறேன்: வாய்ப்பு கிடைத்திருக்கும்போது அரசாங்க அதிகாரத்தை எடுத்துக்கொள்ள மறுக்கும் அரசியல் கட்சி—குறிப்பாக, முன்னணி வர்க்கத்தின் கட்சி—இருந்து கொண்டிருப்பதற்கு உரிமையற்றது, கட்சி என்று கருதப் படுவதற்குத் தகுதியற்றது, எல்லா அர்த்தங்களிலும் அது ஒரு முழு பூஜ்ஜியம்தான்.

காடெட்டுகள், சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், அரை குறை போல்ஷிவிக்குகள் (இவர்களை நான் கால்வாசி போல்ஷிவிக்குகள் என்றே கூறப் பிரியப்படுகிறேன்) ஆகியோர்கள் நாம் அக்கறை காட்டுகிற பிரச்சினையைப் பற்றி விடுத்துள்ள அறிக்கைகளை இப்போது மேற்கோள் காட்டுவோம்.

செப்டம்பர் 16ம் தேதிய ரேச் பத்திரிகையின் தலையங்கம் கூறுவதாவது:

''...சச்சரவும், குழப்பமும் அலெக்சாந்த்ரீன்ஸ்கி தியேட்டரில் ஆட்சி புரிந்தன; சோஷலிஸ்டுப் பத்திரிகைகளும் அதே காட்சியைப் பிரதிபலிக்கின்றன. போல்ஷிவிக்குகளின் கருத்துக்கள் மட்டுமே திண்மையாகவும் தெளிவாகவும் இருக்கின்றன. மகாநாட்டில் இவை சிறுபான்மையோரின் கருத்துக்கள். சோவியத்துக்களில் இவை மேன்மேலும் வளர்ந்து கொண்டே வருகிற ஒரு போக்காகும். போல்ஷிவிக்குகளின் சொற்போர் தொடுக்கும் தன்மை, தற்பெருமை பாராட்டும் சொற்றொடர்கள், தன்னம்பிக்கை

இருப்பதாகப் போடும் வெளிவேஷம், இவையெல்லாம் எவ்வளவுதான் இருந்தபோதிலும், ஒருசில வெறியர்களைத் தவிர அவர்கள் எல்லோரும் வாய்ச் சொல் வீரர்களே. தாங்களாகவே 'அதிகாரம் அனைத்தையும்' எடுத்துக்கொள்வதற்கு அவர்கள் முயற்சி செய்ய மாட்டார்கள். சீர்குலைப்பதிலும் அழிப்பதிலும் par excellence* இருக்கிற அவர்கள் உண்மையில் கோழைகளே. தங்களுக்கு இயல்பான அறியாமையையும் தங்களது தற்கால வெற்றிகளின் நிலையற்ற தன்மையையும் அவர்கள் நெஞ்சின் அடியாழத்திலே நன்கறிந்து வைத்திருக்கிறார்கள். அவர்கள் முழு வெற்றியைக் காணும் முதல் நாளே அவர்களின் உடனடியான வீழ்ச்சியைக் குறிக்கும் முதல் நாளுமாகும் என்பதை நாமனைவரும் எவ்வளவு நன்றாக அறிந்திருக்கிறோமோ, அவ்வளவு நன்றாக அவர்களும் அறிவார்கள். அவர்கள் இயல்பாகவே பொறுப்புணர்ச்சியற்றவர்கள்; செயல்முறைகளிலும் சரி, நடவடிக்கைகளிலும் சரி, அராஜகவாதிகள். ஆகவே, அரசியல் சிந்தனையின் ஒரு போக்காகத் தான்—சரியாகச் சொன்னால் அதன் முறை தவறிய வடிவாகத்தான்—அவர்களைக் கருத வேண்டும். போல்ஷிவிசத்திலிருந்து நீண்டகாலத்துக்கு விடுதலை பெறுவதற்குச் சிறந்த வழி, அதன் தலைவர்கள் கையில் நாட்டின் தலைவிதியை ஒப்படைத்துவிடுவதுதான். இம்மாதிரிச் சோதனைகள் செய்யத் தகாதவை, அழிவுதரக் கூடியவை என்ற உணர்வு மட்டும் இல்லாமலிருந்தால், புகலற்ற நிலையில் எவரும் அத்தகைய வீர மிக்க நடவடிக்கை எடுப்பதற்குக்கூடத் துணியலாம். நல்ல வேளையாக, இந்த விடியாமூஞ்சி வீரர்கள் உண்மையில் எல்லா அதிகாரத்தையும் கைப்பற்றுவதற்கு முயலவேயில்லை என்பதை மீண்டும் கூறுகிறோம். எந்த விதமான சூழ்நிலையிலும் அவர்கள் ஆக்க வேலையை மேற்கொள்வதற்குச் சக்தியற்றவர்கள். ஆகவே, அவர்களின் திண்ணமும் நேர்வழியும் அரசியல் மேடையளவில் தானே தவிர, பேச்சளவில் தானே தவிர, அதற்கு வெளியே கிடையாது. ஆகவே, நடைமுறையில் அவர்களது நிலையை எந்த வகையிலும் கணக்கில் சேர்க்க முடியாது. இருந்த போதிலும் ஒரு அம்சத்தில் அதற்குக் கொஞ்சம் நடைமுறை முக்கியத்துவம் உண்டு; அதாவது, 'சோஷலிஸ்டு சிந்தனையின்' மற்றெல்லாச் சாயைகளையும் அது தனக்கு எதிராக ஒன்றுபடுத்தி வைக்கிறது...''

* —தலைசிறந்தவர்களாக.—(ப-ர்.)

இவ்வாறு காடெட்டுகள் வாதிக்கின்றனர். அதே சமயம், ருஷ்யாவில் ''ஆட்சி செலுத்தி நிர்வகித்து வரும்'' மிகப் பெரிய கட்சியான ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின்'' கருத்தைப் பார்ப்போம். இவர்களுடைய கருத்தும் இவர்களின் அதிகாரபூர்வமான கட்சிப் பத்திரிகையான தியேலோ நரோதாவில்[17] செப்டம்பர் 21ம் தேதி, கையெழுத்தற்ற, அதாவது தலையங்கக் கட்டுரையிலேயே வெளியிடப் பட்டுள்ளது:

''... மகாநாடு ஊர்ஜிதம் செய்துள்ள வேலைத்திட்டத்தின் அடிப்படையில், அரசியல் நிர்ணய சபை கூட்டப்படும் வரையில், ஜனநாயகத்துடன் இணைந்து வேலை செய்ய முதலாளி வர்க்கம் மறுக்குமேயானால், அந்த மகாநாட்டிற்குள்ளிருந்தே கூட்டணி தோன்ற வேண்டும். கூட்டணியை ஆதரிப்பவர்களுக்கு இது ஒரு கடுமையான தியாகமாக இருக்கும். அதிகார விஷயத்தில் 'தூய போக்கைக்' கடைப்பிடிக்க வேண்டும் என்ற கொள்கையைப் பரப்புகிறவர்களுங்கூட இதற்கு உடன்பட்டாக வேண்டும். ஆனால் இவர்களிடையே உடன்பாடு ஏற்படாதென்று நாம் அஞ்சுகிறோம். அப்படி நேர்ந்தால் மூன்றாவதான, கடைசியான ஒரு நடவடிக்கை எஞ்சியுள்ளது; அதாவது, மகாநாட்டின் எந்தப் பாதி கோட்பாட்டின் அடிப்படையில் தனிக் கட்சி அரசாங்கக் கருத்தை வற்புறுத்தியதோ அந்தப் பாதியே அரசாங்கத்தை அமைக்க வேண்டும்.

''இதையே திட்டவட்டமாகக் கூறுவோம்: போல்ஷிவிக்குகளுக்கு மந்திரி சபை அமைக்க வேண்டிய கடமை ஏற்படும். அவர்கள் புரட்சிகர ஜனநாயகத்திற்கு, கூட்டணி பற்றி ஊக்கமுடன் வெறுப்பு ஊட்டியுள்ளனர்; 'சமரசவாதத்தைக்' கைவிட்டுவிட்டால் எல்லாவிதமான நன்மைகளும் கிடைக்கச் செய்வோம் என்று வாக்களித்திருக்கின்றனர்; நாட்டின் துயரங்கள் அனைத்திற்கும் காரணம் இந்தச் சமரசவாதம் என்றும் சொல்லி வந்துள்ளனர்.

''தங்கள் கிளர்ச்சியின் மூலமாகத் தாங்கள் செய்து வருவது என்ன என்பதை அவர்கள் உணர்ந்திருந்தால், அவர்கள் பொது மக்களை ஏமாற்றி வரவில்லை என்றால், தங்கள் இஷ்டம் போல் அவர்கள் தாராளமாக வழங்கி வந்த புரோமிஸரி நோட்டுகளை இப்பொழுது செலுத்த வேண்டியது அவர்களின் கடமையாகும்.

''பிரச்சினை மிகத் தெளிவாயுள்ளது.

''அதிகாரத்தை மேற்கொள்வது தங்களால் இயலாத காரியம் என்ற, அவசர அவசரமாகப் புனைந்த தத்துவங் களின்பின் மறைந்து கொள்வதற்கு, அவர்கள் வீண் முயற்சி கள் செய்ய வேண்டாம்.

''இந்தத் தத்துவங்களை ஜனநாயகம் ஏற்காது.

''அதே நேரத்தில் கூட்டணியை விரும்புவோர், அவர் களுக்கு முழு ஆதரவு அளிப்பதாக உத்தரவாதம் செய்ய வேண்டும். இவைதான் நம்முன் இருக்கிற மூன்று விதமான மாற்றுக்கள், மூன்று வழிகள். வேறு எதுவும் கிடை யாது!'' (கொட்டையெழுத்துக்கள் தியேலொ நரோதா தந் தவையே.)

இவ்வாறு வாதிக்கின்றனர் சோஷலிஸ்டு-புரட்சியாளர் கள். கடைசியாக, **நோவயா ஷீஸ்னைச்** சேர்ந்த ''கால்வாசி போல்ஷிவிக்குகளின்'' ''நிலையை'' — அதாவது, ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் என்றிருக்க முயற்சிப்பதை, ஒரு நிலை என்று சொல்ல முடியுமானால் அதை—இனிக் கவனிப்போம். செப்டம்பர் 23ம் தேதி **நோவயா ஷீஸ்ன்** பத்திரிகையின் தலையங்கக் கட்டுரையிலிருந்து இது எடுக்கப் பட்டுள்ளது:

''... கொனவாலவ், கிஷ்கின் ஆகியோருடன் கூட்டணி ஒன்று மறுபடியும் அமைக்கப்படுமானால், அது ஜனநாயகத் தின் புதிய சரணாகதி என்றுதான் அர்த்தப்படும்; ஆகஸ்டு 14ம் தேதிய வேலைத்திட்டத்தின் அடிப்படையில் ஒரு பொறுப்புள்ள அரசாங்கம் அமைப்பதைப் பற்றிய மகா நாட்டின் தீர்மானத்தை ரத்து செய்வதாகத்தான் அது அர்த்தப்படும்...

''... மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு - புரட்சியாளர் களும் அடங்கிய, கருத்தொருமையுள்ள மந்திரி சபை, கூட்டு மந்திரி சபையில் பொறுப்புள்ள சோஷலிஸ்டு மந்திரி கள் தங்கள் பொறுப்பை எப்படிக் குறைந்த அளவிலே உணர்ந்தார்களோ, அதே போலக் குறைந்த அளவிலேயே தன் பொறுப்பை உணர முடியும்... அப்படிப்பட்ட அரசாங்கம் புரட்சியின் 'உயிர்ப்புள்ள சக்திகளைத்' தன் பால் சேகரித்து நிறுத்திக்கொள்ள இயலாது என்பது மட்டுமின்றி, அப்புரட்சியின் முன்னணிப் படையாகிய பாட் டாளி வர்க்கத்தின் செயல் பூர்வமான ஆதரவு தனக்குக் கிடைக்கும் என்று நம்பிக்கை கொள்ளவும் இயலாது.

''ஆனுல் வேருெரு வகையான கருத்தொருமையுள்ள மந்திரி சபையை, அதாவது 'பாட்டாளிகளும் ஏழை விவசாயிகளும்' அடங்கிய அரசாங்கத்தை அமைப்பது நிலைமையைச் சமாளிப்பதற்கு மற்ற வழிகளைவிடச் சிறந்ததாயிருக்காது, இன்னும் மோசமான வழியாகத்தான் இருக்கும். உண்மையில் அது பரிகாரமே ஆகாது, வெறும் தோல்வியே ஆகும். பார்க்கப் போனுல், எவரும் அத்தகைய கோஷத்தை முன்வைக்கவேயில்லை, ரபோச்சி பூத்[18] என்ற பத்திரிகையில் உள்ள சிற்சில குறிப்புரைகளைத் தவிர. அவையுங் கூட ஏதோ போகிற போக்கிலே, தைரியமில்லாத முறையில், அதை வெளியிட்டுப் பின்னர் முறையாக, 'விளக்கப்' படுகின்றவையாக உள்ளன.'' (இத்தகைய பச்சைப் பொய்யைப் பொறுப்பு வாய்ந்த பத்திரிகையாளர்கள் ''தைரியமாக'' எழுதுகிருர்கள். செப்டம்பர் 21ம் தேதிய தியேலொ நரோதாவின் தலையங்கத்தைக்கூட அவர்கள் மறந்துவிட்டனர்...)

''ஒப்பனைக்காக, போல்ஷிவிக்குகள் 'எல்லா அதிகாரமும் சோவியத்துக்களுக்கே' என்கிற பழைய கோஷத்தை இப்போது மறுபடியும் உயிர்ப்பித்திருக்கிருர்கள். மத்திய நிர்வாகக் கமிட்டியின் வடிவில், சோவியத்துக்கள் செயல்பூர்வமான போல்ஷிவிக்-எதிர்ப்புக் கொள்கையைத் திட்டமாகக் கையாண்ட ஜூலை நாட்களுக்கு பின் இந்தக் கோஷம் வாபஸ் பெறப்பட்டது. எனினும் இப்பொழுது 'சோவியத் வழி' என்பது நேராக்கி நிமிர்த்தி விடப்பட்டிருக்கிறது என்று கருத முடியும்; அது மட்டுமல்ல, உத்தேசத்திலிருக்கும் சோவியத்துக்களின் மகாநாட்டில் போல்ஷிவிக்குகளே பெரும்பான்மையினராக இருப்பார்கள் என்று எண்ணுவதற்கு எல்லா ஆதாரங்களுமுண்டு. இத்தகைய நிலைமைகளில், 'எல்லா அதிகாரமும் சோவியத்துக்களுக்கே' என்ற கோஷத்தை போல்ஷிவிக்குகள் உயிர்ப்பித்திருப்பது, 'நடைமுறை உத்தி வகைப்பட்ட கொள்கை' ஆகும். அந்தக் கொள்கை பாட்டாளிகள், 'ஏழை விவசாயிகளின்' சர்வாதிகாரத்தை நிறுவுவதையே நோக்கமாகக் கொண்டுள்ளது. சோவியத்துக்கள் என்று சொல்லும் பொழுது விவசாயிகள் பிரதிநிதிகளின் சோவியத்துக்களும் அவற்றில் அடங்கும் என்பது உண்மையே; ஆகவே ருஷ்ய

ஜனநாயகம் முழுவதிலும் மிகப் பெரும் பகுதியை ஆதார மாகக் கொள்ளும் அதிகாரம் என்பதே போல்ஷிவிக் கோஷத்தின் பொருளாகும். ஆனால், அவ்வாறிருப்பின், 'எல்லா அதிகாரமும் சோவியத்துக்களுக்கே' என்ற கோஷம் சார்பற்ற மகத்துவம் எதுவுமற்றுப் போய்விடுகிறது. ஏனெனில் சோவியத்துக்களின் உள்ளமைப்பும், மகாநாடு நிறுவிய 'பூர்வாங்க நாடாளுமன்றத்தின்' உள்ளமைப்பும் அநேகமாக ஒன்றுதான் என்று ஆகிவிடுகின்றன...''

(நோவயா ஷீஸ்ன் கூற்று அபாண்டமான பொய். போலி யான ஜனநாயக முறையும், உண்மையான ஜனநாயக முறையும் ''அநேகமாக ஒன்றுதான்'' எனக் கூறுவது போன்றது இது. பூர்வாங்க நாடாளுமன்றம் என்பது சிறு பான்மையோரின் விருப்பத்தை, சிறப்பாக குஸ்கோவா, பெர்கென்ஹைம், சாய்கோவ்ஸ்கி கூட்டத்தாரின் விருப் பத்தை, பெரும்பான்மையோரின் விருப்பமாகச் சித்தரித்து ஏய்த்து வருகிற பித்தலாட்டமே அது. இதுதான் முதல் விஷயம். இரண்டாவது குறிப்பிடத்தக்க விஷயம் என்ன வெனில், மகாநாட்டில் அவ்க்சேன்தியெவ், சாய்கோவ்ஸ்கி போன்றவர்களால் தயாரித்தனுப்பப்பட்ட விவசாய சோவி யத்துக்களின் கூட்டத்தில் கூட கூட்டணியை எதிர்ப்பவர் களின் சதவீதம் மிகவும் அதிகமாகவே இருந்தது. அதாவது, எதிர்ப்பவர்கள் தொழிலாளிகள்-போர்வீரர்கள் பிரதிநிதி களின் சோவியத்துக்களுடன் சேர்ந்திருந்தால் கூட்டணி அடியோடு தவிடுபொடியாகிப் போயிருக்கும். இனி மூன் றுவது விஷயம் என்னவெனில், ''அதிகாரம் சோவியத்துக் களுக்கே'' என்பதின் பொருள், விவசாய சோவியத்துக் களின் அதிகாரம் பிரதானமாக நாட்டுப்புற மாவட்டங் களைத்தான் அணைத்திருக்கும்; அந்த நாட்டுப்புற மாவட்டங் களில் ஏழை விவசாயிகளின் எண்ணிக்கை மேலோங்கி இருப்பது நிச்சயம்...) ''... இது தான் இதன் பொருள் என்றால் போல்ஷிவிக் கோஷம் உடனே வாபஸ் பெறப்பட வேண்டும். 'அதிகாரம் சோவியத்துக்களுக்கே' என்பது பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரத்தை மூடி மறைப் பதற்குரிய ஒரு சாதனம் மட்டுமே என்றாலோ, அப்படிப்

பட்ட அதிகாரம் புரட்சியின் தோல்வியையும் அழிவையும் தான் குறிக்கும்.

''நாட்டின் இதர வர்க்கங்களிடமிருந்து தனிமைப்பட்டிருப்பதோடு அல்லாமல் ஜனநாயகத்தின் உண்மையான உயிர்ப்புள்ள சக்திகளிடமிருந்தும் தனிமைப்பட்டிருக்கிற பாட்டாளி வர்க்கம் நிர்வாக முறையிலே அரசாங்க இயந்திரத்தைக் கைப்பற்றிக்கொண்டு மிகவும் சிக்கலான நிலைமையில் அதை இயக்கிச் செல்லவும் முடியாது, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை மட்டுமின்றி, அத்துடன் புரட்சி முழுவதையும் அப்படியே வெள்ளத்தில் அடித்துச் செல்லும் படியான எதிர்ப்புச் சக்திகளின் நெருக்குதல் பூராவையும் அரசியல் ரீதியிலே அதனுல் எதிர்த்து நிற்கவும் முடியாது, என்பதற்கெல்லாம் சான்று வேறு வேண்டுமா?

''தற்போதைய நிலைமையின் தேவைகளைப் பூர்த்தி செய்ய வல்லது ஜனநாயகத்திற்குள்ளேயே அமைந்த, உண்மையில் நேர்மையான கூட்டணியே ஆகும்.''

* * *

இந்த நீண்ட மேற்கோள்கள் காட்டியதற்கு நாம் வாசகரின் மன்னிப்பைக் கோருகிறேம். ஆனுல் அவ்வாறு மேற்கோள் காட்டுவது மிக மிக இன்றியமையாதது. போல்ஷிவிக்குகளை எதிர்த்து நிற்கும் பல்வேறு கட்சிகளின் நிலைகள் இன்னின்னவை என்று துல்லியமாகக் காட்ட வேண்டியது அவசியமாயிற்று. அத்துடன் இன்னெரு அதி முக்கியமான விஷயத்தையும் திட்டமாக மெய்ப்பிக்க வேண்டியிருந்தது. போல்ஷிவிக்குகள் அரசாங்க அதிகாரம் அனைத்தையும் தனியாக ஏற்பது என்ற பிரச்சினை சாத்தியமான பிரச்சினைதான் என்பது மட்டுமல்லாமல் அது அவசர அவசியமான பிரச்சினையுமாகும் என்று இந்த எல்லாக் கட்சிகளும் ஒப்புக்கொண்டுள்ளன என்ற அதி முக்கியமான விஷயத்தையும் நாம் நிரூபிக்க வேண்டியதாயிருந்தது.

போல்ஷிவிக்குகள் நீடித்து அரசாள முடியாது என்று காடெட்டுகளிலிருந்து நோவயா ஷீஸ்ன்காரர்கள் வரை

''அனைவரையும்'' ஏற்றுக் கொள்ளும்படி செய்கிற வாதங்களை இனி நாம் பரிசீலிக்க முற்படுவோம்.

மதிப்பு வாய்ந்த பத்திரிகையான ரேச் எவ்வித வாதங்களையும் கூறவில்லை; அது போல்ஷிவிக்குகளின்மீது பொறுக்கு மணிகளான ஆத்திரச் சொற்களை மட்டுமே வசை மாரியாகப் பொழிகின்றது. நாம் மேலே எடுத்துக் காட்டியுள்ள மேற்கோள், போல்ஷிவிக்குகளை அதிகாரத்தைக் கைப்பற்றும்படி ரேச் ''தூண்டுகிறது'' என்று எண்ணுவதும், அதை வைத்துக்கொண்டு ''தோழர்களே, எச்சரிக்கையாக இருங்கள், எதிரிகள் சொல்லும் யோசனை நிச்சயம் தீமை பயப்பதாகும்!'' என்று சிந்திப்பதும் மிகவும் தவறு என்று—மற்ற விஷயங்களோடு கூட—காட்டுகிறது. பொதுவான, திட்டவட்டமான விஷயங்களை நடைமுறைக்குரிய வகையில் சீர்தூக்கிப் பார்ப்பதற்குப் பதிலாக முதலாளி வர்க்கத்தினர் நம்மை அதிகாரத்தைக் கைப்பற்றும்படி ''தூண்டுகிறார்கள்'' என்ற சாக்கை ''ஏற்றுக் கொள்ளும்'' நிலைக்கு நாம் வந்த விட்டோமானால் முதலாளி வர்க்கத்தினரால் நாம் ஏமாற்றப்படுவோம்; ஏனென்றால், போல்ஷிவிக்குகள் அதிகாரத்தைக் கைப்பற்றுவதினால் கோடிக் கணக்கான கேடுகள் விளையும் என்று அவர்கள் எப்போதுமே வெறுப்புடன் ஜோஸ்யம் சொல்லித்தான் வருவார்கள். ''அதிகாரத்தைக் கைப்பற்ற அனுமதித்துவிட்டு, பிறகு போல்ஷிவிக்குகளை நொறுக்குவதுதான் அவர்களை, உடனடியாகவும் 'வரும் பல ஆண்டுகளுக்கும்' தலைதூக்க விடாதபடி செய்வதற்குத் தலைசிறந்த வழியாகும்'' என்று அவர்கள் நிச்சயமாக எப்போதுமே வெறுப்புடன் கூக்குரலிட்டுக் கொண்டுதான் இருப்பார்கள். இப்படிப்பட்ட கூக்குரல்களும் ''தூண்டுதல்கள்'' என்று வேண்டுமானால் சொல்லிக்கொள்ளலாம், ஆனால் எதிர்க் கோணத்திலிருந்து மட்டுமே. காடேட்டுகளும், முதலாளி வர்க்கத்தினரும் அதிகாரத்தைக் கைப்பற்றும்படி நமக்கு எந்த வகையிலும் இப்பொழுதும் ''புத்திமதி கூறவில்லை'', என்றைக்கும் ''புத்திமதி கூறியதில்லை''. தீர்க்க முடியாத அதிகாரப்

பிரச்சினைகள் என்று சொல்லப்படுபவற்றைக் கொண்டு அவர்கள் நம்மைப் பயமுறுத்தப் பார்க்கிறார்கள்.

கூடாது! அரண்டு கிடக்கும் முதலாளி வர்க்கத்தினரின் கூக்குரல்களைக் கேட்டு நாம் பயத்திற்கு இடங்கொடுக்கக் கூடாது. நாம் உறுதியாக மனதிற்கொள்ள வேண்டியதென்ன வென்றால், ''தீர்க்க முடியாத'' சமூகப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு நாம் ஒருபோதும் முற்பட்டதில்லை என்பதைத் தான். ஆனால் சோஷலிசத்தை நோக்கிச் செல்வதற்குரிய உடனடி நடவடிக்கைகள் எடுப்பது என்பது முற்றிலும் தீர்க்கக் கூடிய பிரச்சினையேயாகும்; இந்த மிக இக் கட்டான நிலைமையில் அது ஒன்றுதான் வழி; அந்தப் பிரச்சினையைப் பாட்டாளி வர்க்கமும் ஏழை விவசாயிகளும் நடத்தும் சர்வாதிகாரத்தால் மட்டுமே தீர்க்க முடியும். ருஷ்யாவிலுள்ள பாட்டாளி வர்க்கம் அதிகாரத்தை எடுத்துக்கொண்டால் முன்னெப்போதையும்விட இப்போது, வேறெங்கேயும்விட இங்கே, அது வெற்றி — நிலையான வெற்றி — பெறுவது திண்ணம்.

ஏதாவதொரு குறிப்பிட்ட தருணத்தைப் பிரதிகூலமாக்கும் படியான திட்டவட்டமான சூழ்நிலைமைகளைப் பற்றி நாம் சுத்தமாய்க் காரியரீதியிலே விவாதிப்போம்; ஆனால், முதலாளி வர்க்கத்தின் வெறிக் கூச்சல்களைக் கேட்டு ஒரு கணமேனும் நாம் அரண்டு விடமாட்டோம்; மேலும், போல்ஷிவிக்குகள் அரசாங்க அதிகாரமனைத்தையும் கைப் பற்றுவது என்ற பிரச்சினை, உண்மையில், மிகவும் அவசர அவசியமான பிரச்சினையாக ஆகி வருகிறது என்பதையும் நாம் மறக்கப் போவதில்லை. அதிகாரத்தைக் கைப் பற்றுவதற்குப் ''பக்குவ நிலை இன்னும் வரவில்லை'' என்று நாம் ஒப்புக்கொள்வதினால் ஏற்படுகிறதைவிட இதை மறந்துவிடுவதால் நமது கட்சிக்கு உண்டாகும் அபாயம் அளவிடற்கரியவாறு பெரிதாயிருக்கும். இந்த விஷயத்திலே இப்போது ''பக்குவமற்றது'' என்று எதுவுமே இருக்க முடியாது. பத்து லட்சத்தில் ஒருக்கால் ஒன்றிரண்டு போக மற்றப்படி முழுக்க முழுக்க எல்லா வாய்ப்புக்களும் இதற்குச் சாதகமாகவே இருக்கின்றன.

ரேச்சின் கோபமிக்க வசை மாரிபற்றி நாம் சொல்லக் கூடியதும், சொல்லித் தீர வேண்டியதும் இதுதான்:

அங்கீகாரக் குரலைக் கேட்கின்றோம் நாம்
அமைந்திசைக்கும் பாராட்டின் ஒலியிலல்ல,
பொங்கு சினக் காட்டுக் கூச்சல்களிலே தான்[19]

முதலாளி வர்க்கத்தினர் நம்மீது இவ்வளவு காட்டுத் தனமாகப் பகைமை பாராட்டுவதே, அவர்களின் ஆதிக் கத்தைத் தூக்கியெறிவதற்கு வேண்டிய சரியான வழி வகைகளை நாம் பொது மக்களுக்குக் காட்டி வருகின்றோம் என்ற உண்மைக்கு மிகத் தெளிவான சான்றுகளில் ஒன்றாகும்.

* * *

நியேலொ நரோதா பத்திரிகை, ஒரு நாளுமில்லாத திருநாளாக, இந்தத் தடவை தனது வசை மொழிகளால் நம்மைக் கௌரவித்து அருளவோ, வாதம் என்ற எதையும் ஒப்புக்குக்கூடக் காட்டவோ இல்லை. ''போல்ஷிவிக்குகளுக்கு மந்திரி சபை அமைக்க வேண்டிய கடமை ஏற்படும்'' என்ற சாத்திய நிலையைக் காட்டி, மறைமுகமான முறையில், ஒரு ஜாடை மூலம், நம்மைப் பயமுறுத்த மட்டுமே அது முயற்சிக்கிறது. நம்மைப் பயமுறுத்துவதாக முயற்சிக்கும் போது சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், கிலி பிடித்த மிதவாதிகளைப் பீடித்திருக்கும் பேயைக் கண்டு தாங்களே மரண கிலியடித்துக் கிடக்கிறார்கள் என்று நான் திட்டமாக ஒப்புக்கொள்கிறேன். மத்திய நிர்வாகக் கமிட்டி போன்ற மிகமிக உயர்ந்தவையும், மிகமிக அழுகிப் போனவையுமான நிறுவனங்களிலும், இவை போன்ற ''தொடர்புள்ள'' (அதாவது, காடேட்டுகளுடன் பழகுவதற்கும், அப்பட்டமாகச் சொல்வதானால், அவர் களுடன் கூடிக்குலாவுவதற்குமான) குழுக்களிலும் சோஷ லிஸ்டு-புரட்சியாளர்கள் சில போல்ஷிவிக்குகளைப் பய முறுத்துவதில் வெற்றிகொள்கின்றனர் என்றும் நான் அதே போலத் திட்டமாக ஒப்புக்கொள்கிறேன். ஏனென்றால்,

முதலாவதாக, இந்த மத்திய நிர்வாகக் கமிட்டி, ''பூர்வாங்க நாடாளுமன்றம்'', முதலியவற்றில் உள்ள சூழ்நிலை மிகவும் வெறுக்கத்தக்கது, குமட்டலெடுக்கும் அளவிற்கு நாற்றமெடுத்துப் போய்க் கிடக்கிறது. நீண்ட காலம் அதைச் சுவாசிப்பது எந்த மனிதனுக்கும் தீங்கிழைக்கக் கூடியதாகும். இரண்டாவதாக, உள்ளார்ந்த உணர்ச்சி தொத்திக் கொள்ளும் இயல்புடையது. ஆகவே, உள்ளாரப் பயந்து கிடக்கும் போலிப் பண்பாளன், தனிப்பட்ட புரட்சியாளரைக்கூட, தாற்காலிகமாகத் தன்னைப் போலவே போலிப் பண்பாளனாக மாற்றிவிட முடியும்.

துரதிர்ஷ்டவசத்தால் காடேட்டுகளோடு சேர்ந்து மந்திரியாக இருந்திருப்பவனோ, அல்லது காடேட்டுகளின் அபிப்பிராயத்தில் மந்திரியாகத் தகுந்தவனோ ஆன சோஷலிஸ்டு-புரட்சியாளர் ஒருவனின் உளமார்ந்த பயத்தை, ''மனிதத்துவ முறையிலே'' நாம் எவ்வளவுதான் புரிந்து கொள்ளக் கூடுமென்றாலுங்கூட, நாமே அரண்டுவிடும் நிலைக்கு வந்துவிட்டால், பாட்டாளி வர்க்கத்துக்குத் துரோகம் புரியும் அளவுக்கு அரசியல் தவறு செய்தவர்களாவோம். கனவான்களே! உங்களுடைய காரியரீதியான வாதங்களைச் சொல்லுங்கள்! உங்களுடைய பயத்தைக் கண்டு நாங்களும் பயப்படும் நிலைக்கு வருவோம் என்று மனக்கோட்டை கட்டாதீர்கள்!

* * *

இம்முறை நோவயா ஷீஸ்ன் ஒன்றில் மட்டுமே காரிய ரீதியான வாதங்களை நாம் காண்கிறோம். அது இப்போது முதலாளி வர்க்கத்தினருக்கு வக்காலத்து வாங்கும் பாத்திரத்தில் வெளிப்பட்டிருக்கிறது. போல்ஷிவிக்குகளுக்கு வக்காலத்து வாங்குவதைவிட இதுவே அதற்குச் சாலப் பொருத்தமான பாத்திரமாகும். போல்ஷிவிக்குகளுக்காக வக்காலத்து வாங்குவது எல்லாவிதத்திலும் இனிய சுபாவம் படைத்த இந்தச் சீமாட்டிக்கு[20] ''அதிர்ச்சியைத்'' தருகிறது என்பது வெளிப்படை.

இந்த வக்கீல் ஆறு வாதங்கள் கூறுகிறார்:

1) பாட்டாளி வர்க்கம் ''நாட்டின் இதர வர்க்கங்களிடமிருந்து தனிமைப்பட்டிருக்கிறது'';

2) அது ''ஜனநாயகத்தின் உண்மையான உயிர்ப்புள்ள சக்திகளிடமிருந்தும் தனிமைப்பட்டிருக்கிறது'';

3) அது ''நிர்வாக முறையிலே அரசாங்க இயந்திரத்தை ஏற்றுக்கொள்ள முடியாது'';

4) அந்த அரசாங்க இயந்திரத்தை ''இயக்கவும்'' அதனுல் முடியாது;

5) ''நிலைமை மிகவும் சிக்கலானது'';

6) ''பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை மட்டுமின்றி, அத்துடன் புரட்சி முழுவதையும் அப்படியே வெள்ளத்திலடித்துச் செல்லும்படியான எதிர்ப்புச் சக்திகளின் நெருக்குதல் பூராவையும்'' அதனுல் ''எதிர்த்து நிற்கவும் முடியாது''.

**நோவயா ஷீஸ்ன்** முதல் வாதத்தை எள்ளி நகையாடத் தக்க விதத்தில் விகாரமாக வரையறுக்கிறது. முதலாளித்துவ சமுதாயத்திலும் அரை-முதலாளித்துவ சமுதாயத்திலும் முதலாளி வர்க்கம், குட்டி முதலாளி வர்க்கம் (விவசாயி மக்களே அதன் பிரதானமான பிரதிநிதி), பாட்டாளி வர்க்கம் ஆகிய மூன்று வர்க்கங்கள்மட்டுமே உண்டு என்பதை நாம் அறிவோம். முதலாளி வர்க்கத்துக்கு எதிராகப் பாட்டாளி வர்க்கம் நடத்தும் போராட்டம்தான், முதலாளி வர்க்கத்துக்கு எதிரான புரட்சிதான், பேசப்படும் பிரச்சினையாய் இருக்கையில், பாட்டாளி வர்க்கம் இதர வர்க்கங்களிடமிருந்து தனிமைப்பட்டிருக்கிறது என்று கூறுவதின் பொருள் என்ன?

விவசாய மக்களிடமிருந்து பாட்டாளி வர்க்கம் தனிமைப்பட்டிருக்கிறது என்றுதான் **நோவயா ஷீஸ்ன்** கூற விரும்பியது என்பது வெளிப்படை. ஏனெனில் நிலப்பிரபுக்களை அது குறித்திருக்க முடியாது. இருந்தாலும், விவசாய மக்களிடமிருந்து பாட்டாளி வர்க்கம் இப்பொழுது தனிமைப்பட்டிருக்கிறது என்று அதனுல் தெளிவாகவும்

திட்டவட்டமாகவும் கூற முடியவில்லை. அவ்வாறு கூறுவது பச்சைப்புளுகு என்று பளிச்செனத் தெரிந்துவிடும்.

ஒரு முதலாளித்துவ நாட்டில் — அதிலும் முதலாளி வர்க்கத்துக்கு எதிரான புரட்சியில் — குட்டி முதலாளி வர்க்கத்திடமிருந்து பாட்டாளி வர்க்கம் ருஷ்யாவில் இன்று இருப்பது போன்று குறைவாகத் தனிமைப்பட்டிருப்பதாகக் கற்பனை செய்து பார்ப்பதும் கஷ்டமாகும். இதைப் பற்றிய யதார்த்தரீதியான, மறுத்தற்கியலாத சான்றாக, கெட்ட பெயர் எடுத்த ''ஜனநாயக'' மகாநாடு என்ற திஸெரெத்தேலியின் ''புலீகின் டூமாவில்'' முதலாளி வர்க்கத்துடன் கூட்டணி யமைப்பதை ஆதரித்தும், எதிர்த்தும் ''குரியாக்கள்''* தந்துள்ள வாக்குகளின் புத்தம் புதிய கணக்கு விவரம் நம்மிடம் இருக்கிறது. சோவியத்துக்களின் குரியாக்களை எடுத்துக்கொண்டால், நாம் காண்பது:

| | கூட்டணியை ஆதரிப்போர் | கூட்டணியை எதிர்ப்போர் |
|---|---|---|
| தொழிலாளிகள்-போர்வீரர்கள் பிரதிநிதிகளின் சோவியத்துக்கள் . . . . . . . . . | 83 | 192 |
| விவசாயிகள் பிரதிநிதிகளின் சோவியத்துக்கள் . . . . | 102 | 70 |
| எல்லாசோவியத்துக்களும் சேர்ந்து மொத்தம் . . . | 185 | 262 |

இவ்வாறு, மொத்தத்தில் பெரும்பான்மையோர் முதலாளி வர்க்கத்தினருடன் கூட்டணி கூடாது என்ற பாட்டாளி வர்க்கத்தின் கோஷத்தையே ஆதரிக்கிறார்கள்.

---

* குரியாக்கள்—சொத்து, இனம், மற்றக் காரணங்கள், இவற்றின் அடிப்படையில் வாக்காளர்கள் தனித்தனித் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். இந்தத் தொகுதிகள் குரியாக்கள் எனப்பட்டன. ருஷ்யாவில் அரசாங்க டூமாவுக்குத் தேர்தல்கள் நடக்கையில் குரியாக்கள் நிலவின.—(ப-ர்.)

காடெட்டுகள்கூட சோவியத்துக்களில் போல்ஷிவிக்குகளின் செல்வாக்கு வளர்ந்துள்ளதை ஒப்புக்கொள்ள நேர்ந்துள்ளதை நாம் மேலே பார்த்தோம். அதிலும் இங்கே நாம் எடுத்துக்காட்டியிருப்பது சோவியத்துக்களின் நேற்றைய தினத் தலைவர்களான சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் கூட்டிய மகாநாடாகும். மத்திய நிறுவனங்களில் இவர்களுக்குத்தான் நிச்சயமான பெரும்பான்மையுள்ளது! ஆகவே, சோவியத்துக்களில் உண்மையில் எந்த அளவிற்கு போல்ஷிவிக்குகள் பெரும்பான்மையோராக உள்ளனர் என்பது இங்கே குறைவாகவே மதிப்பிடப்பட்டுள்ளது என்பது வெளிப்படை.

முதலாளி வர்க்கத்துடன் கூட்டணியாக இணைவது, உடனடியாக நிலப்பிரபுக்களின் நிலங்களை விவசாயிக் கமிட்டிகளுக்கு மாற்றிக் கொடுப்பது என்ற இவ்விரு விஷயங்களைப் பற்றி, தொழிலாளிகள்-போர்வீரர்கள்-விவசாயிகள் பிரதிநிதிகளின் சோவியத்துக்களில் ஏற்கெனவே போல்ஷிவிக்குகளுக்குப் பெரும்பான்மை ஆதரவு, பொது மக்களின் பெரும்பான்மை ஆதரவு, குட்டி முதலாளி வர்க்கத்தினரின் பெரும்பான்மை ஆதரவு இருக்கிறது. செப்டம்பர் 18ல் பெத்ரொகிராத் நகரில் நடைபெற்ற விவசாயிகள் பிரதிநிதிகளின் ஸ்தல சோவியத்துக்களின் மகாநாடு பற்றிய விவரம், சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் பத்திரிகையாகிய ஸ்நாமியா த்ருதாவின்[21] 25வது இதழிலிருந்து எடுத்து செப்டம்பர் 24ம் தேதிய ரபோச்சி பூத்தின் 19வது இதழில் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. (காஸ்த்ரொமா, மாஸ்கோ, சமாரா, தௌரீதா என்ற குபேர்னியாக்களைச் சேர்ந்த) நான்கு விவசாயி சோவியத்துக்களின் நிர்வாகக் கமிட்டிகள் இந்த மகாநாட்டில் வரம்பிலாக் கூட்டணிக்கு ஆதரவாக ஓட்டளித்தன. (விளாதீமிர், ரியஸான், கருங்கடல் என்ற) மூன்று குபேர்னியாக்களையும், இரண்டு சேனைகளையும் சேர்ந்த நிர்வாகக் கமிட்டிகளும் காடெட்டுகளில்லாத கூட்டணிக்கு ஆதரவாக ஓட்டளித்தன. இருபத்து மூன்று குபேர்னியாக்களையும்

நான்கு சேனைகளையும் சேர்ந்த நிர்வாகக் கமிட்டிகள் கூட்டணிக்கு எதிராக ஓட்டளித்தன.

ஆகவே, விவசாயிகளில் பெரும்பான்மையோர் கூட்டணிக்கு எதிராகவுள்ளனர்!

இது ''பாட்டாளி வர்க்கம் தனிமைப்பட்டிருக்கிறது'' என்ற கூற்றுக்கு மறுப்பு.

போகிற போக்கிலே, இதை ஒட்டிக் கவனிக்க வேண்டிய மற்றொரு விஷயம் உண்டு. தொலைவிலிருக்கும் சமாரா, தௌரீதா, கருங்கடல் குபேர்னியாக்கள் மூன்றும் கூட்டணியை ஆதரித்து ஓட்டளித்துள்ளன. அங்கு, மற்ற இடங்களைவிட மிக அதிகமாகப் பணக்கார விவசாயிகளும் பெரும் நிலப்பிரபுக்களும் இருக்கின்றனர். அவர்கள் கூலிக்கு வேலையாட்களை அமர்த்திக் கொள்கின்றனர். இவை தவிர, (விளாதீமிர், ரியஸான், காஸ்த்ரொமா, மாஸ்கோ என்ற) நான்கு தொழில் வளர்ச்சி பெற்ற குபேர்னியாக்களும் கூட்டணியை ஆதரித்து ஓட்டளித்துள்ளன. ருஷ்யாவிலுள்ள பெரும்பாலான மற்ற குபேர்னியாக்களைவிட இவற்றில் விவசாய முதலாளி வர்க்கத்தினர் அதிக பலமுடையவர்கள். இவ்விஷயத்தைப் பற்றி மேலும் அதிக விரிவான விவரக் குறிப்புகள் சேகரிப்பதும், மிக மிகப் ''பணக்காரர்களான'' விவசாயிகள் இருக்கும் குபேர்னியாக்களில் உள்ள ஏழ்மை மிக்க விவசாயிகள் பற்றிய தகவல் கிடைக்கக் கூடுமா என அறிந்து கொள்வதும் சுவாரசியமாக இருக்கும்.

மேலும், ''தேசிய இனக் குழுக்கள்'' கூட்டணியை எதிர்த்து நிற்பவர்களையே மிகமிகப் பெரும்பான்மையாகக் கொண்டுள்ளன என்பதும் சுவையான செய்தியாகும். அதாவது எதிர்த்தவர்கள் 40 பேர், ஆதரித்தவர்கள் 15 பேர். ருஷ்யாவிலுள்ள உரிமையற்ற தேசிய இனங்கள் மீது நெப்போலியப் போக்குள்ள கேரென்ஸ்கியும் அவர் கும்பலும் கையாண்ட நாடுபிடிக்கும் பச்சை பலாத்காரக் கொள்கை ஒரு பலனை அளித்து விட்டது. ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களின் பொது மக்களின் பரந்த பகுதியினர், அவர்களில் குட்டிமுதலாளி வர்க்கத்தைச் சேர்ந்த மிகப்

பலர், ருஷ்ய முதலாளி வர்க்கத்தைவிட ருஷ்யப் பாட்டாளி வர்க்கத்திடம் அதிக நம்பிக்கை வைத்துள்ளனர். ஏனெனில், ஒடுக்கும் தேசிய இனங்களுக்கெதிராக, ஒடுக்கப்பட்ட தேசிய இனங்கள் விடுதலைப் போராட்டம் நடத்தி வருவது இங்கு இன்றைய சரித்திரப் போக்காகும். முதலாளி வர்க்கத்தினர், ஒடுக்கப்பட்ட இனங்களின் சுதந்திர லட்சியத்திற்கு வெறுக்கத்தக்க முறையில் துரோகம் செய்துவிட்டனர்; பாட்டாளி வர்க்கமோ சுதந்திர லட்சியத்தின்பால் விசுவாசம் செலுத்துகிறது.

இன்றைய காலகட்டத்தில் ருஷ்யக் குட்டி முதலாளித்துவ மக்கள் பகுதிகளுக்கு தேசிய இனப் பிரச்சினையும் நிலப் பிரச்சினையும் அடிப்படையான பிரச்சினைகளாகும். இதில் மறுப்புக்கே இடமில்லை. இந்த இரண்டு பிரச்சினைகள் சம்பந்தமாகவும் பாட்டாளி வர்க்கம், மிகவும் ''தனிமைப் பட்டு இருக்கவேயில்லை''. பொது மக்களில் பெரும்பான்மையோர் அதன் பக்கம் இருக்கின்றனர். இந்த இரண்டு பிரச்சினைகள் சம்பந்தமாக, பாட்டாளி வர்க்கம் ஒன்றுதான் திடமான, உண்மையில் ''புரட்சிகரமான ஜனநாயகக்'' கொள்கையைக் கடைப்பிடிக்கும் சக்தி பெற்றுள்ளது. அந்தக் கொள்கை குடி மக்களில் பெரும்பாலானவர்களின் ஆதரவைப் பாட்டாளி வர்க்க அரசாங்க அதிகாரத்துக்கு கிடைக்கச் செய்வதோடின்றி, பொது மக்களிடையே புரட்சிகரமான உற்சாகம் வெடித்துக் கிளம்புவதற்கும் வகை செய்யும். ஜாரிஸத்தின்கீழ் விவசாயிகளின்மீது நிலப்பிரபுக்கள் செலுத்திய கொடிய ஒடுக்கு முறையும், உக்ரேனிய தேசிய இனத்தாரின்மீது பெரிய ருஷ்ய தேசிய இனத்தாரின் கொடிய ஒடுக்குமுறையும் இருந்து வந்தன; குடியரசின்கீழ் அதே கொள்கையைப் படாடோபமான வார்த்தைகளால் மூடிமறைத்துத் தொடர்ந்து கடைப்பிடிக்கும் வேட்கையும் இருந்து வந்தது; (விவசாயி மக்களுக்கும் ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களுக்கும் கேரென்ஸ்கி பரிசாக வழங்கி வரும்) பிடுங்கல், பழிப்பு, மாய்மாலங்கள், ஒத்திப் போடல், மறைமுக மோசடிகள், போக்குக் காட்டி மழுப்பல், முதலியன இருந்து வந்தன. பாட்டாளி வர்க்

கம் அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்றினுல்தான், முதல் தடவையாகப் பொது மக்களுக்குச் சர்க்காரிடமிருந்து இத்தகைய ஒடுக்குமுறை அல்ல, ஆழ்ந்த அனுதாபம் கிடைக்கும், அந்த அனுதாபம் செய்கைகளிலே நிருபிக்கப் படும், நிலப்பிரபுக்களை எதிர்த்து உடனடியான, புரட்சிகர மான நடவடிக்கைகள் எடுக்கப்படும், பின்லாந்தியர், உக் ரேனியர், பைலோரஷ்யர், முஸ்லிம்கள், முதலானேருக்குப் பூர்ண சுதந்திரம் உடனடியாகத் திரும்ப வழங்கப் பெறும்.

சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளு மான கனவான்களுக்கு இது நன்ருய்த் தெரியும். அதனுல் தான் கூட்டுறவுச் சங்கங்களின் தலைவர்களாகிய அரைக் காடெட்டுகளையும் தங்களுடன் இழுத்துப் போட்டுக் கொண்டு, அவர்கள் உதவியோடு, பொது மக்களுக்கு எதிராக பிற்போக்கு-ஜனநாயகக் கொள்கையைக் கடைப் பிடித்து வருகின்றனர். அதனுல்தான், அவர்கள் பொது மக்களின் அபிப்பிராயங்களைக் கேட்பதற்கோ, குடியொப் பம் வேண்டலுக்கோ ஒருபோதும் துணிய மாட்டார்கள்; நடைமுறைக் கொள்கையின் ஏதாவது சில அம்சங்களைப் பற்றி, உதாரணமாக நிலப்பிரபுக்களின் நிலங்களை உடனே விவசாயிக் கமிட்டிகளிடம் ஒப்படைப்பதா, பின்லாந் தியர், உக்ரேனியர் ஆகியோரின் இன்னின்ன கோரிக்கை களுக்கு இணங்குவதா என்பன போன்ற பிரச்சினைகளைப் பற்றிக் குறைந்த பட்சம் எல்லா ஸ்தல சோவியத்துக்களி லும் ஸ்தல ஸ்தாபனங்களிலும் வோட்டெடுப்பு நடத்த ஒரு போதும் துணிய மாட்டார்கள்.

தவிர, இன்றைய வாழ்க்கை முழுவதின் அதி முக்கியத் துவம் வாய்ந்த பிரச்சினையாகிய சமாதானப் பிரச்சினை பற்றிய நிலை என்ன? பாட்டாளி வர்க்கம் ''இதர வர்க்கங் களிடமிருந்து தனிமைப்பட்டிருக்கிறதாம்''... இந்த விஷயத்தில், பாட்டாளி வர்க்கம் உண்மையில் தேச முழுமைக்கும் பிரதிநிதியாக, எல்லா வர்க்கங்களைச் சேர்ந்த உயிர்ப்புள்ள நேர்மையான எல்லாப் பகுதிகளின் பிரதி நிதியாக, குட்டி முதலாளி வர்க்கத்தில் மிகமிகப் பெரும் பாலானவர்களின் பிரதிநிதியாக நிற்கிறது. ஏனெனில்

பாட்டாளி வர்க்கம் ஒன்றுதான், அதிகாரத்தைப் பெற்றதுமே, போரில் ஈடுபட்டுள்ள எல்லா நாட்டினருக்கும் உடனடியாக நியாயமான சமாதானத்தை முன்வைக்கும்; பாட்டாளி வர்க்கம் ஒன்றுதான் எவ்வளவு முடியுமோ, அவ்வளவு விரைவாகவும் மிகமிக நியாயமாகவும் சமாதானத்தை ஏற்படுத்துவதற்கான உண்மையில் புரட்சிகரமான நடவடிக்கைகளை (இரகசிய உடன்படிக்கைகளை வெளியிடுதல், முதலியவற்றை) எடுக்கத் துணியும்.

இல்லை. பாட்டாளி வர்க்கம் தனிமைப்பட்டிருக்கிறது என்று கூக்குரலிட்டுக் கொண்டிருக்கும் நோவயா ஷீஸ்னேச் சேர்ந்த கனவான்கள், அதன்மூலமாக, முதலாளி வர்க்கத்தினரைக் கண்டு அவர்கள் மனப் பூர்வமாக நடுங்கிக் கொண்டிருப்பதைத் தான் காட்டிக் கொள்கிறார்கள். குறிப்பாக இந்தச் சமயத்தில் தான், பாட்டாளி வர்க்கம் குட்டி முதலாளி வர்க்கத்தில் பெரும்பான்மையிடமிருந்து ''தனிமைப்பட்டிருக்க''வில்லை என்பதைத் தான் ருஷ்யாவிலுள்ள எதார்த்த நிலைமை சந்தேகத்திற்கிடமின்றிக் காட்டுகிறது. சிறப்பாக இந்த நேரத்தில்தான், ''கூட்டணியால்'' நேர்ந்த, துயர் மிகுந்த அனுபவத்திற்குப் பிறகு, பாட்டாளி வர்க்கம் பொது மக்களில் பெரும்பாலானவர்களது ஆதரவைப் பெற்று விளங்குகிறது. ஆகவே நீடித்து அரசாள்வதற்குரிய இந்த வாய்ப்பு போல்ஷிவிக் கட்சிக்கு நிச்சயமாக இருக்கிறது.

* * *

இரண்டாவது வாதம், பாட்டாளிவர்க்கம் ''ஜனநாயகத்தின் உண்மையான உயிர்ப்புள்ள சக்திகளிடமிருந்தும் தனிமைப்பட்டிருக்கிறது'' என்பதாகும். இதன் பொருள் என்ன என்பதைப் புரிந்து கொள்வது முடியாத காரியம். இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் பிரெஞ்சுக்காரர்கள் கூறுவது போல, அது ஒருவேளை ''கிரீக் மொழியாக'' இருக்கலாம்.

நோவயா ஷீஸ்னேச் சேர்ந்த எழுத்தாளர்கள், மந்திரிப் பதவிக்குத் தகுதி வாய்ந்தவர்களின் ஒரு கும்பலாகும்.

காடெட்டு மந்திரி சபையிலும் பதவி வகிக்க அவர்கள் முற்றிலும் தகுந்தவர்கள். ஏனெனில் அந்த மந்திரிகளுக்குத் தேவையாயுள்ளதெல்லாம், யுக்திப் பொருத்தமாகத் தோன்றுகிற, மெருகிட்ட சொற்றொடர்களைக் கூறும் திறமை தான். இந்தச் சொற்றொடர்கள் பொருளற்றவை. அவற்றின் உதவியால் எவ்விதக் கேவலமான செய்கைகளையும் மூடி மறைக்க முடியும். ஆகவே அவை ஏகாதிபத்தியவாதிகள், சமூக-ஏகாதிபத்தியவாதிகள் ஆகியோரின் பாராட்டைப் பெறுவது நிச்சயம். நோவயா ஷீஸ்ன்காரர்களுக்கு, பாட்டாளி வர்க்கம் ஜனநாயகத்தின் உண்மையான உயிர்ப்புள்ள சக்திகளிடமிருந்து தனிமைப்பட்டிருக்கிறது என்று கூறுவதற்கு நிச்சயமாகக் காடேட்டுகள், பிரெஷ்கோவ்ஸ்கயா, பிளெஹானவ் ஆகியோரின், அவர்கள் கூட்டத்தாரின் பாராட்டுதல் கிடைக்கும். ஏனென்றால், அதன் மூலம் அவர்கள் மறைமுகமாகச் சொல்வது — அல்லது சொல்வதாகப் பொருள்படுவது—காடேட்டுகள், பிரெஷ்கோவ்ஸ்கயா, பிளெஹானவ், கேரென்ஸ்கி ஆகியோரும் அவர்கள் கூட்டத்தாரும் தான் ''ஜனநாயகத்தின் உயிர்ப்புள்ள சக்திகள்'' என்பதாகும்.

இது உண்மையல்ல. அவர்கள் உயிரற்ற சக்திகள். கூட்டணியின் வரலாறு இதை மெய்ப்பித்துள்ளது.

முதலாளி வர்க்கத்தினர்களாலும், முதலாளி படிப்பாளர்களுக்குரிய சூழ்நிலையாலும் அச்சுறுத்தப்பட்டு நிற்கும் நோவயா ஷீஸ்ன்காரர்கள், வோல்யா நரோதா, யெதின்ஸ்த்வோ[22], பத்திரிகைகளைச் சேர்ந்தவர்களும் மற்றவர்களும் போலவே ஆன காடேட்டுகளிலிருந்து எந்த அடிப்படை அம்சங்களிலும் மாறுபட்டிராத, சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகள் ஆகியோரின் வலதுசாரிப் பகுதி தான் ''உயிர்ப்புள்ள'' சக்திகள் என்று கருதுகின்றனர். ஆனால் நாமோ, குலாக்குகளோடு* இல்லாமல் பொது மக்களுடன் தொடர்புள்ளவர்களை மட்டுந்தான், கூட்டணியின் படிப்பினைகளால் அக்கூட்டணியிடமே

* குலாக்—ஜார் கால ருஷ்யாவில் பணக்கார விவசாயி; ஏனையோர் உழைப்பைச் சுரண்டுகிறவர்.—(ப-ர்.)

வெறுப்படைந்து விலகி விட்டவர்களை மட்டுந்தான், உயிர்ப்புள்ள சக்தியாகக் கருதுகிறோம். குட்டி முதலாளித் துவ ஜனநாயகத்தின் ''செயல்பூர்வமான உயிர்ப்புள்ள சக்திகளை'' சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகள் ஆகியோரின் இடதுசாரிப் பகுதி தான் பிரதிநிதித்துவப் படுத்துகிறது. சிறப்பாக, ஜூலை மாதத்திய எதிர்ப் புரட்சிக்குப் பிறகு இப்பகுதி பலம் பெற்றிருக்கிறது என்ற விஷயம் பாட்டாளி வர்க்கம் தனிமைப்பட்டிருக்க வில்லை என்பதை உணர்த்தும் மிகத் திண்ணமான எதார்த்த அடையாளங்களில் ஒன்ருகும்.

சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் நடுநிலைப் பகுதி யினரின் ஊசலாட்டம் மிகச் சமீபத்தில் இடதுசாரிப் போக்கிலே திரும்பியிருப்பது இதை இன்னும் தெளிவாக வெளிப்படையாக்கியுள்ளது. கிஷ்கின் கும்பலுடன் அமைக் கப்பட்ட புதிய கூட்டணியைத் தமது குழுவால் ஆதரிக்க முடியாது என்று செர்னேவ் செப்டம்பர் 24ம் தேதி விடுத்த அறிக்கை இந்த ஊசலாட்டத்தை நிரூபிக்கிறது. சோஷ லிஸ்டு-புரட்சியாளர்களின் கட்சிக்கு நகர வட்டாரங்களி லும், சிறப்பாக நாட்டுப்புறங்களிலும் கிடைத்த ஓட்டுக் களைக் கொண்டு பார்க்கும்போது, அதுதான் தலைமை வகிக்கும், ஆதிக்கம் பெற்ற கட்சியாகும் என்று தெரிகிறது. சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் நடுநிலைப் பகுதியினரே இந்தக் கட்சியினது பிரதிநிதிகளில் மிகப் பெரும்பான்மை யோராக இருந்து வந்திருக்கின்றனர். இந்தப் பகுதியினரின் இடதுசாரி ஊசலாட்டமானது தியேலொ நரோதாவிலிருந்து நாம் மேற்கோள் காட்டியுள்ள அறிக்கை, அதாவது சில சந்தர்ப்பங்களில் போல்ஷிவிக்குகளை மட்டும் கொண்ட அரசாங்கத்திற்கும் ஜனநாயகம் ''முழு ஆதரவு அளிக்க உத்தரவாதம் செய்ய வேண்டும்'' என்ற அறிக்கை எந்த வகையிலும் வெற்று வார்த்தைகளல்ல என்பதை நிரூபிக் கிறது.

கிஷ்கினுடன் கூடிய புதிய கூட்டணிக்கு சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் நடுநிலைப் பகுதியினர் ஆதரவு தர மறுத்ததும், (காக்கஸஸிலுள்ள ஜொர்தானியா போன்ற)

நாட்டுப்புறங்களில் உள்ள மென்ஷிவிக்-தற்காப்புவாதிகளில் கூட்டணியை எதிர்ப்போர்களின் ஏற்றப் பெருக்கமும், இதுவரை மென்ஷிவிக்குகளேயும், சோஷலிஸ்டு - புரட்சியாளர்களேயும் பின்பற்றி வந்த பொது மக்களின் ஒரு பகுதி போல்ஷிவிக்குகளே மட்டும் கொண்ட அரசாங்கத்திற்கு ஆதரவு தரும் என்பதற்கு எதார்த்தரீதியான சான்றுகள் ஆகும்.

குறிப்பாக, ஜனநாயகத்தின் உயிர்ப்புள்ள சக்திகளிடமிருந்து ருஷ்யப் பாட்டாளி வர்க்கம் இப்பொழுது தனிமைப்பட்டிருக்கவில்லை.

* * *

மூன்ருவது வாதம்: பாட்டாளி வர்க்கம் ''நிர்வாக முறையிலே அரசாங்க இயந்திரத்தை ஏற்றுக் கொள்ள முடியாது'' என்பது. ஒருவேளே இதுவே மிகவும் வழக்கமான, மிகவும் அடிபட்டு வருகிற வாதமாகும். இந்தக் காரணத்திஞலும், அத்துடன் வெற்றி பெற்ற பின்னர் பாட்டாளி வர்க்கத்திற்கு எதிர்ப்படப் போகின்ற மிக முக்கியமான, கடினமான கடமைகளில் ஒன்றை இது சுட்டிக்காட்டுவதாலும் இந்த வாதம் மிகவும் கவனத்திற்குரியது. இக்கடமைகள் மிகக் கடினமானவை என்பதில் ஐயம் எதுவுமில்லே. ஆனல் சோஷலிஸ்டுகள் என்று சொல்லிக் கொள்ளும் நாம், இந்தக் கடமைகளே நிறைவேற்றும் பொறுப்பைத் தட்டிக் கழிப்பதற்காக இக்கஷ்டத்தைச் சுட்டிக்காட்டுவோமாஞல், நடைமுறையில் நமக்கும் முதலாளி வர்க்கத்தின் அடித்தொண்டர்களுக்கும் இடையே வித்தியாசம் முற்றிலும் இல்லாது போய் விடும். பாட்டாளி வர்க்கப் புரட்சியின் கடமைகளே நிறைவேற்றுவதிலுள்ள கஷ்டத்தை உணர்வதன் மூலம் தூண்டப்பட்டு, பாட்டாளி வர்க்கத்தின் ஆதரவாளர்கள் இந்தக் கடமைகளே நிறைவேற்றுவதற்கான வழிமுறைகளே முன்னிலும் கவனத்துடனும் காரியப் பாங்குடனும் ஆய்ந்தறிய வேண்டும்.

அரசாங்க இயந்திரம் என்று சொல்லும்போது நாம் முக்கியமாகக் குறிப்பது நிரந்தரமான ராணுவம், போலீஸ் படை, அதிகார வர்க்கம் ஆகியவற்றையே. நிர்வாக முறையிலே அரசாங்க இயந்திரத்தைப் பாட்டாளி வர்க்கம் ஏற்றுக்கொள்ள முடியாது என்று கூறிய நோவயா ஷீஸ்ன் எழுத்தாளர்கள் தமது கலப்பற்ற அறியாமையைக் காட்டிக் கொள்கிறுர்கள்; வாழ்க்கையில் தென்படும் உண்மைகளைக் கவனித்துப் பார்க்கவோ, போல்ஷிவிக் நூல்களில் வெகு காலத்திற்கு முன்பே கொடுக்கப்பட்டுள்ள வாதங்களைக் கருத்திற்கொள்ளவோ மறுக்கின்றனர்.

நோவயா ஷீஸ்ன் எழுத்தாளர்கள் அனைவரும் தங்களை மார்க்சியவாதிகள் என்று கருதிக் கொள்ளாவிடினும், குறைந்த பட்சம் மார்க்சியத்தை அறிந்தவர்களாயும், படித்த சோஷலிஸ்டுகள் என்றும் கருதிக்கொள்கிறுர்கள். ஆனல் மார்க்ஸ் பாரிஸ் கம்யூனுடைய அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு, பாட்டாளி வர்க்கம் தயாராகவுள்ள அரசாங்க இயந்திரத்தை அப்படியே ஏற்றுக் கொண்டு தனது நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு அதை உபயோகிக்க முடியாது என்று கற்பித்திருக்கிறுர்; பாட்டாளி வர்க்கம் இந்த இயந்திரத்தைத் தகர்த்தெறிந்துவிட்டு அதற்குப் பதில் புதியது ஒன்றை அமைத்துக்கொள்ள வேண்டும் என்றும் அவர் போதித்துள்ளார் (ஒரு பிரசுரத்தில் இது பற்றி விவரமாகக் கூறியிருக்கிறேன்; அரசாங்கமும் புரட்சியும். அரசாங்கம் பற்றிய மார்க்சியப் போதனையும், புரட்சியில் பாட்டாளி வர்க்கம் ஆற்ற வேண்டிய கடமைகளும்* என்று தலைப்பிட்ட அதன் முதல் பகுதி இப்போது முடிந்துள்ளது, விரைவில் வெளிவரும்). இப்புதுவகை அரசாங்க இயந்திரம் பாரிஸ் கம்யூனல் ஆக்கப்பட்டிருந்தது. தொழிலாளிகள்-போர்வீரர்கள்-விவசாயிகள் பிரதிநிதிகளின் ருஷ்ய சோவியத்துக்கள் அதே வகையைச் சேர்ந்த ''அரசாங்க இயந்திரம்'' ஆகும். 1917 ஏப்ரல் 4ம் தேதியிலிருந்து[23] இந்த விஷயத்தைப் பன்முறை குறித்துக் காட்டியிருக்கிறேன். போல்ஷிவிக் மகாநாடுகளின் தீர்மானங்களிலும்

* பார்க்க: நூல் திரட்டு, பாகம் 2.—(ப-ர்.)

போல்ஷிவிக் நூல்களிலும் அதனைக் காணலாம். நோவயா ஷீஸ்ன் நிச்சயமாக மார்க்சின், போல்ஷிவிக்குகளின் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளவில்லை என்று கூறியிருக்கலாம். ஆனால் போல்ஷிவிக்குகள் கடினமான பிரச்சினைகளில் விளையாட்டுத் தனமான போக்குடையவர்கள் என்று அடிக்கடி மிகுந்த கர்வத்தோடு கண்டித்து வந்துள்ள பத்திரிகை, இப்பொழுது இவ்விஷயத்தைக் கவனிக்காது ஒரேயடியாகத் தட்டிக்கழிப்பது என்பது தனது அறிவின் வறட்சியைப் பறைசாற்றிக்கொள்வது போலாகும்.

பாட்டாளி வர்க்கம் ''அரசாங்க இயந்திரத்தை'' ''ஏற்றுக் கொண்டு'' ''அதை இயக்கிச் செல்ல'' முடியாது. ஆனால் பழைய அரசாங்க இயந்திரத்தில் இருக்கிற அடக்குமுறைக்குரிய, பழகிப் படிந்து போன, திருத்த முடியாத முதலாளி வர்க்க அம்சங்களை யெல்லாம் தகர்த்து எறிந்துவிட்டு அதனிடத்தில் தனக்கே சொந்தமான புதிய அரசாங்க இயந்திரத்தை அமைத்துக்கொள்ள முடியும். தொழிலாளிகள்-போர்வீரர்கள்-விவசாயிகள் பிரதிநிதிகளின் சோவியத்துக்கள் இவ்வகைப்பட்ட இயந்திரமே யாகும்.

நோவயா ஷீஸ்ன் இந்த ''அரசாங்க இயந்திரத்தை'' முற்றிலும் மறந்துவிட்டது விபரீதம்தான் என்று சொல்லாமல் வேறு விதமாக வர்ணிக்கவே முடியாது. தத்துவ ரீதியான வாதங்களில் இப்படி நடந்துகொண்டு, நோவயா ஷீஸ்ன்காரர்கள் சாராம்சத்தில் பார்க்கும்போது, அரசியல் நடைமுறையில் காடேட்டுகள் என்ன செய்து வருகிறார்களோ, அதைத்தான் அரசியல் தத்துவத் துறையில் செய்து வருகிறார்கள். ஏனெனில், உண்மையாகப் பாட்டாளி வர்க்கத்திற்கும், புரட்சிகரமான ஜனநாயகத்துக்கும் புதிய அரசாங்க இயந்திரம் தேவையில்லை என்றால், சோவியத்துக்கள் தங்கள் raison d'être*ஐ இழந்துவிடும், இருப்பதற்கான உரிமையையே இழந்துவிடும், அந்த நிலையில் காடேட்-கர்னீலவ் குழுவினர் சோவியத்துக்களை ஒன்றுமில்லாதபடி செய்துவிட முயற்சிப்பது சரியே ஆகும்.

---

*—இருத்தலுக்கான அடிப்படைக் காரணம்.—(ப-ர்.)

தத்துவத் துறையில் நோவயா ஷீஸ்ன் செய்துள்ள இந்த விபரீதமான தவறும், அப்பத்திரிகையின் அரசியல் குருட்டுத் தனமும் மற்றொரு காரணத்தால் மேலும் விபரீதமாக விளங்குகின்றன. அது என்னவெனில், மென்ஷிவிக்-சர்வதேசியவாதிகள் கூட[24] (அவர்களுடன் நோவயா ஷீஸ்ன் கடந்த பெத்ரொகிராத் நகர டூமா தேர்தல்களில் கூட்டணி வகுத்து இருந்தது) இந்தப் பிரச்சினையில் போல்ஷிவிக்குகளுடன் சிறிது இணக்கம் காட்டியுள்ளனர். உதாரணமாக, தோழர் மார்த்தவ் ஜனநாயக மகாநாட்டில் வாசித்த சோவியத் பெரும்பான்மையினரின் அறிக்கையில் நாம் காண்பதாவது:

"...புரட்சி நடந்த முதல் நாட்களில் மக்களின் உண்மையான படைப்புத் திறனின் மகத்தான தூண்டுதலினால் தோன்றிய தொழிலாளிகள் - போர்வீரர்கள்-விவசாயிகள் பிரதிநிதிகளின் சோவியத்துக்கள், பழைய ஆட்சி முறையின் சிதைந்த அரசாங்கத் திசுவுக்குப் பதிலாகப் புரட்சி அரசாங்கத்தின் புதிய திசுவாக ஏற்பட்டுள்ளன...."

இது ஓரளவு மிகையான சொல்லணியோடு கூறப்பட்டுள்ளது. அதாவது, உரையலங்காரம், தெளிவான அரசியல் சிந்தனைக் குறையை மூடி மறைக்கின்றது. சோவியத்துக்கள் இன்னும் பழைய "திசுவிற்குப்" பதிலாக ஏற்பட்டுவிடவில்லை, இந்தப் பழைய "திசுவும்" பழைய ஆட்சி முறையைச் சேர்ந்தது அல்ல, ஜாரிஸமும் முதலாளி வர்க்க குடியரசும் சேர்ந்த அரசாங்க அமைப்பாகும் இது. இவ்வாறிருப்பினும் நோவயா ஷீஸ்ன்காரர்களை விட மார்த்தவ் இவ்விஷயத்தில் எவ்வளவோ உயர்வாக விளங்குகிறார்.

சோவியத்துக்கள் ஒரு புதிய அரசாங்க இயந்திரமாகும். இந்த அரசாங்க இயந்திரம் முதலாவதாக, தொழிலாளிகள், விவசாயிகள் கொண்ட, ஆயுதந்தாங்கிய படையைக் கொண்டிருக்கிறது. பழைய நிரந்தர ராணுவத்தைப் போல், மக்களோடு தொடர்பற்ற படையல்ல இது, மக்களுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டது இது. ராணுவக் கண்ணோட்டத்துடன் நோக்குவோமெனில், முன்னிருந்த படைகளைவிட ஒப்பிடற்கியலாத அளவு அதிக வன்மை கொண்டது இப்படை. புரட்சிக் கண்ணோட்டத்

துடன் நோக்குவோமெனில் இதற்குப் பதிலாக வேறொன்றையும் அமைத்துவிட முடியாது. இரண்டாவதாக, இந்த அரசாங்க இயந்திரம், பொது மக்களுடன், பெரும்பான்மையான மக்களுடன் ஒரு இணைப்பைத் தருகிறது: இவ்வளவு நெருங்கிய, பிரிக்க முடியாத, சுலபமாகக் கட்டுப்படுத்தக் கூடிய, சுலபமாகப் புதுப்பித்துக்கொள்ளக் கூடிய, தொடர்பைக் கொஞ்சமேனும் ஒத்திருக்கக் கூடிய தெதுவும், முன்னால் இருந்த அரசாங்க இயந்திரத்தில் கிடையாது. மூன்றாவதாக, இந்த அரசாங்க இயந்திரத்திலுள்ள நபர்கள், எந்த விதமான அதிகார வர்க்கச் சடங்குகளுமின்றி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, எப்பொழுது வேண்டுமானாலும் மக்கள் சித்தப்படி வாபஸ் பெறப்படும் நிலையில் இருப்பவர்களாதலால் முன்னாளைய இயந்திரங்களைவிட இது எவ்வளவோ மிகுந்த ஜனநாயகத் தன்மை யுடையதாகும். நான்காவதாக, பலவகைத் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களோடும் இது நெருங்கிய தொடர்பை அமைத்துத் தருகிறது; இதன் காரணமாக, அதிகார வர்க்கச் சடங்குகளின்றிப் பல்வேறு விதமான, அடிப்படையான சீர்திருத்தங்களைச் செய்வது எளிதாகின்றது. ஐந்தாவதாக, முன்னணிப் படையின், அதாவது தொழிலாளிகள், விவசாயிகள் கொண்ட ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் வர்க்க உணர்வு மிகுந்த, செயலாற்றல் மிகுந்த, முற்போக்கான ஜனப் பகுதியின், ஸ்தாபன வடிவத்தை அது தருகிறது. ஆகவே, ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் முன்னணிப் படைக்கு, இந்த வர்க்கங்களைச் சேர்ந்த, இதுவரை அரசியல் வாழ்க்கையிலிருந்து, சரித்திரத்திலிருந்து முற்றிலும் விலகி ஒதுங்கி நின்று வந்திருக்கும் பெருந்தொகையான ஜனத்திரள் முழுவதையும் மேல்நிலைக்கு உயர்த்தி, பயிற்சி அளித்து, போதனை தந்து, தலைமை தாங்கி நடத்திச் செல்லத் திறனளிக்கும் இயந்திரமாக இது அமைகிறது. ஆறாவதாக, நாடாளுமன்ற ஆட்சி முறையின் அனுகூலங்களையும், உடனடியான, நேர்முகமான ஜனநாயக முறையின் அனுகூலங்களையும் இணைப்பதை இது சாத்தியம் ஆக்குகிறது. அதாவது, மக்களால் தேர்ந்தெடுக்கப்

பட்டுள்ள பிரதிநிதிகளிடையே சட்டமியற்றும் வேலைகளை யும், சட்டங்களை அமுல் நடத்தும் வேலைகளையும் ஐக்கியப் படுத்தச் சாத்தியமளிக்கிறது. முதலாளித்துவ நாடாளு மன்ற ஆட்சி முறையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, இது ஜனநாயகத்தின் வளர்ச்சியில் ஒரு முன்னேற்றமாக விளங்குகிறது. இம்முன்னேற்றம் உலக சரித்திர முக்கியத் துவம் வாய்ந்தது.

1905ல் நமது சோவியத்துக்கள் கருவடிவில் தான் இருந்தன எனலாம். ஒரு சில வாரங்களே அவை உயி ருடன் இருந்தன. அக்காலத்திய நிலைமைகளில், அவை எல்லாத் துறைகளிலும் வளர்ச்சியுறுவதற்கு இடமேயில்லை என்பது தெளிவு. 1917ம் ஆண்டுப் புரட்சியிலும் இத் தகைய வளர்ச்சிக்கு இன்னும் இடமேற்படவில்லை. ஏனெ னில் ஒரு சில மாதங்கள் என்பது மிகக் குறுகிய காலம். ஆனால் முக்கிய விஷயம் என்னவென்றால் சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மென்ஷிவிக்குகள் ஆகியோரின் தலைவர் கள் சோவியத்துக்களை வேசிநிலைக்குக் கொண்டுவந்திருக் கிறார்கள்; வெறும் பேச்சுக் கூடங்களாக, தலைவர்களின் சமரசக் கொள்கையின் ஒரு துணையுறுப்பாக, அவற்றின் பாத்திரத்தை இழிவுபடுத்தி விட்டார்கள். லீபெர், டான், தெஸெரெத்தேலி, செர்னேவ் போன்றவர்களின் தலைமை யின் கீழ் சோவியத்துக்கள் உயிருடன் அழுகி மட்கி வந்திருக்கின்றன. அனைத்து அரசாங்க அதிகாரத்தையும் ஏற்றுக்கொண்டால் மட்டுமே சோவியத்துக்கள் சரியான வளர்ச்சி பெற முடியும்; தங்கள் சக்திகளையும் திறமைகளை யும் முழுமையாக வெளிக்காட்ட முடியும். இல்லாவிடில் அவை செய்வதற்குரிய வேலை எதுவுமில்லை; அவை வெறும் கருக்கள்தாம் (நீண்ட காலம் கருநிலையில் தங்குவது கூடாது) அல்லது விளையாட்டுப் பொருட்கள்தாம். ''இரட்டை ஆட்சி'' என்றால் சோவியத்துக்களுக்குப் பாரிச வாதம் என்றுதான் பொருள்.

புரட்சிகர வர்க்கங்களைச் சேர்ந்த மக்களின் படைப்புத் திறன் சோவியத்துக்களைத் தோற்றுவிக்காமல் இருந்தால், ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கப் புரட்சி கவைக்கு

உதவாத இலட்சியமாகப் போயிருக்கும். ஏனெனில், பழைய அரசாங்க இயந்திரத்தை வைத்துக்கொண்டு பாட்டாளி வர்க்கம் நிச்சயமாக அதிகாரத்தை நிலைநிறுத்திக்கொள்ள முடியாது போயிருக்கும், உடனடியாகப் புதிய அரசாங்க இயந்திரத்தை அமைப்பது என்பதும் முடியாத காரிய மாகும். தெஸெரெத்தேலி, செர்னோவ் வகையறுக்கள் சோவியத்துக்களை வேசிநிலைக்குக் கொண்டுவந்த துயர் தரும் வரலாறு, ''கூட்டணியின்'' வரலாறு, குட்டி முத லாளித்துவ பிரமைகளிலிருந்து சோவியத்துக்கள் விடுபட் டதைக் குறிப்பதும், எவரையும் எல்லோரையும் கொண்ட பல்வேறு முதலாளித்துவ கூட்டணிகளின் கடை கெட்ட ஊழல்களையும் ஆபாசங்களையும் நடைமுறையில் துய்த்து அறிந்து, அந்தக் ''கழுவாயில்'' புகுந்து வெளி வந்ததைக் குறிப்பதுமான வரலாறுமாகும். இந்தக் ''கழுவாயால்'' சோவியத்துக்கள் பலம் குன்றிப் போகவில்லை, உருக்கின் உறுதியைப் பெற்றுள்ளன என்று நம்புவோமாக.

* * *

பாட்டாளி வர்க்கப் புரட்சியை எதிர்நோக்கியுள்ள பிரதானமான கஷ்டம், மிகத் துல்லியமான, மிக நேர்மை யான கணக்குக் குறிப்பும், கட்டுப்பாடும் தேசம் முழுவ திலும் நிறுவுவதுதான், பொருள் உற்பத்தியிலும் வினி யோகத்திலும் தொழிலாளர் கட்டுப்பாட்டை நிறுவுவதுதான்.

''தொழிலாளர் கட்டுப்பாடு'' என்ற கோஷத்தை முன் வைத்ததன் மூலம் நாம் சிண்டிக்கலிசத்தில் இறங்கிவிட் டோம் என்று நோவயா ஷீஸ்ன் எழுத்தாளர்கள் வாதாடி னார்கள். ''மார்க்சியத்தை'' ஆழ்ந்து பயின்று அறிந்து கொள்ளாமல், ஸ்துரூவே முறையில், உருப் போட்டு அதாவது பள்ளி மாணவர்களின்-அசட்டுத்தனமான முறையில் அதைச் செயல்படுத்துவதற்கு இந்த வாதம் ஓர் உதாரண மாகும். சிண்டிக்கலிசம் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி கரமான சர்வாதிகாரத்தை மறுக்கிறது அல்லது பொது வாக அரசியலதிகாரம் அனைத்தையும் போல அதை

முக்கியப்படுத்தாமல் பின்னணிக்குத் தள்ளிவைக்கிறது. ஆனால் நாமோ அதனை முதல் இடத்தில் வைக்கிறோம். நாமும் நோவயா ஷீஸ்ன்காரர்களைப் போலவே, தொழிலாளர் கட்டுப்பாடு என்பதற்கு மாறாக, அரசாங்கக் கட்டுப்பாடு என்று பேசுவோமானால், அது முதலாளித்துவ - சீர்திருத்த வாதச் சொற்றொடரே ஆகும். சாரத்தில், அது கலப்பற்ற காடேட்டுச் சூத்திரமேயாகும். ஏனென்றால், தொழிலாளர் ''அரசாங்கக்'' கட்டுப்பாட்டில் பங்கு கொள்வதைக் காடேட்டுகள் ஆட்சேபிக்கவில்லை. இப்படிப் பங்கு கொள்ளச் செய்வது தொழிலாளர்களை ஏமாற்றுவதற்கு ஒரு சிறந்த மார்க்கத்தை முதலாளி வர்க்கத்துக்குக் கிடைக்கச் செய்கிறது என்பதும், குவோஸ்தியேவ், நிக்கீத் தின், புரொாக்கப்போவிச், தெஸெரெத்தேலி கும்பல்களை யெல்லாம் அரசியல் ரீதியிலே லஞ்சம் கொடுத்து விலைக்கு வாங்கிவிடுவதற்கு அதுதான் அதிநுட்பமான வழி என்பதும் காடேட்-கர்னீலவ் குழுவினருக்கு மிக நன்றாகத் தெரியும்.

''தொழிலாளர் கட்டுப்பாடு'' என்ற கோஷத்தை எப் போதும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தோடு அருகே வைத்து, அதை எப்பொழுதும் பாட்டாளி வர்க்க சர்வாதி காரத்துக்கு அடுத்ததாக வைத்துப் பேசும் பொழுது, நாம் குறிப்பிடுவது எந்த வகை அரசாங்கம் என்பதைத் தெளிவுபடுத்தி விடுகிறோம். அரசாங்கம் என்பது ஒரு வர்க்கத்தின் ஆதிக்கத்திற்குரிய கருவியாகும். எந்த வர்க் கத்தின்? முதலாளி வர்க்கத்தினது என்றால், அது எந்த அர சாங்க முறையின் மூலம் ருஷ்யாவின் உழைப்பாளி மக்கள் அரை வருஷத்திற்கு மேலாகக் ''கர்னீலவ் தன்மைக்கும் கேரென்ஸ்கி தன்மைக்கும்'' ஆளாக்கப்பட்டு வருகின்றார் களோ, அந்தக் காடேட்-கர்னீலவ்-''கேரென்ஸ்கிய்'' அர சாங்க முறையாகும். பாட்டாளி வர்க்கத்தினது என்றால், பாட்டாளி வர்க்க அரசாங்கத்தைப்பற்றி, அதாவது பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைப் பற்றிப் பேசுகிறோ மென்றால், தொழிலாளர் கட்டுப்பாடு என்பது, பொருள் உற்பத்தி, வினியோகத் துறைகளில் சர்வஜனத் தன்மை யுடைய, எல்லாவற்றையும் தழுவிய, எங்கும் நிலைத்

திருக்கிற, மிகத் துல்லியமான, மிக நேர்மையான கணக்கு வைத்துக்கொள்ளல் ஆக முடியும்.

இதுவே பாட்டாளி வர்க்க, அதாவது சோஷலிசப் புரட்சியை எதிர்நோக்கியிருக்கும் பிரதானமான சங்கடம், பிரதானமான பணி. சோவியத்துக்கள் இன்றி, குறைந்த பட்சம் ருஷ்யாவில், இந்தப் பணியை நிறைவேற்றுவது அசாத்தியம். சோவியத்துக்கள் பாட்டாளி வர்க்கத்தின் நிறுவன ரீதியான வேலையை நிறைவேற்றி உலக சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினையைத் தீர்க்க வல்லது.

இது, அரசாங்க இயந்திரம் என்ற பிரச்சினையின் மற்றோர் அம்சத்தின்முன் நம்மைக் கொண்டு வந்து நிறுத்துகிறது. பிரதானமாக, ''அடக்குமுறைக்'' கருவியாய் இருக்கிற நிரந்தரமான இராணுவம், போலீஸ் படை, அதிகார வர்க்கம் ஆகியவற்றோடு தற்கால அரசுக்கு மற்றொரு கருவியும் இருந்து வருகிறது. வங்கிகளுடனும், சிண்டிக் கேட்டுகளுடனும் அதற்கு மிக நெருங்கிய தொடர்பு உண்டு. ஒரு வகையில் கூறுவதானால், பிரம்மாண்டமான அளவில் கணக்குக் குறிக்கும் வேலையையும் பதிவு வேலையையும் அது செய்து வருகிறது. இக்கருவியைத் தகர்க்க வேண்டாம், தகர்க்கக் கூடாது. அதை முதலாளிகளின் ஆதிக்கத்திலிருந்து பிடுங்கிக் கொள்ள வேண்டும். முதலாளிகளையும், அவர்களின் செல்வாக்குகளையும் அதனிடமிருந்து கத்தரித்துவிட வேண்டும், வெட்டித்தள்ள வேண்டும், துண்டித்தெறிய வேண்டும். பாட்டாளி வர்க்க சோவியத்துக்களுக்கு அதைக் கீழ்ப்படுத்தி வைக்க வேண்டும். அதனை முன்னிலும் விரிவாக, எல்லாவற்றையும் தழுவியதாக, நாடு முழுவதிலும் பரவியதாகச் செய்ய வேண்டும். பெரு வீத முதலாளித்துவம் ஏற்கெனவே செய்து முடித்துள்ள சாதனைகளைப் பயன்படுத்திக் கொள்வதின் மூலம் இதை நிறைவேற்றுவது சாத்தியம் (பொதுவாகவே பாட்டாளி வர்க்கப் புரட்சி இச்சாதனைகளைப் பயன்படுத்திக்கொள்வதின் மூலமாகத்தான் தனது குறிக்கோள்களை நிறைவேற்றிக்கொள்ள முடியும்).

முதலாளித்துவம் கணக்குக் குறிப்பதற்கு வங்கிகள், சிண்டிக்கேட்டுகள், தபால் இலாகா, உபயோகிப்போர் சங்கங்கள், அலுவலக ஊழியர்களின் சங்கங்கள் போன்ற கருவிகளை ஆக்கித் தந்துள்ளது. பெரிய வங்கிகள் இல்லாமல், சோஷலிசம் என்பது அசாத்தியம் ஆகும்.

சோஷலிசத்தைச் செயல்படுத்துவதற்கு நமக்குத் தேவையாயுள்ள ''அரசாங்க இயந்திரம்'' பெரிய வங்கிகளேயாகும். முதலாளித்துவ அமைப்பிலிருந்து தயாராக வைக்கப்பட்டுள்ள நிலையில் நாம் அதனை எடுத்துக்கொள்கிறோம். இதில் நாம் செய்ய வேண்டிய கடமை எல்லாம், இச்சிறந்த இயந்திரத்தை முதலாளித்துவ ரீதியில் உருக்குலைத்து வந்த அம்சத்தை அதனிடமிருந்து வெட்டிவிட்டு, அதனை முன்னிலும் பெரிதாக, முன்னிலும் ஜனநாயகத் தன்மையுள்ளதாக, முன்னிலும் எல்லாவற்றையும் தழுவியதாக ஆக்குவதுதான். அளவு குணமாக உருமாறும். ஒவ்வொரு வோலஸ்திலும்* ஒவ்வொரு பாக்டரியிலும் கிளைகளை உடைய, பெரிதிலும் பெரிதான ஒரே அரசாங்க வங்கியானது பத்தில் ஒன்பது பங்கு சோஷலிஸ்டு இயந்திரமாக ஆகிவிடும். இதுவே நாடு முழுவதிலும் பரவிய கணக்கு விவரக் குறிப்பு; பொருள் உற்பத்தியையும், வினியோகத்தையும் பற்றிய, நாடு முழுவதிலும் பரவிய கணக்குக் குறிப்பு ஆகும். ஒரு வகையில் சோஷலிஸ்டு சமூகத்தின் எலும்புக்கூடு என்று இதனைச் சொல்லலாம்.

இந்த ''அரசாங்க இயந்திரத்தை'' (முதலாளித்துவ அமைப்பின்கீழ் முழுமையாக அரசாங்க இயந்திரமாய் இல்லாத, ஆனால் நம்மிடம், சோஷலிஸத்தின்கீழ், அவ்வாறான இயந்திரமாக ஆகப் போகிறதை) நாம் ஒரேயடியில், ஒரே அரசாங்க உத்தரவு மூலம் ''ஏற்றுக்கொள்ளவும்'', ''இயக்கிச் செல்லவும்'' முடியும். ஏனெனில் கணக்கு விவரக் குறிப்பு, கட்டுப்பாடு, பதிவு செய்தல், கணக்குப் பரிசோதனை, கணக்கெடுத்தல் ஆகிய வேலைகளைச் சிப்பந்தி

* வோலஸ்த் — அக்டோபர் புரட்சிக்குமுன் சிறு வட்டாரம்.—(மொ-ர்.)

கள்தான் செய்து வருகின்றனர்; அவர்களில் பெரும்பான்மை யோர் பாட்டாளி அல்லது அரைப் பாட்டாளி நிலையில் தான் இருக்கிறுர்கள்.

பாட்டாளி வர்க்க அரசாங்கத்தின் ஒரே உத்தரவால் இந்தச் சிப்பந்திகளை அரசாங்கச் சிப்பந்திகள் என்ற அந்தஸ் துக்கு மாற்ற முடியும்; மாற்ற வேண்டும். முதலாளித் துவத்தின் காவல் நாய்களான பிரியாண்டும் மற்ற முத லாளித்துவ மந்திரிகளும் வேலைநிறுத்தம் செய்யும் ரயில்வே ஊழியர்களை ஒரே அரசாங்க உத்தரவு மூலம் அரசாங்கச் சிப்பந்திகளாக மாற்றிவிடுவது போலத்தான் இதுவும். இவ்வகையான அரசாங்கச் சிப்பந்திகள் இன்னும் ஏராள மான பேர் நமக்குத் தேவை, ஏராளமான பேர் நமக்குக் கிடைக்கவும் முடியும். ஏனெனில் முதலாளித்துவம் கணக் குப் பரிசோதனையையும் கட்டுப்பாட்டையும் எளிதாக்கி விட்டிருக்கிறது; அதை முன்னைவிட எளிதான குறிப்பு முறையாகச் செய்துள்ளது. எழுதப்படிக்கத் தெரிந்த எவனும் அதைச் செய்ய முடியும்.

வங்கி, சிண்டிக்கேட்டு, வர்த்தகம் முதலானவற்றின் சாதாரண சிப்பந்திகள் அனைவரையும் ''அரசாங்கச் சிப்பந்திகளாக மாற்றுவது'' (முதலாளித்துவமும் நிதி முதலாளித்துவமும் நமக்காக இவ்விஷயத்தில் பூர்வாங்க வேலைகளைச் செய்து வைத்துள்ள காரணத்தால்) நடை முறை நிர்வாக ரீதியில் சாத்தியம், அரசியல் ரீதியிலும் இது சாத்தியம்; ஆனல் ஒரு நிபந்தனை: சோவியத்துக்களின் கட்டுப்பாடும் கண்காணிப்பும் இருந்து வரவேண்டும்.

மேலதிகாரிகளைப் பொறுத்தவரையில் அவர்கள் மிகச் சிலரே யாவர்; ஆனல் முதலாளிகளின் பக்கமே சாய்பவர் கள். ஆகவே முதலாளிகளைப் போலவே அவர்கள் மீதும் ''கடுமையான'' நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். முதலாளி களைப் போலவே அவர்களும் எதிர்ப்புக் காட்டுவார்கள். அவர்களின் எதிர்ப்பை உடைத்தெறிய வேண்டும். அழியா வெகுளித்தனம் வாய்ந்த பெஷெகோனவ் ''அரசாங்கக் காரியங்களில் அனுபவமற்ற குழந்தை'' போல், ''முத லாளிகளின் எதிர்ப்பு உடைத்தெறியப்பட்டு விட்டது''

என்று 1917 ஜூன் மாதத்திலேயே கூறிய குழந்தை மொழி, சிறுபிள்ளைத்தனமான வாய்வீச்சு, சிறுபிள்ளைத்தனமான விருப்புப் பேச்சு, பாட்டாளி வர்க்கத்தால் நடைமுறை எதார்த்தமாகச் செய்து முடிக்கப்படும்.

இதை நாம் செய்ய முடியும்; காரணம்: மக்கள் தொகையில் மிகக் குறைந்த எண்ணிக்கையில் உள்ளவர்களின் எதிர்ப்பை, உண்மையில் விரல் விட்டு எண்ணக்கூடிய தொகையுள்ளவர்களின் எதிர்ப்பை, முறித்தெறிய வேண்டிய காரியம் தான் அது. அவர்கள் ஒவ்வொருவர் மீதும் அலுவலகச் சிப்பந்திகளின் சங்கங்களும், தொழிற்சங்கங்களும், உபயோகிப்போர் சங்கங்களும், சோவியத்துக்களும் மிகக் கடுமையான கண்காணிப்பை ஏற்படுத்தும். அதன் பயனாக ஒவ்வொரு தீத் தீத்திச்சும்[25] ஸெதானில் பிரெஞ்சுக்காரர்கள் சுற்றிவளைக்கப்பட்டதே[26] போல் சுற்றிவளைக்கப்பட்டிருப்பான். இந்த தீத் தீத்திச்சுகள் யாரென்று பெயர்வாரியாக நமக்குத் தெரியும்: டைரக்டர்கள், போர்டு மெம்பர்கள், பெரும் பங்குதாரர்கள், முதலியோர்களின் பட்டியல்களை எடுத்துப் பார்த்தால் போதுமானது. அவர்கள் ருஷ்யா முழுவதிலும் சில நூறு, அல்லது அதிகமாகப் போனால் சில ஆயிரம் பேர்கள்தான் இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவர் மீதும் பாட்டாளி வர்க்க அரசாங்கம், தனது சோவியத்துக்கள், அலுவலகச் சிப்பந்திகளின் சங்கங்கள், முதலியவைகள் அடங்கிய இயந்திரத்தைக் கொண்டு, பத்து அல்லது நூறு கண்காணிப்பாளர்களை நியமிக்க முடியும். ஆகவே ''எதிர்ப்பை முறியடிப்பதற்குப்'' பதிலாக, (முதலாளிகளின்மீது) தொழிலாளர் கட்டுப்பாடு மூலமாக எவ்வித எதிர்ப்புமே சாத்தியமில்லாதபடி செய்துவிட முடியும்.

முதலாளிகளின் சொத்தைப் பறிமுதல் செய்வது கூட இவ்விஷயத்தில் ''முக்கிய அம்சமாக'' இருக்காது. ''முக்கிய அம்சமாக'' இருக்கப் போவது, முதலாளிகள், அவர்களுக்கு ஆதரவு தரக் கூடியவர்கள் ஆகியோர் மீது நாடு முழுதிலும் பரவிய, எல்லாவற்றையும் தழுவிய தொழிலாளர் கட்டுப்பாடுதான். பறிமுதல் செய்வதால் மட்டும்

எல்லாம் முடிந்து விடாது. அதில் ஸ்தாபன அமைப்பு அம்சம், முறையான வினியோகத்தைப் பற்றிய கணக்கு வைக்கிற அம்சம் எதுவுமில்லை. பறிமுதல் செய்வதற்குப்பதில் நியாயமான வரி விதிக்கலாம் (உதாரணமாக ''ஷிங்கரேவ் முறையில்'' இருந்தாலும் போதும்). யாரும் சொத்து மதிப்பீடிலிருந்து தப்பிக்கவோ, உண்மையை மறைக்கவோ, சட்டத்தை மீறவோ முற்றிலும் சாத்தியமாகாதபடி செய்ய வேண்டும். அவ்வாறு நடப்பது சாத்தியமாகாதபடி தடுப்பதற்குத் தொழிலாளி வர்க்க அரசாங்கத்தின் தொழிலாளர் கட்டுப்பாடு ஒன்றினுல்தான் முடியும்.

கட்டாய முறையில் சிண்டிக்கேட்டுமயமாக்கல், அதாவது அரசாங்கக் கட்டுப்பாட்டின்கீழ் உள்ள சங்கங்களில் கட்டாயமாக ஒன்றுபடுத்தி விடுதல் — இதற்கு முதலாளித்துவம் வழி செய்து வைத்திருக்கிறது; ஜெர்மனியில் ஐங்கர் அரசாங்கத்தால் இது நிறைவேற்றப்பட்டிருக்கிறது; ருஷ்யாவில் சோவியத்துக்களால், பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தால், இதையும் எளிதில் நிறைவேற்றி வைக்க முடியும். இதுவே நமக்கு ''ஒரு அரசாங்க இயந்திரத்தை'' அளிக்கும். அவ்வரசாங்க இயந்திரம் சர்வவியாபகமானதாயும், மிக நவீனமானதாயும், அதிகார வர்க்கத் தன்மையற்றதாயும் இருக்கும்.*

* * *

முதலாளி வர்க்கத்திற்கு வக்காலத்து வாங்கியவர்கள் தரும் நான்காம் வாதம்: பாட்டாளி வர்க்கம் அரசாங்க இயந்திரத்தை ''இயக்க'' இயலாது என்பதாகும். முந்திய வாதத்தைக் காட்டிலும் இந்த வாதத்தில் புதிதாக எதுவுமில்லை. உண்மைதான், பழைய இயந்திரத்தை நாம் ஏற்றுக் கொள்ளவும் இயக்கவும் முடியாது. ஆனுல் சோவியத்

* கட்டாய முறையில் சிண்டிக்கேட்டுமயமாக்கல் என்பதின் பொருளுக்கு மேலும் விளக்க விவரங்கள் வேண்டுவோர் ''நிகழவிருக்கும் பேராபத்தும் அதை எதிர்ப்பதற்கான வழியும்'' என்ற என் பிரசுரத்தைப் பார்க்க.

துக்களாகிய புதிய இயந்திரம் ''மக்களின் உண்மையான படைப்புத் திறனின் மகத்தான தூண்டுதலினுல்'' ஏற்கெனவே இயக்கப்பட்டு வருகிறது. சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகளின் தலைவர்களுடைய ஆதிக்கத்தால் அவ்வியந்திரத்தின் மீது பூட்டப்பட்டிருக்கும் விலங்குகளை உடைத்து அதை விடுவிக்க வேண்டியது மட்டுமே தேவை. இந்த இயந்திரம் ஏற்கெனவே இயங்கிக் கொண்டிருக்கிறது. முழு வேகத்துடன் முன்னே செல்வதைத் தடங்கல் செய்து கொண்டிருக்கும் அங்கவீன குட்டிமுதலாளித்துவத் தடைகளை நீக்க வேண்டியதுதான் தேவை.

மேலே சொல்லப்பட்டுள்ளதுடன் சேர்த்து இரண்டு விஷயங்கள் இங்கே கவனிக்கப்பட வேண்டியது அவசியம்: முதலாவதாக, நம்மால் ஏற்படுத்தப்படாமல் இராணுவ ஏகாதிபத்திய கட்டத்தில் முதலாளித்துவத்தால் உருவாக்கப்பட்டுள்ள புதிய கட்டுப்பாட்டுச் சாதனங்கள்; இரண்டாவதாக, பாட்டாளி வர்க்க வகைப்பட்ட அரசாங்கத்தின் நிர்வாகத்தில் மேலும் ஜனநாயக முறையைப் புகுத்திவருவதன் முக்கியத்துவம்.

தானிய ஏகபோக உரிமையும், உணவுப் பங்கீட்டு முறையும் நம்மால் கொண்டுவரப்பட்டவையல்ல; போரில் ஈடுபட்டிருந்த முதலாளித்துவ அரசாங்கத்தால் கொண்டுவரப்பட்டவை. முதலாளித்துவ வரம்புக்குள் அனைவருக்கும் கட்டாய உழைப்பு முறையையும் ஏற்கெனவே அது கொண்டுவந்துள்ளது — இது தொழிலாளர்களுக்குள்ள இராணுவ கடுங்காவல் சிறைவாசம் ஆகும். வரலாற்றைப் படைக்கும் அதன் எல்லா நடவடிக்கைகளிலும் போலவே இவ்விஷயத்திலும் பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவத்திலிருந்தே தனது ஆயுதங்களை எடுத்துக் கொள்கிறது. அவ்வாயுதங்களைப் ''புதிதாய்க் கண்டுபிடிக்க''வில்லை, ''சூன்யத்திலிருந்து பெற''வில்லை.

தானிய ஏகபோக உரிமை, உணவுப் பங்கீட்டு முறை, சர்வஜனக் கட்டாய உழைப்பு முறை ஆகியவை பாட்டாளி வர்க்க அரசாங்கத்தின் கையில், முழு அதிகாரம் பெற்ற சோவியத்துக்களின் கையில், கணக்கு வைப்பதற்கும்

கட்டுப்படுத்துவதற்கும் மிக வன்மையுள்ள சாதனமாய் அமையும். முதலாளிகள் மீதும், பொதுவாகப் பணக்காரர்கள் மீதும் தொழிலாளிகளால் பிரயோகிக்கப்படும் போது, இதே சாதனம், முதலாளிகளின் எதிர்ப்பை ஒடுக்குவதற்காகவும் அவர்களைப் பாட்டாளி வர்க்க அரசாங்கத்துக்குப் பணியச் செய்வதற்காகவும் வரலாற்றில் கண்டறியாத அரசாங்க இயந்திரத்தை ''இயக்குவதற்குரிய'' ஒரு சக்தியாக இருக்கும். கட்டுப்பாடு செய்வதற்கும் உழைக்குமாறு கட்டாயப்படுத்துவதற்கும் அமைந்த இந்தச் சாதனம் பிரெஞ்சுக் கன்வென்ஷனின் சட்டங்களைவிட, அதன் கில்லோடீன் என்ற தலைவெட்டும் தண்டனைக் கருவியைவிட, அதிக பலம் வாய்ந்ததாக இருக்கும். கில்லோடீன் பயமுறுத்த மட்டுமே செய்தது, செயல்பூர்வமான எதிர்ப்பை முறித்தெறிய மட்டுமே செய்தது. நமக்கு இது போதாது.

நமக்கு இது போதாது. நாம் முதலாளிகளைப் ''பயமுறுத்துவது'' மட்டும், அதாவது, பாட்டாளி வர்க்க அரசாங்கத்தின் சர்வவல்லமையை அவர்கள் உணர்ந்து அதனைச் செயல் பூர்வமாய் எதிர்ப்பது என்ற எண்ணமனைத்தையும் விட்டொழிக்கும்படி செய்வது மட்டும் போதாது. அதோடு கூட, செயலற்ற எதிர்ப்பையும் நாம் உடைத்தெறிய வேண்டும். ஏனெனில் செயல்பூர்வமான எதிர்ப்பைவிட இது சந்தேகமின்றி அதிகம் அபாயமுள்ளது, கேடு செய்ய வல்லது. எல்லாவித எதிர்ப்பையும் உடைத்தெறிவது என்பது மட்டுமின்றிப் புதிய அரசாங்க, நிறுவன வரம்புக்குள் நபர்களை வேலை செய்யுமாறு கட்டாயப்படுத்தவும் வேண்டும். முதலாளிகளை ''நீக்கிவிட்டால்'' மட்டும் போதாது; (விரும்பத்தகாத, திருத்த முடியாத ''எதிர்ப்பாளர்களை'' நீக்கிய பிறகு) புதிய அரசாங்க சேவையில் நாம் அவர்களை அமர்த்த வேண்டும். முதலாளிகளுக்கும் முதலாளித்துவப் படிப்பாளர்கள், அலுவலகச் சிப்பந்திகள் ஆகியோரின் ஒரு குறிப்பிட்ட மேல்தரப் பகுதிக்கும் இது பொருந்தும்.

இதைச் செய்வதற்குரிய சாதனம் நம்மிடம் இருக்கிறது. போரில் ஈடுபட்டுள்ள முதலாளித்துவ அரசு தான்

அதற்காகச் சாதனத்தையும், ஆயுதத்தையும் நம் கையில் தந்துள்ளது. இச்சாதனம்தான் தானிய ஏகபோக உரிமையும், உணவுப் பங்கீட்டுமுறையும், சர்வஜனக் கட்டாய உழைப்பு முறையும் ஆகும். ''வேலை செய்யாதவனுக்கு உணவில்லை''—என்ற அடிப்படையான, முதன்மையான, பிரதானமான விதியைத் தொழிலாளிகள் பிரதிநிதிகளின் சோவியத்துக்கள் ஆட்சிக்கு வரும்போது அமுலாக்க முடியும், அமுலாக்க வேண்டும்.

ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஒரு வேலைச் சீட்டு உள்ளது. தற்சமயம் இது சந்தேகமின்றி முதலாளித்துவக் கூலி அடிமை முறைக்குரிய அத்தாட்சிப் பத்திரமாகத்தான், உழைப்பாளி இன்னின்ன புல்லுருவிக்குச் சொந்தமானவன் என்று காட்டும் அத்தாட்சிப் பத்திரமாகத்தான் இருக்கிறது, எனினும் இந்தச் சீட்டு தொழிலாளியை இழிவுபடுத்துவதல்ல.

சோவியத்துக்கள், வேலைச் சீட்டுகளைப் பணக்காரர்களுக்கும், அதன்பின், படிப்படியாக மக்கள் தொகை முழுவதற்கும் வழங்கும் (ஒரு விவசாய நாட்டில் மிகப் பெரும்பாலான விவசாயிகளுக்கு வெகு காலம் வரைக்கும் வேலைச் சீட்டுகள் ஒருவேளை தேவையில்லாமலே இருக்கலாம்). இந்த வேலைச் சீட்டு ''மக்கள் மந்தையைக்'' குறிக்கும் ஒரு முத்திரைச் சீட்டாக, ''கடைநிலைப்'' பகுதியினரைக் காட்டும் ஒரு தஸ்தாவேஜாக, கூலியடிமை முறையின் அத்தாட்சிப் பத்திரமாக, இனிமேல் இருக்காது. புதிய சமூகத்தில் ''வேலைக்காரர்கள்'' என்று யாருமில்லை என்பதையும், மறு பக்கத்தில் வேலை செய்யாதவர்கள் என யாருமில்லை என்பதையும் காட்டுவதற்குரிய அத்தாட்சிச் சீட்டாக இருக்கும் இது.

பணக்காரர்கள், தங்கள் செயல் துறை எந்தச் சங்கத்தோடு அதிக நெருக்கமாகத் தொடர்புள்ளதோ, அந்தத் தொழிலாளர் அல்லது அலுவலகச் சிப்பந்திகள் சங்கத்திலிருந்து வேலைச் சீட்டு கட்டாயமாகப் பெற்றாக வேண்டும். அவர்கள் மனப் பூர்வமாகத் தங்கள் வேலையைச் செய்து வருகின்றனர் என்று வாராவாரம் அல்லது குறிப்

பிட்ட காலத்திற்கு ஒரு தடவை அச்சங்கத்திடமிருந்து ஓர் அத்தாட்சிப் பத்திரம் பெற்றுவர வேண்டும். இந்த அத்தாட்சிப் பத்திரம் இல்லாவிட்டால் உணவுப் பங்கீட்டுச் சீட்டுகளோ, பொதுவாக உணவுப் பொருள்களோ பெற்றுக் கொள்ள முடியாது. வங்கிகளைச் சீர்படுத்தவும், தொழில் நிலையங்களை இணைக்கவும் நமக்கு நல்ல நிறுவன அமைப்பாளர்கள் தேவை (இவ்விஷயத்தில் முதலாளிகளுக்கு அதிக அனுபவம் உண்டு, அனுபவம் வாய்ந்தவர்களை வைத்துக் கொண்டு வேலை செய்வது எளிது), எஞ்சினீயர்கள், விவசாய நிபுணர்கள், டெக்னீஷியன்கள், விஞ்ஞான முறையில் தனித்தேர்ச்சி பெற்றவர்கள் ஆகியோர், முன்னை விட மிகமிக அதிகமான அளவில் தேவை என்று பாட்டாளி வர்க்க அரசாங்கம் கூறும். இத்தகைய எல்லா வேலைக்காரர்களுக்கும் நாம் அவரவர் திறமைகளுக்குத் தக்கவையும், அவரவர்களுக்கு ஏற்கெனவே பழக்கமானவையுமான வேலை யளிப்போம். எல்லோருக்கும் சமமான சம்பளம் வழங்குவதை அமுலுக்குக் கொண்டுவருவது படிப்படியாகத்தான் சாத்தியமாகக் கூடும். இடைக்காலத்தில், இந்தத் தனித்தேர்ச்சி பெற்றவர்களுக்கு அதிகச் சம்பளம் தருவோம். ஆனால் அவர்களை எல்லா முனைகளிலும் தொழிலாளர் கட்டுப்பாட்டின்கீழ் வைப்போம். ''வேலை செய்யாதவனுக்கு உணவில்லை'' என்ற விதியை விலக்கு எதுவுமின்றி முழுக்க முழுக்க அமுல் நடத்துவோம். நமது வேலையின் நிறுவன வடிவத்தைப் பற்றிக் கூறவேண்டுமானால், நாம் அதனைப் புதிதாகக் கண்டுபிடிக்கப் போவதில்லை; முதலாளித்துவத்தின் கீழ் தயாராக இருக்கும் நிறுவன வடிவத்தை — வங்கிகள், சிண்டிக்கேட்டுகள், சிறந்த பாக்டரிகள், சோதனை நிலையங்கள், விஞ்ஞான அக்காடமிகள், ஆகியவற்றை அப்படியே எடுத்துக் கொள்வோம். ஆம், முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளின் அனுபவம் அளிக்கும் மிகச் சிறந்த மாதிரிகளை மட்டும் நாம் மேற்கொள்ள வேண்டியிருக்கும்.

முதலாளி வர்க்கம் முழுதும் மிகப் பிடிவாதமாக எதிர்ப்பைக் காட்டும்; ஆனால் மக்கள் எல்லோரும் சோவி

யத்துக்களில் நிறுவனரீதியில் ஒன்றுபடுவதால் இவ்வெதிர்ப்பு தகர்த்தெறியப்படும் என்று நாம் கூறுகையில், கொஞ்சங்கூடக் கற்பனை யுலகில் திரியாமல் மிக நிதானமான, காரியரீதியான மதிப்பீட்டின் அடிப்படையிலிருந்துதான் பேசுகிறோம். அசாதாரணமான பிடிவாதம் காட்டும், கட்டுக்கு இணங்கி வர மறுக்கும் முதலாளிகளை, அவர்களுடைய எல்லாச் சொத்தையும் பறிமுதல் செய்து சிறையிலிடுவதன் மூலம் நிச்சயமாகத் தண்டிக்கத்தான் வேண்டியிருக்கும். ஆனால் மறு பக்கத்தில், பாட்டாளி வர்க்கத்தின் வெற்றி இன்றைய இஸ்வேஸ்தியாவில்[27] நான் படித்தது போன்ற நிகழ்ச்சிகள் தொகை தொகையாய்ப் பெருக்கம் அடையும்:

''செப்டம்பர் 26ல், தொழிற்சாலைக் கமிட்டிகளின் மத்திய கவுன்சிலுக்கு இரண்டு இஞ்சினியர்கள் வந்து, இஞ்சினியர்களின் ஒரு குழு சோஷலிஸ்டு இஞ்சினியர்கள் சங்கம் ஒன்று ஏற்படுத்துவதற்குத் தீர்மானித்திருப்பதாகக் கூறினார்கள். இக்காலம் உண்மையிலே சமூகப் புரட்சியின் ஆரம்ப காலம் என்று அச்சங்கம் கருதுவதால் தொழிலாளி மக்களுக்குச் சேவை செய்யத் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறது என்றும், தொழிலாளர் நலன்களைப் பாதுகாக்கும் பொருட்டுத் தொழிலாளர் நிறுவனங்களுடன் முழு இணக்கத்தோடு வேலை செய்ய விரும்புகிறது என்றும் அவர்கள் தெரிவித்தார்கள். அதற்கு தொழிற்சாலைக் கமிட்டிகளின் மத்திய கவுன்சிலைச் சேர்ந்த பிரதிநிதிகள் அளித்த பதிலில் தங்கள் நிறுவனத்துக்குள்ளேயே ஓர் இஞ்சினியர் பிரிவை மகிழ்ச்சியோடு அமைப்பதாகவும், உற்பத்தியில் தொழிலாளர் கட்டுப்பாடு செலுத்துவது சம்பந்தமான தொழிற்சாலைக் கமிட்டிகளின் முதல் மகாநாட்டின் அடிப்படைக் கோட்பாடுகளை அந்த இஞ்சினியர் பகுதி தனது வேலைத்திட்டத்தில் உட்படுத்திக் கொள்ளும் என்றும் சொன்னார்கள். தொழிற்சாலைக் கமிட்டிகளின் மத்திய கவுன்சில் பிரதிநிதிகளும், சோஷலிஸ்டு இஞ்சினியர்களின் முன்முயற்சிக் குழுவினரும் சேர்ந்த கூட்டம் ஒன்று வரும் சில நாட்களில் நடத்தப்படும் (இஸ்வேஸ்தியா, செப்டம்பர் 27, 1917).

* * *

பாட்டாளி வர்க்கம் அரசாங்க இயந்திரத்தை இயக்கிச் செல்ல முடியாது என்று கூறப்படுகிறது.

1905 புரட்சிக்குப்பிறகு 1,30,000 நிலப்பிரபுக்கள் ருஷ்யாவில் ஆட்சி செலுத்தினர். 15 கோடி மக்களின்மீது முடிவற்ற பலாத்காரச் செயல்களைப் புரிந்தும், அம்மக்களை எல்லையற்ற அவமானத்திற்கு உட்படுத்தியும், மிகப் பெரும் பான்மை மக்களை அரைப் பட்டினி நிலைக்கு விரட்டியும், மிகக் கடுமையான உழைப்பிற்கு அடிமைப்படுத்தியும் அவர்கள் ஆட்சி செலுத்தினர்.

அவ்வாறிருந்தும், 2,40,000 உறுப்பினர் கொண்ட போல்ஷிவிக் கட்சி ஏழை மக்களின் நலன் கருதி, பணக் காரர்களுக்கு எதிராக ருஷ்யாவில் ஆட்சி செலுத்த முடி யாது என்று கூறப்படுகிறது. இந்த 2,40,000 பேருக்கும் வயது வந்த மக்கள் தொகையில் பத்து லட்சம் ஓட்டு களின் ஆதரவு ஏற்கெனவே கிடைத்திருக்கிறது. இதுதான் கட்சி உறுப்பினர் தொகைக்கும் கட்சிக்குக் கிடைத்த ஓட்டுத் தொகைக்கும் உள்ள விகிதாச்சாரமாகும். ஐரோப் பாவின் அனுபவத்தைக் கொண்டு இந்த விகிதாச்சாரம் அமைக்கப்பட்டுள்ளது. ருஷ்யாவின் அனுபவமும் அதைத் தான் அமைத்துள்ளது. உதாரணமாக, சென்ற ஆகஸ்ட் மாதத்தில் நடந்த பெத்ரொகிராத் டூமா தேர்தல்கள் இந்த விகிதாச்சாரத்தைக் காட்டுகின்றன. ஒவ்வொரு மாதமும் 20ம் தேதியன்று கிடைக்கும் கொழுத்த சம்பளத்துக்காக அல்லாமல் தங்களுடைய இலட்சியங்களுக்காக சோஷலிஸ்டு அரசாங்கத்துக்கு விசுவாசம் பாராட்டுகிற பத்து லட்சம் மக்களைக் கொண்ட ''அரசாங்க இயந்திரம்'' நமக்கு ஏற்கெனவே இருக்கிறது.

அது மட்டுமல்ல. நமது அரசாங்க இயந்திரத்தை உட னடியாகப் பத்து மடங்கு பெரிதாக்கிக் கொள்ளும் ''மந்திர சாதனமும்'' நமக்கு இருக்கிறது. எந்த முதலாளித்துவ அரசாங்கத்துக்கும் இந்தச் சாதனம் இருந்தது கிடையாது, இருக்கவும் முடியாது. உழைப்பாளிகளை, ஏழை மக்களை அரசாங்க நிர்வாகத்தின் அன்றாட வேலைகளில் ஈடுபடுத்து வதே இந்த மந்திர சாதனமாகும்.

இந்த மந்திர சாதனத்தை உபயோகிப்பது எவ்வளவு எளிது என்பதையும், எவ்வளவு பிசகின்றி அது வேலை செய்யும் என்பதையும் விளக்குவதற்குக் கூடியவரை மிகத் தெளிவான, எளிய உதாரணத்தை எடுத்துக்கொள்வோம்.

அரசாங்கம், வீட்டிலிருந்து ஒரு குடும்பத்தைக் கட்டாயப் படுத்தி வெளியேற்றி இன்னொரு குடும்பத்தை அங்கே குடியமர்த்த வேண்டியிருக்கிறது. முதலாளித்துவ அரசாங்கம் அடிக்கடி இவ்வாறு செய்கிறது. நமது பாட்டாளி வர்க்க, அல்லது சோஷலிஸ்டு அரசாங்கமும் இவ்வாறு செய்யும்.

முதலாளித்துவ அரசாங்கம், சம்பாதிக்கிறவனை இழந்து விட்ட காரணத்தால், வீட்டு வாடகை செலுத்தத் தவறி விட்ட ஒரு தொழிலாளர் குடும்பத்தை, வீட்டை விட்டு வெளியேற்றுகிறது. போலீஸ் அல்லது மிலீஷியாவுடன், ஒரு முழுப் பட்டாளத்துடன், அமீனு வந்து சேருகிறுன். தொழிலாளர் வாழும் வட்டாரத்தில் யாரையாவது வெளியேற்றம் செய்வதற்கு ஒரு கஸாக் இராணுவப் பிரிவே தேவைப்படுகிறது. ஏன்? ஏனென்ருல் அமீனுவோ அல்லது மிலீஷியாக்காரர்களோ மிகப் பெரிய இராணுவப் படையின் பாதுகாப்பின்றி அங்கே போவதற்குச் சம்மதிப்பதில்லை. மக்களை வெளியேற்றும் காட்சி, பக்கத்தில் குடியிருப்பவர்களிடையே, புகலற்ற நிலையில் தவித்துக் கொண்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான மக்களிடையே, கடுஞ் சீற்றத்தையும், முதலாளிகள் மீதும் முதலாளித்துவ அரசாங்கத்தின் மீதும் கொடிய வெறுப்பையும் கிளப்பிவிடுகிறது. ஆகவே, அமீனுவும், மிலீஷியாக்காரர்களும் எந்த நிமிடத்திலும் பொது மக்களால் தலைவேறு கால்வேருகப் பிய்த்தெறியப்படும் அபாயத்தில் இருக்கிருர்கள். பெரிய இராணுவப் படைகள் தேவைப்படுகின்றன. நகரமாயிருந்தால் சில ரெஜிமென்டுகள் தேவையாகின்றன. அந்த ரெஜிமென்டுகளும் தொலைவில் தள்ளியிருக்கிற பிரதேசங்களிலிருந்து தான் கொண்டுவரப்பட வேண்டும். அதன் காரணம் என்னவென்ருல், நகர்ப்புறத்து ஏழை மக்களின் வாழ்க்கை இராணுவத்தினருக்கு அறிமுகமில்லாததாய் இருக்க வேண்

டும், அப்போர்வீரர்களை சோஷலிசம் ''தொற்றிக்கொள்ளக்'' கூடாது.

பாட்டாளி வர்க்க அரசாங்கம் மிகக் கஷ்ட நிலையில் உள்ள ஒரு குடும்பத்தைப் பணக்காரனுடைய வீட்டில் கட்டாயப்படுத்திக் குடியமர்த்த வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். நமது தொழிலாளர் மிலீஷியாப் படையில் பதினைந்து பேர்கள் இருப்பதாக வைத்துக்கொள்வோம்: இரண்டு மாலுமிகள், இரண்டு போர்வீரர்கள், வர்க்க உணர்வுள்ள இரண்டு தொழிலாளர்கள் (அவர்களில் ஒருவன் மட்டும் நமது கட்சியைச் சேர்ந்தவனாக அல்லது அதன் அனுதாபியாக இருப்பதாக வைத்துக்கொள் வோம்), ஓர் படிப்பாளர், ஏழை உழைப்பாளிகள் எட்டுப் பேர்—அவர்களில் குறைந்த பட்சம் ஐவர் பெண்கள், வீட்டு வேலைக்காரிகள், பயிற்சித் திறனற்ற தொழிலாளர் கள், முதலியோர். இப்படை பணக்காரனுடைய மனைக்கு வந்து சேருகிறது; பார்வையிடுகிறது. அதில் இரண்டு ஆண் களும் இரண்டு பெண்களும் வசித்துவருகிற ஐந்து அறை கள் இருக்கின்றன என்பதைக் கண்டு கொள்கிறது. ''ஐயா, இந்தக் குளிர்காலத்திற்கு நீங்கள் இரண்டு அறை களுக்குள் நெருக்கி வசித்துக்கொண்டு, இப்போது நில வறைகளில் வசித்து வரும் இரண்டு குடும்பங்களுக்கு மற்ற இரண்டு அறைகளைக் காலி செய்து கொடுக்க வேண்டும். இஞ்சினீயர்களின் உதவியால், (நீங்களும் ஓர் இஞ்சினீயர் தானே?) எல்லோருக்கும் நல்ல வீடுகள் கட்டித் தரும் வரையில் நீங்கள் சிறிது நெருக்கிக்கொண்டுதான் வசித்து வர வேண்டும். உங்களுடைய டெலிபோனைப் பத்து குடும் பங்கள் உபயோகிக்கும். கடைக்கு ஓடி, சாமான்கள் வாங்கி வருவது போன்ற சில்லறைக் காரியங்களுக்குச் செலவாகும் நேரத்தில் இது நூறு மணி வேலை நேரத்தை மிச்சமாக்கிக் கொடுக்கும். உங்களுடைய குடும்பத்தில் எளிய வேலை செய்யக்கூடிய இருவர்—ஐம்பத்து ஐந்து வயது மாதும் பதினன்கு வயதுப் பையனும்—இருக்கிறார்கள். அவர் களுக்கு வேலையில்லை, ஆனால் ஏதாகிலும் இலேசான வேலை செய்யலாம். இருவரும் நாளொன்றுக்கு மூன்று மணி

நேரம் வேலை பார்த்து, இந்தப் பத்துக் குடும்பங்களுக்கும் உணவுப் பண்டங்கள் வினியோகம் சரியாக நடக்கிறதா என்று மேற்பார்வை செய்து அதற்குச் சரியான கணக்குகள் வைத்துக் கொள்ள வேண்டும். எங்கள் படையிலுள்ள மாணவர் இப்பொழுதே இந்த அரசாங்க உத்தரவின் இரண்டு பிரதிகளை எழுதிக் கொடுப்பார். சரியாக அதன்படி நடந்து வருவோம் என்று உறுதிச் சீட்டு தயை செய்து எழுதிக் கையொப்பமிட்டு எங்களிடம் தருவீர்களாக.''

பழைய முதலாளித்துவ அரசாங்க இயந்திரம், நிர்வாகம் ஆகியவற்றுக்கும், புதிய சோஷலிஸ்டு அரசாங்க இயந்திரம், நிர்வாகம் ஆகிய இரண்டுக்கும் இடையிலுள்ள ஒப்புநிலையைத் தெளிவான உதாரணங்களால் நன்கு எடுத்துக்காட்ட முடியும் என்பது என் அபிப்பிராயம்.

நாம் கற்பனைவாதிகள் அல்ல. ஒவ்வொரு பயிற்சியற்ற தொழிலாளியும், சமையற்காரியும் உடனடியாக அரசாங்க நிர்வாக வேலையை மேற்கொள்ள முடியாது என்பது நமக்குத் தெரியும். இவ்விஷயத்தில் நாம் காடேட்டுகள், பிரெஷ்கோவ்ஸ்கயா, தெஸெரெத்தேலி ஆகியோர் கூறுவதை ஒப்புக்கொள்கிறோம். ஆனால் பணக்காரர்களோ, பணக்காரக் குடும்பங்களிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்ட அலுவலர்களோதான் அரசாங்கத்தை நிர்வகிக்க, நிர்வாகத்தின் சாதாரணமான அன்றாட வேலையைப் பார்க்கத் திறனுள்ளவர்கள் என்ற குருட்டு நம்பிக்கையை உடனடியாகக் கைவிட வேண்டும் என்று நாம் கோருகிறோம். அதில் தான் நமக்கும், மேற்கூறிய கனவான்களுக்கும் வித்தியாசம். வர்க்க உணர்வுள்ள தொழிலாளிகளும் போர்வீரர்களும் அரசாங்க நிர்வாக வேலைக்குப் பயிற்சி அளிக்க வேண்டும், அதை உடனடியாகத் தொடங்கவேண்டும் — அதாவது, எல்லா உழைப்பாளி மக்களையும் எல்லா ஏழை மக்களையும் இந்த வேலைக்காகப் பயிற்றுவிப்பதை உடனடியாகத் தொடங்க வேண்டும் — என்று நாம் கோருகிறோம்.

காடேட்டுகளுங்கூட மக்களுக்கு ஜனநாயக முறையைப் போதிக்கத் தயாராயிருக்கின்றனர் என்பதை நாம் அறிவோம். காடேட்டுச் சீமாட்டிகள், சிறந்த ஆங்கில,

பிரெஞ்சு ஆதாரங்களுக்கிணங்க, பெண்களுக்குச் சம உரிமைகள் வேண்டும் என்பது பற்றி வீட்டு வேலைக்காரி களிடையே சொற்பொழிவாற்றத் தயாராயிருக்கின்றனர். அடுத்தாற் போல வரும் சங்கீதக் கூட்டத்தில், ஆயிரக் கணக்கான மக்களின் முன்னிலையில், மேடைமீது முத்தங் கள் பரிமாறுதல் ஏற்பாடு செய்யப்படும்: சொற்பொழி வாற்றிய காடேட்டுச் சீமாட்டி பிரெஷ்கோவ்ஸ்கயாவை முத்தமிடுவாள், பிரெஷ்கோவ்ஸ்கயா மாஜி மந்திரி தெஸெ ரெத்தேலியை முத்தமிடுவாள்; இப்படியாகத்தானே குடியாட்சியின் சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம் பற்றி ஓர் உதாரணபூர்வமான படிப்பினையை நன்றியுள்ள மக்கள் பெறுகிறார்கள்...

ஆமாம், காடேட்டுகள், பிரெஷ்கோவ்ஸ்கயா, தெஸெ ரெத்தேலி ஆகியோர் தங்களுக்கே உரித்தான சொந்த வழியில் ஜனநாயகத்தில் ஈடுபாடுடையவர்கள் என்பதை யும், அதனை அவர்கள் மக்களிடையே பிரசாரம் செய்து வருகிறார்கள் என்பதையும் நாம் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் ஜனநாயகம் பற்றிய நமது கருத்து அவர்களின் கருத்திலிருந்து சிறிது வேறுபட்டிருக்கிறது என்றால் அதற்கு என்ன செய்வது?

நமது கருத்தின்படி, போரால் விளைந்துள்ள, கேட்டறி யாத துன்ப துயரங்களைத் தணிப்பதற்கும், அதே சமயத் தில் போரால் மக்களுக்கு ஏற்பட்டுள்ள பயங்கரமான புண்களை ஆற்றுவதற்கும் புரட்சிகரமான ஜனநாயகம் தேவை; ஏழைகளுக்குக் குடியிருப்பு இடங்களைப் பகிர்ந்து கொடுப்பது பற்றி மேற்சொல்லிய உதாரணத்தில் விவரித் தது போன்ற, புரட்சிகரமான நடவடிக்கைகள் தேவை. நகரத்திலும் நாட்டுப்புறத்திலும் உணவுப் பண்டங்கள், ஆடைகள், செருப்புகள், முதலியவற்றின் வினியோகத்தி லும், நாட்டுப்புறப் பகுதிகளில் நிலம், முதலியவை சம்பந்தமாயும் முற்றிலும் இதே விதமான வழிமுறை அனு சரிக்கப் பட வேண்டும். இந்த உணர்வில் அரசாங்க நிர்வாக வேலையை நடத்துவதற்கு இரண்டு கோடி இல்லாவிட்டா லும் ஒரு கோடி மக்களைக் கொண்ட அரசாங்க இயந்

திரத்தை, எந்த முதலாளித்துவ அரசிலும் ஒருபோதும் காணக் கிடைத்திராத இயந்திரத்தை, உடனடியாக இயங்கச் செய்ய முடியும். நம்மால் மட்டுமே இவ்வித இயந்திரத்தைப் படைக்க முடியும். ஏனெனில், மக்கள் தொகையில் மிகப் பெரும்பாலானவரின் பூர்ணமான, தன்னலங் கருதாத அனுதாபம் நமக்கு நிச்சயமாக உண்டு. நம்மால் மட்டுமே இவ்வித இயந்திரத்தைப் படைக்க முடியும்; ஏனெனில், நீண்ட காலமாக முதலாளித்துவம் தந்த ''பயிற்சியினுல்'' (முதலாளித்துவத்தின் பள்ளியில் நாம் படிக்கச் சென்றது வெட்டியாக அல்ல) கட்டுப்பாடுள்ள, வர்க்க உணர்வு கொண்ட தொழிலாளர்கள் நம்மிடம் இருக்கின்றனர். இந்தத் தொழிலாளர்கள் தொழிலாளர் மிலீஷியாவை அமைக்கவும், அதைப் படிப்படியாய்ப் பெரிதாக்கி (அதை உடனே விரிவாக்கத் தொடங்கி) முடிவில் சர்வஜன மிலீஷியாவாகச் செய்யவும் முடியும். வர்க்க உணர்வுள்ள தொழிலாளிகள் தலைமை தாங்க வேண்டும், ஆனுல் அரசாங்க நிர்வாக வேலையில் உழைப்பாளி மக்கள் திரளையும், ஒடுக்கப்பட்ட மக்கள் திரளையும் அவர்கள் ஈடுபடுத்தலாம்.

இப்புதிய இயந்திரம் எடுத்துக்கொள்ளும் முதல் நடவடிக்கைகளில் தவிர்க்க முடியாதபடி தவறுகள் ஏற்படும். ஆனுல் விவசாயிகள் பண்ணையடிமை முறையிலிருந்து விடுதலை பெற்றுத் தங்கள் காரியங்களைத் தாங்களே மேற்கொண்டு நடத்தப் புறபட்டபொழுது தவறுகள் செய்யவில்லையா? நடைமுறையைத் தவிர, மக்களின் உண்மையான சுயாட்சியை நோக்கி உடனடியாகச் செல்வதைத் தவிர, மக்கள் தாங்களே ஆட்சி புரியப் பயிற்சி பெறுவதற்கும், தவறுகளைத் தவிர்ப்பதற்கும் வேறு வழி ஏதாவதுண்டா? தங்களது சமூக நிலை முழுவதின் காரணமாக, மூலதனத்தையே முற்றிலும் சார்ந்து கிடக்கிற விசேஷ உத்தியோகஸ்தர்கள் மட்டுமே அரசாங்கத்தை நிர்வகிக்க முடியும் என்பது முதலாளித்துவ படிப்பாளிகளின் குருட்டு நம்பிக்கையாகும். அதைக் கைவிட வேண்டும்; அதுதான் இன்றையப் பிரதான விஷயம். முதலாளி வர்க்கத்தினர்களும் அதிகார

வர்க்கத்தினரும், ''சோஷலிஸ்டு'' மந்திரிகளும் பழைய முறைப்படியே ஆட்சி நடத்த முயற்சி செய்து வருகிறுர் கள்; ஆனுல் அவர்களால் ஆட்சி நடத்த முடியவில்லை. ஏழு மாதங்கள் ஆனபிறகும் விவசாய நாட்டிலே விவசாயிகளின் எழுச்சி ஏற்பட்டு வருவதுதான் அவர்கள் கண்ட பலன்!! இப்படிப்பட்ட நிலைமைக்கு முற்றுப்புள்ளி வைப்பதுதான் பிரதான விஷயம் ஆகும். ஒடுக்கப்பட்ட மக்களுக்கு, உழைப் பாளி மக்களுக்கு அவர்கள் பலத்தில் நம்பிக்கை உண் டாகும்படி செய்வதும், ரொட்டி, உணவுப் பொருள், பால், துணிமணிகள், குடியிருக்கும் வீடுகள், முதலியவற்றை, ஏழைகளின் நலன்களைக் கருதி, மிகக் கட்டுத்திட்டமும் ஒழுங்கும் வாய்ந்த சரியான முறையில் வினியோகிப் பதற்குரிய வேலையை, அவர்கள் தாங்களே எடுத்து நடத்த முடியும், எடுத்து நடத்த வேண்டும் என்பதை அவர் களுக்கு நடைமுறையில் மெய்ப்பித்துக் காட்டுவதும்தான் பிரதான விஷயம். இவற்றைச் செய்தாலொழிய ருஷ் யாவை நிலை குலைவினின்றும் அழிவினின்றும் காப்பாற்ற முடியாது. அரசாங்க நிர்வாகத்தைப் பாட்டாளிகளிடமும் அரைப் பாட்டாளிகளிடமும் ஒப்படைக்கின்ற வேலையை மனப்பூர்வமாக, தைரியமாக எங்கும் தொடங்குவது மக்களிடையே சரித்திரத்தில் இதற்குமுன் கண்டிராத புரட்சிப் பேரூக்கத்தைக் கிளப்பி, துன்பங்களை எதிர்த்துப் போராடுவதற்குரிய மக்கள் சக்திகளைப் பெருவாரியாகப் பெருக்கித் தரும். இம்மக்கள் முதலாளிகளுக்காகவோ, நிலப்பிரபுக்களுக்காகவோ, அதிகார வர்க்கத்தினருக்கா கவோ இன்றி, தடிக் கம்புக்குப் பயப்படுவதால் இன்றி, தங்களுக்காகவே வேலை செய்யத் தொடங்கிவிடுவார்கள். அதனுல் பழைய, குறுகிய கருத்துடைய அதிகார வர்க்கச் சக்திகளுக்கு அசாத்தியமானவை என்று தோன்றிய பற்பல காரியங்கள், கோடிக் கணக்கான பொது மக்களுக்குச் சாத்தியமானவை ஆகிவிடும்.

* * *

அரசாங்க இயந்திரம் என்ற பிரச்சினையுடன் மத்தியத் துவம் என்ற பிரச்சினையும் தொடர்புள்ளது. அதை வெகு

ஊக்கத்துடன் ஆனுல் மிகப் பொருத்தமற்ற முறையில் தோழர் பஸாரவ் செப்டம்பர் 27ம் தேதி, நோவயா ஷீஸ்ன் 138வது இதழில் ''போல்ஷிவிக்குகளும் அதிகாரப் பிரச்சினேயும்'' என்ற கட்டுரையில் கிளப்பியுள்ளார்.

தோழர் பஸாரவ், ''அரசாங்க நடவடிக்கைகளின் எல்லாத் துறைகளுக்கும் பொருத்தமான சோவியத்துக் கள் இயந்திரமல்ல'' என்று வாதிக்கிருர். அவர் கூற்றுப்படி ஏழு மாத அனுபவம் காட்டிவிட்டதாம், ''பீட்டர்ஸ்பர்க் நிர்வாகக் கமிட்டியின் பொருளாதார இலாகாவின் கைவச முள்ள நூற்றுக்கணக்கான தஸ்தாவேஜுகள்'' ஊர்ஜிதப் படுத்தியுள்ளனவாம் — எதை? பல இடங்களில் சோவியத் துக்கள் நடைமுறையில் ''பூர்ண அதிகாரத்தைச்'' செலுத்தி வந்த போதிலும் ''பொருளாதாரச் சீரழிவைத் தடுத்துச் சமாளிக்கும் வேலேயில் திருப்திகரமான சாதனே எதையும் அவை நிறைவேற்ற முடியவில்லே'' என்பதை அவை காட்டி உறுதிப்படுத்தியுள்ளனவாம். ''உற்பத்தி யின் துறைகளுக்கிணங்கப் பிரித்து, ஒவ்வொரு உற்பத்தித் துறைக்குள்ளும் கருரான மத்தியத்துவம் ஏற்படுத்தி, எல்லாவற்றையும் ஒரேயொரு, நாடெங்கும் பரவியுள்ள கேந்திரத்துக்கு உட்படுத்தப்பட்டதாய் அமைந்த ஓர் இயந்திரம்தான் தேவைப்படுகிறதாம். தயவு செய்து கேளுங்கள்: ''ஒரு திட்டத்தை வைத்துக் கொண்டுள்ள நபர்களேப் பற்றி போல்ஷிவிக்குகள் எவ்வளவுதான் ஏளன மாகப் பேசினுலும் சரி... பழைய இயந்திரத்தை விலக்கி இன்ஞென்றை அதனிடத்தில் நிறுவுவதல்ல விஷயம்; அந்தப் பழைய இயந்திரத்தைச் சீர்திருத்துவது மட்டுமே விஷயமாகும்...''

தோழர் பஸாரவின் இந்த வாதங்கள் எல்லாம் முத லாளி வர்க்கத்தின் வாதங்களின் மறுபிரதியாகவும், அதன் வர்க்கப் பார்வையின் ஒரு பிரதிபலிப்பாகவும், வியக்கத் தக்க விதத்தில் பயனற்றவையாகவும் இருக்கின்றன.

உண்மையில், ருஷ்யாவில் எங்காவது சோவியத்துக்கள் ''பூர்ண அதிகாரம்'' பெற்றுள்ளன என்று கூறுவது (முத லாளிகள் கூறி வரும், தன்னலங் கருதும், வர்க்கச் சார்பான

பொய்யைத் திரும்பச் சொல்வதாகும், இல்லையேல் கேலிக் கிடமாகும். பூர்ண அதிகாரம் என்பது எல்லா நிலத்தின் மீதும், எல்லா வங்கிகள் மீதும், எல்லா ஆலைகள் மீதும் அதிகாரம் எனப் பொருள்படும். வரலாறு கொஞ்சமாவது தெரிந்தவரும், அரசியலுக்கும் பொருளாதாரத்திற்குமுள்ள தொடர்பு பற்றிய விஞ்ஞான பூர்வமான விஷயவிபரங் களைக் கொஞ்சமாவது அறிந்தவரும் இந்த ''அற்ப'' விஷயத்தை ''மறந்து போயிருக்க'' முடியாது.

சோவியத்துக்களிடம் அதிகாரத்தைக் கொடுக்காமல், அவை எடுக்கும் ஒவ்வொரு முக்கியமான நடவடிக்கைக் கும் குழிபறித்து, அரசாங்கத்தைத் தங்கள் கையில் வைத்துக்கொண்டு, நிலங்கள், வங்கிகள், முதலானவை மீதான அதிகாரத்தைத் தங்கள் வசம் வைத்தபடி, பொருளா தாரச் சீரழிவிற்குக் காரணம் சோவியத்துக்களே என்று அவை மீது பழி சுமத்துகின்றனர் முதலாளி வர்க்கத்தினர்!! இதுவே அவ்வர்க்கத்தினர் செய்து வரும் வஞ்சகச் சூழ்ச்சி யாகும். கூட்டணியின் வருத்தமிக்க அனுபவம் முழுதும் இதுதான்.

சோவியத்துக்கள் ஒரு நாளும் பூர்ண அதிகாரத்தைப் பெற்றிருக்கவேயில்லை. அவை எடுத்துக்கொண்ட நட வடிக்கைகள் தாற்காலிகமான பரிகாரத்தையும், மிகுதி யான குழப்பத்தையும் தவிர வேறெதையும் விளைக்க முடியவில்லை.

தங்கள் திடநம்பிக்கை, வேலைத்திட்டம், தங்கள் கட்சி முழுவதின் நடைமுறை உத்திகள் ஆகியவற்றின்படி மத் தியத்துவத்தை ஆதரிப்பவர்களான போல்ஷிவிக்குகளிடம், மத்தியத்துவம் மிகவும் அவசியம் என்று சொல்வது திறந்த கதவை உடைத்துத் திறப்பது போலாகும். நோவயா ஷீஸ்ன் எழுத்தாளர்கள் இந்த வீண் வேலையில் ஈடுபட்டுள்ள தற்குக் காரணம், ''நாடெங்கும் பரவியுள்ள'' அவர்களது கண்ணோட்டத்தை நாம் ஏளனம் செய்வதின் பொருளை யும், முக்கியத்தையும் அவர்கள் அறவே புரிந்துகொள் ளாதது தான். நோவயா ஷீஸ்ன்காரர்கள் இதைப் புரிந்து கொள்ளாததற்குக் காரணம், வர்க்கப் போராட்டம்

பற்றிய தத்துவத்தை அவர்கள் சிந்தனை பூர்வமாய் ஏற்றுக் கொள்ளாமல் உதட்டளவில் மட்டுமே ஏற்றுக் கொள் கிறார்கள் என்பதே ஆகும். வர்க்கப் போராட்டத்தைப் பற்றித் தாங்கள் குருட்டுப் பாடம் செய்த சொற்களைத் திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டு தத்துவ ரீதியில் கோமாளித் தனமாயும், நடைமுறையில் பிற்போக்காயு மிருக்கிற ''வர்க்கங்களுக்கு மேற்பட்ட பார்வையிலே'' இடைவிடாமல் சறுக்கி விழுந்தவாறு இருந்து வருகிறார் கள். இவ்வாறு முதலாளி வர்க்கத்தினர்களை அடிவருடித் திரியும் வேலையை ''நாடெங்கும் பரவியுள்ள'' திட்டம் என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

அருமை மக்களே, அரசாங்கம் என்பது, ஒரு வர்க்கத் தின் கருவி. அரசாங்கம் என்பது ஒரு வர்க்கத்தால் மற்றொரு வர்க்கத்துக்கு எதிராகச் செலுத்தப்படுகிற பலாத்காரத்தின் ஒரு கருவி, ஓர் இயந்திரம். எவ்வளவு காலம் வரை பலாத் காரத்தின் இந்த இயந்திரம் முதலாளி வர்க்கத்தால் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராகச் செலுத்தப்பட்டு வரு கிறதோ, அவ்வளவு காலம் வரைக்கும் பாட்டாளி வர்க் கத்தின் கோஷம் ஒன்றே ஒன்றுதான்: இந்த அரசாங் கத்தைத் தகர்த்தெறிவதே. ஆனால் அரசாங்கம் பாட்டாளி வர்க்கத்தின் அரசாங்கமாகும் போது, பாட்டாளி வர்க்கத் தால் முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிராக உபயோகிக்கப் படும் பலாத்காரத்தின் இயந்திரமாகும் போது, பலம் வாய்ந்த ஆட்சியதிகாரத்தையும் மத்தியத்துவத்தையும் முழுமனதுடன், பூர்ணமாக நாம் ஆதரிப்போம்.

இன்னும், எல்லோரும் புரிந்துகொள்கிற வார்த்தை களில் சொல்ல வேண்டுமானால், நாம் ''திட்டங்களை'' ஏளனம் செய்யவில்லை; ஆனால் பஸாரவும் அவர் கூட்டத் தாரும் ''தொழிலாளர் கட்டுப்பாட்டை'' நிராகரித்துப் பேசும் பொழுது, ''பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதி காரத்தை'' நிராகரித்துப் பேசும் பொழுது அவர்கள் முதலாளி வர்க்கத்தினரின் சர்வாதிகாரத்தை ஆதரித்து நிற்கின்றனர் என்பதை அறிந்துகொள்ளத் தவறிவிட்டதைத் தான் நாம் எள்ளி நகையாடுகிறோம். நடு வழி என்று

ஒன்றுங் கிடையாது; நடு வழி என்பது குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதியின் வீண் கனவாகும்.

எந்த ஒரு மத்தியக் குழுவும் சரி, எந்த ஒரு போல்ஷிவிக்கும் சரி, சோவியத்துக்களின் மத்தியத்துவத்திற்கு எதிராக, அவற்றைச் சேர்த்திணைப்பதற்கு எதிராக எக்காலத்திலும் வாதித்ததில்லை. எங்களில் எவரும் உற்பத்தித் துறைகளுக்கிணங்கத் தொழிற்சாலைக் கமிட்டிகளை அமைப்பதையும், அவற்றை மத்தியத்துவப் படுத்துவதையும் எதிர்க்கவே இல்லை. பஸாரவின் அம்புகள் குறிதவறிப் பாய்கின்றன.

''மத்தியத்துவத்தைக்'' குறித்தல்ல, ''திட்டங்களைக்'' குறித்தல்ல, சீர்திருத்தவாதத்தைக் குறித்து நாம் சிரிக்கத் தான் செய்கிறோம், சிரித்துத்தான் இருக்கிறோம், சிரித்துக் கொண்டுதான் இருப்போம். கூட்டணியின் அனுபவத்திற்குப் பிறகு, உங்களுடைய சீர்திருத்தவாதம் கேலிக்கிடமானதாகும். ''பழைய இயந்திரத்திற்குப் பதில் புதிய தொன்றை அமைப்பது அல்ல, பழையதையே சீர்திருத்துவது'' என்று சொல்வதற்குச் சீர்திருத்தவாதியாக இருப்பது என்றுதான் பொருள், புரட்சிகரமான ஜனநாயகவாதியல்ல, சீர்திருத்த ஜனநாயகவாதியாகி விடுவது என்றுதான் பொருள். சீர்திருத்தவாதம் என்பது ஆளும் வர்க்கம் சலுகைகள் தருவதைத்தான் குறிக்குமே தவிர அதன் வீழ்ச்சியைக் குறிக்காது. ஆளும் வர்க்கம் சலுகைகளைத் தருகிறது, எனினும் அதிகாரம் அதன் கையில்தான் இருக்கிறது.

கூட்டணியின் அரை வருட காலத்தில் இதையே சோதனை செய்தும் பார்த்தாய் விட்டது.

இதைக் குறித்துத்தான் நாம் சிரிக்கின்றோம். வர்க்கப் போராட்டத்தைப் பற்றிய போதனையை நன்கு புரிந்து கொள்ளத் தவறிவிட்ட பஸாரவ், ''ஆமாம், அப்படித் தான்; நாங்கள் சீர்திருத்தங்களை எவ்வகையிலும் எதிர்க்கவில்லை, தொழிலாளிகள் நாடெங்கும் பரவிய கட்டுப்பாட்டில் பங்கு கொள்வதை நாங்கள் ஆதரிக்கிறோம். நாங்கள் அதை முழுதும் ஏற்றுக்கொள்கிறோம்'' என்று

பாடும் முதலாளி வர்க்கத்தினரின் சங்கீதத்தில் தானும் அகப்பட்டுக்கொள்கிறார். நல்ல பிள்ளையான பஸாரவ் எதார்த்தத்தில் முதலாளிகளுக்குப் பின்பாட்டுப் பாடுகிறார்.

கடுமையான வர்க்கப் போராட்டத்திற்கிடையே ''நடு'' நிலையைக் கடைப்பிடிக்க முயலும் மக்களின் நிலைமை எப்பொழுதும் இவ்வாறுதான் இருந்து வந்துள்ளது, எப்பொழுதும் இவ்வாறுதான் இருந்து வரும். வர்க்கப் போராட்டத்தைப் புரிந்துகொள்ளச் சக்தியற்றுப் போன காரணத்தால் தான் நோவயா ஷீஸ்ன் எழுத்தாளர்களின் கொள்கை முதலாளி வர்க்கத்துக்கும் பாட்டாளி வர்க்கத்துக்கும் இடையே கேலிக்கிடமான, நிரந்தரமான ஊசலாட்டமாக இருக்கிறது.

''திட்டங்களைச்'' செயல்படுத்துங்கள், அருமை நாட்டினரே! இது அரசியலல்ல, இது வர்க்கப் போராட்டத்துக்குரிய விஷயமல்ல; இந்தத் துறையில் நீங்கள் பொது மக்களுக்கு உபயோகமாயிருக்கலாம். உங்கள் பத்திரிகையில் பொருளாதார நிபுணர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். உற்பத்தியையும் வினியோகத்தையும் ஒழுங்கு முறைக்குக் கொண்டு வருவதற்குரிய பிரச்சினைகளைக் கவனிக்கத் தயாராயிருக்கிற இஞ்சினீயர்கள், முதலாளுேருடன் இணைந்து கொள்ளுங்கள். ருஷ்யாவில் பொருள்களின் உற்பத்தி, வினியோகம் ஆகியவற்றையும் வங்கிகள், சிண்டிகேட்டுகள் முதலியவற்றையும் பற்றிய கறாரான புள்ளி விவரங்களைக் குறித்துக் காரியரீதியான பரிசீலனை செய்வதற்கென்று உங்களுடைய பெரிய ''இயந்திரத்தின்'' (உங்கள் பத்திரிகையின்) நடுப் பக்கத்தை உபயோகியுங்கள். இதன் மூலம் நீங்கள் மக்களுக்குப் பயன் படலாம். ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் வைத்திருக்கும் உங்களுடைய போக்கு இவ்விஷயத்தில் அவ்வளவு குறிப்பாகத் தீங்கு ஏதும் செய்யாது. ''திட்டங்கள்'' பற்றிய இப்படிப்பட்ட வேலையினால் உங்களுக்குத் தொழிலாளிகளின் நன்றிதான் கிடைக்குமே தவிர ஏளனமல்ல.

பாட்டாளி வர்க்கம் வெற்றிகொள்ளும் பொழுது கீழ்க் கண்டவாறு செய்யும்: அது தொழிலாளர் ஸ்தாப

னங்களின் கட்டுப்பாட்டின்கீழ் பொருளாதார நிபுணர்கள், இஞ்சினீயர்கள், விவசாய நிபுணர்கள், முதலியோரை வேலைக்கு அமர்த்தும்; ''திட்டம்'' வகுப்பதற்கு, அதைச் சரிபார்ப்பதற்கு, மத்தியத்துவப்படுத்துவதின் மூலம் உழைப்பை மிச்சப்படுத்தும் வழிகளைக் கண்டுபிடிப்பதற்கு, மிக எளிய, மலிவான, வசதியான, சர்வவியாபகமான கட்டுப் பாட்டுக்குகந்த நடவடிக்கைகளையும் வழிமுறைகளையும் கண்டுபிடித்துத் தருவதற்கு அவர்களை அமர்த்தும். இவ்வேலைக்காக அந்தப் பொருளாதார நிபுணர்களுக்கும், புள்ளிவிவரக்காரர்களுக்கும், தொழில் நுணுக்க நிபுணர் களுக்கும் நாம் நல்ல ஊதியம் கொடுப்போம். ஆனால்... ஆனால், அவர்கள் மனச் சான்றின் படியும் பூர்ணமாகவும் உழைப்பாளிகளின் நலன்களைக் கருதி வேலை செய்து வர வில்லையென்றால் உண்பதற்கு அவர்களுக்கு எதுவும் தர மாட்டோம்.

மத்தியத்துவமும் ''திட்டமும்'' எங்களுக்கு உடன் பாடானவைதான். ஆனால் அந்த மத்தியத்துவமும் திட்டமும் பாட்டாளி வர்க்க அரசாங்கத்துக்கு உரியவையாய் இருக்க வேண்டும், சுரண்டுகிறவர்களுக்கு எதிராக ஏழை மக்களின், உழைப்பாளிகளின், சுரண்டப்பட்டோரின் நலன்களைக் கருதி, பொருள் உற்பத்தி, வினியோகம் ஆகியவற்றில் பாட்டாளி வர்க்கத்தின் ஒழுங்குமுறைக்கு இசைந்தவை யாக இருக்க வேண்டும். ''நாடெங்கும் பரவியுள்ள'' என்பதற்கு ஒரே ஒரு பொருளைத் தான் நாம் ஏற்றுக் கொள்ள முடியும். முதலாளிகளின் எதிர்ப்பை முறிப்பது, மக்களில் பெரும்பான்மையானவர்களுக்கு, அதாவது பாட் டாளிகள், அரைப் பாட்டாளிகள் ஆகியோருக்கும் தொழி லாளிகள், ஏழை விவசாயிகள் ஆகியோருக்கும் அனைத்து அதிகாரத்தையும் தருவது என்ற பொருளைத்தான் நாம் ஏற்றுக்கொள்ள முடியும்.

* * *

போல்ஷிவிக்குகள் நீடித்து அரசாள முடியாது என் பதற்குக் கூறியுள்ள ஐந்தாவது வாதம் ''நிலைமை மிகவும் சிக்கலானது'' என்பதுதான்...

ஆஹா, எப்படிப்பட்ட அறிஞர்கள் இவர்கள்! ஒரு வேளை ''மிகவும் சிக்கலான நிலைமை'' இல்லாமற்போனுல் அவர்கள் புரட்சியுடன் சமரசம் செய்து கொள்ளத் தயாராயிருப்பார்கள் போலும்.

அப்படிப்பட்ட புரட்சிகள் ஒருபொழுதும் நடப்பதில்லை. அவ்விதமான புரட்சிக்கு ஏங்கிப் பெருமூச்சு விடுவது முதலாளித்துவப் படிப்பாளர்களின் பிற்போக்கு அழுகை தவிர வேறொன்றுமில்லை. மிகவும் சிக்கலானதல்ல என்று தோன்றும் நிலைமையில் புரட்சி துவங்கினுலும், அப்புரட்சியின் வளர்ச்சி எப்பொழுதும் அசாதாரணச் சிக்கலான நிலைமையை உண்டாக்கிவிடுகிறது. உண்மையான, ஆழ்ந்த புரட்சி, மார்க்சின் வார்த்தைகளில் ''மக்களின்'' புரட்சி, நம்புவதற்கருமையான அளவிலே சிக்கல் மிகுந்த, வேதனை மிக்க ஒரு நிகழ்ச்சிப் போக்கு ஆகும். பழைய சமுதாய அமைப்பு முறையும் கோடிக்கணக்கான மக்களின் பழைய வாழ்வு முறையும் மடிந்து, புதிய சமுதாய அமைப்பு முறையும் கோடிக்கணக்கான மக்களின் புதிய வாழ்வு முறையும் பிறக்கிற நிகழ்ச்சிப் போக்கு ஆகும் அது. புரட்சி என்பது மிகக் கடுமையான, வெறிகொண்ட, உக்கிரமான வர்க்கப் போராட்டமாகும், உள்நாட்டுப் போராகும். வரலாற்றில் காணும் எந்த மகத்தான புரட்சியும் உள்நாட்டுப் போரின்றி நிகழ்ந்தேறியதில்லை. கூட்டில் அடைந்த மனிதர்தான்[28] ''மிகவும் சிக்கலான நிலைமை'' ஒன்றில்லாத உள்நாட்டுப் போர் நடக்கும் என்று எண்ண முடியும்.

மிகவும் சிக்கலான நிலைமையில்லாது போனுல் புரட்சியே இருக்காது. ஓநாய்களுக்குப் பயந்தவர்கள் காட்டிற்குள் செல்லக் கூடாது.

ஐந்தாவது வாதத்தில் விவாதிப்பதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில் பொருளாதார அல்லது அரசியல் அர்த்தமோ, வேறு ஏதாவது அர்த்தமோ அதில் ஏதுமில்லை. புரட்சியால் பீதியடைந்து துன்பப்படும் மக்களின் பெருமூச்செறிவு தான் அதில் அடங்கியுள்ளது. உதாரணத்துக்காக, இது பற்றி எனது இரண்டு சொந்த அனுபவங்களைக் கூற விரும்புகிறேன்.

ஜூலை நாட்களுக்குச் சிறிது முன்னால், ஒரு பணக்கார இஞ்சினீயருடன் பேசிக்கொண்டிருந்தேன். இந்த இஞ்சினீயர் ஒரு காலத்தில் புரட்சிவாதி, சமூக-ஜனநாயக இயக்கத்தில் கலந்துகொண்டவர்; போல்ஷிவிக் கட்சி அங்கத்தினராகவும் இருந்தவர். கொந்தளித்துப் பொங்குகிற, அடக்க முடியாத நிலையில் இருக்கிற தொழிலாளிகள் மீது அவர் இப்போது ஒரேயடியாக பயமும் சினமும் கொள்கிறார். "அவர்கள் குறைந்த பட்சம் ஜெர்மன் தொழிலாளிகளைப் போலாவது இருப்பார்களானால்..." என்றார் அவர் (அவர் நன்கு கற்றவர், வெளிநாடுகளுக்குப் போய் வந்தவர்). "நிச்சயமாக, சமூகப் புரட்சி தவிர்க்க முடியாதது என்பதை நான் பொதுவாக அறிவேன். ஆனால் இங்கு, போரின் காரணமாகத் தொழிலாளிகளின் தரம் இப்படி குறைக்கப்பட்டுப் போயிருக்கையில்... அதை ஒரு புரட்சி என்று சொல்ல முடியாது, பாதாளப் படுகுழி என்றுதான் சொல்ல வேண்டும்."

ஜெர்மானிய விரைவு ரயில் வண்டி எவ்வாறு ஒரு நிலையத்துக்கு வந்து சேருகிறதோ, அதே போல் சரித்திரமும் சாத்வீகமான வகையில், அமைதியாக, மென்மையாக, துல்லியமான முறையில் சமூகப் புரட்சியை நடத்திச் செல்லுமாயின் அவர் அதை ஏற்கத் தயாராயிருந்தார். நிதானம் மிகக் கண்டக்டர் ஒருவன் வண்டிக் கதவைத் திறந்து, "இது சமூகப் புரட்சி நிலையம்! Alle aussteigen (எல்லோரும் இங்கு இறங்குங்கள்)!" என்று தெரிவிப்பான். அப்படி ஏற்பட்டால் தீத் தீத்திச்சுகளின் கீழ் இஞ்சினீயராக இருப்பதை விட்டு, தொழிலாளர் நிறுவனங்களின் கீழ் இஞ்சினீயராக இருப்பதற்கு அவரால் ஏன் முடியாது?

அம்மனிதர் வேலைநிறுத்தங்களைப் பார்த்துள்ளவர். மிகவும் சமாதானமாயுள்ள காலங்களில்கூட மிகச் சாதாரணமான வேலைநிறுத்தம் எவ்வளவு உணர்ச்சியாவேசத்தைக் கிளப்பிவிடுகிறது என்பது அவருக்குத் தெரியும். வர்க்கப் போராட்டம் ஒரு பெரும் நாட்டிலுள்ள எல்லா உழைப்பாளி மக்களையும் கிளப்பிவிடும்போது, நிலப்பிரபுக்களால் நூற்றுக் கணக்கான வருடங்கள் துன்புறுத்தப்பட்டும், முதலாளிகளாலும் ஜாரிஸ்டு அதிகார வர்க்கத்

தினராலும் பல பத்தாண்டுகளாகக் கொள்ளையடிக்கப்பட்டும், மிதிக்கப்பட்டும் வந்த கோடிக் கணக்கான மக்களைப் போரும் சுரண்டலும் மிகக் கொடிய துன்பத்தில் தள்ளி விடும்போது, இந்த புயல் எத்தனை கோடி மடங்கு சீற்ற முள்ளதாயிருந்து தீரும் என்பதும் அவருக்கு நிச்சயம் தெரியும். ''தத்துவரீதியில்'' இவையனைத்தையும் அவர் புரிந்து கொள்கிறார்; வெறுமே உதட்டளவில் ஒப்புக்கொள்கிறார்; ஆனால் உண்மையில் ''மிகவும் சிக்கலான நிலைமையைக்'' கண்டு அவர் பீதியடைகிறார்.

ஜூலை நாட்களுக்குப் பிறகு, கேரென்ஸ்கி அரசாங்கம் என் மீது மிகுந்த பரிவோடு கவனம் வைத்து என்னைக் கௌரவித்ததன் காரணமாக, நான் தலைமறைவாக இருந்து வேலை செய்ய வேண்டியதாயிற்று. என் போன்றவர்களுக்குப் புகலிடம் தந்தவர்கள் தொழிலாளர்கள் தான் என்பது தெரிந்த விஷயம். பெத்ரொகிராத் நகர்ப்புறத்திலுள்ள தொழிலாளர் வட்டாரமொன்றில், தொழிலாளி ஒருவனது சிறிய வீட்டில் பகலுணவு பரிமாறிக் கொண்டிருக்கும் சமயம். வீட்டு அம்மையார் மேஜைமீது ரொட்டியை வைக்கிறார். வீட்டுக்காரர் கூறுகிறார்: ''எவ்வளவு நேர்த்தியான ரொட்டி, பாருங்கள். இப்பொழுது மோசமான ரொட்டி கொடுக்கத் துணியமாட்டார்கள் 'அவர்கள்'. பெத்ரொகிராதில் நல்ல ரொட்டி கொடுப்பார்கள் என்ற எண்ணத்தையே நாங்கள் அநேகமாய் விட்டுவிட்டிருந்தோம்'' என்று.

ஜூலை நாட்களைப் பற்றிய இந்த வர்க்கரீதியான மதிப்பீட்டைக் குறித்து நான் அதிசயித்தேன். அந்த நிகழ்ச்சியின் அரசியல் முக்கியத்துவத்தைச் சுற்றி எனது சிந்தனை சுழன்று கொண்டிருந்தது. நிகழ்ச்சிகளின் பொதுப் போக்கில் இது வகிக்கும் பாத்திரம் என்ன என்று சீர்தூக்கியவாறும், சரித்திரத்தில் இந்தக் கோணல்மாணலான பாதையை உண்டாக்கி வைத்த நிலைமையைப் பற்றியும் அதனால் ஏற்படப் போகும் நிலைமையைப் பற்றியும் பகுத்தாராய்ந்தவாறும், மாறிவிட்ட நிலைமைக்குத் தகுந்தாற்போல் நமது கோஷங்களையும் கட்சி இயந்திரத்தையும் எப்படி மாற்றுவது என்றெல்லாம் எண்ணமிட்டவாறும் இருந்தேன். இல்

லாமையை அறியாத நான் ரொட்டி பற்றி யாதொரு சிந்தனையும் கொண்டதில்லை. ரொட்டி தானாகவே கிடைத்துக் கொண்டிருப்பது, அது எழுத்தாளன் செய்யும் வேலையின் துணைவிளைவு என்று இருந்து வந்தவன் நான். யாவற்றிற்கும் அடிப்படையான, ரொட்டிக்காக நடக்கும் வர்க்கப் போராட்டம் என்ற விஷயத்தை, மிகச் சிக்கலான, சுற்றுப் பாதைவழியே, அரசியல் பகுப்பாராய்ச்சி மூலமாகச் சிந்தனை அணுகுகிறது.

ஆனால் ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின் இந்தப் பிரதிநிதி—அவன் நல்ல சம்பளம் வாங்குகிற, அறிவாளிகளான தொழிலாளர்களில் ஒருவனாக இருந்தாலுங்கூட — அதிசயிக்கத் தகுந்த எளிமையுடனும் நேர்மையுடனும், மனோதிடத்துடனும், ஆச்சரியப்படத்தக்க தெளிவான பார்வையுடனும் விஷயத்தை நேராக எதிர்கொண்டு சமாளிக்கிறான். நம் போன்ற படிப்பாளிகளுக்கும் இந்த குணத்திறன்களுக்கும் வெகு தூரம், பூமிக்கும் நட்சத்திர மண்டலத்துக்கும் எவ்வளவு தூரமோ, அவ்வளவு தூரம். உலகம் முழுதும் இரண்டு முகாம்களாகப் பிரிந்துள்ளது: உழைப்பாளிகளாகிய ''நாம்'', சுரண்டுவோராகிய ''அவர்கள்''. நடந்தவற்றைக் குறித்து எந்த விதமான திகைப்பும் கிடையாது. உழைப்புக்கும் மூலதனத்துக்கும் இடையே நடந்து வரும் நீண்ட காலப் போராட்டத்தில் ஏற்படுகிற பல சண்டைகளில் அதுவும் ஒன்று. மரம் வெட்டினால் சிராய் சிதறும்.

''புரட்சியின் இந்த 'மிகவும் சிக்கலான நிலைமை' என்ன துன்பகரமாயுள்ளது'' என்றுதான் முதலாளித்துவ படிப்பாளி சிந்திக்கிறான், உணர்கிறான்.

''நாம் 'அவர்களைக்' கொஞ்சம் நெருக்கிக் கசக்கினோம்; முன் போல் 'அவர்கள்' இப்போது முரட்டுத்தனமாக நடந்து கொள்ளத் துணிய மாட்டார்கள். மறுபடியும் நெருக்கிக் கசக்குவோம் — அவர்களை ஒரேயடியாகத் தூக்கியெறிந்து விடுவோம்'' என்றுதான் தொழிலாளி சிந்திக்கிறான், உணர்கிறான்.

* * *

இனி, கடைசியாக, ஆருவது வாதம்: ''பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை மட்டுமின்றி, அத்துடன் புரட்சி முழுவதையும் அப்படியே வெள்ளத்திலடித்துச் செல்லும் படியான எதிர்ப்புச் சக்திகளின் நெருக்குதல் பூராவையும் பாட்டாளி வர்க்கத்தால் எதிர்த்து நிற்க முடியாது''.

கனவான்களே, எங்களைப் பயமுறுத்துப் பார்க்காதீர்கள்; அதில் வெற்றி பெற மாட்டீர்கள். கர்னீலவ் கலகத்தில் (கேரென்ஸ்கி ஆட்சி அதன் தன்மையிலிருந்து எந்த விதத்திலும் மாறுபட்டதல்ல) இந்த எதிர்ப்புச் சக்திகளையும் அவைகளின் நெருக்குதலையும் நாங்கள் கண்டிருக்கிருேம். பாட்டாளி வர்க்கமும் ஏழை விவசாயிகளும் கர்னீலவ் கும்பலை எப்படி துடைத்தெறிந்தார்கள் என்பதை எல்லோரும் பார்த்தார்கள், அதை மக்கள் நினைவில் கொண்டும் இருக்கிருர்கள். முதலாளி வர்க்கத்தினுடைய ஆதரவாளர்களின் நிலைமையும் சரி, புரட்சியை அதிவிசேஷமாக ''எதிர்த்த'', மிகவும் சௌகரிய வாழ்க்கை நடத்தும் சிறு வட்டார நிலச் சொந்தக்காரர்களுடைய ஒரு சில பிரதிநிதிகளின் நிலைமையும் சரி, எவ்வளவு இரங்கத்தக்கதாயிருந்தது, ஆதரவற்றதாயிருந்தது என்பதையும் எல்லோரும் பார்த்தார்கள், அதை மக்கள் நினைவில் கொண்டும் இருக்கிருர்கள். அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும் வரையில் (கலகம் செய்யும் விவசாயிகளுக்கெதிரான ''இராணுவ நடவடிக்கைகளின்'' பாதுகாப்பின்கீழ் இது கூட்டப்படும்!) கேரென்ஸ்கி கும்பலையும் (அதாவது, கர்னீலவ் கும்பலையும்) தெஸெரெத்தேலி-புலீகின் பித்தலாட்ட டூமா சபையையும் ''சகித்துக் கொள்ளுங்கள்'' என்று செப்டம்பர் 30ம் தேதியிட்ட தியேலொ நரோதா தொழிலாளர்களைக் கேட்டுக் கொண்டது. தியேலொ நரோதா மிகுந்த ஆவேசத்துடன் நோவயா ஷீஸ்ன் கூறும் ஆருவது வாதத்தை அப்படியே திரும்பச் சொல்லி, தொண்டை கிழியப் பின்வருமாறு கத்துகிறது: ''கேரென்ஸ்கி அரசாங்கம் எந்தச் சந்தர்ப்பத்திலும் பணியப் போவதில்லை'' (அதாவது, சோவியத்துக்களின் ஆட்சிக்கு, தொழிலாளிகள், விவசாயிகளின் ஆட்சிக்குப் பணியப்

போவதில்லையாம். இனக்கொலை வெறியர்கள், யூத எதிர்ப்பாளர்கள், முடியரசுவாதிகள், காடேட்டுகள் ஆகியோருக்குப் பின்னடைந்துவிட விரும்பாத தியேலொ நரோதா சோவியத்துக்களின் ஆட்சியை, தொழிலாளிகள், விவசாயிகளின் ஆட்சியை, ''திரோத்ஸ்கி-லெனின்'' ஆட்சி என்று அழைக்கிறது; அத்தகைய தந்திரங்களை சோஷலிஸ்டு - புரட்சியாளர்கள் மேற்கொள்ள முற்பட்டு விட்டார்கள்!).

ஆனால் நோவயா ஷீஸ்னே, அல்லது தியேலொ நரோதாவோ வர்க்க உணர்வு கொண்ட தொழிலாளிகளைப் பயமுறுத்திவிட முடியாது. ''கேரென்ஸ்கி அரசாங்கம் எந்தச் சந்தர்ப்பத்திலும் பணியப் போவதில்லை'' என்று நீங்கள் சொல்கிறீர்கள்; அதாவது இன்னும் எளிமையாய், நேரடியாய், தெளிவாய்க் கூறப் போனல், கேரென்ஸ்கி அரசாங்கம் ''கர்னீலவ் கலகத்தைத்'' திரும்பவும் நடத்தப் போகிறது என்கிறீர்கள். தியேலொ நரோதாவைச் சேர்ந்த கனவான்கள் இது ஓர் ''உள்நாட்டுப் போர்'' ஆகுமென்றும், இது ஒரு ''பயங்கரமான சாத்திய நிலை'' என்றும் சொல்லத் துணிந்துள்ளனர்!

இல்லை, கனவான்களே! நீங்கள் தொழிலாளிகளை ஏமாற்றிவிட முடியாது. அது உள்நாட்டு யுத்தமாகாது. ஒரு கர்னீலவ் கும்பலின் நிச்சயமாய்த் தோல்வியடையப் போகிற கலகமாகத்தான் இருக்கும்; அவர்கள் மக்களுக்குப் ''பணிய மறுக்க'' விரும்புவார்களானல், வீபர்க்கில் கர்னீலவ் கும்பலுக்கு நேர்ந்ததை எப்படியாவது விரிந்த அளவில் மீண்டும் நிகழ்த்துமாறு மக்களைத் தூண்டிவிட விரும்புவார்களானல், சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் அதை விரும்புவார்களானல், சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் கட்சியின் உறுப்பினரான கேரென்ஸ்கி அதை விரும்புவாரானல், அவர் மக்களை வெறி கொள்ளும்படி செய்ய முடியும். ஆனல் கனவான்களே, தொழிலாளிகளையும் போர்வீரர்களையும் இதனல் நீங்கள் பயமுறுத்திவிட முடியாது.

என்ன எல்லையற்ற திமிர்! புதிய புலீகின் டூமா சபையைப் பித்தலாட்டமாக உண்டாக்கி வைத்தார்கள்; மோசடி செய்து தங்களுக்கு உதவியாகப் பிற்போக்கான

கூட்டுறவுச் சங்கத்தினரையும் கிராமக் குலாக்குகளையும் கொண்ட ஒரு கும்பலைத் திரட்டிக் கொண்டார்கள்; இந்தக் கும்பலோடு (சொத்துடைமையுள்ள வர்க்கங்கள் என்று சொல்லிக் கொள்ளப்படும்) முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் அணி சேர்த்துக்கொண்டார்கள்; இந்த விதமான கர்னீலவ் கும்பலின் உதவியைக் கொண்டு மக்களின் விருப்பத்தை, தொழிலாளர், விவசாயிகளின் விருப்பத்தை, முறியடிக்க விரும்புகிறார்கள்.

விவசாயிகள் மிகுதியாக வாழும் ஒரு நாட்டில், வெள்ளப் பெருக்கு எடுத்தாற்போல் எங்கு பார்த்தாலும் விவசாயிகளின் கிளர்ச்சி ஏற்பட்டுப் பரவும்படி அவ்வளவு மோசமான நிலைமைக்கு விவகாரங்களை அவர்கள் கொண்டு வந்துவிட்டார்கள்! சற்றே நினைத்துப் பாருங்கள்: மக்கள் தொகையில் 80 சதவிகிதம் விவசாயிகள் கொண்ட ஒரு ஜனநாயகக் குடியரசில் அவர்கள் விவசாயிகளை கிளர்ச்சி செய்யும்படி நிர்ப்பந்தித்திருக்கிறார்கள்.... செர்னோவின் பத்திரிகையும் ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின்'' கட்சிக் குரிய பிரசாரப் பத்திரிகையுமான தியேலோ நரோதா, செப்டம்பர் 30ம் தேதியன்று, ''சகித்துக் கொள்ளுங்கள்'' என்று தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் வெட்கமின்றிப் புத்திமதியளிக்க முன்வந்த இதே தியேலோ நரோதா, செப்டம்பர் 29ம் தேதியன்று ஒரு தலையங்கக் கட்டுரையில் பின்வருமாறு ஒப்புக்கொண்டு தீர வேண்டியிருந்தது:

''குறிப்பாக மத்திய ருஷ்யாவின் நாட்டுப்புறப் பிரதேசங்களில் இன்னும் ஆதிக்கம் செலுத்தும் கொத்தடிமை உறவுமுறைகளை ஒழிப்பதற்கு இதுவரை அனேகமாக ஒன்றும் செய்யப்படவில்லை.''

அதே தியேலோ நாரோதா, அதே செப்டம்பர் 29ம் தேதியத் தலையங்கக் கட்டுரையில், ''புரட்சிகரமான மந்திரிகள்'' கையாளும் செயல்முறைகளில் ''ஸ்தொலீபின் பிடி இன்னும் இருந்து வருவது நன்றாகத் தெரிகிறது'' என்று சொல்கிறது. வேறு வார்த்தைகளில் சொல்வது

என்றால், அதை இன்னும் தெளிவாக, எளிமையாகக் கூறுவதானால், அப்பத்திரிகை கேரென்ஸ்கி, நிக்கீத்தின், கிஷ்கின் கூட்டத்தை ஸ்தொலீபின் குழுவினர் என்றழைக்கிறது.

''ஸ்தொலீபின் குழுவினராகிய'' கேரென்ஸ்கியும் அவன் கூட்டத்தாரும் விவசாயிகளை கிளர்ந்து எழுமாறு நிர்ப்பந்தித்துள்ளனர்; இப்பொழுது விவசாயிகளுக்கெதிராக ''இராணுவ நடவடிக்கைகள்'' எடுத்து வருகின்றனர்; அதே சமயம் அரசியல் நிர்ணய சபையைக்[29] கூட்டப் போவதாகக் கூறி மக்களைத் தேற்ற முயல்கின்றனர் (ஆனால் கேரென்ஸ்கியும் தெஸெரெத்தேலியும் குறித்த தேதியாகிய செப்டம்பர் 17ல் அரசியல் நிர்ணய சபை கூட்டப்படும் என்று ஜூலை 8ல் புனிதமாகப் பிரகடனம் செய்து ஏற்கெனவே ஒரு முறை மக்களை ஏமாற்றிவிட்டு, பிறகு தங்கள் வாக்குறுதியை மீறிவிட்டு, மென்ஷிவிக் டான் கூறிய புத்திமதியைக்கூட மதிக்காமல், அப்போதுள்ள மென்ஷிவிக் மத்திய நிர்வாகக் கமிட்டி விரும்பியபடி அக்டோபர் மாத முடிவுக்குங்கூட அதை ஒத்திப் போடாமல், நவம்பர் மாத முடிவிற்கு ஒத்திப் போட்டனர்). ஏற்கெனவே இதுபோன்ற விஷயத்தில் பொய் பேசியவர்களை என்னவோ மக்கள் நம்பிவிட முடியும் என்பது போலவும், வெகு தொலைவிலேயுள்ள கிராமங்களிலும் இராணுவ நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கிற, அதாவது வர்க்க உணர்வு பெற்ற விவசாயிகள் தான்தோன்றித்தனமாகக் கைது செய்யப்படுவதையும் தேர்தல்களில் பித்தலாட்டம் செய்வதையும் மூடி மறைக்கிற சர்க்காரால், அரசியல் நிர்ணய சபை முறையாகக் கூட்டப்படும் என்று ஏதோ மக்கள் நம்பிவிட முடியும் என்பது போலவும், அரசியல் நிர்ணய சபையை விரைவாகக் கூட்டுகிறோம் என்று கூறி ''ஸ்தொலீபின் குழுவினரான'' கேரென்ஸ்கியும் அவர் கூட்டத்தாரும் மக்களைத் தேற்ற முயல்கின்றனர்.

விவசாயிகளை எழுச்சி கொள்ளுமாறு நிர்ப்பந்திப்பது, பிறகு வெட்கங் கெட்ட முறையில் அவர்களிடம் ''நீங்கள் 'சகித்துக் கொள்ள' வேண்டும், நீங்கள் காத்திருக்க வேண்டும், கிளர்ந்தெழும் விவசாயிகளை 'இராணுவ நட

வடிக்கைகளால்' அடங்கச் செய்து வரும் சர்க்காரை நீங்கள் நம்ப வேண்டும்'' என்று பேசுவது!

சமாதானத்தைப் பற்றி எப்பொழுது பார்த்தாலும் சொற்களை அள்ளி வீசிக்கொண்டு, அதே சமயத்தில் யுத்தத்திலீடுபட்டுள்ள எல்லா நாடுகளுக்கும் நியாயமான சமாதானத்தை முன்வைக்காமல், ஜூன் 19க்குப் பிறகு நடந்த தாக்குதலில் நூறுயிரக் கணக்கான ருஷ்யப் போர்வீரர்கள் மடியும் நிலைமைக்கு விவகாரங்களைக் கொண்டுவந்து விடுவது, போர் நீடிக்கும் நிலைமைக்குக் கொண்டு வந்து விடுவது, ஜெர்மானிய மாலுமிகள் கலகஞ்செய்து தங்கள் அதிகாரிகளைக் கடலில் எறியும் நிலைமைக்குக் கொண்டு வந்துவிடுவது! இருந்த போதிலும் தொழிலாளிகளிடமும் விவசாயிகளிடமும் உயிரை விடும் போர்வீரர்களிடமும் வெட்கங்கெட்ட முறையில் ''நீங்கள் சகித்துக்கொள்ள வேண்டும்'', ''ஸ்தொலீபின் குழுவினரான'' கேரென்ஸ்கி அரசாங்கத்தை நம்ப வேண்டும், கர்னீலவின் ஆட்களான தளகர்த்தர்களை இன்னும் ஒரு மாதத்திற்கு — அந்த ஒரு மாதத்திற்குள் ஒருவேளை இன்னும் ஆயிரக் கணக்கான போர்வீரர்களை மரணப் படு குழிக்கு அவர்கள் அனுப்பி விடுவார்கள் — நம்ப வேண்டும்.... ''நீங்கள் சகித்துக் கொள்ள வேண்டும்'' என்று பேசுவது.

இது வெட்கங்கெட்ட காரியமில்லையா?

இல்லை, சோஷலிஸ்டு - புரட்சியாளர் கனவான்களே, கேரென்ஸ்கியின் கட்சித் தோழர்களே, நீங்கள் போர் வீரர்களை ஏமாற்றிவிட முடியாது!

தொழிலாளிகளும் போர்வீரர்களும் ஒரு நாள் கூட, ஒரு அதிகப்படி மணி நேரம் கூட கேரென்ஸ்கியின் அரசாங்கத்தைச் சகித்துக்கொள்ள மாட்டார்கள். சோவியத் அரசாங்கம் போரிலீடுபட்டுள்ள எல்லா நாடுகளுக்கும் நியாயமான சமாதானத்தை உடனடியாக முன்வைக்கும் என்பதும், அதன் வாயிலாக உடனே போர் நிறுத்தத்தைப் பெற்று விரைவில் சமாதானத்தை நிலைபெறச் செய்வது அதற்கு முற்றிலும் சாத்தியமாகலாம் என்பதும் அவர்களுக்குத் தெரியும்.

ஒரு நாள்கூட, ஓர் அதிகப்படி மணி நேரம்கூட நமது விவசாயப் படையிலுள்ள போர்வீரர்கள் கேரென்ஸ்கி அரசாங்கம்—விவசாயிகள் கிளர்ச்சியை நசுக்குவதற்கு இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிற அந்த அரசாங்கம்—சோவியத்துக்களின் விருப்பத்திற்கு எதிராக அதிகாரத்தில் இருக்க அனுமதிக்க மாட்டார்கள்.

இல்லை, சோஷலிஸ்டு - புரட்சியாளர் கனவான்களே, கேரென்ஸ்கியின் கட்சித் தோழர்களே, நீங்கள் இனிமேல் தொழிலாளிகளையும் விவசாயிகளையும் ஏமாற்றிவிட முடியாது.

* * *

மரண பயம் கொண்டிருக்கும் நோவயா ஷீஸ்ன் எதிர்ப்புச் சக்திகளின் நெருக்குதல் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை வெள்ளத்திலடித்துச் செல்லும் என்று நமக்கு உறுதியாய்க் கூறுகிறது. இந்தப் பிரச்சினையில் தர்க்க ரீதியாகவும், அரசியல் ரீதியாகவும் மற்றொரு விபரீதமான தவறு இருக்கிறது. பயத்தால் மதியிழந்து கிடப்பவர்கள் மட்டுமே அதைக் காணத் தவறுவர்.

''எதிர்ப்புச் சக்திகளின் நெருக்குதல் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை வெள்ளத்திலடித்துச் செல்லும்'' என்று நீங்கள் கூறுகிறீர்கள். மிக நன்று. ஆனால், எனது அருமை நாட்டினரே, நீங்கள் அனைவரும் கற்றவர்கள், பொருளாதார நிபுணர்கள். ஜனநாயகத்தை முதலாளி வர்க்கத்துக்கு எதிர்வைத்துக் கூறுவது பொருளற்றது, அது அறியாமைக்கு அறிகுறி, என்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். அது ராத்தலுக்குக் கெஜங்களை எதிர் வைத்துக் கூறுவது போலாகும். ஏனெனில் ஜனநாயகப் போக்குள்ள முதலாளி வர்க்கமும் உண்டு, (வாந்தேயை[30] ஏற்படுத்திவிட வல்லதான) குட்டிமுதலாளி வர்க்கத்தின் ஜனநாயகப் போக்கற்ற பகுதிகளும் உண்டு.

''எதிர்ப்புச் சக்திகள்'' என்பது வெறுஞ் சொற்றொடர்; அதற்குரிய வர்க்கப் பெயர் (நிலப்பிரபுக்களால் தாங்கி நிறுத்தப்படுகிற) முதலாளி வர்க்கம்.

நிலப்பிரபுக்களோடு கூடிய முதலாளி வர்க்கமும், பாட்டாளி வர்க்கமும், முக்கியமாக விவசாயிகளாயுள்ள சிறு உடைமையாளர்களான குட்டிமுதலாளி வர்க்கமும் என்று ஒவ்வொரு முதலாளித்துவ நாட்டையும் போலவே, ருஷ்யாவும் இந்த மூன்று அடிப்படைச் ''சக்திகளாகப்'' பிரிந்துள்ளது. ஒவ்வொரு முதலாளித்துவ நாட்டிலும் (அதோடு ருஷ்யாவிலும்) நீண்டகாலமாக இருந்துவருவதாகத் தெரிவது இந்த மூன்று அடிப்படைச் சக்திகளே. இவை விஞ்ஞான பூர்வமான பொருளாதாரப் பகுப்பாராய்ச்சியால் மட்டிலும் அன்றி, எல்லாத் தேசங்களின் நவீனகால சரித்திரத்திலுள்ள அரசியல் அனுபவத்தாலும், பதினெட்டாம் நூற்றுண்டு தொடங்கி நடந்துள்ள எல்லா ஐரோப்பியப் புரட்சிகளின் அனுபவத்தாலும், 1905, 1917ம் ஆண்டுகளில் நடந்த இரு ருஷ்யப் புரட்சிகளின் அனுபவத்தாலும் வெளிப்படுத்தப் பட்டுள்ளன.

ஆக, பாட்டாளி வர்க்க அதிகாரத்தை முதலாளி வர்க்கத்தின் நெருக்குதல் வெள்ளத்திலடித்துச் சென்று விடும் என்று சித்தரித்துப் பாட்டாளிகளை நீங்கள் பயமுறுத்துகிறீர்களா? உங்கள் அச்சுறுத்தலுக்கு இந்த ஒரே ஒரு பொருள்தான் உண்டு. வேறு பொருள் கிடையாது.

நல்லது. உதாரணமாக, முதலாளி வர்க்கம் தொழிலாளிகள், விவசாயிகளின் ஆட்சியை வெள்ளத்திலடித்துச் செல்ல முடியுமானல், அவ்வாறு நடைபெறுமல் தடுப்பதற்கான ஒரேயொரு வழி ''கூட்டணி'' தான், அதாவது, முதலாளி வர்க்கத்துக்கும், குட்டிமுதலாளி வர்க்கத்தினருக்கும் இடையே நேச உறவு, ஒப்பந்தம். வேறு எதனையும் கற்பனை செய்து பார்க்க முடியாது!!

ஆனல் கூட்டணியை அரை வருட காலமாகச் சோதனை செய்து பார்த்தாய்விட்டது. அது சீரழிவுக்குக் கொண்டு வந்து விட்டிருக்கிறது. எனது அருமையான, ஆனல் சிந்தனைத்திறனற்ற நோவயா ஷீஸ்ன் மக்களே, அந்தக் கூட்டணியை நீங்களே கைவிட்டு விட்டிருக்கிறீர்கள்.

ஆகவே இதிலிருந்து அறியக் கிடப்பது என்ன?

நோவயா ஷீஸ்ன் மக்களே, நீங்கள் மிகவும் மூளைக் குழப்பமடைந்து விட்டீர்கள். மதியிழந்து போகும் அளவுக்குப் பயத்திற்கு இடங்கொடுத்து விட்டீர்கள். ஐந்து வரை எண்ணுவதிருக்கட்டும், மூன்று வரை எண்ணுவது என்ற மிக அற்பமான விஷயத்தைப் பற்றியும்கூட உங்களால் கோர்வையாகச் சிந்திக்க முடியவில்லை.

ஒன்று: அதிகாரமனைத்தும் முதலாளி வர்க்கத்துக்கே என்பது—வெகு காலமாக இதற்கு ஆதரவு காட்டுவதை நீங்கள் நிறுத்திவிட்டீர்கள். முதலாளி வர்க்கமே அதைப் பற்றிச் சூசகமாகக்கூடப் பேசுவதற்குத் துணியவில்லை. ஏனென்றால் ஏற்கனவே ஏப்ரல் 20—21ம் தேதிகளில் ஒரு முறை தோளைக்குலுக்கி மக்கள் அந்த விதமான அதிகாரத்தைத் தூக்கியெறிந்துவிட்டனர் என்பதையும், இப்பொழுது இன்னும் மூன்று மடங்கு மனவுறுதியுடனும், இரக்கமின்றியும், அதனைத் தூக்கி யெறிவர் என்பதையும் முதலாளி வர்க்கம் அறிந்துள்ளது — அல்லது: குட்டிமுதலாளி வர்க்கத்தினருக்கு அதிகாரம், அதாவது அவர்களுக்கும் முதலாளி வர்க்கத்திற்குமிடையே கூட்டணி (நேச உறவு, ஒப்பந்தம்); ஏனெனில், குட்டிமுதலாளி வர்க்கத்தினர் தன்னந் தனியாக, சுதந்திரமாக அதிகாரத்தை மேற்கொள்ள விரும்புவதுமில்லை; அவ்வாறு மேற்கொள்ளவும் இயலாது. இவ்வுண்மை எல்லாப் புரட்சிகளின் அனுபவத்தாலும் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது, பொருளாதார விஞ்ஞானத்தாலும் மெய்ப்பிக்கப்படுகிறது. ஒரு முதலாளித்துவ நாட்டில் ஒருவன் மூலதனத்தின் சார்பில் நிற்க முடியும், அல்லது உழைப்பின் சார்பில் நிற்க முடியும், ஆனால் இரண்டுக்கும் நடுவே நிற்பது சாத்தியமல்ல, என்று இப் பொருளாதார விஞ்ஞானம் விளக்குகிறது. ருஷ்யாவில் இக் கூட்டணி ஆறு மாத காலம் எத்தனையோ வழிகளையெல்லாம் சோதித்துப் பார்த்தும் தோல்வியடைந்துவிட்டது.

அல்லது, கடைசியாக: முதலாளி வர்க்கத்துக்கு எதிராக, அதன் எதிர்ப்பை முறிப்பதற்காக, அதிகாரமனைத்தும் பாட்டாளி வர்க்கத்துக்கும் ஏழை விவசாயிகளுக்கும் அளிப்பது. இது இன்னும் சோதிக்கப் படவில்லை.

நோவயா ஷீஸ்னேச் சேர்ந்த கனவான்களே, நீங்கள் முதலாளி வர்க்கத்திடம் உங்களுக்கு இருக்கும் பயத்தின் மூலம் மக்களேயும் பயமடையச் செய்ய முயன்று கொண்டு, இந்த வழியை மக்கள் ஏற்றுக்கொள்ளக் கூடாதென்று அவர்கள் மனதைத் திருப்புவதற்குப் பார்க்கிறீர்கள்.

நான்காவது வழியெதுவும் கண்டுபிடிப்பது சாத்தியமில்லே.

ஆகவே நோவயா ஷீஸ்ன் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைக் குறித்துப் பயமடைவதாக இருந்தால், தான் கூறுவது போல், முதலாளி வர்க்கத்தால் பாட்டாளி வர்க்க அதிகாரம் தோற்கடிக்கப்படும் என்ற காரணத்திற்காக அதனே மறுத்துத் தள்ளுவதாக இருந்தால், அது முதலாளிகளுடன் சமரசம் செய்து கொள்ளும் நிலேக்கு மறைமுகமாக மீண்டும் போய்ச் சேருவது என்றுதான் பொருள்படும்!!! எதிர்ப்பைக் கண்டு எவர் அஞ்சுகிருரோ, இந்த எதிர்ப்பை முறித்தெறிய முடியும் என்பதை யார் நம்பவில்லேயோ, ''முதலாளிகளின் எதிர்ப்பைப் பற்றி அஞ்சுங்கள், அதனேச் சமாளிக்க உங்களால் இயலாது'' என்று யார் மக்களே எச்சரிக்கிருரோ, அவர் அதன் மூலம் மீண்டும் முதலாளிகளுடன் சமரசம் செய்துகொள்ள அழைக்கிருர். இது வெட்ட வெளிச்சமான உண்மை.

எல்லாக் குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளும் இப்போது குழப்பமடைந்தது போலவே நோவயா ஷீஸ்னும் மிக இரங்கத்தக்க நிலேயில், படு மோசமாகக் குழப்பமடைந்துள்ளது. கூட்டணி சீரழிந்து விட்டது என்பதை உணர்ந்துள்ள அந்த ஜனநாயகவாதிகள் வெளிப்படையாக அதனே ஆதரிக்கத் துணியவில்லே. அதே நேரத்தில் முதலாளி வர்க்கத்தின் பாதுகாப்பில் இருந்து கொண்டு, பாட்டாளிகளுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் முழு அதிகாரமும் மாற்றப்படுவதைக் குறித்துப் பயமடைகின்றனர்.

* * *

முதலாளிகளின் எதிர்ப்பைக் கண்டு அஞ்சுவது, அதே சமயத்தில் தன்னேப் புரட்சிவாதி என்று சொல்லிக்கொள்

வது, தானும் சோஷலிஸ்டாக மதிக்கப்பட வேண்டும் என்று ஆசை கொள்வது—இது எவ்வளவு மானக்கேடான விஷயம்! சர்வதேச சோஷலிஸம், சந்தர்ப்பவாதத்தால் பீடிக்கப்பட்டு, கொள்கை ரீதியில் எவ்வளவு கீழ்த்தரமான நிலைக்கு வந்திருக்க வேண்டும், இத்தகைய குரல்கள் கிளம்புவது சாத்தியமாவதென்றால்!

முதலாளிகளுடைய எதிர்ப்பின் பலத்தை நாம் ஏற்கெனவே கண்டுள்ளோம், மக்கள் அனைவரும் கண்டிருக்கின்றனர். ஏனெனில், மற்ற எல்லா வர்க்கங்களையும்விட முதலாளிகள் மிகுந்த வர்க்க உணர்வு பெற்றவர்கள், ஆதலால் அவர்கள் சோவியத்துக்களின் முக்கியத்துவத்தை உடனே அறிந்து கொண்டனர், உடனே தங்கள் சக்தியனைத்தையும் திரட்டி, எல்லா வகையாலும் முயன்று, முடிந்ததெல்லாம் பார்த்து, நம்புதற்கே இயலாத பொய்களையும் அவதூறுகளையும் கூறி, இராணுவச் சதிகளைச் செய்து பார்த்தனர். எதற்காக? சோவியத்துக்களைச் செயலறச் செய்வதற்காக; அவைகளை ஒன்றுக்குமாகாமல் செய்து விட; (மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு - புரட்சியாளர்களின் உதவியால்) அவற்றை வேசிநிலைக்குக் கொண்டுவர; அவற்றைப் பேச்சுக் கூடங்களாக மாற்றிவிட; மாதக் கணக்கில் வீண் பேச்சை வளர்த்துக் கொண்டு, புரட்சி பற்றி விளையாடிக்கொண்டு, விவசாயிகளையும் தொழிலாளிகளையும் சோர்வு கொள்ளச் செய்ய.

ஆனால், பாட்டாளிகள், ஏழை விவசாயிகளின் எதிர்ப்பு வன்மையை நாம் இன்னும் காணவில்லை. ஏனெனில் பாட்டாளி வர்க்கத்தின் கையில் அதிகாரம் வந்த பின்புதான் இந்த வன்மை முழு அளவில் வெளியாகும். வறுமையாலும் முதலாளித்துவ அடிமைத்தனத்தாலும் நசுக்கப்பட்டுக் கிடக்கும் கோடிக் கணக்கான மக்கள், அரசாங்க அதிகாரம் ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் கைக்கு வந்துவிட்டதென்பதையும், நிலப்பிரபுக்களையும், முதலாளிகளையும் எதிர்த்துப் போராடுவதற்கு அந்த அதிகாரம் ஏழைகளுக்கு உதவி செய்கிறதென்பதையும், அந்த அதிகாரம் நிலப்பிரபுக்கள், முதலாளிகளின் எதிர்ப்பை முறித்தெறிந்து வரு

கிறதென்பதையும் தங்கள் அனுபவத்தில் கண்டு உணர்ந்து கொண்ட பின்பு தான் இந்த வன்மை முழு அளவில் வெளியாகும். அப்பொழுதுதான் முதலாளிகளின் எதிர்ப்பை ஒடுக்குவதற்கு மக்களிடையே பயன்படுத்தப்படாமல் உள்ளடங்கிக் கிடக்கும் சக்திகள் எவ்வளவு உள்ளன என்பதை நாம் காண்போம்; அப்பொழுதுதான் எங்கெல்ஸ் கூறும் ''உள்ளடங்கியிருக்கும் சோஷலிஸம்'' என்பது வெளிப்படும்; அப்பொழுதுதான், தொழிலாளி வர்க்க ஆட்சி முறையின் வெளிப்படையான அல்லது இரகசியமான பகைவர்களில் ஒவ்வொரு பத்தாயிரம் பேருக்கும் ஈடு கொடுக்குமாறு பத்து லட்சம் புதிய போராட்டக்காரர்கள் சாத்வீக எதிர்ப்பாலோ, அன்றி நேரடிச் செயலாலோ தங்களை வெளிப்படுத்திக் கொள்வதை நாம் காண்போம். இவ்வளவு காலம் வரை அவர்கள் அரசியல் உணர்வின்றி, வறுமையிலும் நிராசையிலும் சாரமற்ற வாழ்வு வாழ்ந்து, தாங்கள் மனிதர்கள் என்பதிலும், வாழ்வதற்குத் தங்களுக்கும் உரிமையுண்டென்பதிலும், மத்தியத்துவம் வாய்ந்த நவீனகால அரசாங்கத்தின் முழு சக்தியும் தங்களுக்காகச் சேவை புரிய முடியும் என்பதிலும், பாட்டாளி வர்க்க மிலீஷியா முழு நம்பிக்கையுடன் அரசாங்கத்தை நிர்வகிப்பதில் உடனடியாக, நேரடியாக, தினந்தோறும் பங்கு கொள்ளுமாறு தங்களையும் அழைக்கும் என்பதிலும் நம்பிக்கை இழந்தவர்களாய் இருந்து வந்திருக்கிறார்கள்.

பிளெஹானவ், பிரெஷ்கோவ்ஸ்கயா, தெஸெரெத்தேலி, செர்னேவ் கூட்டத்தாரின் தயாள மிகுந்த உதவியைக் கொண்டு முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் ஜனநாயகக் குடியரசைக் கறைப்படுத்துவதற்கு, பண மூட்டைகளுக்கு அடிமைத் தொண்டு செய்வதன் மூலம் ஜனநாயகக் குடியரசைக் கறைப்படுத்துவதற்கு, தங்கள் சக்தியால் ஆனது அனைத்தையும் செய்து பார்த்துவிட்டார்கள். பொது மக்கள் அக்கறையின்மைக்கும் அசிரத்தைக்கும் இரையாகும் அளவுக்கு அவர்கள் காரியம் புரிந்திருக்கிறார்கள். மக்களுக்கு எல்லாம் ஒன்றுதான்: பசித்தவன், குடியரசுக்கும் முடியரசுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பார்க்க முடியாது;

பனியில் உறைந்து, காலுக்குச் செருப்பின்றி, களைத்துச் சளைத்துப் போய், அன்னியரின் நலன்களுக்காக உயிர்த்தியாகம் செய்யும் போர்வீரர்கள் குடியரசின் மீது காதல் கொள்ளும் மனோநிலையில் இல்லை.

ஆனால் எப்பொழுது ஒவ்வொரு தேர்ச்சியற்ற தொழிலாளியும், ஒவ்வொரு வேலையற்றவனும், சமையற்காரியும், சீரழிந்த விவசாயியும் பாட்டாளி வர்க்க அரசாங்கம் பணக்காரர்களுக்குக் கைகட்டிச் சேவகம் செய்யாமல் ஏழைகளுக்கு உதவுகிறது என்பதையும், புரட்சி நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள இவ்வரசாங்கம் தயங்குவதில்லை என்பதையும், புல்லுருவிகளிடமிருக்கும் தேவைக்கதிகமாயுள்ள உணவுப் பொருள்களை அது பறிமுதல் செய்து, பசியால் வாடும் மக்களுக்குப் பகிர்ந்தளிக்கிறது என்பதையும், அது வீடற்றவர்களைப் பணக்காரர்களின் வீடுகளில் பலவந்தமாகக் குடிவைக்கிறது என்பதையும், பணக்காரர்களைப் பாலுக்குப் பணம் கொடுக்கும்படி கட்டாயப் படுத்துகிறது என்பதையும், எல்லா ஏழைக் குடும்பங்களிலும் உள்ள குழந்தைகளுக்கும் போதுமான பால் வினியோகமாகும் வரை ஒரு சொட்டுப் பாலும் பணக்காரர்களுக்குக் கொடுப்பதில்லை என்பதையும், நிலம் உழைப்பவர்களுக்கு மாற்றப்படுகிறது என்பதையும், ஆலைகளும் வங்கிகளும் தொழிலாளர் கட்டுப்பாட்டில் வைக்கப்படுகின்றன என்பதையும், தங்கள் செல்வங்களை மறைத்து வைக்கும் கோடீஸ்வரர்களுக்கு உடனடியாகக் கடுந் தண்டனை அளிக்கப்படுகிறது என்பதையும்—பத்திரிகைகள் வாயிலாக இல்லாமல்—கண்கூடாகப் பார்த்தறியும் பொழுது, ஏழைகள் பார்த்து உணரும்பொழுது, முதலாளிகள் அல்லது குலாக்குகளின் எந்தச் சக்தியும், கோடிகோடியாகப் பணத்தைப் போட்டுப் புரட்டிக் கொண்டிருக்கும் உலக நிதி மூலதனத்தின் எந்தச் சக்தியும் மக்கள் புரட்சியைத் தோற்கடித்து அழித்துவிட முடியாது. இதற்கு மாறாக, உலகமெங்கும் மக்கள் புரட்சிதான் வெற்றி கொள்ளும். ஏனெனில் எல்லா நாடுகளிலும் சோஷலிஸ்டு புரட்சி பக்குவமடைந்து வருகிறது.

நமது புரட்சி தன்னைப் பற்றியே பயங் கொள்ளாதிருக்கு மானல், பாட்டாளி வர்க்கத்துக்குப் பூர்ண அதிகாரத்தையும் மாற்றிவிடுமானல், நமது புரட்சியை எவராலும் தோற்கடிக்க முடியாது. நமக்குப் பின்பலமாக அளவிட முடியாத வகையில் பெரிதான, அதிக வளர்ச்சியடைந்த, நிறுவன ரீதியாக நன்கு திரட்டப்பட்டுள்ள உலகப் பாட்டாளி வர்க்கத்தின் சக்திகள் இருக்கின்றன. போரின் காரணமாக அவை தாற்காலிகமாக அடக்கப்பட்டுள்ளன, ஆனல் அழிந்துவிடவில்லை—மாருக, போரால் அவை பன்மடங்கு பெருகியுள்ளன.

* * *

போல்ஷிவிக் அதிகாரத்தை, அதாவது ஏழை விவசாயிகளின் மனப்பூர்வமான ஆதரவை நிச்சயமாகப் பெறக்கூடிய, பாட்டாளி வர்க்கத்தின் அதிகாரத்தை, முதலாளித்துவக் கனவான்கள் ''வெள்ளத்திலடித்துச் செல்வார்கள்'' என்று அஞ்சுவதா! எவ்வளவு குறுகிய பார்வை இது! மக்களைக் கண்டு எவ்வளவு மானக் கேடான அச்சம் கொள்கிருர்கள்! என்ன பாசாங்கு! இந்த அச்சத்தை வெளிக்காட்டுவோர் ''உயர்ந்த'' (முதலாளி வர்க்கத்தால் அப்படிக் கருதப்படுகின்ற, ஆனல் உண்மையில் அழுகிப்போன) ''சமூகத்தைச் சேர்ந்தவர்களாவர். ''நியாயம்'' என்ற சொல்லை அந்தச் சமூகம் நம்பிக்கையின்றி, பழகிப்போன போக்கிலே, வெறும் வார்த்தையளவிலே, அதற்கு அர்த்தம் கொடுக்காமலே, உச்சரிக்கிறது.

இதோ ஓர் எடுத்துக்காட்டு:

திரு. பெஷெகோனவ் பிரபலமான அரைக் காடேட்டு. பிரெஷ்கோவ்ஸ்கயா, பிளெஹானவ் போன்றவர்களின் மனப்போக்குடைய, மிதமிஞ்சிய மிதவாத துருதொவிக்[31]. இவரைப் போல் வேருெருவரைப் பார்க்க முடியாது. முதலாளி வர்க்கத்துக்கு அடிபணிவதில் இவரை மிஞ்சின மந்திரி வேறு யாரும் இருந்ததில்லை. ''கூட்டணியையும்'', முதலாளிகளுடன் சமரசம் செய்து கொள்வதையும் இவரை

விட அதிக ஆர்வத்துடன் ஆதரிக்கும் வேறொருவரை உலகம் ஒருபொழுதும் கண்டதில்லை!

தற்காப்புவாதிகளின் இஸ்வேஸ்தியா என்ற பத்திரிகை வெளியிட்டுள்ளபடி ''ஜனநாயக'' (புலீகினின் என்று இதை வாசிக்க) மகாநாட்டில் தமது பேச்சில் இக்கனவான் கீழ்க் கண்ட விஷயங்களை ஒப்புக்கொண்டு தீரவேண்டியிருந்தது:

''இரண்டு வேலைத்திட்டங்கள் இருக்கின்றன. மக்கள் குழுக்களின் கோரிக்கைகளை, வர்க்க, தேசீயக் கோரிக்கை களைக் கொண்டது ஒன்று. இத்திட்டத்தை மிக வெளிப் படையாக, ஆதரிக்கின்றனர் போல்ஷிவிக்குகள். ஆயினும் ஜனநாயகத்தின் மற்றப் பிரிவினர்கள் இந்த வேலைத் திட்டத்தை எளிதில் தள்ளிவிட முடியாது. ஏனென்முல், உழைப்பாளி மக்களின் கோரிக்கைகள் அவை, ஏமாற்றப் பட்ட, ஒடுக்கப்பட்ட தேசீய இனங்களின் கோரிக்கைகள் அவை. ஆகவே போல்ஷிவிக்குகளுடன் உறவை அறுத்துக் கொள்வது, இந்த வர்க்கக் கோரிக்கைகளை மறுத்து விடு வது, அவ்வளவு எளிதல்ல. இதற்குப் பிரதான காரணம், இக்கோரிக்கைகள் சாராம்சத்தில் நியாயமானவை என்பதே. ஆனல், புரட்சிக்கு முன் நாம் எந்த வேலைத்திட்டத்தைக் கோரிப் போராடினேமோ, அதே வேலைத்திட்டம், எந்த வேலைத்திட்டத்துக்காக நாம் புரட்சியைச் செய்தோமோ, அதே வேலைத்திட்டம், மற்ற சந்தர்ப்பங்களில் நாம் ஏகமன தாக ஆதரிக்கக் கூடிய அதே வேலைத்திட்டம், இன்றைய நிலைமையில் மிகப் பெரிய அபாயமாக அமைந்துள்ளது. இந்த அபாயம் இன்று இன்னும் பெரிதாக இருக்கிறது. ஏனென்முல், அரசாங்கத்தால் ஏற்று நிறைவேற்றச் சாத்தியமற்ற நேரத்தில் இக்கோரிக்கைகளைச் சமர்ப்பிக்க வேண்டியதாயிருக்கிறது. முதலில், நாம் முழுமையை — அரசாங்கத்தை — பாதுகாக்க வேண்டும், அதை அழி விலிருந்து காப்பாற்ற வேண்டும். அவ்வாறு செய்வதற்கு ஒரே வழி என்னவென்முல் எவ்வளவு நியாயமான, தர்க்கக் கட்டுள்ள கோரிக்கைகளாய்த் தோன்றினும் அவற்றை நிறைவேற்றுவதல்ல; அதற்கு மாமுக, எல்லாப் பகுதி யினரிடமிருந்தும் எளிமையும், தியாகமும் வரவேண்டும் இஸ்வேஸ்தியா த்ஸிக், செப்டம்பர் 17 தேதிய இதழ்).

முதலாளிகள் அதிகாரத்தில் இருக்கும் வரை தாம் பாதுகாப்பது முழுமையை அல்ல, ருஷ்ய, ''நேசதேச''

ஏகாதிபத்திய மூலதனத்தின் சுய நலன்களையே என்பதைத் திரு. பெஷெகோனவ் அறியத் தவறி விடுகிறார். முதலாளி களுடன் உறவை முறித்துக் கொண்ட பிறகுதான், அவர் களுடைய இரகசிய உடன்படிக்கைகளுடனும், அவர்களுடைய நாடுபிடிக்கும் நடவடிக்கைகளுடனும், அவர்களுடைய வங்கி, மோசடிகளுடனும், நிதி மோசடிகளுடனும், உறவை முறித்துக் கொண்ட பிறகுதான், இந்தப் போர் நாடு பிடிக்கிற போராக, ஏகாதிபத்தியப் போராக, கொள்ளை யடிக்கிற போராக இருப்பது நிற்கும் என்பதைத் திரு. பெஷெகோனவ் அறியத் தவறுகிறார். இதன் பிறகுதான் — அதிகாரபூர்வமாக, நியாயமான சமாதானப் பிரே ரணையை முன்வைத்து, பகைவர் அதற்கு ஒத்து வராமற் போனால் மட்டிலுமே—இப்போர் பாதுகாப்புப் போராக, நியாயமான போராக ஆகும் என்பதைத் திரு. பெஷெ கோனவ் அறியத் தவறுகிறார். மூலதனம் பூட்டிய நுகத் தடியைத் தூக்கியெறிந்துவிட்டு, விவசாயிகளுக்கு நிலத்தை அளித்து, வங்கிகளையும் பாக்டரிகளையும் தொழிலாளர் கட்டுப்பாட்டில் வைத்துள்ள நாட்டின் பாதுகாப்புச் சக்தி முதலாளித்துவ நாட்டின் பாதுகாப்புச் சக்தியைவிடப் பல மடங்கு அதிகமாயிருக்கும் என்பதைத் திரு. பெஷெகோனவ் அறியத் தவறுகிறார்.

இதில் பிரதான விஷயமென்னவென்றால், போல் ஷிவிஸத்தின் நியாயத்தை ஏற்றுத் தீர வேண்டிய நிர்ப் பந்தத்திலே, அதன் கோரிக்கைகள் ''உழைப்பாளி மக்களின்'', அதாவது பெரும்பாலான மக்களின் கோரிக்கைகளேயாகும் என்று ஏற்றுத் தீர வேண்டிய நிர்ப்பந்தத்திலே, அதன் மூலம் அவர் தமது நிலை முழுவதையும், குட்டிமுதலாளித்துவ ஜனநாயகம் முழுவதின் நிலை முழுவதையும், கைவிடுகிறார் என்பதைத் திரு. பெஷெகோனவ் அறியத் தவறுகிறார்.

இதில்தான் நமது பலம் அடங்கியுள்ளது. அதனால்தான் நமது அரசாங்கம் எவராலும் வெல்ல முடியாததாயிருக் கும். ஏனெனில் நமது எதிரிகளுங்கூட போல்ஷிவிக் வேலைத் திட்டம் ''உழைப்பாளி மக்களின்'' வேலைத்திட்டம், ''ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களின்'' வேலைத்திட்டம்

என்று ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கின்றனர்.

என்ன இருந்தாலும், திரு. பெஷெகோனவ் காடேட்டுகளின் அரசியல் நண்பர், யெதீன்ஸ்த்வோ, தியேலொ நரோதா ஆகியவற்றைச் சேர்ந்த குழுவினரின் அரசியல் நண்பர், பிரெஷ்கோவ்ஸ்கயா, பிளெஹானவ் போன்றவர்களின் அரசியல் நண்பர் ஆவார். குலாக்குகளின் பிரதிநிதி அவர்; கர்னீலவ் துருப்புகளாலோ, கெரென்ஸ்கி துருப்புகளாலோ (இரண்டும் ஒன்றேதான்) போல்ஷிவிக்குகள் தோற்கடிக்கப்படுவார்களேயானல், கொல்லப்படாத போல்ஷிவிக்குகளின் கண்களைத் தங்கள் குடைகளால் குத்திப் பிடுங்க நாளைய தினமே வந்து சேரக் கூடிய, மனைவியரையும் சகோதரிகளையும் பெற்ற, கனவான்களின் பிரதிநிதி அவர்.

அத்தகைய கனவான் போல்ஷிவிக்குகளின் கோரிக்கைகள் ''நியாயமானவை'' என்று ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிருர்.

அவருக்கு ''நியாயம்'' என்பது வெற்றுச் சொல். ஆனல் போரால் சீரழிவுற்று, வதைபட்டு, நொந்து போயுள்ள அரைப் பாட்டாளிகளான மக்கள்திரளுக்கு, நாட்டுப்புற, நகர்ப்புறக் குட்டிமுதலாளி வர்க்கத்தினர்களின் பெரும்பான்மையோருக்கு, அது வெற்றுச் சொல்லல்ல. அவர்களுக்கு, அது பட்டினிச் சாவு பற்றிய, ஒரு ரொட்டித் துணுக்கைப் பற்றிய மிகக் கடுமையான, மிகமிக உடனடியான, மகத்தான பிரச்சினையாகும். அதனல்தான் பட்டினிகிடப்போர், சீரழிந்து போகிறவர்களின் நலன்களுக்கும் சுரண்டுவோர்கள் நலன்களுக்கும் இடையே ''கூட்டணியின்'', ''சமரசத்தின்'' அடிப்படையில் எந்தக் கொள்கையையும் உருவாக்கிக்கொள்ள முடியாது. அதனல்தான் இந்த மக்கள் கூட்டங்களில் மிகப் பெரும்பாலோரின் ஆதரவு போல்ஷிவிக் அரசாங்கத்திற்குக் கிடைப்பது உறுதி செய்யப்பட்டுள்ளது.

படித்தவர்களும் சரி, பொருளாதார பொருள்முதல்வாதத்தின் ''புட்டத்தைச் சிந்தனைக் கண்ணுலே தரிசித்

திருக்கிறேம்'' என்ற உயர்வான அடிப்படையில் தங்களை யும் மார்க்சியவாதிகள் என்று பிரகடனப்படுத்திக் கொள்ள மனங் கொள்ளும் போக்கிரிகளும் சரி, நியாயம் என்பது ஒரு வெற்றுச் சொல் என்று கூறுகிறுர்கள்.

கருத்துக்கள் மக்கள்திரளைக் கவர்ந்துவிடும் பொழுது ஒரு சக்தியாக மாறுகின்றன. குறிப்பாக இந்தச் சமயத்தில் தான் போல்ஷிவிக்குகள், அதாவது புரட்சிகரமான-பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதத்தின் பிரதிநிதிகள், உலகெங்கும் எண்ணற்ற உழைப்பாளி மக்கள்திரளைச் செயலுக்குத் தூண்டிவரும் கருத்தைத் தங்களது கொள் கையிலே உருப்பெறச் செய்துள்ளனர்.

நியாயம் மட்டிலும், சுரண்டலுக்கு எதிராகவுள்ள பொது மக்களின் கோபம் மட்டிலும் அவர்களைச் சரியான சோஷலிஸப் பாதைக்கு ஒருபொழுதும் கொண்டுவந்திருக்க முடியாது. ஆனுல் இப்பொழுது முதலாளித்துவ அமைப்பு முறையின் காரணமாக பெரிய வங்கிகள், சிண்டிக்கேட்டு கள், ரயில்வேக்கள், முதலியவற்றைக் கொண்ட பௌதீக சாதனம் வளர்ந்திருக்கிறது; வளர்ச்சியில் முன்னேறியுள்ள நாடுகளின் பெருத்த அனுபவம் இப்போது மிக அற்புத மான இயந்திரச் சாதனங்களை—அவற்றை உபயோகித்துக் கொள்ள முடியாதபடி முதலாளித்துவம் இடைஞ்சல் செய்து வருகிறது — சேகரித்து வைத்துள்ளது; வர்க்க உணர்வுள்ள தொழிலாளிகள், எல்லா உழைப்பாளிகளின், சுரண்டப்பட்டோரின் ஆதரவுடன், இந்தப் பௌதீகச் சாதனத்தைத் திட்டப்படி கைப்பற்றிக்கொண்டு அதை இயக்கிச் செல்வதற்காக இரண்டரை லட்சம் அங்கத்தினர் களைக் கொண்ட கட்சியை இப்போது ஒன்றுதிரட்டியுள்ளனர். ஆக, இப்பொழுது இந்த நிலைமைகள் எல்லாம் இருக்கிற காரணத்தால், போல்ஷிவிக்குகள் தங்களிடையே பீதிக்கு இடங்கொடுக்காவிட்டால், அவர்கள் அதிகாரத்தை எடுத்துக் கொள்வதில் வெற்றி பெறுவார்களேயானுல், உலக சோஷலிஸ்டுப் புரட்சி வெற்றி பெறும் வரை அவர்கள் அந்த அதிகாரத்தைத் தங்களது கையில் நீடித்து வைத் திருப்பதை உலகில் எந்தச் சக்தியாலும் தடுக்க முடியாது.

## பின்னுரை

முன்னுள்ள வரிகளை ஏற்கெனவே எழுதி முடித்த பிறகு அக்டோபர் முதல் தேதி நோவயா ஷீஸ்ன் மற்றொரு மணியான முட்டாள்தனத்தைத் தலையங்கக் கட்டுரையில் வெளியிட்டிருந்தது. போல்ஷிவிக்குகளிடம் அனுதாபம் காட்டுவது போன்ற வேஷம் தாங்கியும், ''உங்களைத் தூண்டி விடுவதற்கு இடங்கொடாதீர்கள்'' (தூண்டுதலைப் பற்றிய கூக்குரல் என்ற பொறியில் நாம் அகப்பட்டுக் கொள்ளாமல் இருக்கவேண்டும், அதன் நோக்கம் போல்ஷிவிக்குகளைப் பீதியடையச் செய்து அவர்கள் அதிகாரத்தை எடுத்துக் கொள்ளாமலிருக்கும்படி செய்வதுதான்) என்ற மதியூகி போலிப்பண்பாளர் வேஷம் தாங்கியும் வருவதினால் அது இன்னும் ஆபத்தானதாகும்.

அந்த மணி வாசகம் பின்வருமாறு:

''இயக்கம் அளித்துள்ள பாடங்கள், ஜூலை 3-5ன் பாடங்களைப் போன்றவை ஒரு புறமும், கர்னீலோவ் நாட்களின் அனுபவங்கள் மற்றொரு புறமுமாக நமக்கு மிகத் தெளிவாகக் காட்டுவது என்னவெனில் மக்களிடையே மிகுந்த செல்வாக்கையுடைய நிறுவனங்களைத் தன் ஆணையின்கீழ் வைத்துக்கொண்டுள்ள ஜனநாயகம், உள்நாட்டுப் போரில் தற்காப்பு நிலையில் இருக்குமானால் தோற்கடிப்பதற்கு முடியாத வன்மையுடன் விளங்குகிறது; ஆனால் அது தாக்குதலைத் தொடங்கி நடத்த முற்படுமானால், நடுவேயுள்ள, ஊசலாடும் பகுதியினரையெல்லாம் இழந்து தோல்வியடைகிறது.''

இந்த வாதத்தில் வெளியிடப்படும் போலிப்பண்பாளர் முட்டாள்தனத்துக்கு மிகச் சிறிதளவேனும், எந்த உருவி

லாவது போல்ஷிவிக்குகள் இணங்கி விடுவாராயின், அவர்கள் தங்கள் கட்சியையும் புரட்சியையும் அழிவுக்கு ஆளாக்குவார்கள்.

இந்த வாதத்தைக் கூறும் ஆசிரியர் உள்நாட்டுப் போரைப் பற்றிப் பேசும் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொண்டு (எல்லா விதத்திலும் இனிய சுபாவம் படைத்த சீமாட்டிக்கு லாயக்கான விஷயம் இதுதான்) நம்புதற்கு முடியாத வேடிக்கையான விதத்தில் இப்பிரச்சினை பற்றி வரலாறு கற்பிக்கும் பாடங்களைத் திரித்துக் கூறியுள்ளார்.

பாட்டாளி வர்க்கப்-புரட்சியினது நடைமுறை உத்திகளின் பிரதிநிதியும், நிறுவகருமாகிய கார்ல் மார்க்ஸ், இந்தப் பாடங்களை, இந்தப் பிரச்சினை பற்றி வரலாறு கற்பிக்கும் பாடங்களை, பின்வருமாறு தொகுத்துரைத்தார்:

''எழுச்சியும், போரும் மற்ற கலைகளைப் போலவே, ஒரு கலையாகும். அது சிற்சில செயல் முறை விதிகளுக்கு உட்பட்டதாகும். அவ்விதிகளைப் புறக்கணித்தால் அப்படிப் புறக்கணிக்கும் கட்சிக்குச் சீரழிவுதான் ஏற்படும். கட்சிகளின் இயல்பையும், இத்தகைய விஷயத்தில் எதிர்ப்படுகிற நிலைமைகளையும் ஒட்டி எழுகின்ற தர்க்கரீதியான அனுமானங்களாகிய இந்த விதிகள் மிகத் தெளிவாகவும் எளிமையாகவும் இருப்பதனுல் 1848ல் கிடைத்த குறுகிய அனுபவத்தைக் கொண்டு, ஜெர்மானியர்கள் அவற்றை நன்கறிந்துகொண்டார்கள். முதலாவது, முடிவு வரை செல்வதற்கு (நேர்பொருள்: உங்களது விளையாட்டின் விளைவுகளை எதிர்கொள்வதற்கு) திடசித்தம் இல்லாத நிலையில், எழுச்சி விஷயத்தோடு ஒரு பொழுதும் விளையாடாதீர்கள். எழுச்சியானது, நிச்சயமற்ற பரிமாணங்களைக் கொண்ட சமன்பாடாகும்; அந்தப் பரிமாணங்களின் மதிப்பு ஒவ்வொரு நாளும் மாறிக் கொண்டிருக்கக் கூடும். உங்களை எதிர்த்து நிற்கும் சக்திகளிடம் நிறுவனம், கட்டுப்பாடு, வழக்கமாகச் செலுத்தும் செல்வாக்கு முதலிய சகல அனுகூலங்களும் இருக்கின்றன'' (எழுச்சியின் மிகக் ''கடினமான'' உதாரணத்தை மனதிற் கொண்டு மார்க்ஸ் கூறுகிறுர்: அதாவது, ''உறுதியாக நிலைத்துள்ள'' பழைய அதிகாரத்தை

எதிர்த்து, புரட்சியின் செல்வாக்காலும், அரசாங்கத்தின் ஊசலாட்டத்தாலும் இன்னும் உடைந்து சரிந்து போகாமலிருக்கிற சேனையை எதிர்த்துச் செய்யப்படும் எழுச்சி பற்றிக் கூறுகிறார்); ''பகைவர்களுக்கெதிராக மிகுந்த படைபலம் திரட்டாவிட்டால் எழுச்சியாளர்களுக்குத் தோல்வியும் சீரழிவும் நிச்சயமே. இரண்டாவது, எழுச்சியைத் தொடங்கிவிட்ட பிறகு மிகுந்த மனத்திண்மையுடன் செயல் புரிய வேண்டும், மேலேறித் தாக்கியபடியே இருக்க வேண்டும். தற்காப்பில் இருந்து கொள்வது ஒவ்வொரு ஆயுதந்தாங்கிய எழுச்சிக்கும் சாவாகத்தான் முடியும்; எதிரிகளுடன் பலப் பரீட்சை செய்யுமுன்பே அது தோற்றுவிடும். எதிரிகளின் படைகள் சிதறுண்டு வருகையில், எதிர்பாராத விதத்தில் பகைவரைத் தாக்கவேண்டும். தினந்தோறும் புதிய புதிய வெற்றிகளை, அவை சிறியவையாயிருந்தாலும் பரவாயில்லை, ஈட்டிக் கொண்டிருக்க வேண்டும். எழுச்சியில் ஏற்பட்ட முதல் வெற்றியால் கிடைத்த ஊக்கத்தின் ஏற்றத்தை இடைவிடாது காப்பாற்ற வேண்டும். அதிகப் பலம் வாய்ந்தவர்களை எப்பொழுதும் பின்பற்றுகிற, மிகப் பத்திரமான தரப்பு எது என்று எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிற, ஊசலாட்டமுள்ள பகுதியினரை இவ்வாறு உங்கள் பக்கம் இழுத்துத் திரட்டிக் கொள்ள வேண்டும். பகைவர்கள் உங்களுக்கு எதிராகத் தங்களுடைய படை பலத்தைச் சேகரித்துத் திரட்டிக் கொள்வதற்குமுன், அவர்களைப் பின்வாங்கும்படி செய்ய வேண்டும். புரட்சி உத்திகளில் இதுவரை நாமறிந்தவர்களில் தலைசிறந்த நிபுணரான தன்தோன் கூறுவதாவது: துணிச்சல், துணிச்சல், மேலும் மேலும் துணிச்சல்!'' (ஜெர்மனியில் புரட்சியும் எதிர்ப்புரட்சியும், ஜெர்மன் பதிப்பு, 1907, பக்கம் 118).

நோவயா ஷீஸ்னைச் சேர்ந்த ''நாங்களும் மார்க்சியவாதிகளே'' என்போர் தங்களைப் பற்றி இவ்வாறு சொல்லலாம்: ''நாங்கள் அதையெல்லாம் மாற்றிவிட்டோம்; மும்மடங்கு துணிச்சலுக்குப் பதில் எங்களிடம் இரண்டு பண்புகள் உள்ளன: 'இரண்டு பண்புகள் ஐயா, நிதானம்,

கருர்'. உலக வரலாற்றின் அனுபவமும், மகத்தான பிரெஞ்சுப் புரட்சியின் அனுபவமும் 'எங்களுக்கு' ஒரு பொருட்டல்ல. 'எங்களுக்கு' முக்கியமாயிருக்கும் விஷயம் மொல்சாலின் மூக்குக் கண்ணுடியின்[32] மூலம் திரிபுற்றுத் தெரியும் 1917ம் வருடத்து இரண்டு இயக்கங்களின் அனுபவம்தான்.''

இந்த அழகிய மூக்குக் கண்ணுடி இல்லாமல் இவ்வனுபவத்தை நாம் பரிசீலனை செய்து பார்ப்போம்.

ஜூலை 3 - 5 தேதிய நிகழ்ச்சிகளை ''உள்நாட்டுப் போருடன்'' நீங்கள் ஒப்பிடுகின்றீர்கள்; ஏனென்ருல் அலேக்ஸின்ஸ்கி, பெரிவேர்செவ் ஆகியோரையும் அவர்கள் கூட்டத்தாரையும் நீங்கள் நம்பினீர்கள். இத்தகைய மக்களை நம்புவதும் (ஒரு பெரிய தினசரிப் பத்திரிகையின் சாதனம் அனைத்தும் தங்களுக்கிருந்த போதிலும், ஜூலை 3-5 தேதிய நிகழ்ச்சிகளைப் பற்றிய தகவல் சேகரிக்கத் தாங்களாக எதுவுமே செய்யாதிருப்பதும்) நோவயா ஷீஸ்ன் கனவான்களுக்குரிய தனிப்பண்பாகும்.

ஜூலை 3-5 தேதிய நிகழ்ச்சிகள் உள்நாட்டுப் போரின் ஆரம்ப நிலை அல்லவென்றும், போல்ஷிவிக்குகள் தான் அதை ஆரம்ப நிலைக்குள் அடக்கி வைத்திருந்தார்கள் என்றும், உண்மையில் அது உள்நாட்டுப் போரே என்றும் ஒரு விஞடிக்கு வைத்துக் கொள்வோம். அப்படியே வைத்துக் கொண்டு பார்ப்போம்.

அவ்வாருயின், இந்தப் பாடம் எதை மெய்ப்பித்துக் காட்டுகிறது?

முதலாவது, போல்ஷிவிக்குகள் தாக்குதலில் இறங்கவில்லை. ஏனெனில் ஜூலை (3ம் தேதி இரவிலும், ஜூலை 4ம் தேதியிலும் அவர்கள் தாக்குதலில் இறங்கியிருந்தால் பெருமளவிற்கு வெற்றி கண்டிருப்பார்கள் என்பது வாதத்திற்கிடமற்ற விஷயமாகும். உள்நாட்டுப் போர் பற்றி (உண்மை விபரங்கள் காட்டுவது போல, தாளுகத் தோன்றிய வெடிப்பை ஏப்ரல் 20-21ம் தேதியது போன்ற ஆர்ப்பாட்டமாக மாற்றுவதைக் குறித்துப் பேசாமல், நோவயா ஷீஸ்ன் பேசுவது போல) நாம் பேசுவதானுல் போல்ஷிவிக்கு

கள் மேற்கொண்ட தற்காப்பு நிலைதான் அவர்களின் பலவீனமாயிருந்தது.

ஆகவே, நோவயா ஷீஸ்ன் மதியூகிகள் கூறுவது தவறு என்று இந்தப் ''பாடம்'' நிரூபிக்கிறது.

இரண்டாவதாக, ஜூலை 3-4ல் போல்ஷிவிக்குகள் எழுச்சி தொடங்குவதை நோக்கமாகவே கொள்ளவில்லை என்றால், போல்ஷிவிக்குகளின் ஒரு பிரிவுகூட அப்படிப்பட்ட பிரச்சினையைக் கிளப்பவேயில்லையென்றால், அதற்குரிய காரணம் நோவயா ஷீஸ்னுக்கும் நமக்குமுள்ள வாதத்திற்கு அப்பாற்பட்டது. ஏனெனில் நாம் இப்போது ''உள்நாட்டுப் போரின்'', அதாவது எழுச்சியின், பாடங்கள் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கிறோமே தவிர, எழுச்சிக்குப் பெரும்பான்மையானவர்களின் ஆதரவு இல்லையென்பது வெளிப்படையாக இருந்தமையால், புரட்சிக் கட்சி எழுச்சி பற்றிய சிந்தனையில் இறங்காமல் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டதைப்பற்றி அல்ல.

தலைநகரத்திலுள்ள சோவியத்துக்களிலும், நாட்டுப் புறத்திலுள்ள சோவியத்துக்களிலும் (மாஸ்கோவில் 49 சதவீத ஓட்டுகளுக்கு அதிகமாகவே) 1917 ஜூலைக்கு மிகவும் பின்னாலேதான் போல்ஷிவிக்குகள் பெரும்பான்மை ஓட்டு களைப் பெற்றனர் என்பதை ஒவ்வொருவரும் அறிந் துள்ளனர். ஆகவே ''பாடங்கள்'' எல்லா விதத்திலும் இனிய சுபாவம் படைத்த சீமாட்டி நோவயா ஷீஸ்ன் விரும்பு வதற்கு மிகமிக மாறுபட்டவையாகவே இருக்கின்றன என்பது இதிலிருந்து தெரிகிறது.

வேண்டாம், வேண்டாம், நோவயா ஷீஸ்ன் கனவான் களே! நீங்கள் அரசியல் விஷயங்களில் தலையிடாமல் இருப்பதே நல்லது!

புரட்சிகரமான வர்க்கங்களின் முன்னணிப் படைகளி லும், நாட்டிலும் புரட்சிக் கட்சிக்குப் பெரும்பான்மை யோரின் ஆதரவு இல்லையென்றால் எழுச்சியைப் பற்றிய பேச்சுக்கிடமில்லை. தவிரவும் எழுச்சிக்குத் தேவையாயிருப் பன: 1) நாடெங்கும் பரவிய அளவில் புரட்சியின் வளர்ச்சி; 2) தார்மிக மற்றும் அரசியல் விஷயத்தில் பழைய

அரசாங்கத்தின், உதாரணமாக ‘‘கூட்டணி’’ அரசாங்கத்தின், பூர்ணமான சீரழிவு; 3) நடுத்தரப் பகுதியினரின் — அதாவது நேற்றைய தினம் அரசாங்கத்தைப் பூர்ணமாக ஆதரித்துவந்து இன்று முழு ஆதரவு காட்டாமல் இருப்பவர்களின்—முகாமிலே கடுமையான ஊசலாட்டம்.

ஜூலை 3-5 தேதிய நிகழ்ச்சிகளின் ‘‘பாடங்கள்’’ பற்றிப் பேசுகையில் நோவயா ஷீஸ்ன் இந்த மிக முக்கியமான பாடத்தைக் கவனிக்கக்கூடத் தவறிவிட்டது ஏன்? ஏனெனில் ஓர் அரசியல் பிரச்சினையை, அரசியல்வாதிகள் அல்ல, முதலாளி வர்க்கத்தைக் கண்டு பீதியடைந்து நிற்கும் படித்தவர்களின் குழு எடுத்துக் கொண்டது.

மேலே செல்வோம். மூன்றுவதாக, தெஸெரெத்தேலி போன்ற கனவான்கள் தங்களுடைய ஜூலைக் கொள்கையின் மூலமாகத் தங்களை அம்பலப்படுத்திக் கொண்ட காரணத்தால்தான், போல்ஷிவிக்குகளே தங்களுடைய சொந்த முன்னணி வீரர்கள் என்றும், ‘‘சமூக-பிளாக்கிஸ்டுகள்’’ துரோகிகள் என்றும் மக்கள் திரள் கண்டறிந்ததின் காரணத்தால்தான், ஜூலை 3-4 தேதிக்குப் பிறகே சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகள் ஆகியோரின் சீர்குலைவு தொடங்கியது என்று உண்மை விபரங்கள் தெரிவிக்கின்றன. ஏற்கெனவே கர்னீலவ் கலகத்திற்கு முன்பே ஆகஸ்டு 20ல் நடந்த பெத்ரொகிராத் தேர்தலில் இச்சீர்குலைவு பூர்ணமாக மெய்ப்பிக்கப்பட்டது. அதில் போல்ஷிவிக்குகள் வெற்றி கொண்டனர், ‘‘சமூக-பிளாக்கிஸ்டுகள்’’ தோற்றனர் (அண்மையில் தியேலொ நரோதா எல்லாக் கட்சிகளுக்கும் கிடைத்த ஓட்டு விவரங்களை மறைத்துவிட்டு இதனை மறுக்க முயன்றது. ஆனால் இது தன்னையே ஏமாற்றிக்கொள்வதும், தன்னுடைய வாசகர்களை ஏமாற்றுவதுமாகும்; ஆகஸ்டு 24 தேதியிட்ட டேன் என்னும் பத்திரிகையில் கண்ட கணக்கு விவரப்படி நகரில் மட்டும் போட்ட மொத்த ஓட்டுகளில் காடேட்டுகளுக்குக் கிடைத்த பங்கு 22 சதவிகிதம் இருந்தது — 23 சதவீதமாக உயர்ந்தது; ஆனால் அவர்களுக்குக் கிடைத்த மொத்த ஓட்டுகளின் எண்ணிக்கை 40 சதவீதம் குறைந்துவிட்டது. மொத்த ஓட்டு

களில் போல்ஷிவிக்குகளுக்குக் கிடைத்த பங்கு 20 சதவி கிதமாயிருந்தது—33 சதவீதமாக உயர்ந்தது. ஆனுல் அவர் களுக்குக் கிடைத்த மொத்த ஓட்டுகளின் எண்ணிக்கையில் குறைவு 10 சதவீதமே. எல்லா ''நடுத்தரக்காரர்களுக்கும்'' கிடைத்த பங்கு 58 சதவீதமாயிருந்தது—44 சதவீதமாகக் குறைந்துவிட்டது. ஆனுல் அவர்களுக்குக் கிடைத்த மொத்த ஓட்டுகளின் எண்ணிக்கை 60 சதவீதம் குறைந்தது!!).

ஜூலை நாட்களுக்குப் பிறகும், கர்னீலவ் கலகத்துக்கு முன்பும் ஏற்பட்ட சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென் ஷிவிக்குகள் ஆகியோரின் சீர்குலைவு, அவ்விரு கட்சிகளிலும் ''இடது சாரிப்'' பிரிவின் வளர்ச்சியினுலும் மெய்ப்பிக்கப் படுகிறது. இந்தப் பிரிவு கிட்டத்தட்ட 40 சதவீதத்தை எட்டியிருக்கிறது. கேரென்ஸ்கி போன்ற கனவான்கள் போல்ஷிவிக்குகளை அடக்குமுறை வேட்டையாடியதற்கு இது ''பழிக்குப் பழி'' யாகும்.

ஒரு சில நூறு உறுப்பினர்களை ''இழந்துவிட்ட'' போதிலும், ஜூலை 3-4 தேதிய நிகழ்ச்சிகளிலிருந்து பாட் டாளி வர்க்கக் கட்சி பிரம்மாண்டமான அளவுக்கு லாப மடைந்தது. ஏனெனில் இந்தக் கடுமையான நாட்களில் தான் இக்கட்சியின் விசுவாசத்தையும், சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகள் ஆகியோரின் துரோகத் தையும் மக்கள் திரள் பார்த்தறிந்துகொண்டது. ஆகவே, ''பாடம்'' ஒரு சிறிது கூட நோவயா ஷீஸ்ன் கூறுகிற ''பாடம்'' அல்ல, அடியோடு மாறுபட்ட பாடம் அது. அதாவது: கொந்தளித்துக் கொண்டிருக்கும் மக்கள் திரளை ''ஜனநாயகத்தின் மொல்சாலின்களுக்காகக்'' கைவிட்டு விடாதீர்கள்; மேலும், எழுச்சியைத் தொடங்கிவிட்டால், எதிரிப் படைகள் சிதறிக் கிடக்கையில் ஏறித் தாக்குங்கள், எதிர்பாராதிருக்கையில் எதிரியைத் தாக்குங்கள், என்பதே.

''நாங்களும் மார்க்சியவாதிகளே'' என்று சொல்லிக் கொள்ளும் நோவயா ஷீஸ்ன் கனவான்களே, விஷயம் அப்படித்தானே?

அல்லது, ''மார்க்சியம்'' என்பதின் அர்த்தம், எதார்த்த நிலைமையைச் சரியாகத் சீர்தூக்கியறிந்து அதன் அடிப்

படையில் நடைமுறை உத்திகளை வகுப்பது அன்று, ஆனல் மதிகெட்ட ரீதியிலே, ஆய்ந்து பாராமல் ''அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும் அதே காலத்தில் சோவியத்துக் களின் மகாநாடு'' என்பதோடு ''உள்நாட்டுப் போர்'' என்பதையும் போட்டுக் குழப்புவது தானு?

கனவான்களே! இது வெறும் கேலிக் கூத்தாகும். இது மார்க்சியத்தையும், பொதுவாகத் தர்க்கவியலையும் நையாண்டி செய்வதாக இருக்கின்றது!

''உள்நாட்டுப் போர்'' என்ற அளவிற்கு வர்க்கப் போராட்டத்தைத் தீவிரப்படுத்துவதற்கு எதார்த்த நிலைமையிலே காரணம் எதுவும் கிடையாது என்ருல், ''சோவியத்துக்களின் மகாநாடு, அரசியல் நிர்ணய சபை ஆகியவை'' சம்பந்தமாக, நீங்கள் ஏன் ''உள்நாட்டுப் போரைப்'' பற்றிப் பேச வேண்டும்? (நாம் இப்போது பரிசீலித்துக் கொண்டிருக்கும் நோவயா ஷீஸ்ன் தலையங்கக் கட்டுரையின் தலைப்பு இதுதான்.) அப்படிப் பேசுவதானல், எதார்த்த நிலைமையிலே உள்நாட்டுப் போருக்குரிய அடிப்படை ஒன்றும் இல்லை. ஆகவே சோவியத்துக்களின் மகாநாடு, அரசியல் நிர்ணய சபை போன்ற அமைதியான, அரசியல் சட்டத்துக்கு உட்பட்ட, சட்டம், நாடாளுமன்ற நடவடிக்கை ஆகியவற்றின் கோணத்திலிருந்து பார்க்கும்போது ''சாதாரணமானவையாகத்'' தோன்றுகிற விஷயங்களையே நடைமுறை உத்திகளுக்கு அச்சாணியாக வைத்துக் கொள்ள முடியும், வைத்துக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் தெளிவாக வாசகருக்குத் தெரிவித்து அதை நிருபித்திருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் அப்படிப்பட்ட மகாநாடும், அப்படிப்பட்ட சபையும் உண்மையில் தீர்மானித்து முடிவு கட்டுவதற்குச் சக்தியுள்ளவை தான் என்று அபிப்பிராயம் கொள்வது சாத்தியமே.

ஆனல், இப்பொழுதுள்ள எதார்த்த நிலைமையில் உள்நாட்டுப் போர் தவிர்க்க முடியாதது, அல்லது அநேகமாய் ஏற்படலாம் என்றிருக்குமாயின், நீங்கள் அதைப் பற்றி ''வீணுய்ப்'' பேசவில்லையென்ருல், உள்நாட்டுப் போருக்கான ஒரு நிலைமை இருப்பதைத் தெளிவாகப் பார்த்து,

உணர்ந்து, அறிந்துதான் பேசியிருக்கிறீர்கள் என்ருல், சோவியத்துக்களின் மகாநாட்டையோ, அல்லது அரசியல் நிர்ணய சபையையோ எவ்வாறு நீங்கள் அச்சாணியாக வைத்துக்கொள்ள முடிந்தது?? பசியால் வாடிக் கொண்டிருக்கும், வதைபட்டுக் கொண்டிருக்கும் மக்கள்திரளை ஏளனம் செய்வதாகும் இது! இரண்டு மாத காலம் ''காத்திருக்கப்'' பட்டினியால் தவிக்கும் மக்கள் சம்மதிப்பார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அல்லது எந்தப் பொருளாதாரச் சீரழிவு அதிகரித்து வருவதாக நீங்களே நாள் தவருமல் எழுதியவாறு இருக்கிறீர்களோ, அந்தப் பொருளாதாரச் சீரழிவு சோவியத்துக்களின் மகாநாட்டுக்காக அல்லது அரசியல் நிர்ணய சபைக்காகக் ''காத்திருக்கச்'' சம்மதிக்குமோ? அல்லது சமாதானத்துக்காகக் காரியப் பற்றுள்ள நடவடிக்கைகளை நாம் எடுக்காமல் விட்ட நிலையிலே (போரில் ஈடுபட்டுள்ள எல்லா நாடுகளுக்கும் நியாயமான சமாதானம் பற்றிய அதிகாரபூர்வமான பிரேரணை வழங்காத நிலையிலே) ஜெர்மானியத் தாக்குதல் சோவியத்துக்களின் மகாநாட்டுக்கும் அரசியல் நிர்ணய சபைக்கும் ''காத்திருக்கச்'' சம்மதிக்குமா? அல்லது, பிப்ரவரி 28லிருந்து செப்டம்பர் 30 வரை மிகுந்த கொந்தளிப்போடும் என்றும் காணுத வேகத்தோடும் நடந்து முன்னேறிய ருஷ்யப் புரட்சியின் வரலாறு அக்டோபர் முதல் தேதியிலிருந்து நவம்பர் 29 வரை[33] அதி நிம்மதியான, அமைதியான, சட்டபூர்வமான நடை போட்டுச் செல்லும் என்றும், வெடிப்புகள், திடீர்ப் பாய்ச்சல்கள், ராணுவத் தோல்விகள், பொருளாதார நெருக்கடிகள் அனைத்தையும் அது தவிர்க்கும் என்றும் நீங்கள் முடிவு கட்டுவதற்கு இடந்தரக் கூடிய உண்மை விபரங்கள் உங்களிடம் இருக்கின்றனவா? அல்லது, போல்ஷிவிக் கட்சியைச் சேராத துபாஸவ் என்ற அதிகாரி போர்முனையிலுள்ள ராணுவத்தின் சார்பாக அது ''சண்டை செய்யாது'' என்று அதிகாரபூர்வமாகத் தெரிவித்திருக்கிற போர்முனையிலுள்ள அந்தச் சேனை, ''குறித்த'' நாள் வரை, பட்டினியாக, குளிரில் உறைந்தபடி பொறுமையுடன் கிடக்குமா? அல்லது, நீங்கள்

விவசாயிகளின் எழுச்சியை ''அராஜகம்'' என்றும் ''இனக் கொலை'' என்றும் சொல்லி விட்டபடியாலோ, விவசாயிகளுக்கு எதிராக கேரென்ஸ்கி ''ராணுவப்'' படைகளை அனுப்பி வைப்பார் என்பதனாலோ, அது உள்நாட்டுப் போரின் ஓர் அம்சமாக இருந்து வருவது நிற்குமா? அல்லது, விவசாயிகள் மிகுந்துள்ள ஒரு நாட்டில் விவசாயிகளின் எழுச்சியை நசுக்கி வரும் அதே அரசாங்கம் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதற்கு அமைதியாக, நேர்மையாக, பாசாங்கு இல்லாமல் வேலை செய்ய முடியும் என்பது சாத்தியமா? நினைக்கத்தான் முடியுமா?

கனவான்களே, ''ஸ்மோல்னி கழகத்தில்[34] நேர்ந்த குழப்பத்தைக்'' கண்டு சிரிக்க வேண்டாம்! உங்கள் அணிகளிலும் குழப்பத்திற்குக் குறைவில்லை. உள்நாட்டுப் போர் கிளத்துகிற பயமுறுத்தும் கேள்விகளுக்கு நீங்கள் குழப்பம் மிகுந்த சொற்களைக் கொண்டும், இரங்கத்தக்க அரசியல் சட்டப் பிரமைகளைக் கொண்டும் விடையளிக்கிறீர்கள். அதனால்தான், போல்ஷிவிக்குகள் இவ்விதமான மனோ நிலைகளுக்கு இடங்கொடுப்பார்களானால், அவர்கள் தங்கள் கட்சியையும் தங்கள் புரட்சியையும் அழிப்பார்கள் என்று சொல்கிறேன்.

அக்டோபர் 1, 1917

நி. லெனின்

1917ல், செப்டம்பர் முடிவு—
அக்டோபர் 1(14)ல்
எழுதப்பட்டது

1917, அக்டோபரில்
புரோஸ்வெஷேனியே சஞ்சிகையில்,
எண் 1-2ல் வெளியிடப்பட்டது

நூல் திரட்டு,
தொகுதி 34,
பக்கங்கள் 287-339

# சோவியத் அரசாங்கத்தின் உடனடிப் பணிகள்[35]

## ருஷ்யாவின் சோவியத் குடியரசினது சர்வதேச நிலைமையும் சோஷலிசப் புரட்சியின் அடிப்படைப் பணிகளும்

அடையப் பெற்றிருக்கும் சமாதானம்[36] அளவுமீறிய கடுஞ் சுமையை இருத்துவதாகவும் அளவுமீறி நிலையற்றதாகவும் இருப்பினும், இந்தச் சமாதானத்தின் விளைவாய் ருஷ்யாவின் சோவியத் குடியரசு சிறிது காலத்துக்கு அதன் முயற்சிகளை சோஷலிசப் புரட்சியின் மிகவும் முக்கியமான, மிகவும் கடினமான பணியில், அதாவது ஒழுங்கமைத்திடும் பணியில் ஒருங்கிணைத்து ஈடுபடுத்துவதற்கான வாய்ப்பினைப் பெற்றுக் கொண்டுள்ளது.

மாஸ்கோவில் 1918 மார்ச் 15ல் நடைபெற்ற சோவியத்துகளின் சிறப்புக் காங்கிரசால் ஏற்கப்பட்ட தீர்மானத்தின் நான்காவது பாராவில் (பிரிவு 4), உழைப்பாளி மக்களது சுயகட்டுப்பாட்டைப் பற்றியும் குழப்பத்தையும் சீர்குலைவையும் எதிர்த்து ஈவிரக்கமின்றி நடத்தப்பட வேண்டிய போராட்டத்தைப் பற்றியும் கூறும் அந்தப் பாராவில் (அல்லது பிரிவில்), இந்தப் பணியானது உழைப்போரும் ஒடுக்கப்படுவோருமாகிய மக்கள் எல்லார்க்கும் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் வகுத்தளிக்கப்பட்டது.

ருஷ்யாவின் சோவியத் குடியரசு பெற்றிருக்கும் இந்தச் சமாதானம் நிலையற்றதாக இருப்பதற்கு, இராணுவ நடவடிக்கைகளைத் திரும்பவும் மேற்கொள்ள இக்குடியரசு தற்போது நினைக்கிறது என்பதல்ல காரணம், இல்லவே இல்லை — முதலாளித்துவ எதிர்ப்புரட்சிக்காரர்களையும் அவர்களது அடிவருடிகளையும் (மென்ஷிவிக்குகளையும் ஏனையோரையும்) தவிர்த்து, புத்தி சுவாதீனமுள்ள எந்த அரசியல்வாதியும் இப்படிச் செய்ய நினைக்கவில்லை. பிரம்

மாண்ட இராணுவப் படைகளைத் தம் கையில் வைத்துக் கொண்டு ருஷ்யாவின் எல்லைகளை ஒட்டி மேற்கிலும் கிழக்கிலும் இருந்து வரும் ஏகாதிபத்திய அரசுகளில் இராணுவக் கட்சியானது, ருஷ்யாவின் சொற்ப நேரப் பல வீனத்தைக் கண்டு மயங்கி மதியிழந்தும், சோஷலிசத்தை வெறுப்போரும் கொள்ளையடிப்பதில் ஆவல் கொண்டோரு மான முதலாளிகளால் தூண்டிவிடப்பட்டும், எத்தருணத் திலும் ஆதிக்க நிலை பெற்றுவிடக் கூடுமென்பதுதான் இந்தச் சமாதானத்தின் நிலையின்மைக்குக் காரணமாகும்.

இந்நிலைமைகளில் சமாதானத்துக்கு நமக்குள்ள மெய் யான—காகிதத்திலானதல்ல—ஒரே உத்தரவாதம், ஏகாதி பத்திய அரசுகளிடையிலான பகைமையேதான். இந்தப் பகைமை மிதமிஞ்சிய வரம்புகளை எட்டியுள்ளது; ஒரு புறத்தில் மேற்கில் பன்னூட்டு மக்களும் கொன்று குவிக்கப் படும் ஏகாதிபத்தியக் கொலைத்தாண்டவம் திரும்பவும் துவக்கப்பட்டிருப்பதிலும், மறு புறத்தில் பசிபிக் மாகட லிலும் பசிபிக் கரையிலும் ஜப்பானுக்கும் அமெரிக்கா வுக்குமிடையே மேலாதிக்கத்துக்கான ஏகாதிபத்தியப் போட்டாபோட்டி மிதமிஞ்சி கடுமையாகியிருப்பதிலும் இந்தப் பகைமை தெளிவாகவே புலப்படுகிறது.

பாதுகாப்புக்கு நம்பகமில்லாத இத்தகைய காப்பு அரணைக் கொண்டுள்ள நமது சோவியத் சோஷலிசக் குடியரசு மிதமிஞ்சிய அளவுக்கு நிலையற்றதும், நிச்சய மாகவே நெருக்கடியானதுமான சர்வதேச நிலையில் இருக் கிறது என்பது கூறாமலே விளங்குவதாகும். சூழ்நிலைமை களின் இணைப்பினால் நமக்கு வரப் பெற்றிருக்கும் இந்த இடைநேர அமைதியினைப் பயன்படுத்திக் கொண்டு, யுத்தத் தால் ருஷ்யாவின் சமுதாய உயிரமைப்பு அனைத்துக்கும் ஏற்பட்டுள்ள மிகக் கடுங் காயங்களை ஆற்றிக் கொள் வதற்கும், பொருளாதாரத்தைப் புத்துயிர் பெறச் செய் வதற்கும் நாம் எல்லா முயற்சிகளையும் முழு அளவுக்கும் எடுத்தாக வேண்டும். பொருளாதாரத்தைப் புத்துயிர் பெறச் செய்யாமல் நமது நாட்டின் தற்காப்பு ஆற்றலில் மெய்யான அதிகரிப்பு ஏற்படுவது சிந்திக்கவே முடியாதது.

மேற்கில் சோஷலிசப் புரட்சியானது மிகப் பல காரணங்களால் தாமதப்படுத்தப்பட்டு விட்டது. நம்மை எதிர் நோக்கும் ஒழுங்கமைப்புப் பணியினை எந்த அளவுக்கு நாம் நிறைவேற்றுகிறோமோ, அந்த அளவுக்குத்தான் மேற்கில் சோஷலிசப் புரட்சிக்கு நாம் பயனுள்ள உதவி அளிக்கக் கூடியோராய் இருக்க முடியும் என்பதும் கூறாமலே விளங்குவதாகும்.

நம்மை எதிர்நோக்கும் முதற்பெரும் பணியாகிய இந்த ஒழுங்கமைப்புப் பணி வெற்றிகரமாய் நிறைவேற்றப்படுவதற்கு அடிப்படையான ஒரு நிபந்தனை என்னவெனில், மக்களின் அரசியல் தலைவர்களும், அதாவது ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) உறுப்பினர்களும், அவர்களைத் தொடர்ந்து உழைப்பாளிப் பெருந்திரள் மக்களது வர்க்க உணர்வு படைத்த பிரதிநிதிகள் எல்லாரும் இத்துறையில் முந்தைய முதலாளித்துவப் புரட்சிகளுக்கும் தற்போதைய சோஷலிசப் புரட்சிக்குமுள்ள அடிநிலை வேறுபாட்டை முழு அளவுக்கு உணர்ந்து கொண்டாக வேண்டும்.

முதலாளித்துவப் புரட்சிகளில் பெருந்திரளான உழைப்பாளி மக்களது தலையாய பணி, பிரபுத்துவத்தையும் முடியரசையும் மத்தியகால நிலைமைகளையும் ஒழித்திடுவதென்ற எதிர்நிலையான அல்லது அழித்தல் வழிப்பட்ட வேலையை நிறைவேற்றுவதாகவே இருந்தது. புதிய சமுதாயத்தை ஒழுங்கமைத்திடுவதென்ற நேர்நிலையான அல்லது ஆக்க வழிப்பட்ட வேலையானது மக்களில் சொத்துடைத்த முதலாளித்துவச் சிறுபான்மையோரால் செய்து முடிக்கப் பெற்றது. தொழிலாளர்கள், ஏழை விவசாயிகளின் எதிர்ப்பை மீறி இந்தச் சிறுபான்மையோர் இப்பணியை ஒப்பளவுக்கு எளிதாகவே செய்து முடித்தனர்; மூலதனத்தால் சுரண்டப்பட்ட மக்கள் சிதறுண்டும் கல்வியறிவில்லாதோராகவும் இருந்ததால் அந்தக் காலத்தில் இவர்களது எதிர்ப்பு மிதமிஞ்சி பலவீனமாயிருந்தது மட்டுமல்ல இதற்குக் காரணம், தன்னியல்பாய் வளர்ந்து விரிவடையும் தேச, சர்வதேசச் சந்தையே அராஜக முறையில் அமைந்த

முதலாளித்துவ சமுதாயத்தின் பிரதான ஒழுங்கமைப்பு சக்தி என்பதும் இதற்குக் காரணம்.

ஆனால் ஒவ்வொரு சோஷலிசப் புரட்சியிலும்—ஆகவே ருஷ்யாவில் 1917 அக்டோபர் 25ல் நாம் ஆரம்பித்த சோஷலிசப் புரட்சியிலும்—திட்டமிட்ட பொருளுற்பத்திக்கும் கோடிக் கணக்கான மக்களது வாழ்வுக்குத் தேவையான பண்டங்களின் விநியோகத்துக்கும் விரிந்து செல்லும் படியான புதிய ஒழுங்கமைப்பு உறவுமுறைகளுக்குரிய அளவுகடந்த சிக்கலும் நுண்ணயமும் வாய்ந்த அமைப்பினை நிறுவும் நேர்நிலையான அல்லது ஆக்க வழிப்பட்ட வேலைதான் பாட்டாளி வர்க்கத்துக்கும் அது தலைமை தாங்கும் ஏழை விவசாயிகளுக்குமான தலையாய பணியாய் இருக்கிறது. மக்களில் பெருவாரியானேரும், யாவருக்கும் முதலாய் உழைப்பாளி மக்களில் பெருவாரியானேரும், வரலாற்றின் படைப்பாளர்களாய் சுயேச்சையான ஆக்க வேலையில் ஈடுபடும் போது மட்டும்தான் இத்தகைய ஒரு புரட்சி வெற்றிகரமாக நடத்தப்பட முடியும். பாட்டாளி வர்க்கத்தினரும் ஏழை விவசாயிகளும் போதிய அளவில் வர்க்க உணர்வும், கோட்பாட்டில் பற்றுறுதியும், தன்னலங் கருதாத் தியாக உணர்ச்சியும், விடாமுயற்சியும் வெளிப்படுத்தும் போது மட்டும்தான் சோஷலிசப் புரட்சியின் வெற்றி திண்ணமாக முடியும். உழைப்போரும் ஒடுக்கப்படுவோருமான மக்கள் புதிய சமுதாயத்தைக் கட்டியமைத்திடும் சுயேச்சைப் பணியில் செயல் முனைப்போடு பங்கு கொள்வதற்கு வாய்ப்பு அளித்திடும் சோவியத் வடிவிலான ஒரு புது வகை அரசை உருவாக்கியதன் மூலம் நாம் இந்தக் கடினமான பிரச்சினையில் ஒரு சிறு பகுதிக்கு மட்டுமே தீர்வு கண்டுள்ளோம். பிரதான இன்னல் பொருளாதாரத் துறையில் அடங்கியிருக்கிறது, அதாவது பண்டங்களது உற்பத்தியிலும் விநியோகத்திலும் மிகவும் கண்டிப்பான, சர்வ வியாபகமான கணக்குப் பதிவையும் கண்காணிப்பையும் புகுத்தி, உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்துவதிலும்

பொருளுற்பத்தியை நடைமுறையில் சமூகமயமாக்குவதிலும் அடங்கியிருக்கிறது.

---

ருஷ்யாவில் இன்று ஆளும் கட்சியாய் இருக்கும் போல்ஷிவிக் கட்சியின் வளர்ச்சியானது, வரலாற்றில் தற்போது நாம் வந்தடைந்திருக்கும் திருப்பத்தின் தன்மையைப் பளிச்செனப் புலப்படுத்திக் காட்டுகிறது. இந்தத் திருப்பம் தான் தற்போதைய அரசியல் நிலைமையின் தனி இயல்பாகும், இதுதான் சோவியத் ஆட்சியதிகாரத்தின் புதிய திசையமைவினை, அதாவது புதிய பணிகள் புதிய முறையில் முன்வைக்கப்படுவதை அவசியமாக்குகிறது.

வருங்காலக் கட்சி ஒவ்வொன்றும் தனது வேலைத்திட்டமும் போர்த்தந்திரமும் பிழையற்றவை என்பதை பெரும்பாலான மக்களுக்கு ஐயமற உணர்த்திடுவதுதான் அக்கட்சிக்குரிய முதலாவது பணியாகும். இந்தப் பணிதான் ஜார் காலத்திலும், மற்றும் செர்னேவ்களும் தெஸெரெத்தேலிகளும் கேரென்ஸ்கிகள் குறித்தும் கிஷ்கின்கள் குறித்தும் கடைப்பிடித்த சமரசவாதக் கொள்கையின் காலத்திலும், முன்னணியில் நின்றது. இப்போது இந்தப் பணி பிரதானமாய் நிறைவேற்றப் பட்டுவிட்டது, ஏனெனில் அண்மையில் கூடிய சோவியத்துகளின் காங்கிரஸ் யாரும் மறுக்க முடியாதபடி நிரூபித்துக் காட்டியது போல, ருஷ்யாவின் தொழிலாளர்களிலும் விவசாயிகளிலும் பெரும்பான்மையோர் மிகவும் தெளிவாகவே போல்ஷிவிக்குகள் தரப்பிலே இருக்கிறார்கள். ஆயினும் இப்பணி எவ்வகையிலும் பூரணமாய் நிறைவேற்றப்பட்டுவிடவில்லை என்பது மெய்தான் (எக்காலத்திலும் இது பூரணமாய் நிறைவேற்றப்படுதல் சாத்தியமன்று).

அரசியல் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுவதும் சுரண்டுவோரது எதிர்ப்பை நசுக்குவதும் தான் நமது கட்சியை எதிர்நோக்கிய இரண்டாவது பணி. இந்தப் பணியும் எவ்வகையிலும் பூரணமாய் நிறைவேற்றப்பட்டு விடவில்லை, இது கவனியாது புறக்கணிக்கப்பட முடியாத ஒன்று. ஏனெ

னில் ஒரு புறத்தில் முடியரசுவாதிகளும் காடேட்டுகளும், மறு புறத்தில் இவர்களது கூட்டாளிகளும் அடிவருடிகளுமான மென்ஷிவிக்குகளும் வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் சோவியத் ஆட்சியதிகாரத்தைக் கவிழ்க்கும் பொருட்டு ஒன்றுபடுவதற்காக தொடர்ந்து முயன்று வருகிறார்கள். ஆயினும் சுரண்டுவோரது எதிர்ப்பை நசுக்குவதென்னும் பணி, 1917 அக்டோபர் 25க்கும் (குத்துமதிப்பாய்) 1918 பிப்ரவரிக்கும், அல்லது பொகயேவ்ஸ்கி சரணடைந்ததற்கும் இடைப்பட்ட காலத்தில் பிரதானமாய் நிறைவேற்றி முடிக்கப் பெற்றுள்ளது.

இப்போது மூன்றாவது பணி ஒன்று, அதாவது ருஷ்யாவின் நிர்வாகத்தை ஒழுங்கமைத்திடும் பணி, உடனடிப் பணியாக முன்னிலைக்கு வந்து கொண்டிருக்கிறது. தற்போதைய நிலைமையின் தனி இயல்பாய் அமைந்திடும் ஒரு பணி இது. 1917 அக்டோபர் 25ஆம் நாளுக்கு மறுதினமே நாம் இந்தப் பணியை முன்வைத்து இதைச் சமாளிக்க முற்பட்டது மெய்தான். ஆனால் இதுகாறும் சுரண்டுவோரது எதிர்ப்பு பகிரங்க உள்நாட்டுப் போரின் வடிவை ஏற்று வந்ததால், இந்த நிர்வாகப் பணி இதுவரை பிரதானமான, மையமான பணி ஆக முடியவில்லை.

இப்போது இது பிரதானமான, மையமான பணி ஆகியுள்ளது. போல்ஷிவிக் கட்சியினரான நாம் ருஷ்யாவை ஐயமற உணரச் செய்துவிட்டோம். ருஷ்யாவை நாம் செல்வந்தர்களிடமிருந்து ஏழைகளுக்காக, சுரண்டுவோரிடமிருந்து உழைப்பாளி மக்களுக்காக வென்று கொண்டு விட்டோம். இப்போது நாம் ருஷ்யாவை நிர்வகித்தாக வேண்டும். மக்களை ஐயமற உணரச் செய்தல், சுரண்டுவோரை ஆயுத பலங் கொண்டு நசுக்குதல் என்கிற தலையாய பணியிலிருந்து நிர்வாகம் என்கிற தலையாய பணிக்கு மாறிச் செல்லுதலின் பிரத்தியேக இயல்புகளைப் புரிந்து கொள்வதில்தான் தற்போதைய சூழ்நிலையின் தனித்தன்மை அனைத்தும், இன்னல் அனைத்தும் அடங்கியுள்ளது.

மனித வரலாற்றிலே முதன்முதலாய் ஒரு சோஷலிஸ்டுக் கட்சி ஆட்சியதிகாரத்தை வெற்றி கொள்வதும் சுரண்டு

வோரை நசுக்குவதுமாகிய பணியினைப் பிரதானமாய் நிறைவேற்றி முடித்துவிட்டு, நிர்வாகம் எனும் பணியினை நேரடியாக அணுக முற்பட்டிருக்கிறது. சோஷலிசப் புரட்சியின் இந்த மெத்தக் கடினமான (அதேபோது மாண்பு மிக்கதான) பணியினை நாம் சிறப்புடன் நிறைவேற்றி முடிப்பவர்கள் என்பதை நிரூபித்துக் காட்ட வேண்டும். வெற்றிகரமாய் நிர்வகிக்கும் பொருட்டு நாம் மக்களுக்கு ஐயமற உணர்த்த வல்லோராய் இருப்பதோடு அன்னியில், உள்நாட்டுப் போரில் வெற்றி பெற வல்லோராய் இருப்பதோடு அன்னியில், நடைமுறை ஒழுங்கமைப்பு வேலையைச் செய்ய வல்லோராயும் இருக்க வேண்டுமென்பதை நாம் பூரணமாய் உணர்ந்து கொண்டாக வேண்டும். இது மிகமிகக் கடினமான பணி, ஏனெனில் கோடானுகோடியான மக்களது வாழ்க்கையின் மிகமிக ஆழமாய் வேர்விட்டுப் பதிந்துள்ள அடிப்படைகளை, பொருளாதார அடிப்படைகளை ஒரு புதிய வழியில் ஒழுங்கமைத்திடும் பணி இது. அதேபோது இது மாண்புமிக்கதோர் பணி, ஏனெனில் இந்தப் பணி (முதன்மையான, பிரதான உருவரைகளில்) நிறைவேற்றி முடிக்கப் பெற்றதன் பிறகுதான் ருஷ்யாவானது ஒரு சோவியத் குடியரசு மட்டுமன்றி, ஒரு சோஷலிசக் குடியரசும் ஆகிவிட்டது என்று கூற முடியும்.

### இத்தருணத்துக்குரிய பொதுவான கோஷம்

அளவுமீறிக் கடுமையான சுமையை இருத்துவதாகவும் நிலையற்றதாகவும் அமைந்த சமாதானத்தால் தோற்றுவிக்கப்பட்டிருக்கும் மேலே நாம் பார்வையிட்ட எதார்த்தச் சூழ்நிலை, யுத்தமும் முதலாளித்துவ வர்க்கத்தின் ஆட்சியும் (கேரென்ஸ்கியாலும் அவரை ஆதரித்த மென்ஷிவிக்குகளாலும் வலதுசாரி சோஷலிஸ்டு - புரட்சியாளர்களாலும் பிரதிநிதித்துவம் செய்யப்பட்டது) நமக்கு விட்டுச் சென்ற பயங்கர அழிவு நிலையும் வேலையின்மையும் பஞ்சமும் ஆகிய இவையெல்லாம் உழைப்பாளி மக்களின்

பரவலான பகுதியோரிடத்தே தவிர்க்க முடியாதவாறு மட்டுமீறிய களைப்பையும் அறவே ஓய்ந்து போய் ஒடுங்கிய நிலையையுங்கூட ஏற்படுத்தியிருக்கின்றன. இம்மக்கட் பகுதியோர் சற்றே ஓய்வு இடைநேரம் வேண்டுமென விடாப்பிடியாகக் கோருகிறுர்கள், நிலைமைகளால் நிர்ப்பந்திக்கப்பட்டு இவ்வாறு கோருகிறுர்கள். யுத்தத்தாலும் முதலாளித்துவ ஆட்சியாலும் அழிக்கப்பட்ட உற்பத்திச் சக்திகளை மீட்டமைத்தல்; யுத்தத்தாலும், யுத்தத்தில் ஏற்பட்ட தோல்வியாலும், லாப வெறியாலும் சுரண்டுவோரது கவிழ்க்கப்பட்ட ஆட்சியை மீட்டமைப்பதற்காக முதலாளித்துவ வர்க்கம் செய்யும் முயற்சிகளாலும் உண்டான காயங்களை ஆற்றுதல்; நாட்டின் பொருளாதாரத்தைப் புத்துயிர் பெறச் செய்தல்; சர்வசாதாரணமான வாழ்க்கை ஒழுங்குக்கு நம்பகமான பாதுகாப்பு அளித்தல்—இவை தாம் இன்றைய தினத்துக்குரிய பணி. இது முரணுரையாகத் தோன்றலாம், ஆனுலும் இதுவேதான் உண்மை: மேலே சுட்டிக் காட்டப் பெற்ற எதார்த்த நிலைமைகளைக் கருதுகையில், பொது வாழ்வினை நிலைநிறுத்துவது சம்பந்தமான இந்தச் சர்வசாதாரணமான, மட்டுமீறிய அளவுக்குச் சர்வசாதாரணமான பிரச்சினைகளுக்கு — முதலாளித்துவ வர்க்கத்தினரும் மென்ஷிவிக்குகளும் வலதுசாரி சோஷலிஸ்டுப் புரட்சியாளர்களும் காட்டும் எதிர்ப்பை மீறி — நடைமுறையில் தீர்வு காணப்படும் போது மட்டும்தான் ருஷ்யாவில் சோஷலிசத்தை அடைவதற்கான மாற்றம் நடந்தேறும்படி தற்போதைய தருணத்தில் சோவியத் அமைப்பால் உத்தரவாதம் செய்ய முடியும், இதில் எந்த ஐயப்பாட்டுக்கும் இடமில்லை. தற்போதுள்ள சூழ்நிலையின் பிரத்தியேக இயல்புகளின் காரணமாகவும், நிலச் சமுதாயவுடைமைச் சட்டத்தையும்[37] தொழிலாளர்கள் கண்காணிப்பு செலுத்துவதற்கான சட்டத்தையும் இன்ன பிறவற்றையும் பெற்றுள்ள சோவியத் ஆட்சியதிகாரம் இருந்து வருவதன் காரணமாகவும் இந்த மிகமிகச் சர்வசாதாரணமான பிரச்சினைகளுக்கு நடைமுறைத் தீர்வு காண்பதும், சோஷலிசத்தை நோக்கியமைந்த முன்னேற்றத்

தின் ஆரம்பக் கட்டங்களுக்குரிய ஒழுங்கமைப்பு இன்னல்களை வென்று முன்செல்லுதலும் தற்போது ஒரே சித்திரத்தின் இரு திசைத் தோற்றங்களாகும்.

முறையான, நேர்மையான ரொக்கக் கணக்கு வைத்து வர வேண்டும், சிக்கனமாய் நிர்வகிக்க வேண்டும், சோம்பலாய் இருக்கலாகாது, திருடக் கூடாது, கண்டிப்பான உழைப்புக் கட்டுப்பாட்டை அனுசரிக்க வேண்டும் — முதலாளித்துவ வர்க்கம் சுரண்டும் வர்க்கம் என்ற முறையில் தனது ஆட்சியை மூடிமறைப்பதற்காக இவற்றைப் பயன்படுத்திய போது புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தால் நியாயமாகவே வெறுத்து ஒதுக்கப்பட்டவையான இந்தக் கோஷங்கள்தாம் இப்போது, முதலாளித்துவ வர்க்கம் வீழ்த்தப்பட்டுவிட்டபின், இத்தருணத்துக்குரிய முதன்மையான உடனடிக் கோஷங்களாகி வருகின்றன. ஒரு புறத்தில், இந்தக் கோஷங்கள் உழைப்பாளி மக்கட் பெருந்திரளினரால் நடைமுறையில் செயல்படுத்தப்படுவதானது, ஏகாதிபத்திய யுத்தத்தாலும் ஏகாதிபத்தியக் கொள்ளைக்காரர்களாலும் (கேரென்ஸ்கியின் தலைமையிலானவர்கள்) அனேகமாக மடிந்தொழியும் அளவுக்குச் சித்திரவதை செய்யப்பட்டிருக்கும் ஒரு நாடு விமோசனமடைவதற்குரிய ஒரே நிபந்தனையாகும். மறு புறத்தில், இந்தக் கோஷங்கள் சோவியத் அரசால், அதன் வழிமுறைகளின்படி, அதன் சட்டங்களது அடிப்படையில் நடைமுறையில் செயல்படுத்தப்படுவதானது சோஷலிசத்தின் இறுதி வெற்றிக்கு அவசியமானதும் போதுமானதும் ஆகிய நிபந்தனையாகும். ''பழம் பல்லவியான'', ''அற்பமான'' இந்தக் கோஷங்களை முன்னிலையில் வைப்பதாவது என்று இக்கருத்தை இறுமாப்புடன் வெறுத்து ஒதுக்குகிறார்களே, அவர்கள் இந்த விவரத்தைத்தான் புரிந்து கொள்ளத் தவறிவிடுகிறார்கள். சிறு விவசாயிகளது நாடான ஒன்றில் — இந்நாடு ஜாரிசத்தை வீழ்த்தி ஓராண்டே ஆகிறது, கேரென்ஸ்கிகளிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு ஆறு மாதங்களுக்கும் குறைவான காலமே ஆகிறது—நீடித்து நடைபெறும் பிற்போக்கு யுத்தத்துடன் கூடவே எழும் மூர்க்கத்தாலும் காட்டுமிராண்

டித்தனத்தாலும் கடுமையாக்கப்பட்ட தன்னியல்பான அரா ஜகத்தில் எஞ்சியிருப்பது இயற்கையாகவே கொஞ்சநஞ்ச மல்ல; மனச் சோர்வும் குறிக்கோளில்லா மனக் கசப்பும் மிகுதியாகவே ஏற்பட்டுள்ளன. இவற்றுடன் முதலாளித் துவ வர்க்கத்தாரது அடிவருடிகள் (மென்ஷிவிக்குகள், வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் முதலானோர்) பின்பற்றி வரும் ஆத்திரமூட்டித் தூண்டிவிடும் கொள்கை யையும் சேர்த்துக் கொண்டோமானால், மக்களது மனப் பாங்கில் முழு அளவிலான மாற்றத்தை உண்டாக்கி, ஒழுங்கும் கட்டுப்பாடும் வாய்ந்த உழைப்புக்குரிய சரியான பாதைக்கு அவர்களை வரச் செய்வதற்கு யாவரிலும் அதிக மான வர்க்க உணர்வுடைய மிகச் சிறந்த தொழிலாளர் களும் விவசாயிகளும் எவ்வளவு தொடர்ச்சியாகவும் விடாப் பிடியாகவும் முயற்சிகளை எடுத்தாக வேண்டுமென்பது தெற்றென விளங்கும். பெருந்திரளான ஏழையெளியோ ரால் (பாட்டாளிகளாலும் அரைப் பாட்டாளிகளாலும்) உண்டாக்கப் பெறும் நிலைமாற்றத்தால்தான் முதலாளித்துவ வர்க்கத்தார் மீதும், இன்னும் குறிப்பாய் மேலும் பிடி வாதமானோரும் எண்ணிக்கையில் அதிகமானோருமாகிய விவசாய முதலாளித்துவ வர்க்கத்தார் மீதும் வெற்றியை நிறைவு பெறச் செய்ய முடியும்.

## முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிரான போராட்டத்தின் புதிய கட்டம்

நமது நாட்டில் முதலாளித்துவ வர்க்கம் வெற்றி கொள்ளப்பட்டிருக்கிறது, ஆனால் இன்னும் அது வேரறுக்கப் படவில்லை, இன்னும் அது அழிக்கப்படவில்லை, அறவே தகர்க் கப்படக்கூட இல்லை. எனவேதான் நாம் முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிரான போராட்டத்தின் மேலும் உயர் வான ஒரு புதிய வடிவத்தை எதிர்நோக்குகிறோம்; மேலும் தொடர்ந்து முதலாளிகளை உடைமை நீக்கம் செய்யும் மிக எளிய பணியிலிருந்து, முதலாளித்துவ வர்க்கம் நிலவுவதை

அல்லது ஒரு புதிய முதலாளித்துவ வர்க்கம் உதித்தெழு வதைச் சாத்தியமற்றதாக்கிவிடும் நிலைமைகளைத் தோற்று விப்பதென்ற மிகப் பல மடங்கு அதிக சிக்கல் வாய்ந்த, கடினமான பணிக்கு மாறிச் செல்வதற்கான கட்டத்தை எதிர்நோக்குகிறோம். இந்தப் பணி முந்தியதைக் காட்டி லும் தெளிவாகவே அளவுகடந்த முக்கியத்துவம் வாய்ந்த தாகும்; இந்தப் பணி நிறைவேற்றி முடிக்கப்படாதவரை சோஷலிசம் சாத்தியமன்று.

மேற்கு ஐரோப்பியப் புரட்சிகளின் அளவுகோலைக் கொண்டு நமது புரட்சியை அளவிடுவோமாயின், 1793லும் 1871லும்[38] வந்தடையப் பெற்ற நிலையினைத் தற்போது நாம் ஏறத்தாழ வந்தடைந்திருப்பது தெரிய வரும். இந்த நிலைக்கு நாம் உயர்ந்துள்ளது குறித்தும், ஒரு விதத்தில் நிச்சயமாகவே இன்னும் கொஞ்சம் அதிகமாய் முன்னேறி யிருப்பது குறித்தும் — அதாவது, மிக உயர்ந்த அரசு வகையான சோவியத் ஆட்சியதிகாரத்தை ருஷ்யாவெங்கும் சட்டப்படிப் பிறப்பித்துப் புகுத்தியுள்ளோம் என்பது குறித்தும்—நியாயமாகவே நாம் பெருமை கொள்ளலாம். ஆயினும் இதுகாறும் சாதிக்கப் பெற்றுள்ளவை குறித்து எவ்விதத்திலும் நாம் மனநிறைவு கொண்டுவிட முடியாது, ஏனெனில் இப்போதுதான் நாம் சோஷலிசத்துக்கு மாறிச் செல்ல முற்பட்டிருக்கிறோம், இந்தத் திசையில் தீர்மானகர மான காரியத்தை நாம் இன்னமும் செய்தாகவில்லை.

பண்டங்களது உற்பத்தியிலும் வினியோகத்திலும் நாடு தழுவிய அளவில் மிகவும் கண்டிப்பான கணக்குப் பதிவுக் கும் கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய்வதுதான் தீர்மான கரமான காரியமாகும். ஆயினும், முதலாளித்துவ வர்க்கத் தினரிடமிருந்து நாம் எடுத்துக் கொண்ட ஆலைகளிலும், பொருளாதாரக் கிளைகளிலும் துறைகளிலும் கணக்குப் பதிவையும் கண்காணிப்பையும் நாம் இன்னமும் புகுத்தியாக வில்லை. இது செய்யப்படாத வரை, சோஷலிசத்தைப் புகுத்து வதற்குத் தேவையான இரண்டாவதும், முதலாவதைப் போல் அதே அளவுக்கு அவசியமானதுமாகிய பொருளாயத நிபந்தனையைச் சாதிப்பது குறித்து — அதாவது, உழைப்பின்

உற்பத்தித் திறனை தேச அளவில் உயர்த்துவ தென்ற நிபந் தனையைச் சாதிப்பது குறித்து — நினைப்பதற்கே வழியில்லை.

ஆதலால்தான், மூலதனத்தை எதிர்த்துத் தொடர்ந்து தாக்குதல் நடத்து என்னும் எளிய சூத்திரத்தைக் கொண்டு, தற்போது நம்முன்னுள்ள பணியினை வரையறுக்க இயல வில்லை. மூலதனம் இறுதி எய்தும்படி முறியடிக்கப்படாதது மெய்தான் என்ற போதிலும், உழைப்பாளி மக்களது இந்தப் பகைவனை எதிர்த்துத் தொடர்ந்து தாக்குவது நிச்சயம் அவசியமே என்ற போதிலும், இம்மாதிரியான ஒரு சூத்திரம் கருரானதல்ல, ஸ்தூலமானதல்ல; தற்போதைய சூழ்நிலையின் தனியியல்பைக் கணக்கிலெடுத்துக் கொள் வதாய் இல்லை — வருங்காலத்தில் தொடர்ந்து வெற்றி கரமாய் முன்னேறிச் செல்லும் பொருட்டு இப்போது நமது தாக்குதலைத் ''தற்காலிகமாய் நிறுத்தி வைப்பது'' அவசிய மாய் இருக்கும் தற்போதைய நிலைமையின் தனியியல்பைக் கணக்கிலெடுத்துக் கொள்வதாய் இல்லை.

ஓர் ஒப்புமை மூலம் இதனை விளக்கலாம்: மூலதனத் துக்கு எதிரான போராட்டத்தில் நாம் வந்தடைந்திருக்கும் நிலையானது வெற்றிகர சேனை ஒன்று பகைவனது பிரதேசத் தில், உதாரணமாக ஒரு பாதியோ மூன்றில் இரு பகுதியோ பிடித்துக் கொண்டபின், தனது படைகளை அணிதிரட்டுதல், ஆயுத தளவாட இருப்புகளை அதிகரித்துக் கொள்ளுதல், போக்குவரத்து வசதிகளைச் சரிசெய்து மேலும் உறுதி யாக்கிக் கொள்ளுதல், புதிய கிடங்குகளை அமைத்தல், புதிய சேமப்படைகளைக் கொண்டு வருதல் முதலானவற்றைச் செய்து முடிக்கும் பொருட்டு மேலே முன்னேறிச் செல் வதைச் சிறிது காலத்துக்கு நிறுத்தி வைக்க வேண்டிவரும் நிலைக்கு ஒப்பானதாகும். வெற்றிகர சேனையானது மேற் கண்ட நிலைமைகளில் தனது தாக்குதலை நிறுத்தி வைப்பது அவசியமாவது எதன் பொருட்டெனில், பகைவனது பிர தேசத்தின் எஞ்சிய பகுதியையும் பிடிக்கும் பொருட்டுதான், அதாவது முழுநிறை வெற்றி பெறும் பொருட்டுதான். இத்தருணத்தில் எதார்த்த நிலவரங்கள், மூலதனத்துக்கு எதிரான தாக்குதல் இவ்விதம் ''தற்காலிகமாய் நிறுத்தப்

படுவதை'' அவசியமாக்குகின்றன என்பதைப் புரிந்து கொள்ளத் தவறுகிறவர்கள், தற்போதுள்ள அரசியல் நிலைமை குறித்து எதையுமே புரிந்து கொள்ளத் தவறு கிறவர்களே ஆவர்.

மூலதனத்துக்கு எதிரான தாக்குதல் ''தற்காலிகமாய் நிறுத்தப்பட'' வேண்டுமென்று மேற்கோள் குறிகளிட்டே, அதாவது உருவக முறையிலேயே, குறிப்பிட வேண்டும், இது கூருமலே விளங்கும் ஒன்று. சாதாரண யுத்தத்தில், தாக்குதலை நிறுத்தும்படி பொதுவான உத்தரவு இடப்பட முடியும், முன்னேறுதல் மெய்யாகவே நிறுத்தப்பட முடியும். ஆனால் மூலதனத்துக்கு எதிரான யுத்தத்தில் முன்னேறு தல் நிறுத்தப்பட முடியாதது, மூலதனம் தொடர்ந்து மேலும் உடைமை நீக்கம் செய்யப்படுதலை நாம் கைவிடு வது நினைக்கவே முடியாத காரியம். நமது பொருளாதார, அரசியல் வேலைகளின் ஈர்ப்பு மையம் இடம்பெயருதல் குறித்தே இங்கு நாம் விவாதிக்கிறோம். உடைமை பறிப் போர் நேரடியாகவே உடைமைநீக்கம் செய்யப்படுவதற் கான நடவடிக்கைகள் இதுகாறும் முன்னணியில் இருந்தன. எந்தத் தொழில் நிலையங்களில் முதலாளிகள் ஏற்கெனவே உடைமைநீக்கம் செய்யப்பட்டுவிட்டார்களோ அந்தத் தொழில் நிலையங்களிலும் மற்றும் ஏனைய எல்லாத் தொழில் நிலையங்களிலும் கணக்குப் பதிவுக்கும் கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய்யும் பணி இப்போது முன்னணிக்கு வருகிறது.

இதுகாறும் நாம் செய்து வந்த அதே வேகத்தில் இனி யும் தொடர்ந்து மூலதனத்தை உடைமைநீக்கம் செய்வ தெனத் தீர்மானித்தோமாயின், நிச்சயம் நாம் தோல்வி யுறவே செய்வோம். ஏனெனில் பாட்டாளி வர்க்கக் கணக்குப் பதிவுக்கும் கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய் தற்கான நமது வேலையானது, ''உடைமைபறிப்போர் உடைமைநீக்கம் செய்யப்படும்'' நேரடி வேலையிலிருந்து பின்தங்கிவிட்டது என்பது தெளிவாகவே தெரிகிறது—சிந் தனையுள்ள ஒவ்வொருவருக்கும் தெளிவாகவே தெரிகிறது. கணக்குப் பதிவுக்கும் கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய் வதில் இப்போது நாம் நமது முயற்சிகள் அனைத்தையும்

ஒருசேர ஈடுபடுத்துவோமாயின், இந்தப் பிரச்சினைக்கு நம்மால் தீர்வு காண முடியும், இழக்க நேர்ந்த நேரத்தை ஈடுசெய்து கொள்ள முடியும், மூலதனத்துக்கு எதிரான நமது ''போர் இயக்கத்தில்'' நாம் முழுநிறை வெற்றி பெறுவோம்.

ஆனால், இழக்க நேர்ந்த நேரத்தை ஈடுசெய்து கொண்டாக வேண்டுமென நாம் ஒத்துக் கொள்வோமாயின், ஏதோ பிழை புரியப்பட்டுவிட்டதாய் ஒத்துக் கொள்கிறோம் என்று அதற்கு அர்த்தம்? இல்லவே இல்லை. இன்னொரு இராணுவ உதாரணத்தை எடுத்துக் கொள்ளலாம். குதிரைப் படைகளைக் கொண்டே பகைவனைத் தோற்கடித்துப் பின்னால் தள்ள முடியுமாயின், இது செய்யப்படவே வேண்டும். ஆனால் குறிப்பிட்ட ஒரு வரம்பு வரையில்தான் இதனை வெற்றிகரமாகச் செய்ய முடியுமாயின், அப்போது அந்த வரம்பை வந்தடைந்ததும் கன பீரங்கிகளைக் கொண்டு வருவது அவசியமாகி விடலாம், இப்படி நேர்வது முற்றிலும் சாத்தியமே. கன பீரங்கிகளைக் கொண்டு வருவதில் இழக்க நேர்ந்த காலத்தை இப்போது சரிசெய்து கொண்டாக வேண்டுமென ஒத்துக் கொள்வதன் மூலம், வெற்றிகரமான குதிரைப் படைத் தாக்குதல் தவறுகுமென நாம் ஒத்துக் கொள்வோராகிவிடவில்லை.

மூலதனத்தின் மீது ''செங் காவலர்'' தாக்குதல் தொடுத்ததற்காக, முதலாளித்துவ வர்க்கத்தின் அடிவருடிகள் அடிக்கடி நம்மைக் கண்டனம் செய்தனர். இந்தக் கண்டனம் அபத்தமானது, பணமூட்டைகளது அடிவருடிகளால் மட்டுமே செய்யப்படத் தக்கது. ஏனெனில் மூலதனத்தின் மீது ''செங் காவலர்'' தாக்குதல் தொடுப்பது ஒரு காலத்தில் சூழ்நிலைமைகளின் காரணமாய் அத்தியாவசியமாய் இருந்தது. முதலாவதாக அந்தக் காலத்தில் மூலதனமானது இராணுவ எதிர்ப்பு காட்டி வந்தது—கேரென்ஸ்கி மூலமும், கிராஸ்னேவ், சாவின்கவ், கோட்ஸ் மூலமும் (கெகெச்கோரி இப்போதுங்கூட இம்மாதிரியான எதிர்ப்பு காட்டி வருகிறார்), துத்தவ், பொகயேவ்ஸ்கி மூலமும் இந்த எதிர்ப்பு காட்டப்பட்டு வந்தது. இராணுவ எதிர்ப்பானது இராணுவ வழியிலே அல்லாமல் வேறு எவ்விதத்திலும்

முறியடிக்கப்பட முடியாதது. உழைப்போரும் சுரண்டப் படுவோருமான மக்களைச் சுரண்டலாளர்களது நுகத்தடி யிலிருந்து விடுவிக்கும் புனிதமான, தலையாய வரலாற்று இலட்சியத்துக்காகச் செங் காவலர்கள் போராடினர்.

இரண்டாவதாக, அந்தக் காலத்தில் நம்மால் அடக்கி நசுக்கும் முறைகளுக்குப் பதிலாய் நிர்வாக முறைகளை முன் னணிக்குக் கொண்டு வர முடியவில்லை, ஏனெனில் நிர்வாகக் கலையானது அனுபவத்தின் வாயிலாகப் பெறப்படுவதே அன்றி பிறக்கும் போதே தானாகவே வந்துவிடுவதல்ல. அந்தக் காலத்தில் நாம் இந்த அனுபவம் இல்லாதோராய் இருந் தோம், இப்போது நாம் இதனை அடைந்திருக்கிறோம். மூன்றாவதாக, அறிவியலின், தொழில்நுட்பத்தின் பல்வேறு துறைகளிலுமான நிபுணர்கள் அந்தக் காலத்தில் நம் கைவசம் இருக்கவில்லை, ஏனெனில் அந்நிபுணர்கள் பொக யேவ்ஸ்கிகளது அணிகளில் சேர்ந்து போராடிக் கொண் டிருந்தார்கள், அல்லது நாசவேலையின் மூலம் முறையாகவும் விடாப்பிடியாகவும் எதிர்ப்பு காட்ட முடியும்படியான நிலையில் இருந்தார்கள். இப்போது நாம் இந்த நாசவேலை யைத் தகர்த்துவிட்டோம். மூலதனத்தின் மீதான ''செங் காவலர்'' தாக்குதல் வெற்றி கண்டது, வாகை சூடியது; மூலதனத்தின் இராணுவ எதிர்ப்பையும், நாசவேலை மூல மான அதன் எதிர்ப்பையும் நாம் தகர்த்திட்டோம்.

அப்படியானால், மூலதனத்தின் மீதான ''செங் காவலர்'' தாக்குதல் எப்போதுமே, எல்லாச் சூழ்நிலைமைகளிலும் சரியானதுதான் என்று அர்த்தம்? மூலதனத்தை எதிர்த்துப் போராட வேறு வழி இல்லை என்று அர்த்தம்? இவ்வாறு நினைப்பது சிறுபிள்ளைத்தனமாகும். குதிரைப் படையின் துணை கொண்டு நாம் வெற்றியடைந்தோம், ஆனால் நம் மிடம் கன பீரங்கிகளும் இருக்கின்றன. அடக்கி நசுக்கும் முறைகள் மூலம் நாம் வெற்றியடைந்தோம்; நிர்வாக முறைகள் மூலமும் நம்மால் வெற்றியடைய முடியும். பகைவனை எதிர்த்துப் போராடுவதற்கான நமது முறை களைச் சூழ்நிலைமைகளில் ஏற்படும் மாற்றங்களுக்கு ஏற்ப எப்படி மாற்றிக் கொள்வதென்று நாம் தெரிந்தவர்

களாக இருக்க வேண்டும். சாவின்கவ்களையும் கெகெச் கோரிகளையும் ஏனைய எல்லா நிலப்பிரபுத்துவ, முதலாளித் துவ எதிர்ப்புரட்சியாளர்களையும் ''செங் காவலர்'' முறை யில் நசுக்கியடக்குவதைக் கணப் பொழுதுக்கும் நாம் கை விட்டுவிடப் போவதில்லை. ஆனால் செங் காவலர் தாக்கு தல்கள் தேவையாயிருந்த காலக் கூறு முடிவடைந்துவிட்ட (வெற்றிகர முடிவை அடைந்தவிட்ட) ஒரு நேரத்தில், எவ் வகையான முதலாளித்துவ வர்க்கமும் வளருவதைத் தடுக் கும் பொருட்டு நிலையத்தைத் திரும்பவும் உழுவதற்காகப் பாட்டாளி வர்க்க அரசு அதிகாரமானது முதலாளித்துவ நிபுணர்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய காலக் கூறு வந்து சேர்ந்திருக்கும் ஒரு நேரத்தில், ''செங் காவலர்'' முறைகளை முன்னணியில் வைக்கும் அளவுக்கு நாம் முட்டாள்தனமாய் இருக்கப் போவதில்லை.

இது ஒரு தனியியல்பு வாய்ந்த சகாப்தமாகும், அல்லது வளர்ச்சிக் கட்டமாகுமெனில் இன்னும் பொருத்தமாயிருக் கும். மூலதனத்தை அறவே தோற்கடிக்கும் பொருட்டு, நமது போராட்டத்தின் வடிவங்களை நாம் இந்தக் கட்டத் தின் தனியியல்பு வாய்ந்த நிலைமைகளுக்குத் தகவமைத்துக் கொள்ளக் கூடியோராய் இருத்தல் வேண்டும்.

அறிவியல், தொழில்நுட்பம், அனுபவம் ஆகியவற்றின் பல்வேறு துறைகளையும் சேர்ந்த நிபுணர்களது வழிகாட்ட லின்றி சோஷலிசத்துக்கு மாறிச் செல்லுதல் சாத்தியமன்று. ஏனென்றால் உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்து வதில் (முதலாளித்துவத்தால் சாதிக்கப் பெற்றுள்ள தன் அடிப்படையில்), முதலாளித்துவத்துடன் ஒப்பிடுகை யில் இன்னும் மேலான நிலைக்கு உணர்வுபூர்வமாய் வெகு ஜன அளவில் முன்னேற்றம் வேண்டுமென சோஷலிசம் கோருகிறது. இந்த முன்னேற்றத்தைச் சோஷலிசமானது தனக்கே உரிய வழியில், தனக்கே உரிய முறைகளில் — அல்லது இதையே மேலும் ஸ்தூலமான வடிவில் சொல் வதெனில், சோவியத் முறைகளில் ஏற்படச் செய்தாக வேண்டும். நிபுணர்களாக இருப்போர், அவர்களை நிபுணர் களாகச் செய்த சமூகச் சுற்றுச்சார்பு அனைத்தின் காரண

மாய், தவிர்க்கமுடியாதபடி பிரதானமாய் முதலாளித் துவத் தன்மை வாய்ந்தோராய் இருக்கின்றனர். நமது பாட்டாளி வர்க்கமானது ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டதும் தேச அளவில் கணக்குப் பதிவுக்கும் கண் காணிப்புக்கும் ஒழுங்கமைப்புக்கும் ஏற்பாடு செய்யும் பிரச்சினைக்கு விரைவில் தீர்வு கண்டிருந்தால் (யுத்தத்தின் காரணமாகவும் ருஷ்யாவின் பின்தங்கிய நிலையின் காரண மாகவும் இது சாத்தியமற்றதாகிவிட்டது), நாம் நாசவேலை யைத் தகர்த்திட்டதைத் தொடர்ந்து இந்த முதலாளித் துவ நிபுணர்களைச் சர்வவியாபகமான கணக்குப் பதிவின் மூலமும் கண்காணிப்பின் மூலமும் அறவே நமக்குக் கீழ்ப்படியுமாறு செய்திருக்கலாம். பொதுவாகக் கணக்குப் பதிவையும் கண்காணிப்பையும் புகுத்துவதில் கணிசமான ''தாமதம்'' ஏற்பட்டுவிட்டதனால், நாசவேலையை நாம் வெற்றி கொண்டுங்கூட, இன்னும் நாம் முதலாளித்துவ நிபுணர்களை நமது செயலாட்சியின் கீழ் வரச் செய்வதற் கான நிலைமைகளைத் தோற்றுவித்தாகவில்லை. நாசவேலை யினரில் பெருந் திரளானோர் ''வேலைக்கு வருகிறார்கள்''; ஆனால் சிறந்த ஒழுங்கமைப்பாளர்களையும் தலைமையான நிபுணர்களையும் அரசானது, ஒன்று பழைய வழியில், முதலாளித்துவ வழியில் (அதாவது, உயர்ந்த சம்பளங்கள் கொடுத்து) உபயோகித்துக் கொண்டாக வேண்டும், அல்லது புதிய வழியில், பாட்டாளி வர்க்க வழியில் (அதாவது, கீழிருந்து தேச அளவில் கணக்குப் பதிவுக்கும் கண்காணிப்புக்கு மான நிலைமைகளைத் தோற்றுவித்து, தவிர்க்கமுடியாத வகையில், தானாகவே இவ்விதம் நிபுணர்களை கீழ்ப்படியச் செய்து நமது வேலைகளில் அவர்களை அணிதிரள வைத்து) உபயோகித்துக் கொண்டாக வேண்டும்.

இப்போது நாம் பழைய, முதலாளித்துவ வழியை மேற் கொண்டு, தலைமையான முதலாளித்துவ நிபுணர்களது ''சேவைக்காக'' மிக உயர்ந்த விலை கொடுக்க உடன் பட்டாக வேண்டியிருக்கிறது. இந்த விவகாரம் குறித்து பரிச்சயமுள்ளவர்கள் எல்லாரும் இதனை அறிந்திருக்கிறார் கள். ஆனால் பாட்டாளி வர்க்க அரசால் இந்த நடவடிக்கை

ஏற்கப்படுவதின் உட்பொருள் முக்கியத்துவம் குறித்து எல்லாரும் சிந்தித்துப் பார்ப்பதில்லை. தெளிவாகவே இந்த நடவடிக்கை ஒரு சமரசமே ஆகும்; எல்லாச் சம்பளங்களும் சராசரித் தொழிலாளிச் சம்பளங்களுக்குச் சரிமட்டமாகக் குறைக்கப்பட வேண்டுமெனக் கோரும், தன்னல உயர்வு நாட்டத்தைச் சொல்லளவில் அல்ல, செயலில் எதிர்த்துப் போராட வேண்டுமென வற்புறுத்தும் பாரிஸ் கம்யூன் கோட்பாடுகளிலிருந்தும் பாட்டாளி வர்க்க அரசு ஒவ்வொன்றின் கோட்பாடுகளிலிருந்தும் விலகிச் செல்லுதலே ஆகும்.

தவிரவும் இந்த நடவடிக்கை மூலதனத்துக்கு எதிரான தாக்குதல் ஒரு குறிப்பிட்ட துறையில், ஒரு குறிப்பிட்ட அளவுக்கு நிறுத்தி வைக்கப்படுவதைக் குறிக்கிறது (ஏனெனில் மூலதனமானது குறிப்பிட்ட சமூக உறவாகுமே அன்றி ஒரு பணத் தொகை அல்ல) என்பதுடன், உயர்ந்த சம்பளங்களைச் சராசரித் தொழிலாளிச் சம்பளங்களுக்குச் சரிமட்டமாகக் குறைத்திடும் கொள்கையைப்[39] பிரகடனம் செய்தும் பின்பற்றியும் வந்துள்ள நமது சோஷலிச சோவியத் அரசு, ஓரடி பின்னேக்கி எடுத்து வைப்பதையும் குறிக்கிறது என்பது தெளிவு.

முதலாளித்துவ வர்க்கத்தின் அடிவருடிகள், முக்கியமாய் மென்ஷிவிக்குகளையும் நோவயா ஷீஸ்ன் ஆட்களையும் வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களையும் போன்ற சில்லரைப் பேர்வழிகள், ஓரடி பின்னேக்கி எடுத்து வைக்கிறோம் என்ற நமது ஒப்புதல் வாக்குமூலம் குறித்துக் கொக்கரித்துக் கொள்வார்கள் என்பது மெய்தான். ஆனால் இவர்களது கொக்கரிப்பு குறித்து நாம் கவலைப்படத் தேவையில்லை. நமது தவறுகளையும் பலவீனங்களையும் மூடிமறைக்காமல் நாம் சோஷலிசத்தை அடைவதற்கான மிகமிகக் கடினமான புதிய பாதையின் பிரத்தியேக இயல்புகளை ஆராய்ந்தாக வேண்டும், செய்யாமல் விட்டு வைக்கப்பட்டவற்றைத் தாமதமின்றி செய்து முடிக்க முயல வேண்டும். மிதமிஞ்சி உயர்ந்த சம்பளங்கள் மூலம் முதலாளித்துவ நிபுணர்களை நமது பணிக்குத் திரட்டிக் கொள்வது

பாரிஸ் கம்யூனின் கோட்பாடுகளிலிருந்து பின்வாங்கிச் செல்லுதலாகும் என்பதை மக்களிடமிருந்து மூடிமறைப்பது, முதலாளித்துவ அரசியலாளர்களது இழிநிலைக்குச் சரிந்துவிடுவதும் மக்களை ஏமாற்றுவதுமே ஆகும். எதற்காக, ஏன் நாம் ஓரடி பின்னேக்கி எடுத்து வைக்கிறோம் என்பதை ஒளிவுமறைவின்றி விளக்கிச் சொல்லி, இழந்த நேரத்தைச் சரிசெய்வதற்கு இருக்கக் கூடிய வழிதுறைகள் என்னவென்று இதன் பிறகு பகிரங்கமாய் விவாதிப் போமாயின், மக்களுக்குப் போதமளிக்கிறோம், அனுபவத்திலிருந்து கற்றறிந்து கொள்கிறோம், சோஷலிசத்தை எப்படிக் கட்டியமைப்பதென்று மக்களுடன் சேர்ந்து கற்றறிந்து கொள்கிறோம் என்று அதற்கு அர்த்தம். வெற்றியாளர் சிற்சில தவறுகளைப் புரிந்திராத, பகுதியளவிலான பின்னடைவுகளுக்கு உட்படாத, தற்காலிகமாக எதையேனும் விட்டுக் கொடுக்கவும் சில இடங்களில் பின்வாங்கவும் நேர்ந்திராத வெற்றிகர இராணுவப் படையியக்கம் எதையும் வரலாற்றில் காண்பது அரிது. முதலாளித்துவத்தை எதிர்த்து நாம் நடத்திவரும் "படையியக்கம்" மிகமிகக் கடினமான இராணுவப் படையியக்கத்தையும்விட பத்து லட்சம் மடங்கு அதிகக் கடினமானது. பகுதியளவிலான குறிப்பிட்ட ஒரு பின்வாங்குதலுக்காக மனச் சோர்வுக்கு இடந்தருவது மடமையாகும், வெட்கக்கேடே ஆகும்.

இப்போது நாம் நடைமுறைக் கண்ணேட்டத்திலிருந்து இந்தப் பிரச்சினையை விவாதிக்கலாம். முடியுமான முழு வேகத்தில் பொருளாதாரத்தைப் புத்துயிர் பெற்றெழச் செய்யும் திசையிலே மக்களது உழைப்பை நெறியாண்மை புரியும் பொருட்டு ருஷ்யாவின் சோவியத் குடியரசுக்கு அறிவியல், தொழில்நுட்பம், நடைமுறை அனுபவம் ஆகியவற்றின் பல்வேறு துறைகளிலும் முதல் தரமான விஞ்ஞானிகளிலும் நிபுணர்களிலும் ஆயிரம் பேர் தேவைப்படுவதாக வைத்துக் கொள்வோம். இந்த "முதல்தரத் தாரகைகளுக்கு" ஆண்டுக்கு ஒருவருக்கு 25,000 ரூபிள் வீதம் தர வேண்டியிருப்பதாகக் கொள்வோம் — தொழிலாளர்களிடம் ஊழல் மலிந்துவிட்டதாய் யாவரிலும்

பலமாகக் கூச்சலிடுவோரில் பெரும்பாலானோர் முதலாளித்துவ நெறிமுறைகளால் சீரழிக்கப்பட்டு ஊழலில் மூழ்கியவர்களே ஆவர். இந்த மொத்தத் தொகை (2,50,00,000 ரூபிள்) இரட்டிப்பாக்கப்பட வேண்டுமென வைத்துக் கொள்வோம் (மிகவும் முக்கியமான ஒழுங்கமைப்புப் பணிகளும் தொழில்நுட்பப் பணிகளும் குறிப்பிடத்தக்க வெற்றியோடும் வேகத்தோடும் நிறைவேற்றப்படுகையில் போனசுகள் அளிக்க வேண்டியிருப்பதாகக் கொண்டால்); அல்லது நான்கு மடங்காகவுங்கூட அதிகமாக்கப்பட வேண்டுமென வைத்துக் கொள்வோம் (மேலும் அதிகமாகக் கோருவோரான அயல்நாட்டு நிபுணர்கள் சில நூறு பேரை நாம் தருவித்துக் கொள்ள வேண்டியிருப்பதாகக் கொண்டால்). மக்களது உழைப்பை நவீன விஞ்ஞான, தொழில் நுட்ப வழிகளில் திருத்தியமைத்து ஒழுங்கு செய்வதற்காக சோவியத் குடியரசு ஐந்து அல்லது பத்து கோடி ரூபிள் வருடாந்தரச் செலவை ஏற்க நேர்வது அளவு மீறியதாகவோ, மட்டுமீறிய சுமையாகவோ இருக்குமா என்பதே கேள்வி. நிச்சயமாய் அப்படி ஒன்றும் இருக்காது. வர்க்க உணர்வு கொண்ட தொழிலாளர்களிலும் விவசாயிகளிலும் மிகப் பெருவாரியானோர் இந்தச் செலவை ஆமோதிக்கவே செய்வார்கள். ஏனெனில் நமது பின்தங்கிய நிலை காரணமாய் நாம் பல நூறு கோடிக் கணக்கில் இழக்கிறோம் என்பதும், முதலாளித்துவ அறிவுத்துறைத் ''தாரகைகள்'' எல்லாரையும் நமது வேலைகளில் மனமுவந்து பங்கு கொள்ளுமாறு தூண்டும்படி, அந்த அளவு ஒழுங்கமைப்பையும் கணக்குப் பதிவையும் கண்காணிப்பையும் நாம் இன்னமும் வந்தடையவில்லை என்பதும் நடைமுறை அனுபவத்தின் வாயிலாய் அவர்களுக்குத் தெரியும்.

இந்தப் பிரச்சினைக்கு மற்றொரு பக்கம் உண்டென்பது கூறாமலே விளங்கும். உயர்ந்த சம்பளங்கள் சீரழிவை உண்டாக்குகிறவை என்பது மறுக்க முடியாதது. இந்தச் சீரழிவுக்கு இலக்காவோர் சோவியத் அதிகாரிகள் மட்டுமல்ல (முக்கியமாய், புரட்சியானது அதிவேகமாய் நடந்தேறியதால் சிற்சில சாகசச் சூரர்களும் கயவர்களும் அதிகாரப்

பதவிகளில் அமர்வதைத் தடுக்க முடியவில்லை, இவர்களும் மற்றும் தகாத அல்லது நேர்மையற்ற கமிசார்கள் பலரும் அரசு நிதிகளை மோசடி செய்வதில் "கீர்த்தி மிக்கோராய்" விளங்கத் தயங்க மாட்டார்கள்); தொழிலாளர் பெருந்திரளினரும் இதற்கு இலக்காகிவிடுவர். ஆனால் முதலாளித்துவம் நமக்கு விட்டுச் சென்றுள்ள இந்தக் கேட்டிலிருந்து உடனடியாக நாம் விடுபட்டு வெளிவந்து விட முடியாது; நம்மை ஒழுங்கமைத்துக் கொள்வதன் மூலம்தான், நமது அணிகளில் கட்டுப்பாட்டைக் கடுமையாக்கிக் கொள்வதன் மூலம்தான், "முதலாளித்துவம் விட்டுச் சென்றுள்ள ஆஸ்தியைப் பாதுகாத்து" வருவோரும் "முதலாளித்துவ மரபுகளைப் பின்பற்றி" வருவோருமான எல்லோரையும், அதாவது சோம்பேறிகளையும் ஒட்டுண்ணிகளையும் அரசு நிதிகளை (இப்போது எல்லா நிலங்களும் எல்லா ஆலைகளும் எல்லா ரயில்பாதைகளும் சோவியத் குடியரசின் "அரசு நிதிகள்" ஆகும்) கையாடுவோரையும் நமது அணிகளிலிருந்து களைவதன் மூலமும்தான் சோவியத் குடியரசை ஐந்து கோடி அல்லது பத்து கோடி ரூபிள் வருடாந்தரக் "கப்பம்" செலுத்தும் கடப்பாட்டிலிருந்து நாம் விடுவிக்க முடியும் — சிந்தனையுள்ள நேர்மையான ஒவ்வொரு தொழிலாளியும் ஏழை விவசாயியும் இதில் நம்முடன் உடன்படுவார், இதனை ஒத்துக் கொள்வார். வர்க்க உணர்வு படைத்த, முன்னேறிய தொழிலாளர்களும் ஏழை விவசாயிகளும் சோவியத் நிறுவனங்களின் துணை கொண்டு கட்டுப்பாடு மிக்கவர்களாகி, தம்மை ஒருங்கிணைத்துக் கொண்டு, ஓராண்டில் சக்தி வாய்ந்த உழைப்புக் கட்டுப்பாட்டினைத் தோற்றுவிப்பார்களாயின், ஓராண்டில் நாம் இந்தக் "கப்பத்தை" உதறியெறிந்து விடலாம். இதற்கும் முன்பேகூட நாம் இதனைக் குறைத்துக் கொள்ள முடியும்... நமது தொழிலாளர்கள், விவசாயிகளது உழைப்புக் கட்டுப்பாட்டிலும் ஒழுங்கமைப்பிலும் நாம் சாதிக்கும் வெற்றிகளுக்கு நேர் விகிதத்தில் இதனைக் குறைத்துக் கொள்ள முடியும். தொழிலாளர்களும் விவசாயிகளுமான நாம் முதலாளித்துவ நிபுணர்களை நமக்குக் கற்றுத் தரும்

படி வைத்து சிறந்த உழைப்புக் கட்டுப்பாட்டையும் மிக நவீன உழைப்பு நுட்பத்தையும் எவ்வளவு சீக்கிரமாகக் கற்றறிந்து கொள்கிறோமோ, அவ்வளவு சீக்கிரமாய் நம்மை இந்த நிபுணர்களுக்குச் செலுத்த வேண்டிய ''கப்பத்திலிருந்து'' விடுவித்துக் கொள்வோம்.

பாட்டாளி வர்க்கத்தின் மேற்பார்வையில் பொருளுற்பத்திக்கும் வினியோகத்துக்கும் நாடு தழுவிய அளவில் கணக்குப் பதிவுக்கும் கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய்வதற்கான நமது வேலை, உடைமை பறிப்போரை நேரடியாக உடைமை நீக்கம் செய்வதற்கான நமது வேலையிலிருந்து வெகுவாகப் பின்தங்கிவிட்டது. தற்போதைய நிலைமையின் பிரத்தியேக இயல்புகளையும் இவற்றிலிருந்து பெறப்படும் சோவியத் அரசாங்கப் பணிகளையும் புரிந்து கொள்வதற்கு இந்த வரையறுப்பு அடிப்படையான முக்கியத்துவம் வாய்ந்ததாகும். முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிரான நமது போராட்டத்தின் ஈர்ப்பு மையம் இத்தகைய கணக்குப் பதிவுக்கும் கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய்வதை நோக்கி இடம் பெயர்ந்து வருகிறது. இதனைத் துவக்க நிலையாகக் கொண்டால்தான், வங்கிகளை நாட்டுடைமை ஆக்குவதும், அயல் நாட்டு வாணிபத்தை ஏகபோகமாக்குவதும் பணப் புழக்கத்தை அரசின் கண்காணிப்பின் கீழ் கொண்டு வருவதும், பாட்டாளி வர்க்கக் கண்ணோட்டத்தில் திருப்திகரமாய் இருக்கக் கூடிய சொத்து, வருமான வரியை அமுலுக்குக் கொண்டு வருவதும், கட்டாய உழைப்புச் சேவையைப் புகுத்துவதுமாகிய துறைகளில் பொருளாதார, நிதிக் கொள்கையின் உடனடிப் பணிகளைச் சரிவர நிர்ணயிக்க முடியும்.

இந்தத் துறைகளில் (மிகமிக முக்கிய துறைகள் இவை) சோஷலிசச் சீர்திருத்தங்களைப் புகுத்துவதில் நாம் வெகுவாகப் பின்தங்கியிருக்கிறோம். கணக்குப் பதிவும் கண்காணிப்பும் பொதுவாகப் போதுமான அளவுக்கு ஏற்பாடு செய்யப்படாததுதான் இதற்குரிய காரணமாகும். இது மிகக் கடினமான பணிகளில் ஒன்றாகும் என்பதைக் கூறத் தேவையில்லை. யுத்தத்தால் உண்டான அழிவின் காரண

மாய், நீண்ட காலப் போக்கிலேதான் இந்தப் பணியைச் செய்து முடிக்க முடியும். இங்கேதான் முதலாளித்துவ வர்க்கத்தினர் — குறிப்பாய் எண்ணிலடங்காததாய் இருக்கும் குட்டிமுதலாளித்துவ, விவசாய முதலாளித்துவ பகுதியினர்—ஏற்கெனவே ஏற்பாடு செய்யப்பட்டு வரும் கண்காணிப்பைச் சீர்குலைத்தும், உதாரணமாகத் தானிய ஏகபோகத்தைச் சீர்குலைத்தும், இலாபக் கொள்ளைக்கும் ஊக வாணிபத்துக்குமான வசதி நிலைகளைக் கைப்பற்றியும் மிகக் கடுமையாய்ப் போராடுகின்றனர். நாம் பிறப்பித்துள்ள அரசாணைகளின்படி செய்யப்பட வேண்டிய காரியங்களைப் போதிய அளவில் செய்யாமல் பின்தங்கியிருக்கிறோம். ஏற்கெனவே சட்டமாகியுள்ள (ஆனால் இன்னும் எதார்த்த உண்மையாகாமல் இருந்து வரும்) சீர்திருத்தங்களின் கோட்பாடுகளைக் காரியக் கண்ணோட்டத்துடன் நடைமுறையில் சித்தி பெறச் செய்வதில் எல்லா முயற்சிகளையும் ஒருசேர ஈடுபடுத்துவதுதான் தற்போதைய தலைமையான பணியாகும்.

வங்கிகளை நாட்டுடைமையாக்குதலைத் தொடர்ந்து நடத்திச் செல்லும் பொருட்டும், சோஷலிசத்தில் பொதுக் கணக்குப் பதிவின் கணு மையங்களாக வங்கிகளை மாற்றுவதை நோக்கி உறுதியாக முன் செல்லும் பொருட்டும், மக்கள் வங்கியின் கிளைகளது எண்ணிக்கையை அதிகமாக்குவதிலும், வைப்புத் தொகைகளைக் கவர்ந்து இழுப்பதிலும், பொது மக்கள் வைப்புத் தொகைகள் செலுத்துவதையும் திருப்பியெடுப்பதையும் சுலபமாக்குவதிலும், நீள்வரிசைகளில் காத்திருக்க நேர்வதை ஒழித்திடுவதிலும், இலஞ்சம் வாங்குவோரையும் மோசடிக்காரர்களையும் பிடிப்பதிலும் சுடுவதிலும், இன்ன பிறவற்றிலும் முதலாவதாகவும் முக்கியமாகவும் நாம் மெய்யான வெற்றி பெற்றாக வேண்டும். முதலில் ஆக எளியவற்றை மெய்யாகவே செய்து முடித்தாக வேண்டும், கிடைக்கக் கூடியவற்றைச் சரிவர ஒழுங்கு செய்தாக வேண்டும், பிறகு அதிக சிக்கலான காரியங்களைச் செய்வதற்குத் தயாரித்தாக வேண்டும்.

ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்டிருக்கும் (தானியத்திலும் தோலிலும் பிறவற்றிலும்) அரசு ஏகபோகங்களை உறுதி

யாக நிலைபெறச் செய்தும் இவற்றை மேம்படுத்தியும் செல்ல வேண்டும், இந்த வழியில் அயல்நாட்டு வாணி பத்தை அரசு ஏகபோகமாக்குவதற்குத் தயார் செய்தாக வேண்டும். இந்த ஏகபோகம் இல்லையேல், ''கப்பம்'' செலுத்துவதன் மூலம் அன்னிய மூலதனத்திடமிருந்து ''நம்மை விடுவித்துக் கொள்ள'' முடியாது. சோஷலிசத் தைக் கட்டியமைப்பதற்கான சாத்தியப்பாடு, குறிப்பிட்ட ஓர் இடைக் காலத்துக்கு அன்னிய மூலதனத்துக்குக் குறிப்பிட்ட அளவிலான ''கப்பம்'' செலுத்துவதன் மூலம் நமது உள்நாட்டுப் பொருளாதாரச் சுயேச்சை நிலையைப் பாதுகாத்துக் கொள்கிறோமா என்பதையே முற்றிலும் பொறுத்திருக்கிறது.

பொதுவாக வரிகளையும், குறிப்பாக சொத்து, வருமான வரியையும் வசூலிப்பதிலும் நாம் வெகுவாகப் பின்தங்கி வருகிறோம். முதலாளித்துவ வர்க்கத்தாருக்கு இழப்பீட்டுத் தொகைகள் விதிப்பதானது — கோட்பாட்டு அளவில் இது முற்றிலும் அனுமதிக்கக் கூடியதும் பாட்டாளி வர்க் கத்தால் ஆமோதிக்கப்படத்தக்கதுமான நடவடிக்கையே— இத்துறையில் இன்னமும் நாம் நிர்வாக முறைகளைக் காட் டிலும் அதிகமாய் யுத்த முறைகளுக்குத்தான் (ருஷ்யாவைச் செல்வந்தர்களிடமிருந்து ஏழையெளியோருக்கு வென்று கொள்வதற்கானவை) அருகாமையில் இருக்கிறோம் என்பதையே காட்டுகிறது. ஆனால் மேலும் வலிமை வாய்ந்தோராகும் பொருட்டும், மேலும் உறுதியாகக் காலூன்றி நிற்கும் பொருட்டும் பின்கூறிய முறை களையே நாம் கடைப்பிடிக்க வேண்டும், முதலாளித்துவ வர்க்கத்தாருக்கு விதிக்கப்படும் இழப்பீட்டுத் தொகை களுக்குப் பதிலாய் நாம் தொடர்ச்சியாகவும் முறையாகவும் சொத்து, வருமான வரி வசூலிப்பைக் கைக்கொள்ள வேண்டும். இந்த வரி வசூலிப்பு பாட்டாளி வர்க்க அரசுக்கு மேலும் கூடுதலான வரவு கிடைக்கச் செய்யும்; நம் தரப்பில் மேலும் சிறப்பான ஒழுங்கமைப்பினையும், மேலும் சிறப்பான கணக்கு பதிவையும் கண்காணிப்பையும் இது கோருகின்றது.

வர்க்கச் சர்வாதிகாரத்துக்கான அவசியத்தை உணர்வு பூர்வமாய் ஏற்றுக் கொள்ளும் நிலேக்கு, வேலேயின் போது சோவியத் அரசாங்கத்தின் தனிப்பட்ட பிரதிநிதிகளது உத்தரவுகளுக்கு மறுபேச்சின்றி பணியும் நிலேக்கு திடமான முறையில் மாறிச் செல்வது சாத்தியமாகும் பொருட்டு, சுரண்டலாளர்கள் மீது உழைப்பாளர்களுக்குக் கிட்டிய அந்த அக்டோபர் வெற்றி தேவைப்பட்டது; உழைப்பாளி மக்கள் புதிய வாழ்க்கை நிலேமைகளேயும் புதிய பணிகளேயும் முதற்கண் தாமே விவாதிப்பதற்கான ஒரு வரலாற்றுக் காலக் கூறு முழுதும் தேவைப்பட்டது.

இந்த மாற்றம் இப்போது ஆரம்பமாகியுள்ளது.

புரட்சியின் முதலாவது பணியை நாம் வெற்றிகரமாய்ச் செய்து முடித்திருக்கிறேம். உழைப்பாளி மக்கட் பெருந்திரளினர் இந்தப் பணியின் வெற்றிக்கான அடிப்படை நிபந்தனையை எப்படி தம்முன் பரிணமிக்கச் செய்து கொண்டார்கள் என்பதை நாம் கண்டோம்: சுரண்டலாளர்களேக் கவிழ்க்கும் பொருட்டு இவர்களுக்கு எதிராய் அவர்கள் தம் முயற்சிகளே ஒன்றுபடுத்திக் கொண்டார்கள். 1905 அக்டோபர்,[44] 1917 பிப்ரவரி, அக்டோபர் ஆகியவை போன்ற கட்டங்கள் உலக வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை.

புரட்சியின் இரண்டாவது பணியையும் நாம் வெற்றிகரமாய்ச் செய்து முடித்துள்ளோம்: சுரண்டலாளர்கள் அழுத்திக் கீழே இருத்தி வைத்திருந்தார்களே, சமுதாயத்தின் அந்த ''கீழ்த்தட்டுகளேச்'' சேர்ந்தோரைத் துயிலெழச் செய்து அவர்களே உயர் மட்டத்துக்கு உயர்த்துவதே இந்தப்பணி. 1917 அக்டோபர் 25க்குப் பிற்பாடுதான் இவர்கள் சுரண்டலாளர்களே வீழ்த்துவதற்கும், நிலேவரங்களே மதிப்பிட்டு தமக்குரிய வழியில் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கு ஆரம்பிப்பதற்கும் முழுநிறை சுதந்திரம் பெற்றனர். மிக அதிகமாய் ஒடுக்கப்பட்டு, மிதிக்கப்பட்டு வந்தோர், உழைப்பாளி மக்களில் மிகக் குறைவாய்க் கல்வி போதம் பெற்றிருந்த பெருந்திரளினர், பொதுக் கூட்டங்களில் பகிரங்கமாய் விவாதித்தல், இவர்கள்

போல்ஷிவிக்குகளின் பக்கம் வருதல், தமது சொந்த சோவியத் நிறுவனங்களை எங்கும் நிறுவிக் கொள்ளுதல்—புரட்சியின் இரண்டாவது பெரிய கட்டமாகும் இது.

மூன்றாவது கட்டம் இப்போது ஆரம்பமாகிறது. நாம் நமக்கு வென்று கொண்டவற்றை, நாமே நேரில் ஆணையிட்டும் சட்டம் இயற்றியும் விவாதித்தும் திட்டமிட்டும் இருப்பவற்றை, நாம் உறுதி பெறச் செய்தாக வேண்டும்; அன்றாட உழைப்புக் கட்டுப்பாட்டின் நிலையான வடிவங்களில் இவை யாவற்றையும் உறுதி பெறச் செய்தாக வேண்டும். இது மிகமிகக் கடினமானது என்றாலும் நன்றிக்குரிய பணியாகும். ஏனெனில் இது செய்து முடிக்கப்படும் போது மட்டுமே நமக்கு சோஷலிச அமைப்பு கிடைக்கப் பெறும். உழைப்பாளி மக்களது ''பொதுக் கூட்ட'' ஜனநாயகத்தை — கொந்தளித்துப் பொங்கியெழுவதும், வசந்த வெள்ளமென கரை புரண்டு செல்வதுமான இதனை—வேலையின் போதான இரும்புக் கட்டுப்பாட்டுடன், வேலை செய்கையில் சோவியத் தலைவனின், தனியாளின் சித்தத்துக்கு மறுபேச்சின்றி பணிவதுடன் இணைப்பதற்கு நாம் கற்றுக் கொண்டாக வேண்டும்.

இதை இன்னும் நாம் கற்றுக் கொண்டாகவில்லை.

இதை நாம் கற்றுக் கொள்வோம்.

முதலாளித்துவச் சுரண்டலின் மீட்டமைப்பு நேற்று நம்மை அச்சுறுத்தியது; கர்னீலவ்கள், கோட்ஸ்கள், துத்தவ்கள், கெகெச்கோரிக்கள், பொகயேவ்ஸ்கிகள் ஆகியோர் இந்த மீட்டமைப்பை உருவகப் படுத்துவோராய் இருந்தனர். இவர்கள் மீது நாம் வெற்றி பெற்றுவிட்டோம். இந்த மீட்டமைப்பு, இதே மீட்டமைப்பு, இன்று இன்னொரு வடிவத்தில் நம்மை அச்சுறுத்துகிறது. குட்டிமுதலாளித்துவ கண்டிப்பின்மையின், அராஜகத்தின் கூறினது வடிவில், அல்லது ''இது என் வேலையல்ல'' என்று கூறும் சிறு உடைமையாளரது மனோபாவத்தின் வடிவில், பாட்டாளி வர்க்கக் கட்டுப்பாட்டை எதிர்த்து இந்தக் கூறு தினசரி நடத்தும் அற்பமானவையாயினும் எண்ணிலடங்

காத மோதல்கள், தாக்குதல்களின் வடிவில் நம்மை அச்சுறுத்துகிறது. இந்தக் குட்டிமுதலாளித்துவ அராஜகக் கூறினை நாம் தோற்கடித்தாக வேண்டும், தோற்கடிக்கவும் போகிறோம்.

### சோவியத் ஒழுங்கமைப்பின் வளர்ச்சி

இன்று ஸ்தூலமாய்ச் செயல்படுத்தப்பட்டு வரும் வடிவில் சோவியத், அதாவது பாட்டாளி வர்க்க, ஜனநாயகத்தின் சோஷலிசத் தன்மை, முதலில் உழைப்போரும் ஒடுக்கப்பட்டோருமான மக்களே தேர்ந்தெடுப்போராய் இருப்பதிலும் முதலாளித்துவ வர்க்கத்தினர் விலக்கப்பட்டுள்ளதிலும் காணக்கிடக்கிறது. இரண்டாவதாக, தேர்தல்களின் எல்லா அதிகாரவர்க்க முறைமைகளும் தடைவரம்புகளும் ஒழிக்கப்பட்டிருப்பதிலும், மக்கள் தாமே தேர்தல்களின் கிரமத்தையும் காலத்தையும் நிர்ணயித்துக் கொள்வதிலும், தேர்ந்தெடுக்கப்பட்டவர் எவரையும் திருப்பியழைக்கப் பூரண உரிமையுடையோராய் இருப்பதிலும் அது காணக்கிடக்கிறது. மூன்றாவதாக, உழைப்பாளி மக்களின் முன்னணிப் படையின், அதாவது பெருவீதத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பாட்டாளி வர்க்கத்தின் சிறந்த வெகுஜன ஒழுங்கமைப்பு தோற்றுவிக்கப்படுவதில் அது காணக்கிடக்கிறது. இந்த வெகுஜன ஒழுங்கமைப்பு பாட்டாளி வர்க்கம் சுரண்டப்படுவோரான பெருந் திரளான மக்களுக்குத் தலைமை தாங்கி அழைத்துச் செல்லவும், சுயேச்சையான அரசியல் செயற்பாட்டில் அவர்களை ஈடுபடும்படி ஈர்க்கவும், அவர்களுடைய சொந்த அனுபவத்தின் வாயிலாகவே அரசியல் வழியில் அவர்களுக்குப் போதமளிக்கவும் வகை செய்கிறது. மக்கள் அனைவரும் நிர்வாகக் கலையைக் கற்கவும் நிர்வகிக்கத் தொடங்கவும் இவ்வாறு முதன்முதலாய் முற்படுகிறார்கள்.

இவைதாம் இப்பொழுது ருஷ்யாவில் செயல்படுத்தப்படும் ஜனநாயகத்தின் தலையாய சிறப்பியல்புகள். இந்த ஜன

நாயகம் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்ததாகும்; முதலாளித்துவ வழியில் ஜனநாயகம் திரித்துப் புரட்டப்படுவதிலிருந்து முறித்துச் செல்வதாகும்; சோஷலிச ஜனநாயகத்துக்கும் அரசு உலர்ந்து உதிரத் தொடங்குவதற்குரிய நிலைமைகளுக்கும் மாறிச் செல்வதற்குரிய கட்டமாகும்.

ஒழுங்கைக் குலைக்கும் குட்டிமுதலாளித்துவக் கூறு (பாட்டாளி வர்க்கப் புரட்சி ஒவ்வொன்றிலும் தவிர்க்க முடியாதவாறு ஓரளவுக்கு இது தோன்றவே செய்கிறது, நமது நாட்டின் குட்டிமுதலாளித்துவத் தன்மையின் காரணமாகவும் அதன் பிற்பட்ட நிலையின் காரணமாகவும் பிற்போக்கு யுத்தத்தின் விளைவுகள் காரணமாகவும் நமது புரட்சியில் இந்தக் கூறு மிகவும் குறிப்பிடத்தக்கவாறு தோற்றமளிக்கிறது) சோவியத்துகளிலும் தன் முத்திரையைப் பதிக்காது இருக்க முடியாதென்பது கூறுமலே விளங்கும்.

சோவியத்துகளின், சோவியத் ஆட்சியதிகாரத்தின் ஒழுங்கமைப்பை வளர்த்திடுவதற்காக நாம் அயராது பாடுபட வேண்டும். சோவியத்துகளின் உறுப்பினர்களை ''நாடாளுமன்றத்தினராகவோ'', இல்லையேல் அதிகார வர்க்கத்தவர்களாகவோ மாறச் செய்திடும் குட்டிமுதலாளித் துவப் போக்கு இருந்து வருகிறது. சோவியத்துகளின் எல்லா உறுப்பினர்களையும் நிர்வாகத்தின் நடைமுறை வேலைகளில் ஈடுபடும்படிக் கவர்ந்திழுத்து நாம் இந்தப் போக்கை எதிர்த்துப் போராட வேண்டும். பல இடங்களில் சோவியத்துகளின் இலாகாக்கள் படிப்படியாய்க் கமிசாரகங்களுடன் இணைந்து வருகின்றன. ஏழைகள் அனைவரையும் நடைமுறை நிர்வாகப் பணியில் ஈடுபடும்படிக் கவர்ந்திழுப்பதே நமது நோக்கம். இத்திசையில் எடுக்கப்படும் எல்லா நடவடிக்கைகளும்—எவ்வளவுக்கு எவ்வளவு பலதிறப்பட்டனவாய் இருக்கின்றனவோ அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது—கவனமாய்ப் பதிவு செய்யப்பட்டு, ஆராயப்பட்டு, முறைப்படுத்தப்பட்டு, மேலும் விரிவான அனுபவத்தால் சோதிக்கப் பெற்று, சட்ட வடிவமளிக்கப்பட வேண்டும். உழைப்பாளர் ஒவ்வொருவரும் ஆக்க வளா

முள்ள உழைப்பில் தமக்குரிய எட்டு மணி நேரப் பணியைச் செய்து முடித்தபின், சம்பளம் இல்லாமலே அரசுப் பொறுப்புகள் ஆற்றும்படி உறுதி செய்து கொள்வதே நமது நோக்கம். இந்த நிலைக்கு மாறிச் செல்வது மிகவும் கடினமே, ஆயினும் இவ்விதம் மாறிச் செல்வதன் மூலம் தான் சோஷலிசம் இறுதியாய் உறுதி பெறுமாறு உத்தர வாதம் செய்ய முடியும். இந்த மாற்றத்திலுள்ள புதுமை யின் காரணமாகவும் இடர்ப்பாட்டின் காரணமாகவும் அபரிமிதமான பல நடவடிக்கைகள்—தட்டுத்தடுமாறிய வாறு எனலாம் — எடுக்கப்படும்படியும், அபரிமிதமான தவறுகள் இழைக்கப்படும்படியும், ஊசலாடும்படியும் நேரிடும்; இது இயற்கையே இவை இல்லாமல் குறிப் பிடத்தக்க எந்த முன்னேற்றமும் சாத்தியமன்று. தம்மை சோஷலிஸ்டுகளாய்க் கருதிக்கொள்ள விரும்புகிறவர்கள் பலருக்கும் தற்போதைய நிலை விபரீதமானதாய்த் தோன்றக் காரணம் என்னவெனில், அவர்கள் கருத்தியலாகவே முத லாளித்துவத்தை சோஷலிசத்திடமிருந்து வேறுபடுத்திப் பார்த்துப் பழகியவர்கள், இவை இரண்டுக்குமிடையே ஆழ்ந்த முறையில் அவர்கள் ''பாய்ச்சல்'' எனும் சொல்லை வைத்துப் பொருத்துகிறவர்கள் (இவர்களில் சிலர் எங்கெல் சின் நூல்களில் தாம் படித்த சில சிறு பகுதிகளை நினைவு படுத்திக் கொண்டு மேலும் ஆழ்ந்த முறையில் ''அவசியத் தின் ஆட்சியரங்கிலிருந்து சுதந்திரத்தின் ஆட்சியரங்கிற்குப் பாயுதல்''[45] என்னும் தொடரைச் சேர்த்துக் கொள்கிற வர்கள்). சோஷலிஸ்டுகள் எனப்படுவோரான இவர்களில் பெரும்பான்மையோர் சோஷலிசத்தைப் பற்றி ''புத்தகங் களில் படித்திருக்கிறார்கள்'', ஆனால் இது குறித்து கருத் தாழமுள்ள முறையில் சிந்தித்தவர்கள் அல்ல. சோஷ லிசத்தின் போதனாசிரியர்கள் ''பாய்ச்சல்'' என்று கூறிய போது உலக வரலாற்று அளவிலான திருப்பங்களையே மனதிற் கொண்டிருந்தனர், இவ்வகைப்பட்ட திருப்பங்கள் பத்தாண்டுகளுக்கும் அதற்கும் அதிகமான காலங்களுக்கும் கூட நீடிப்பவை என்பதை இவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. அவக்கேடுற்ற ''அறிவுத்துறையினர்''

மத்தியிலிருந்து ஒப்பாரி பாடுவோர் இயற்கையாகவே இக்காலங்களில் எண்ணற்றவர்கள் தோன்றுகின்றனர். அரசியல் நிர்ணயச் சபை குறித்து சிலர் கண்ணீர் வடிக்கின்றனர், முதலாளித்துவக் கட்டுப்பாடு மறைந்துவிட்டதே என்று புலம்புகின்றனர் வேறு சிலர், முதலாளித்துவ அமைப்பு மாண்டுவிட்டதே என்கின்றனர் இன்னும் சிலர், உயர் பண்பாட்டுக்குரிய நிலப்பிரபுக்கள் போய்விட்டார்களே என்றும் ஏகாதிபத்தியப் பேரரசுவாதம் மறைந்துவிட்டதே என்றும் இன்ன பலவாறுகவும் மற்றும் சிலர் அழுது புலம்புகின்றனர்.

பழையவற்றின் சின்னஞ்சிறு துண்டுகள் சில நேரங்களில் புதியவற்றின் குருத்துக்களைக் காட்டிலும் (இக்குருத்துக்கள் எப்பொழுதும் உடனடியாகவே கண்ணுக்குப் புலப்பட்டு விடக் கூடியவை அல்ல) வேகமாய்க் குவிந்துவிடுகின்றன. பழையவற்றின் மிதமிஞ்சிய இத்துண்டுகள் வளர்ச்சித் தொடரிணைப்பு அல்லது சங்கிலியில் மிக முக்கிய அலகைக் கண்டறிந்து கொள்ளும் ஆற்றலை அவசியமாக்கி விடுகின்றன என்பதில்தான், மாபெரும் பாய்ச்சல்களது சகாப்தத்தில் மெய்யாகவே நாட்டத்துக்குரிய அம்சம் அடங்கியுள்ளது. இத்துண்டுகளைக் கூடுமான அளவுக்கு அதிகமாய்க் குவித்திடுவதே, அதாவது பழைய ஏற்பாடுகளில் கூடுமான அளவுக்கு அதிகமானவற்றைத் தகர்த்திடுவதே புரட்சியின் வெற்றிக்கு மிகவும் முக்கியமாகிவிடும் தருணங்கள் வரலாற்றில் தோன்றுகின்றன. போதுமான அளவுக்குத் தகர்த்தாகிவிட்டது, இனி துண்டுகளைத் துடைத்தெறிந்துவிட்டுச் சுத்தப்படுத்தும் சோபையில்லாப் பணியே (குட்டிமுதலாளித்துவப் புரட்சியாளர்களுக்குச் சலிப்பூட்டும் பணியே) அடுத்தபடியாய் நடைபெற வேண்டியதாகிவிடும் தருணங்களும் வருகின்றன. தகர்ந்தவை இன்னும் சரிவர அகற்றப்படாத நிலத்தில் இடிபாடுகளுக்கு இடையே வளர்ந்து கொண்டிருக்கும் புதியவற்றின் குருத்துக்களைக் கவனமாய்ப் பேணிக் காக்க வேண்டியது மிக முக்கிய பணியாகிவிடும் தருணங்களும் வருகின்றன.

பொதுப்பட புரட்சியாளரும் சோஷலிச ஆதரவாளரும் ஆகவோ, கம்யூனிஸ்டாகவோ இருந்தால் மட்டும் போதாது. குறிப்பிட்ட ஒவ்வொரு தருணத்திலும் சங்கிலியில் எந்த ஓர் இணைப்பை உங்கள் முழு பலத்தையும் கொண்டு பற்றிக்கொண்டால் முழுச் சங்கிலியையும் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்ளவும் அடுத்த இணைப்புக்கு மாறிச் செல்வதற்குத் திடமான முறையில் தயாரிப்பு செய்யவும் முடியும் என்பதை நீங்கள் கண்டு கொள்ளும் ஆற்றலுடையவராய் இருக்க வேண்டும். வரலாற்று நிகழ்ச்சிகளின் சங்கிலியில் இணைப்புக்களின் வரிசையும் அவற்றின் வடிவமும் அவை ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பட்டிருக்கும் முறையும் ஒன்றுக்கொன்று அவை வேறுபடும் விதமும் கொல்லுப் பட்டறையாளரால் செய்யப்பட்ட சாதாரண சங்கிலியில் இருப்பதைப் போல் அவ்வளவு எளிதாகவும் அவ்வளவு அர்த்தமற்றவையாகவும் இருப்பதில்லை.

சோவியத்துகளுக்கும் "மக்களுக்கும்" — உழைப்பாளரும் சுரண்டப்படுவோருமான மக்களையே இங்கு குறிப்பிடுகிறோம்—இடையிலுள்ள இணைப்பின் உறுதியும் இந்த இணைப்பின் நெகிழ்வும் குழைவும் ஒழுங்கமைப்பின் சோவியத் வடிவம் அதிகாரவர்க்க வழியில் திரித்துப் புரட்டப்படுவதற்கு எதிரான போராட்டத்துக்குரிய உத்தரவாதமாகும். உலகில் மிகவும் ஜனநாயகமான முதலாளித்துவக் குடியரசுகளிலுங்கூட ஏழைகள் முதலாளித்துவ நாடாளு மன்றத்தைத் "தமது" மன்றமாய்க் கருதுவதில்லை. ஆனால் சோவியத்துகளைப் பெருந்திரளான தொழிலாளர்களும் விவசாயிகளும் தமக்கு அன்னியமானவையாகக் கருதாது "தமது" என்றே கருதுகின்றனர். ஷெய்டெமன் அல்லது ஏறத்தாழ அவரை ஒத்த மார்த்தவ் ரகத்தைச் சேர்ந்த நவீன "சமூக-ஜனநாயகவாதிகள்" சோவியத்துகள் என்றதும் மிரண்டோடுகின்றனர், கனவான்களது முதலாளித்துவ நாடாளுமன்றத்தால் அல்லது அரசியல் நிர்ணயச் சபையினுல் கவரப்படுகின்றனர்—அறுபது ஆண்டுகளுக்கு முன்பு துர்கேனிவ் மிதவாத முடியரசுவாதப் பிரபுக்களது அர

சியலமைப்புச் சட்டத்தால் கவரப்பட்டாரே அது போல; தொப்ரலியூபவ், செர்னிஷேவ்ஸ்கி ஆகியோரது விவசாயி களது ஜனநாயகம் என்றதும் மிரண்டோடினுரே அது போல.

சோவியத்துகள் ''மக்களுக்கு'', உழைப்பாளி மக்க ளுக்கு நெருங்கியவை. இந்த நெருக்கம்தான் திருப்பிய ழைத்தல், அடியிலிருந்து கண்காணிப்பு செய்வதற்கான ஏனைய வழிமுறைகள் ஆகிய விசேஷ வடிவங்களைத் தோற்று விக்கிறது. இப்பொழுது இவ்வடிவங்களை நாம் மிகுந்த ஊக்கத்துடன் வளர்த்துச் செல்ல வேண்டும். உதாரணமாய், பொதுக் கல்விக் கவுன்சில்கள் இத்துறையில் சோவியத் அதிகாரிகளின் செயற்பாடுகள் குறித்து விவாதிக்கவும் கண்காணிப்பு செலுத்தவும் அவ்வப்பொழுது கூட்டப்படும் சோவியத் வாக்காளர்கள், அவர்களது பிரதிநிதிகளின் மாநாடுகள் முழு ஆதரவுக்கும் பரிவுக்கும் உரித்தானவை. சோவியத்துகளை இறுகிக் கெட்டியான, தன்னிறைவு கொண்ட அமைப்புகளாக்குவதைக் காட்டிலும் மடமை வேறு எதுவும் இல்லை. நாம் இரக்கமற்ற உறுதியான அர சாங்கத்தையும், குறிப்பிட்ட வேலைத் துறை களில், முற்றிலும் செயலாக்கப் பணிகளின் குறிப்பிட்ட கூறுகளில், குறிப்பிட்ட வேலையில் தனியாட் களது சர்வாதிகாரத்தையும் எவ்வளவுக்கு எவ்வளவு வைராக்கியமாய் இப்பொழுது நாம் ஆதரித்து நிற்க வேண்டியிருக்கிறதோ, சோவியத் ஆட்சியதிகாரத்தின் கோட்பாடுகளைத் திரித்துப் புரட்டுவதற்கான சாத்தியப் பாட்டுக்குள்ள ஒவ்வொரு சாயலையும் எதிர்த்து நிற்பதற் காகவும் அயராது மீண்டும் மீண்டும் அதிகாரவர்க்கத்தைக் களைந்தெறிவதற்காகவும் அடியிலிருந்து கண்காணிப்பு செலுத்துவதற்குரிய வடிவங்களும் முறைகளும் அவ் வளவுக்கு அவ்வளவு பலதிறப்பட்டனவாய் இருக்க வேண்டும்.

முடிவுரை

சர்வதேச விவகாரங்களில் அசாதாரணமாய்க் கடினமான, சிக்கலான, அபாயகர நிலைமை; சாமர்த்திய உபாயங்களும் பின்வாங்குதலும் இன்றியமையாதனவாகிவிடுதல்; வேதனை வாய்ந்த மந்த கதியில் மேலைய நாடுகளில் முதிர்ச்சியுற்று வரும் புரட்சியின் புத்தெழுச்சிகளுக்காகக் காத்திருக்க வேண்டியுள்ள ஒரு காலகட்டம்; உள்நாட்டில் மந்த கதியிலான கட்டுமானத்துக்கும் தயவுதாட்சணியமின்றிக் கண்டிப்புடன் "இறுக்கிப் பிடித்தலுக்கும்"—குட்டிமுதலாளித்துவக் கண்டிப்பின்மையும் அராஜகமுமாகிய அபாயகரமான கூறினை எதிர்த்து கடுமையான பாட்டாளி வர்க்கக் கட்டுப்பாடு புரிந்திடும் விடாப்பிடியான போராட்டத்துக்குமான காலகட்டம்—சுருக்கமாய்ச் சொல்லுமிடத்து, இவைதாம் சோஷலிசப் புரட்சியில் இப்போது நாம் இருந்து வரும் இந்த விசேஷக் கட்டத்தின் சிறப்பியல்புகள். வரலாற்று நிகழ்ச்சிகளின் சங்கிலியில் இந்த இணைப்பைத்தான் தற்போது நமது முழு பலத்தையும் கொண்டு பற்றிக் கொள்ள வேண்டும், அப்போதுதான் அடுத்த இணைப்புக்கு மாறிச் செல்லுமுன் நம்மை எதிர்நோக்கும் பணிகளைச் செய்து முடிக்கும் ஆற்றலுடையோராக நாம் இருக்க முடியும்; தனிப்பெரும் சுடரொளியால், சர்வதேசப் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் வெற்றிகளது சுடரொளியால் நாம் இந்த அடுத்த இணைப்பை நோக்கிக் கவர்ந்திழுக்கப் படுகிறோம்.

தற்போதைய கட்டத்தின் பிரத்தியேக நிலைமைகளிலிருந்து, அதாவது சாமர்த்திய உபாயங்கள், பின்வாங்குதல், காத்திருத்தல், மந்த கதியில் கட்டியமைத்துச் செல்லுதல், தயவுதாட்சணியமின்றிக் கண்டிப்புடன் இறுக்கிப்பிடித்தல், கடுங் கட்டுப்பாட்டை நிலைநிறுத்தல், கண்டிப்பின்மையைத் தகர்த்திடல்... ஆகியவற்றிலிருந்து பெறப்படும் கோஷங்களைப் "புரட்சிகரமானது" என்பது பற்றிய சாதாரணமான அன்றாடக் கருத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க முயலுங்கள். இதைக் கேட்டதும் "புரட்சியாளர்கள்"

சிலர் புனித ஆவேசம் கொண்டு சீற்றமடைவது குறித்தும், நாம் அக்டோபர் புரட்சியின் பாரம்பரியங்களை மறந்து விடுவதாகவும், முதலாளித்துவ நிபுணர்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்வதாகவும், முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் செய்து கொள்வதாகவும், குட்டிமுதலாளித் துவத் தன்மையினராகவும் சீர்திருத்தவாதிகளாகவும் இருப்பதாகவும், மற்றும் பலவாறுகவும் ''இடிமுழக்க மிட்டு'' நம்மீது வசைமாரி பொழிய முற்படுவது குறித்தும் ஆச்சரியப்படவா வேண்டும்?

பரிதாபத்துக்குரிய இந்த ''புரட்சியாளர்களது'' துர திருஷ்ட நிலை என்னவெனில், இவர்களில் உலகிலே உன்னதமான அடிநோக்கங்களால் உந்தப்படுவோராகவும் சோஷலிச இலட்சியத்துக்கு முழு விசுவாசம் செலுத்து வோராகவும் இருப்போருங்கூட, தனி நிலைமையைப் புரிந்து கொள்ளத் தவறிவிடுகிறார்கள்—பெரு நாசம் விளை வித்த பிற்போக்கு யுத்தத்தால் குதறிக் குலைக்கப்பட்டிருப் பதும் அதிகமாய் முன்னேறிய நாடுகளைக் காட்டிலும் நெடுங் காலம் முன்னதாகவே சோஷலிசப் புரட்சியை ஆரம் பித்துவிட்டதுமாகிய ஒரு பிற்பட்ட நாடு தவிர்க்க வொண் ணுதவாறு கடக்க வேண்டியிருக்கும் குறிப்பிடத்தக்க அளவுக்குக் ''கசப்பான'' நிலைமையைப் புரிந்து கொள்ளத் தவறிவிடுகிறார்கள்; கடினமான ஒரு மாற்றத்தின் கடின மான தருணங்களில் தக்க மனவுரம் இல்லாதவர்களாய் இருக்கிறார்கள். இயற்கையாகவே இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள்தான் நமது கட்சிக்கு எதிரான இந்த வகைப்பட்ட ''அதிகாரபூர்வ'' எதிர்த்தரப்பினராகச் செயல்படுகிறார்கள். கோஷ்டி, வர்க்க ரகங்களினுள் தனிப் பட்ட விதிவிலக்குகள் இருக்கத்தான் செய்கின்றன, எப் போதும் இருக்கவே செய்யும். ஆனால் சமூக ரகங்கள் நிலவி வருகிறவை. முழுக்க முழுக்க பாட்டாளி வர்க்கத் தவராய் இருப்போரைக் காட்டிலும் சிறு உடைமையாள ராய் இருப்போர் வெகுவாய் மிகுதியாயுள்ள நாட்டில் பாட் டாளி வர்க்கப் புரட்சியாளருக்கும் குட்டிமுதலாளித்துவப் புரட்சியாளருக்கும் இடையிலுள்ள வேறுபாடு தவிர்க்க

வொண்ணுதவாறு தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது, அவ்வப்போது மிகவும் கடுமையாகவே வெளிப்படுத்திக் கொள்கிறது. நிகழ்ச்சிகளது ஒவ்வொரு திருப்பத்தின் போதும் குட்டிமுதலாளித்துவப் புரட்சியாளர் தடுமாறவும் ஊசலாடவும் செய்கிருர்; 1917 மார்ச் மாதத்தில் ஆர்வமிக்க புரட்சியாளராய் இருக்கிருர், மே மாதத்தில் ''கூட்டணி ஆட்சியைப்'' புகழ்கிருர், ஜூலை மாதத்தில் போல்ஷிவிக்குகளை வெறுக்கிருர் (அல்லது அவர்களது ''சாகசவாதம்'' குறித்து வருந்துகிருர்), அக்டோபர் இறுதியில் அச்சத்துடன் அவர்களிடமிருந்து விலகி ஒதுங்குகிருர், டிசம்பரில் அவர்களை ஆதரிக்கிருர், முடிவில் 1918 மார்ச், ஏப்ரல் மாதங்களில் இப்படிப்பட்ட ரகத்தினர் பெருவாரியான சந்தர்ப்பங்களில் இறுமாப்போடும் ஏளனத்தோடும் முகத்தைத் திருப்பிக் கொண்டு கூறுகின்றனர்: '''கூட்டிணைவான' வேலை, நடைமுறைக் காரியப் பாங்கு, படிப்படியான மாற்றம் இவற்றின் புகழைப் பாடுவோரில் ஒருவனல்ல நான்''.

இம்மாதிரியான ரகத்தினருக்கு சமூகத் தோற்றுவாய் சிறு உடைமையாளரே—யுத்தத்தின் பயங்கரங்களாலும் திடுமென உண்டாகும் அழிவாலும் முன்பின் கண்டிராப் பஞ்சத்தின், நாசத்தின் கொடுந் துன்பங்களாலும் வதைக்கப்பட்டு வெறித்தனமாய்ச் சீற்றம் கொண்டவரும், கரையேறுவதற்கு, விமோசனத்துக்கு வழி தேடிப் பித்து கொண்ட நிலையில் அங்குமிங்கும் ஓடுகிறவரும், ஒரு நிமிடம் பாட்டாளி வர்க்கத்திடம் நம்பிக்கை கொண்டு அதை ஆதரிப்பவரும், மறு கணம் நம்பிக்கை இழந்து பரிதவிக்கிறவருமான சிறு உடைமையாளர் இவர். இம்மாதிரியான சமூக அடித்தளத்தின் மீது சோஷலிசத்தை அமைத்திட முடியாதென்பதை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும், மறவாதபடி நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும். மிகக் கடினமானதும், கடுமை வாய்ந்ததும் அபாயம் மிக்கதுமாகிய கட்டங்களிலுங்கூட தைரியம் இழக்காமல், மனம் தளராமல், தனக்குரிய பாதையிலிருந்து பிறழாமல் தொடர்ந்து செல்லும் வர்க்கம்தான், உழைப்போரும்

சுரண்டப்படுவோருமான மக்களுக்குத் தலைமை தாங்க வல்லதாகிய ஒரே வர்க்கம். பித்துக் கொண்ட உணர்ச்சித் துடிப்புகளால் நமக்கு எந்தப் பயனும் இல்லை. பாட்டாளி வர்க்கத்தின் உருக்குப் பட்டாளங்களது முறைப்படியான முன்னேற்ற நடையே நமக்கு வேண்டும்.

*1918, ஏப்ரல் 13க்கும் 26க்கும் இடையே எழுதப்பெற்றது*

*1918, ஏப்ரல் 28ல் பிராவ்தா, இதழ் 83லும் அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் குழுவின் இஸ்வேஸ்தியா, இதழ் 85இன் அனுபந்தத்திலும் வெளிவந்தது*

கையொப்பம்: நி. லெனின்

நூல் திரட்டு, தொகுதி 36, பக்கங்கள் 165-208

## "இடதுசாரிச்" சிறுபிள்ளைத்தனமும் குட்டி முதலாளித்துவ மனோபாவமும்

"இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்" ஒரு சிறு குழு தமது கம்யூனிஸ்ட்[46] (இதழ் 1, 1918 ஏப்ரல் 20) என்கிற பத்திரிகையையும், தங்களுடைய "ஆய்வுரைகளையும்" வெளியிட்டிருப்பது, நான் சோவியத் ஆட்சியின் அடுத்த கடமைகள்* பற்றிய சிறுநூலில் வெளியிட்ட கருத்துக்களைத் தெளிவாக உறுதிப்படுத்துகிறது. சில சமயங்களில் "இடதுசாரிக்" கோஷங்களால் மறைக்கப்படுகிற குட்டி முதலாளித்துவ ஒழுங்கீனத்தைத் தாங்கி ஆதரிப்பதின் முற்றான பேதைமைக்கு அரசியல் இலக்கியத்தில் இதைவிட நல்ல ஊர்ஜிதம் இருக்க முடியாது. "இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்" வாதங்களுக்கு பதில் சொல்வது பயனுள்ளதாகும், அவசியமாகும்; காரணம், நாம் கடந்து சென்று கொண்டிருக்கும் காலப் பகுதிக்குச் சிறப்பியல்புகளாக அவையுள்ளன. மிகத் தெளிவுடன் அவை இந்தக் காலப் பகுதியின் "கருப்பொருளின்" எதிர்மறையான பக்கத்தைப் புலப்படுத்துகின்றன. அவை போதனை அளிக்கத் தக்கவையாயிருக்கக் காரணம், நாம் யாரைப் பற்றிப் பேசுகிறோமோ அவர்கள் இந்தக் காலப்பகுதியைப் புரிந்து கொள்ளத் தவறியவர்களில் மிகச் சிறந்தவர்கள்; அதே தவறான கருத்துக்களின் சாதாரணப் பிரதிநிதிகளாகிய சோஷலிஸ்டு-புரட்சியாளர்களைவிட அறிவிலும் விசுவாசத்திலும் எவ்வளவோ உயரத்தில் நிற்பவர்கள்.

---

* இந்நூலில் 113-179 பக்கங்களைப் பார்க்க—(ப-ர்.)

## 1

ஓர் அரசியல் பரிமாணம், அல்லது ஓர் அரசியல் பாத்திரம் வகிக்க உரிமை கோரும் ஒரு குழு என்கிற வகையில் ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்'' குழு தனது ''தற்கால நிலைமை பற்றிய ஆய்வுரைகளை'' முன்வைத்துள்ளது. தன்னுடைய கருத்துக்களுக்கும் போர்த்தந்திரங்களுக்கும் அடிப்படையாயிருக்கிற கோட்பாடுகளைப் பற்றி ஒரு கோர்வையான, முழுமையான விளக்கவுரை தருவது ஒரு நல்ல மார்க்சிய வழக்கமாகும். இந்த நல்ல மார்க்சிய வழக்கம் நம்முடைய ''இடது சாரிகள்'' புரிந்த தவறைப் புலப்படுத்த உதவியுள்ளது; காரணம், ஆர்ப்பாட்டமாகப் பேசாமல் விவாதிக்க முயல்கிற வெறும் முயற்சியே அவர்களது வாதங்களின் தவறை அம்பலப்படுத்துகிறது.

முதன்முதலாக ஒருவருடைய கவனத்தில் பதிவது என்னவெனில், பிரேஸ்த் ஒப்பந்தம் செய்து கொண்டது சரியா தப்பா என்கிற பழைய பிரச்சினை சம்பந்தமாக மறைவான குறிப்புகளும் ஜாடைச் சொற்களும் தட்டிக் கழித்தல்களும் மிகுதியாக இருப்பதுதான். ''இடதுசாரிகள்'' இப்பிரச்சினையை நேரான வழியிலே வைக்கத் தைரியம் கொள்வதில்லை; கோமாளித்தனமான முறையிலே இப்படியும் அப்படியுமாகப் புரள்கிறார்கள்; வாதங்களை அடுக்குகிறார்கள்; காரணங்களைத் தேடிப்பிடிக்கிறார்கள்; ''ஒரு பக்கத்தில் பார்த்தால்'' அப்படி இருக்கக் கூடும் ஆனால் ''இன்னொரு பக்கத்தில் பார்த்தால்'' அப்படி அல்லாமலும் இருக்கக் கூடும் என்று வாதிடுகிறார்கள்; அவர்களின் சிந்தனைகள் எல்லாவிதமான விவகாரங்களையும் தொட்டுத் தொட்டு அலைகின்றன; தங்களைத் தாங்களே தோற்கடித்துக் கொள்வதைப் பார்க்காமலிருக்க எப்போதும் முயன்ற வண்ணம் இருக்கிறார்கள். ''இடதுசாரிகள்'' புள்ளி விவரத்தை மேற்கோள் காட்டுவதில் மிகவும் எச்சரிக்கையாயுள்ளனர்: கட்சிக் காங்கிரசிலே சமாதானத்துக்கு எதிராகப் பன்னிரண்டு ஓட்டுகளும், சாதகமாக இருபத்தெட்டும்

விழுந்தன என்று கவனமாகச் சொல்லுகிறார்கள்[47]; ஆனால் சோவியத்துகளின் காங்கிரசிலுள்ள போல்ஷிவிக் குழுவின் கூட்டத்தில் பதிவான பல நூற்றுக்கணக்கான ஓட்டுகளில் தங்களுக்குப் பத்தில் ஒரு பங்குக்கும் குறைவாகத் தான் கிடைத்தது என்கிற விஷயத்தைக் குறிப்பிடாமல் இங்கிதமாக இருந்து விடுகிறார்கள்[48]. ''களைத்துப்போன, வர்க்கத் தன்மை இழந்த பேர்வழிகளால்'' சமாதானத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது; ஆனால் ''பொருளாதார வாழ்வில் அதிக வீர்யமும் எப்போதும் ரொட்டி உள்ள தெற்கத்தியப் பிராந்தியங்களின் தொழிலாளர்களும் விவசாயிகளும்'' அதை எதிர்த்தார்கள் என்னும் ஒரு ''தத்துவத்தைப்'' புனைந்திருக்கிறார்கள்.... இதைப் பற்றிச் சிரிக்காமல் வேறென்ன செய்ய முடியும்? சமாதானத்திற்குச் சாதகமாக அகில உக்ரேய்ன சோவியத்துகள் காங்கிரசின் ஓட்டெடுப்பு பற்றியோ, சமாதானத்துக்கு எதிராக ருஷ்யாவிலுள்ள எடுத்துக்காட்டான குட்டி முதலாளித்துவ, வர்க்கத்தன்மையிழந்த அரசியல் அவியலின் (இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின்) சமுதாய, வர்க்கத் தன்மை பற்றியோ ஒரு வார்த்தை இல்லை. முற்றுகச் சிறுபிள்ளைத்தனமான முறையிலே, நகைப்புக்கிடமான ''விஞ்ஞான பூர்வமான'' விளக்கங்கள் மூலமாக அவர்கள் தங்களுடைய திவாலான நிலையை மறைக்கவும், உண்மைகளை மறைக்கவும் முயல்கிறார்கள்; அவற்றை வெறுமனே மறுபரிசீலனை செய்தாலே போதும்—கட்சியிலுள்ள வர்க்கத் தன்மை இழந்த, படிப்பாளித் தன்மை கொண்ட ''சிறந்த பகுதி'', உயர்ந்தோர் குழுதான் புரட்சிகரமான குட்டி முதலாளித்துவ வாய்ச்சொற்களால் புனைந்த கோஷங்களைக் கொண்டு சமாதானத்தை எதிர்த்தது என்றும், சமாதானத் தீர்மானத்தை நிறைவேற்றியவர்கள் திரளான தொழிலாளர்களும் சுரண்டப்பட்ட விவசாயிகளும் தான் என்றும் காட்டிவிடும்.

போர், சமாதானம் குறித்த பிரச்சினைபற்றிய ''இடதுசாரிகளின்'' மேற்சொன்ன எல்லாப் பிரகடனங்களையும் மழுப்பல்களையும் மீறிக்கொண்டு பச்சையான, அப்பட்ட

மான உண்மை வெளிப்படுகிறது. ''சமாதான உடன்பாடு, ஏகாதிபத்தியவாதிகள்'' உலக ரீதியிலே பேரம் செய்துகொள்ளப் பார்த்த முயற்சிகளைப் தற்சமயத்துக்கு பலவீனப்படுத்தியுள்ளது'' என்று ஆய்வுரைகளின் ஆசிரியர்கள் ஒத்துக்கொள்ளக் கட்டாயப்படுத்தப் பட்டிருக்கிறார்கள் (இதை ''இடதுசாரிகள்'' பிசகாக வரையறுக்கிறார்கள்; ஆனால் பிசகுகளைக் குறிக்க இது இடமல்ல). ''சமாதான உடன்பாடு ஏற்கெனவே ஏகாதிபத்திய வல்லரசுகளிடையேயுள்ள சச்சரவுகளை மேலும் கூராக்கி விட்டிருக்கிறது''.

ஆம், இது உண்மை. இது நிர்ணயமான முக்கியத்துவம் உடைய விஷயம். எனவேதான், சமாதானம் செய்து கொள்வதை எதிர்த்தவர்கள் எதார்த்தத்தில் ஏகாதிபத்திய வாதிகளின் கைப்பாவைகளாக இருந்தார்கள்; ஏகாதிபத்தியவாதிகள் அவர்களுக்காக விரித்த வலையில் போய் விழுந்தார்கள். ஏனெனில், உலக சோஷலிசப் புரட்சி வெடிக்கும் வரை, அது பல நாடுகளைத் தழுவிக்கொண்டு, சர்வதேச ஏகாதிபத்தியத்தையே வீழ்த்தும் அளவுக்குப் போதிய பலம் பெறும் வரை, ஒரு நாட்டில் (குறிப்பாக ஒரு பிற்பட்ட நாட்டில்) வெற்றி பெற்ற சோஷலிஸ்டுகளின் நேரடியான கடமை ஏகாதிபத்திய அசுரர்களுடன் சண்டைபோட ஒத்துக்கொள்ளக் கூடாது என்பதே. சோஷலிஸ்டுகளின் கடமை சண்டையைத் தவிர்ப்பது, ஏகாதிபத்தியவாதிகளிடையேயுள்ள சச்சரவுகள் அவர்களை மேலும் அதிகமாகப் பலவீனப்படுத்தும் வரை, மற்ற நாடுகளில் புரட்சி இன்னமும் அதிகமாக நெருங்கி வரச் செய்கிற வரை காத்திருப்பதே ஆகும். நமது ''இடதுசாரிகள்'' இந்தச் சாதாரண உண்மையை ஜனவரியிலும் பிப்ரவரியிலும் மார்ச்சிலும் புரிந்து கொள்ளவில்லை. இன்று கூட அவர்கள் இதைப் பகிரங்கமாக ஒத்துக்கொள்ள அஞ்சுகிறார்கள். எனினும், ''ஒரு புறத்தில் அதை ஒத்துக்கொண்டாக வேண்டும், மறு புறத்தில் இதை ஏற்றுக்கொண்டாக வேண்டும்'' என்கிற குழப்பமான வாதத்தின் மூலமாக அது வெளிச்சத்துக்கு வரவே செய்கிறது.

''இடதுசாரிகள்'' தம்முடைய ஆய்வுரைகளில் எழுது வதாவது:

''வரப்போகும் வசந்தகாலத்திலும் கோடைகாலத் திலும் ஏகாதிபத்திய அமைப்பின் வீழ்ச்சி தொடங்கியே தீர வேண்டும். யுத்தத்தின் இன்றையக் கட்டத்தில் ஜெர் மன் ஏகாதிபத்தியத்துக்கு வெற்றி கிடைக்குமேயானுல், இந்த வீழ்ச்சி தள்ளிப் போடப்படுவது மட்டுமே நடக்க முடியும். ஆனுல், அது இன்னும் அதிகத் தீவிரமான வடிவங் களிலே தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும்''.

இந்த வரையறுப்பு விஞ்ஞானத்தோடு விளையாடுகிற போதிலும் இன்னும் அதிகச் சிறுபிள்ளைத்தனமான முறை யிலே பிசகாயுள்ளது. எந்த ஆண்டில், வசந்தகாலத்திலா, கோடைக்காலத்திலா, மாரிக்காலத்திலா, குளிர்காலத்திலா ''வீழ்ச்சி தொடங்க வேண்டும்'' என்று நிர்ணயிக்க முடிகிற ஒன்றே விஞ்ஞானம் என்ற பொருளிலே விஞ் ஞானத்தைப் ''புரிந்து கொள்வது'' குழந்தைகளின் இயல்புதானே!

நிர்ணயிக்க முடியாததை நிர்ணயிக்க முயலும் நகைப் புக்கிடமான, வீணுன முயற்சிகள் இவை. ஒரு ''அமைப் பின்'' ஏதாவதொரு ''வீழ்ச்சி'' என்றைக்குத் ''தொடங்கித் தீர வேண்டும்'' என்று எந்தப் பொறுப்புள்ள அரசியல் வாதியும் என்றைக்கும் சொல்லமாட்டான் (அதிலும் அந்த அமைப்பின் வீழ்ச்சி ஏற்கெனவே தொடங்கிவிட்டது, எந் தெந்தக் குறிப்பிட்ட நாடுகளில் எந்தத் தருணத்தில் புரட்சி வெடிக்கும் என்பது இன்று பிரச்சினை ஆகியிருக்கும் போது). இந்தச் சிறுபிள்ளைத்தனமான நிர்க்கதியான வரை யறுப்பினூடே ஒரு மறுக்க முடியாத உண்மை முட்டிக் கொண்டு வெளிப்படுகிறது; அதாவது, மேலும் முன் னேறிய பிற நாடுகளில் புரட்சி வெடிப்பது, ஒரு மாதத் துக்கோ ஒன்றரை மாதத்துக்கோ முன்பு இருந்ததைவிட, இன்று, சமாதானம் செய்துகொண்டதைத் தொடர்ந்து வந்த ''ஓய்வின்'' தொடக்கத்திற்குப் பிறகுள்ள ஒரு மாதத்தில், மேலும் நெருங்கி வந்திருக்கின்றது என்பதே.

இதற்கு என்ன பொருள்?

சமாதான ஆதரவாளர்களின் நிலை முற்றிலும் சரி, நிகழ்ச்சிகளின் போக்கு அவர்களின் நிலையை நியாயப் படுத்தி இருக்கிறது என்பதே இதன் பொருள். சக்திகளின் ஒப்புநிலையை ஒருவன் கணக்கிடத் திறன் பெற்றிருக்க வேண்டும்; சோஷலிசம் இன்னும் பலவீனமாக இருக்கையில், சண்டையின் வாய்ப்புக்கள் சோஷலிசத்துக்கு எதிரானவை யாக வெளிப்படையாக இருக்கையில், சோஷலிசத்துக்கு எதிரான சண்டையை ஏகாதிபத்தியவாதிகளுக்கு மேலும் சுலபமாக்கித் தருவதின் மூலம் ஒருவன் ஏகாதிபத்திய வாதிகளுக்கு உதவக்கூடாது என்று படாடோபப் பிரியர் களின் மண்டையிலே உறைக்கும்படி அவர்கள் அடித்துச் சொல்லி வந்தது சரிதான்.

ஆனால், நமது ''இடதுசாரிக்'' கம்யூனிஸ்டுகள்— இவர்கள் தங்களைப் ''பாட்டாளி வர்க்கக்'' கம்யூனிஸ்டு கள் என்றும்கூட அழைத்துக் கொள்ள விரும்புகிறார்கள்; காரணம், பாட்டாளி வர்க்கத் தன்மை இவர்களிடமிருப் பது மிகக் குறைவே, குட்டி முதலாளித்துவத் தன்மையே நிறைய இருக்கிறது—சக்திகளின் ஒப்புநிலையைப் பற்றி, அதைக் கணக்கிடுவது பற்றி சிந்திக்கச் சக்தியற்றிருக்கிறார் கள். இது தான் மார்க்சியத்தின், மார்க்சியப் போர்த்தந் திரத்தின் கருப்பொருள், ஆனால் இவர்கள்,

''... ஒரு செயலற்ற 'சமாதான மனோபாவத்தில்' மக்கள் திரள் நிலையாக ஊறியிருக்கிறது என்பது அரசியல் நிலைமையின் ஒரு புறநிலை உண்மையாகும்...''

என்கிற ''பெருமிதமான'' சொற்களைக் கொண்டு, அந்தக் ''கருப்பொருளைத்'' துச்சமாக ஒதுக்கித் தள்ளி விடுகிறார் கள்.

முத்தான சொல்! மூன்றாண்டுகள் நடந்த, ஒரு மிகமிக வேதனை நிறைந்த, பிற்போக்கான யுத்தத்துக்குப் பிறகு, சோவியத் ஆட்சியின் காரணத்தாலும் வெறும் வாய்ச் சொல் வீச்சில் என்றைக்கும் இறங்காத அதன் சரியான போர்த்தந்திரத்தின் விசேஷத்தாலும், மக்கள் ஒரு மிக மிகக் குறுகிய கால, நிலையற்ற, போதவே போதாத

ஒய்வைப் பெற்றுர்கள். ஆனுல், ''இடதுசாரி'' படிப்பாளி குழந்தைகளோ, தன்மீது தானே மோகங்கொண்ட ஒரு நார்சிசசின் மேல் மினுக்கோடு, ஆழ்ந்தரீதியிலே பிரகடனப் படுத்துகிருர்கள்: ''ஒரு செயலற்ற (!!! ???) சமாதான மனேபாவத்தில் மக்கள் திரள் (???) நிலையாக ஊறியிருக் கிறது (!!!)'' என்று. ''இடதுசாரிகளின்'' பத்திரிகையை அல்லது சஞ்சிகையைக் **கம்யூனிஸ்ட்** என்று அழைப்பதற்குப் பதிலாக **ஷ்லாஹ்திச்**[49] என்று தான் அழைத்திருக்க வேண்டும் என்று கட்சிக் காங்கிரசில் நான் சொன்னது சரிதானே?

உழைக்கிற, சுரண்டப்படுகிற மக்களின் வாழ்க்கை நிலைமைகளையும் மனேபாவத்தையும் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது புரிந்து கொண்டிருக்கும் ஒரு கம்யூனிஸ்டு ''சமாதான மனேபாவம்'' ''செயலற்றது'' என்று பிர கடனம் செய்து, அட்டைக் கத்தியைச் சுழற்றி, அதுவே ''செயல்புரிவது'' என்று நமபுகிற ஒரு பிரபுவின் அல்லது ஷ்லாஹ்திச்சின் மனேபாவத்தோடு கூடிய குணக்குறிப் பான வர்க்கத் தன்மையிழந்த, குட்டி முதலாளித்துவ படிப்பாளியின் பார்வை நிலைக்கு இறங்கிவிட முடியுமா? ஏனெனில், மூன்றுண்டு காலமாக நடந்த இரத்தக் களரி யினல் முற்றுகக் களைத்துப் போன மக்கள் ஓய்வு இன்றி சண்டை போட்டுக் கொண்டேயிருக்க முடியாது, மேலும் யுத்தத்தை தேச அளவிலே நடத்த முடியாவிட்டால் அதுவே அடிக்கடி பாட்டாளி வர்க்கத்தின் இரும்புக் கட்டுப்பாட்டுக்குப் பதிலாகச் சிறு உடைமையாளர்களுக்கே உரித்தான உடைந்து நொறுங்கிப்போகிற மனேபாவத்தைத் தான் உண்டாக்குகிறது என்கிற, எல்லோருக்கும் தெரிந்த, உக்ரேய்னுவில் நடக்கும் யுத்தம் இதற்கு இன்னொரு கூடுதலான சான்றுகப் பயன்பட்டுள்ள உண்மையை நமது ''இடதுசாரிகள்'' புறக்கணிக்கிற போது, அட்டைக் கத்தியைத்தான் சுழற்றி வீசுகிருர்கள். நமது ''இடதுசாரி களுக்குப்'' பாட்டாளி வர்க்க இரும்புக் கட்டுப்பாடு பற்றி யும், அது எப்படி சாதிக்கப்படுகிறது என்பது பற்றியும் ஒன்றுமே தெரியாது, அவர்கள் வர்க்கத்தன்மையிழந்த

குட்டிமுதலாளித்துவ படிப்பாளியின் மனோபாவத்தில் முற்றுக ஊறிப்போயிருக்கிறார்கள் என்று கம்யூனிஸ்டின் ஒவ்வொரு பக்கமும் புலப்படுத்துகிறது.

## 2

யுத்தத்தைப் பற்றிய ''இடதுசாரிகளின்'' இந்த வாய்ச்சொற்கள் எல்லாம் சிறுபிள்ளைத்தனமான ஆர்வப் பேச்சுதான் என்றும், அவை சென்ற காலத்தைப் பற்றியவை, ஆதலால் அரசியல் குறிப்பின் சாயல் எதுவும் இல்லாதவை என்றும் ஒருக்கால் சொல்ல முடியுமா? நமது ''இடதுசாரிகளைக்'' காக்கும் வகையில் சிலர் முன்வைக்கும் வாதம் இது. ஆனால் இது தவறு. அரசியல் தலைமைக்கு வர விரும்புகிறவர்கள் அரசியல் பிரச்சினைகளைப் பற்றி தீர்க்கமாகச் சிந்திக்கத் திறன் பெற்றிருக்க வேண்டும்; இந்தத் திறனில்லாமை ''இடதுசாரிகளை'' ஓர் ஊசலாட்டமான கொள்கையைப் பிரசாரம் செய்யும் முதுகெலும்பற்ற பிரசாரகர்களாக மாற்றிவிடுகிறது; இந்தக் கொள்கைக்குப் புறநிலையில் ஒரேயொரு விளைவுதான் இருக்க முடியும், அதாவது ''இடதுசாரிகள்'' தங்களுடைய ஊசலாட்டத்தின் மூலமாக, வெளிப்படையாகத் தனக்குப் பாதகமாக இருக்கக் கூடிய ஒரு யுத்தத்தில் இறங்குமாறு ருஷ்ய சோவியத் குடியரசுக்கு ஆத்திரமூட்டிவிட ஏகாதிபத்தியவாதிகளுக்கு உதவி வருகிறார்கள், நம்மை ஒரு வலையில் இழுத்துச் சிக்க வைக்க அவர்கள் ஏகாதிபத்தியவாதிகளுக்கு உதவி வருகிறார்கள். இதைக் கேளுங்கள்:

''... அனைத்துலகப் புரட்சிப் பாதையைக் கைவிடுவதால், இடையறாது சண்டையைத் தவிர்த்து சர்வதேச மூலதனத்தின் நிர்ப்பந்தத்துக்குப் பணிவதால், 'உள்நாட்டு மூலதனத்துக்குச்' சலுகைகள் கொடுப்பதால், ருஷ்யாவின் தொழிலாளி வர்க்கப் புரட்சி 'தன்னைத்தானே காத்துக் கொள்ள' முடியாது.

''இந்தக் கோணத்திலிருந்து பார்க்கையில், சர்வதேசப் புரட்சிப் பிரசாரத்தைச் சொல்லாலும் செயலாலும்

ஒன்றுபடுத்துகிற ஒரு திண்ணமான வர்க்க சர்வதேசக் கொள்கையை மேற்கொள்வதும், சர்வதேச சோஷலிசத்தோடு (சர்வதேச முதலாளித்துவ வர்க்கத்தோடு அல்ல) இருக்கும் உள்ளார்ந்த தொடர்பைப் பலப்படுத்துவதும் அவசியமாகும்....''

உள்நாட்டுக் கொள்கை மீது இங்கு தாக்குதல்கள் தொடுக்கப்பட்டிருப்பதைத் தனியாகப் பார்ப்போம். ஆனால் வெளிநாட்டுக் கொள்கைத் துறை பற்றிய அட்டகாசமான வாய்ச்சொல் வீச்சையும் — செய்கைகளில் பயந்தாங்கொள்ளித்தனத்தையும் பரிசீலியுங்கள். ஏகாதிபத்திய ஆத்திரமூட்டலுக்குக் கருவியாக இருக்க விரும்பாதவர்கள், அதன் வலையில் விழ விரும்பாதவர்கள், எல்லோரும் **கட்டாயமாக இன்று** கடைப்பிடிக்க வேண்டிய போர்த்தந்திரங்கள் என்ன? இந்தக் கேள்விக்கு ஒவ்வொரு அரசியல் வாதியும் ஒரு தெளிவான, நேரான பதில் கொடுத்துத் தீர வேண்டும். நம் கட்சியின் பதில் நன்கு தெரிந்ததே: இந்தத் தருணத்தில் நாம் **பின்வாங்க** வேண்டும், சண்டையைத் தவிர்க்க வேண்டும். நமது ''இடதுசாரிகள்'' இதை மறுத்துச் சொல்லத் தைரியமின்றி, ஒரு ''திண்ணமான வர்க்க சர்வதேசக் கொள்கை'' என்று காற்றிலே அம்பு போடுகிறார்கள்!!

இது மக்களை ஏமாற்றுவதாகும். இப்போது சண்டை போட வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் அதைப் பகிரங்கமாகச் சொல்லுங்கள். இப்போது **பின்வாங்கக் கூடாது** என்று நீங்கள் விரும்பினால் அதையும் பகிரங்கமாகச் சொல்லுங்கள். இல்லையேல், உங்களுடைய எதார்த்தத்தில் நீங்கள் ஏகாதிபத்திய ஆத்திரமூட்டலுக்குரிய ஒரு கருவியே ஆவீர்கள். மேலும், உங்களுடைய அகநிலை ''மனோபாவம்'' ஜன்னி கொண்ட குட்டி முதலாளிக்கு உரியது; அவன் இறுமாந்து நடப்பான்; வீறாப்புடன் பேசுவான்; ஆனால் அவனுக்கு ஊகமாகத் தெரியும் — ஒழுங்காகவே பின்வாங்குவதிலும் பின்வாங்க முயல்வதிலும் பாட்டாளியின் நிலை சரி என்று. நமக்குப் பலமில்லாததால் நாம் (மேற்கத்திய, கிழக்கத்திய ஏகாதிபத்தியங்கள் முன்னே)

பின்வாங்கித் தீரவேண்டும், ஊரால் பிரதேசம் வரைக்கும் கூட பின்வாங்கித் தீரவேண்டும் என்று பாட்டாளி விவாதிப் பது சரி என்று அவனுக்கு ஊகமாகப் புரியும்; ஏனெனில் மேற்கே புரட்சி பக்குவப்பட்டு வருகையில்—புரட்சி ''வசந்த காலத்திலோ கோடைக் காலத்திலோ'' தொடங்க வேண்டுமென்று ''கட்டாயம்'' ஒன்றுமில்லை (''இடதுசாரி களின்'' வெற்றுப் பேச்சு இருந்த போதிலும் சரி), ஆனால் அது மேலும் மேலும் நெருங்கி வந்துகொண்டே இருக்கிறது; ஒவ்வொரு மாதமும் அது நிகழ்வதற்குரிய சாத்தியப்பாடு அதிகமாகி வருகிறது — நமக்கு நேரம் தேடிக் கொள்வதற்கு ஒரே வாய்ப்பு இந்த ஒன்றிலே தான் உள்ளது.

''இடதுசாரிகளுக்கு'' அவர்களுக்கே ''சொந்தமான'' கொள்கை ஏதுமில்லை. இந்தத் தருணத்தில் பின்வாங்கத் தேவையில்லை என்று பிரகடனம் செய்ய அவர்களுக்குத் தைரியம் கிடையாது. அவர்கள் இப்படியும் அப்படியும் புரள்கிறார்கள், நெளிகிறார்கள், சொற்களோடு விளையாடு கிறார்கள்; இந்தத் தருணத்தில் சண்டையைத் தவிர்ப்பது என்கிற பிரச்சினைக்குப் பதிலாகத் ''தொடர்ச்சியாகச்'' சண்டையைத் தவிர்ப்பது என்கிற பிரச்சினையை வைக் கிறார்கள். ''செயலால் சர்வதேசப் புரட்சிப் பிரசாரம்'' என்று நுரைக் குமிழிகளை ஊதிவிடுகிறார்கள்!! இதற்கு அர்த்தம் என்ன?

இதற்கு அர்த்தம் இரண்டில் ஒன்றாகத்தான் இருக்க முடியும்: ஒன்று, அது வெறும் நொஸ்திரியோவ்வாதம்,[50] அல்லது சர்வதேச ஏகாதிபத்தியத்தைத் தூக்கியெறி வதற்கு ஒரு தாக்குதல் யுத்தம். இப்படிப்பட்ட முட்டாள் தனத்தைப் பகிரங்கமாகச் சொல்ல முடியாது; எனவே தான் ஒவ்வொரு அரசியல் உணர்வுள்ள பாட்டாளியிட மும் கேலிக்கு ஆளாவதிலிருந்து தப்பிக்கப் புகலிடம் தேடிப் படாடோபமான வெற்றுச் சொற்களின் பின்னே ''இடதுசாரிக்'' கம்யூனிஸ்டுகள் ஒளிந்து கொள்ளும்படி நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். ''செயலால் சர்வதேசப் புரட்சிப் பிரசாரம்'' என்கிற சொற்றொடரின் அர்த்தத்தை,

உண்மையான அர்த்தத்தை, கவனமற்ற வாசகன் பார்க்க மாட்டான் என்று அவர்கள் நம்புகிறார்கள்.

படாடோபமான வாய்ச்சொற்களை எடுத்து வீசுவது வர்க்கத்தன்மை இழந்த குட்டி முதலாளித்துவப் படிப்பாளியின் பண்பாகும். ஸ்தாபன ரீதியாகத் திரண்டுள்ள கம்யூனிஸ்டுகளாகிய பாட்டாளிகள் இந்தப் ''பழக்கத்தைக்'' கேலி செய்வார்கள், பொறுப்புள்ள எல்லாப் பதவிகளிலிருந்தும் குறைந்த பட்சம் இவர்களை வெளியேற்றி நிச்சயமாகத் தண்டிப்பார்கள். மக்களுக்குக் கசப்பான உண்மையை எளிதாக, தெளிவாக, நேராகச் சொல்லித்தீரவேண்டும்; ஜெர்மனியில் யுத்தம் வேண்டும் என்று கோரும் கட்சியின் கை மீண்டும் மேலோங்குவது சாத்தியமே, அநேகமாகச் சாத்தியமே (அதாவது, நமக்கு எதிராகத் தாக்குதல் உடனடியாகத் தொடங்கும்); ஜெர்மனி ஜப்பானுடன் அதிகார பூர்வமான ஒப்பந்தம் மூலமாகவோ, ரகசிய ஒப்பந்தம் மூலமாகவோ, ஒன்று சேர்ந்துகொண்டு நம்மைப் பிளவு படுத்தி நெரித்துக் கொல்வது சாத்தியமே, அநேகமாகச் சாத்தியமே. வாய்வீருப்புக்காரர்களின் பேச்சை நாம் கேட்க விரும்பாவிட்டால், நம்முடைய போர்த்தந்திரம், காத்திருப்பது, நீட்டித் தள்ளிப் போட்டுக் கொண்டே போவது, சண்டையைத் தவிர்ப்பது, பின்வாங்குவது என்று தான் இருக்க வேண்டும். வாய்வீருப்புக்காரர்களை நாம் உதறித் தள்ளிவிட்டு உண்மையான உருக்குக் கட்டுப்பாட்டை, உண்மையான பாட்டாளி வர்க்கக் கட்டுப்பாட்டை, உண்மையான கம்யூனிஸ்டுக் கட்டுப்பாட்டை உருவாக்குவதன் மூலமாக நம்மை ''இறுக்கிவிட்டுக் கொண்டால்'', பல மாத அவகாசம் பெறுவதற்கு நமக்கு ஒரு நல்ல வாய்ப்பு இருக்கும். அதன் பிறகு, நிலைமை மோசத்திலும் படுமோசமாகப் போகுமேயானல், ஊரால் பிரதேசத்துக்கும்கூடப் பின்வாங்குவதின் மூலமாக நமது நேச சக்திகள் (சர்வதேசப் பாட்டாளி வர்க்கம்) நம் உதவிக்கு வருவதை, புரட்சிகரமான வெடிப்புகள் தொடங்குவதற்கும் புரட்சிக்கும் உள்ள தூரத்தை (விளையாட்டு

மொழியிலே சொல்லுவதென்றால்) ''கடந்து வருவதை'', மேலும் சுலபமாக்கித் தருவோம்.

இவைதான், இவை மட்டுமேதான், உண்மையிலே சர்வ தேச சோஷலிசத்தின் தற்காலிகமாகத் தனிமைப்பட்டுள்ள ஒரு பகுதிக்கும் பிற பகுதிகளுக்கும் உள்ள தொடர்பைப் பலப்படுத்த முடிகிற போர்த்தந்திரமாகும். ஆனால் அன்புக்குரிய ''இடதுசாரிக்'' கம்யூனிஸ்டுகளே, உண்மையைச் சொல்வதென்றால் உங்களுடைய வாதங்களெல்லாம் ஒரு படாடோபமான சொல்லுக்கும் மற்றொரு படாடோபமான சொல்லுக்கும் இடையே ''உள்ளார்ந்த தொடர்பைப் பலப்படுத்துவதிலேதான்'' கொண்டுபோய் விடுகின்றன. இது ஒரு மோசமான ''உள்ளார்ந்த தொடர்பு''!

எனது அருமை நண்பர்களே, இப்படிப்பட்ட விபத்து உங்களுக்கு வாய்த்ததின் காரணத்தை நான் தெளிவாக்குகிறேன். அதற்குக் காரணம், புரட்சிகரமான கோஷங்களைச் சிந்தித்துத் தெளிவடைவதற்குப் பதிலாக மனப்பாடம் செய்து நினைவிலே வைத்துக் கொள்வதிலேதான் நீங்கள் அதிகமாக முயற்சியைச் செலவழிக்கிறீர்கள். இது உங்களை ''சோஷலிஸ்டு தந்தை நாட்டுப் பாதுகாப்பு'' என்பதை மேற்கோள் குறிபோட்டு எழுதுவதிலே கொண்டு போய் விடுகிறது; அந்த மேற்கோள் குறிகள் ஒருக்கால் நீங்கள் நையாண்டி செய்ய முயல்வதைக் குறிக்கும் பொருள் உள்ளவை போலும், ஆனால் அவை நீங்கள் மூளை குழம்பிப் போனவர்கள் என்று தான் உண்மையிலே நிரூபிக்கின்றன. ''பாதுகாப்புவாதம்'' ஏதோ இழிவான, வெறுக்கத்தக்க ஒன்று என்று கருதுவதே உங்களுக்குப் பழக்கமாகி விட்டிருக்கிறது; இதைப் பயின்றீர்கள்; மனப்பாடம் செய்துகொண்டீர்கள். இதை மிகவும் நன்றாக நீங்கள் மனப்பாடம் செய்துகொண்டிருப்பதனால், உங்களில் சிலர், ஓர் ஏகாதிபத்திய சகாப்தத்தில் தந்தை நாட்டைப் பாதுகாப்பது அனுமதிக்கத்தக்கதல்ல என்ற பொருளில் முட்டாள்தனமாக பேசத் தொடங்கியிருக்கிறீர்கள் (உண்மையிலே சொன்னால், முதலாளித்துவ வர்க்கம் நடத்துகிற ஓர் ஏகாதிபத்திய, பிற்போக்கான யுத்தத்தில்

மட்டுமே அது அனுமதிக்கத்தக்கதல்ல). ஆனால் ''பாதுகாப்பு வாதம்'' ஏன், எப்பொழுது, வெறுக்கத்தக்கது என்று நீங்கள் தீர்க்கமாகச் சிந்திக்கவில்லை.

தந்தை நாட்டுப் பாதுகாப்பை அங்கீகரிப்பதின் பொருள் யுத்தத்தின் நியாயத்தையும் நீதியையும் அங்கீகரிப்பதாகும். நியாயமும் நீதியும் எந்தப் பார்வைநிலையிலிருந்து? சோஷலிசப் பாட்டாளி வர்க்கத்தின், அதன் விடுதலைக்குரிய போராட்டத்தின் பார்வை நிலையிலிருந்து மட்டுமே. வேறெந்த நிலையையும் நாம் அங்கீகரிக்கவில்லை. ஒரு வர்க்கம் என்ற முறையிலே தன்னுடைய ஆட்சியைப் பலப்படுத்திக் கொள்ளும் நோக்கோடு சுரண்டும் வர்க்கம் யுத்தம் நடத்தினால் அது கொலைக் குற்ற யுத்தம். அப்படிப்பட்ட ஒரு யுத்தத்தில் ''பாதுகாப்புவாதம்'' என்பது சோஷலிசத்தை ஈனத்தனமாகக் காட்டிக் கொடுப்பதாகும். பாட்டாளி வர்க்கம் தன் சொந்த நாட்டில் முதலாளித்துவ வர்க்கத்தை வெற்றிகொண்ட பிறகு சோஷலிசத்தைப் பலப்படுத்தும், வளர்க்கும் நோக்குடன் யுத்தத்தை நடத்தினால், அப்படிப்பட்ட யுத்தம் நியாயமானது, ''புனிதமானது''.

1917, அக்டோபர் 25ந் தேதியிலிருந்து நாம் ''பாதுகாப்புவாதிகளாகத்'' தான் இருந்து வருகிறோம். ஒரு தடவைக்கு மேலாகவே இதை நான் திட்டவட்டமாகச் சொல்லியிருக்கிறேன். இதை மறுக்க உங்களுக்கு தைரியம் இல்லை. சர்வதேச சோஷலிசத்தோடு ''தொடர்பைப் பலப்படுத்திக் கொள்ளும்'' நலன்களுக்காகவே தான் சோஷலிஸ்டு தந்தை நாட்டைப் பாதுகாப்பது நம் கட்டாயக் கடமையாகும். பாட்டாளி வர்க்கம் வெற்றிபெற்றுள்ள ஒரு நாட்டின் பாதுகாப்பைப் பொறுப்பின்றிப் பார்க்கிறவரே சர்வதேசச் சோஷலிசத்தோடு உள்ள தொடர்பைத் துண்டித்து விடுகிறார். ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின் பிரதிநிதிகளாக நாம் இருந்தபோது, ஏகாதிபத்திய யுத்தத்தில் தந்தை நாட்டைப் பாதுகாக்கும் விஷயத்தில் நாம் விளையாட்டுத்தனமான கண்ணோட்டத்தை மேற்கொள்ளவில்லை. அப்படிப்பட்ட பாதுகாப்பைக் கோட்பாட்டின் வழி நின்று

நாம் எதிர்த்தோம். இன்று நாம் சோஷலிசத்தை அமைக்கத் தொடங்கி இருக்கும் ஆளும் வர்க்கத்தின் பிரதிநிதிகளாகி விட்டிருப்பதினுலே, நாட்டின் பாதுகாப்பு விஷயத்தில் பொறுப்புள்ள கண்ணேட்டத்தை எல்லோரும் மேற்கொள்ளுமாறு கோருகிறேம். மேலும், நாட்டின் பாதுகாப்பு விஷயத்தில் பொறுப்புள்ள கண்ணேட்டத்தை மேற்கொள்வது என்பதற்குப் பொருள், அதற்காக முற்றுகத் தயாரிப்பு செய்வது, சக்திகளின் ஒப்புநிலையைக் கணக்கிட்டுக் கொள்வது ஆகும். நம் சக்திகள் வெளிப்படையாகவே சிறிதாக இருந்தால், பாதுகாப்புக்குரிய தலைசிறந்த வழி நாட்டின் உள்பகுதிக்குப் பின்வாங்கிச் செல்வதாகும் (ஏதோ ஒரு தருணத்தின் தேவைகளுக்கு உசிதமாகப் புனையப்பட்ட ஒரு செயற்கையான சூத்திரம் தான் இது என்று யாராவது கருதுவார்களே ஆனல், இராணுவ விவகாரங்களில் மிகப் பெரிய நிபுணர்களில் ஒருவரான அந்த முதியவரான கிளாவுசெவித்சை, இது சம்பந்தமான வரலாற்றின் படிப்பினைகள் பற்றிப் படிக்க வேண்டும்). ஆனல், ''இடதுசாரிக்'' கம்யூனிஸ்டுகள் சக்திகளின் ஒப்புநிலை பற்றிய பிரச்சினையை புரிந்து கொண்டதற்கான அடையாளத்தையே காணேம்.

கோட்பாட்டின் மீது நின்று பாதுகாப்புவாதத்தை நாம் எதிர்த்த காலத்தில் சோஷலிசத்தின் நலன்களின் பெயரால் தங்களுடைய தாய்நாட்டைக் ''காப்பாற்ற'' விரும்பியவர்களை நாம் கேலி செய்ததில் நியாயமிருந்தது. பாட்டாளி வர்க்க ரீதியான பாதுகாப்புவாதிகளாகும் உரிமை நாம் பெற்றபோது அந்தப் பிரச்சினை முழுதும் தீவிரமாக மாற்றப்பட்டது. சம்பந்தப்பட்ட வெவ்வேறு சக்திகளை மிகமிக நுட்பமாகக் கணக்கிடுவதும், நமது நேச சக்தி (சர்வதேசப் பாட்டாளி வர்க்கம்) நம் உதவிக்குக் காலாகாலத்தில் வர முடிவதற்குள்ள வாய்ப்புகளை ஆன மட்டும் எச்சரிக்கையோடு எடைபோட்டுக் கொள்வதும் நம் கடமையாகிவிட்டது. எல்லா நாடுகளிலும் உள்ள தொழிலாளர்களும் ஒன்றுகுமுன் (எதார்த்தத்தில் ஒன்றுபடுமுன், அதாவது புரட்சியைத் தொடங்குவதின் மூலமாக,

தனது விரோதியை (புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தை) துண்டு துண்டாக ஒழிப்பது மூலதனத்தின் நலன்களுக்கு உகந்ததாகும். சாத்தியமானதை எல்லாம் செய்வது, புரட்சிகரமான தொழிலாளிகளின் பட்டாளங்கள் ஒரே மாபெரும் சர்வதேச இராணுவமாக ஒன்றுபடுகிற தருணம் வரை (அல்லது அந்தத் தருணத்திற்குப் ''பிறகுவரை'') நிர்ணயகரமான போராட்டத்தைத் தள்ளிப்போடக் கிடைக்கிற மிகச்சிறு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்திக் கொள்வது நம் நலன்களுக்கு உகந்ததாகும்.

## 3

உள்நாட்டுத் துறையில் நமது ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'' அனுபவிக்கும் துர்ப்பாக்கியங்களைப் பார்ப்போம். தற்கால நிலைமை பற்றிய ஆய்வுரைகளில் பின்வரும் வாதங்களைச் சிரிக்காமல் படிப்பது என்பது கஷ்டமான விஷயம்:

''... சமுதாய உடைமையாக்குவது பற்றிய மிகமிக உறுதியான கொள்கையைப் பின்பற்றினால் மட்டுமே மீதமிருக்கும் உற்பத்திச் சாதனங்களை முறையாகப் பயன்படுத்துவது பற்றிச் சிந்திக்கத் தகும்''... ''முதலாளித்துவ வர்க்கத்துக்கும் அதன் குட்டி முதலாளித்துவ அறிவாளிரீதியான ஏவலாட்களுக்கும் பணிவதற்காக அல்ல, முதலாளித்துவ வர்க்கத்தை முறியடித்துத் துரத்துவதற்காக, நாசவேலையை முற்றாக ஒழிப்பதற்காக....''

அன்புக்குரிய ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'', எவ்வளவு உறுதியோடு இருக்கிறார்கள்; ஆனால் சிறிதேனும் சிந்தனையைக் காட்டவில்லையே! ''சமுதாய உடைமையாக்குவதில் மிகமிக உறுதியான கொள்கையைப் பின்பற்றுவது'' என்பதற்கு அர்த்தம் என்ன?

தேசவுடைமையாக்குவது, அல்லது பறிமுதல் செய்வது என்ற பிரச்சினை பற்றி ஒருவன் உறுதியுள்ளவனாகவோ இல்லாதவனாகவோ இருக்கக் கூடும்; ஆனால் விவகாரம் என்ன

வென்றால், தேசவுடைமை நிலையிலிருந்து, பறிமுதல் நிலையிலிருந்து, சமுதாயவுடைமை நிலைக்கு மாறுவதற்கு அதிகபட்சமான ''மனவுறுதி'' இருந்தால் மட்டும் போதாது. நம் ''இடதுசாரிகளின்'' துரதிருஷ்டம் என்னவெனில், ''சமுதாய உடைமையாக்குவது பற்றிய மிகமிக உறுதியான கொள்கை'' என்கிற பேதைமையான, சிறுபிள்ளைத்தனமான சொற்றொடர் மூலமாகப் பிரச்சினையின் கருப்பொருளை, ''தற்கால'' நிலைமையின் கருப்பொருளைப் புரிந்துகொள்ளத் தவறியதைக் காட்டிக் கொள்கிறார்கள். நம் ''இடதுசாரிகளின்'' துரதிருஷ்டம் என்னவெனில், ''தற்கால நிலைமையின்'' சாராம்சத்தை — பறிமுதல் செய்கிற நிலையிலிருந்து (இதை நிறைவேற்றுவதற்கு ஓர் அரசியல்வாதியிடம், எல்லாவற்றிற்கும் மேலாக, உறுதி இருக்க வேண்டும்) சமுதாய உடைமை நிலைக்கு (இதை நிறைவேற்றுவதற்கு ஒரு புரட்சிக்காரரிடம் வேறொரு குணம் வேண்டியிருக்கிறது) மாறிச் செல்வதை — தவற விட்டு விட்டார்கள்.

நேற்றைய தினம், சாத்தியமான அளவுக்கு மன உறுதியுடன் தேசவுடைமையாக்குவதும், பறிமுதல் செய்வதும், முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்தி நசுக்குவதும், நாசவேலையை ஒழிப்பதும் அத்தருணத்திய பிரதான கடமையாக இருந்தது. இன்றைய தினம் கணக்கிட்டுப் பார்க்க முடியாத அளவுக்கு நாம் தேசவுடைமையாக்கினோம், பறிமுதல் செய்தோம், அடித்து வீழ்த்தினோம், ஒழித்தோம் என்பதை ஒரு குருடன் தான் பார்க்கத் தவறியிருக்க முடியும். சமுதாயவுடைமை நிலைக்கும் சாதாரணமான பறிமுதலுக்கும் உள்ள வேறுபாடு என்னவெனில் ''உறுதியை'' மட்டும் கொண்டு—கணக்கிட்டு, முறையாக வினியோகம் செய்யும் திறன் இல்லாமலே—பறிமுதலை நிறைவேற்றிவிட முடியும், ஆனால் சமுதாயவுடைமை நிலையை இந்தத் திறனில்லாமல் உண்டாக்க முடியாது.

வரலாற்றுரீதியான நமது சேவை என்னவெனில், நேற்றைய தினம் (நாளைக்கும் கூடத்தான்) பறிமுதல் செய்வதிலேயும், முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்துவதிலே

யும், நாசவேலையை ஒழிப்பதிலேயும் நாம் மன உறுதியோடு இருந்தோம். அதைப்பற்றி இப்போது ''தற்கால நிலைமை பற்றிய ஆய்வுரைகளில்'' எழுதுவது சென்ற காலத்தை நோக்கித் திரும்பி நின்று கொண்டு எதிர்காலத்துக்கு மாறிச் செல்வதைப் புரிந்து கொள்ளத் தவறுவதாகும்.

''... நாசவேலையை முற்றாக ஒழிப்பது....'' ஆஹா, கடமையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்! நம் நாசவேலைக்காரர்கள் போதிய அளவுக்கு ''ஒழிக்கப்பட்டிருக்கிறார்கள்''. நம்மிடம் இல்லாமலிருப்பது வேறொன்றாகும். எந்த நாசவேலைக்காரர்களிடம் வேலை வாங்குவது, எந்த இடத்தில் அவர்களை வைப்பது என்பது பற்றிய ஒரு முறையான கணக்கீடு நம்மிடம் இல்லை. உதாரணத்துக்குச் சொன்னால், நமது சேவகத்துக்குள் இப்போது வந்து கொண்டிருக்கும் ஒரு நூறு நாசவேலைக்காரர்களை ஒரு போல்ஷிவிக் தலைவன் அல்லது கண்காணிப்பவன் மேற்பார்வையிடச் செய்வதற்குத் தேவையான முறையிலே நமது சொந்த சக்திகளின் ஒழுங்கமைப்பு நமக்கில்லை. விவகாரங்கள் இவ்வாறு இருக்க, ''சமுதாயவுடைமையாக்குவது பற்றிய மிகமிக உறுதியான கொள்கை'', ''முறியடித்துத் துரத்துவது'', ''முற்றாக ஒழிப்பது'' போன்ற வாய்ச்சொற்களை வீசுவது குறி தவறிச் சுடுவதாகும். முறியடித்துத் துரத்துவது, ஒழிப்பது, முதலியவை மட்டும் சோஷலிசத்துக்குப் போதாது என்பதைப் பார்க்காமலிருப்பது குட்டி முதலாளித்துவ புரட்சியாளரின் பண்பாகும். ஒரு பெரிய உடைமையாளன் மேல் ஆத்திரப்படுகிற சிறு உடைமையாளனுக்கு அது போதும். ஆனால் எந்தப் பாட்டாளி வர்க்கப் புரட்சியாளரும் என்றைக்கும் இப்படிப்பட்ட தவறு செய்யமாட்டான்.

நாம் மேற்கோள் காட்டிய சொற்கள் புன்சிரிப்பை உண்டாக்குகின்றன என்று சொன்னால், ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'' செய்துள்ள பின்வரும் கண்டுபிடிப்பு அட்டகாசமான வெடிச் சிரிப்பைத்தான் நமக்கு உண்டாக்கும். அவர்கள் கருத்துப்படி, ''போல்ஷிவிக் வலதுசாரித் திரிபின்'' கீழ் சோவியத் குடியரசை ''அரசு முதலாளித்துவத்தை நோக்கிச் செல்கிற பரிணாம வளர்ச்சி'' பய

முறுத்திக் கொண்டிருக்கிறதாம். இப்போது அவர்கள் நம்மை உண்மையிலேயே பயப்படுத்தி விட்டார்கள்! எவ்வளவு உற்சாகத்தோடு இந்த ''இடது சாரிக் கம்யூனிஸ்டுகள்'' இந்தப் பயமுறுத்தலான கண்டுபிடிப்பைத் தங்களுடைய ஆய்வுரைகளிலும் கட்டுரைகளிலும் திரும்பத் திரும்பச் சொல்கிறார்கள்....

நம் சோவியத் குடியரசில் உள்ள இன்றைய விவகார நிலைமைகளோடு ஒப்பிடும்போது அரசு முதலாளித்துவம் ஒரு படி முன்னேற்றம் என்று அவர்கள் புத்தியில் படவே இல்லை. சுமார் ஆறுமாத காலத்தில் நம் குடியரசில் அரசு முதலாளித்துவம் நிலைபெற்று விடுமேயானால் அது ஒரு பெரிய வெற்றியாகும், ஓர் ஆண்டுக்குள் சோஷலிசம் நிரந்தரமான உறுதியான பிடிப்பு பெற்று நம் நாட்டில் தோற்கடிக்கப்பட முடியாதது ஆகிவிடுவதற்கு அது ஒரு நிச்சயமான உத்தரவாதமாகும்.

எவ்வளவு மேன்மையான ஆத்திரத்துடன் ஓர் ''இடது சாரிக் கம்யூனிஸ்டு'' இந்தச் சொற்களிடமிருந்து விலகி ஓடுவான் என்பதையும், ''போல்ஷிவிக் வலதுசாரித் திரிபு'' பற்றித் தொழிலாளர்களிடம் எவ்வளவு ''நொறுக்கித் தள்ளும் படியான விமர்சனம்'' செய்வான் என்பதையும் என்னால் கற்பனை செய்ய முடியும். என்ன இது! சோவியத் சோஷலிசக் குடியரசில் அரசு முதலாளித்துவத்துக்கு மாறிச் செல்வது ஒரு படி முன்னேற்றமா?... இது சோஷலிசத் துக்குத் துரோகமாகாதா?

''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளது'' பொருளாதாரத் தவறின் ஆணிவேர் இங்குதான் இருக்கிறது. எனவே தான் இவ்விஷயத்தை அதிக விபரமாக நாம் கவனிக்க வேண்டும்.

முதலாவதாக, முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத் துக்குப் போகிற எந்த வகைப்பட்ட மாற்றநிலை நமது நாட்டை சோவியத்துகளின் சோஷலிஸ்டுக் குடியரசு என்று அழைக்க நமக்கு உரிமையும் அடிப்படைகளும் தருகிறது என்பதை ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'' புரிந்துகொள்ள வில்லை.

இரண்டாவதாக, நம் நாட்டில் குட்டி முதலாளித்துவ அம்சமே சோஷலிசத்தின் பிரதான எதிரி என்று அங்கீகரிக் காததைக் கொண்டுதான் அவர்கள் தங்களுடைய குட்டி முதலாளித்துவ மனோபாவத்தை வெளிப்படுத்துகிருர்கள்.

மூன்ருவதாக, ''அரசு முதலாளித்துவம்'' என்று பூச் சாண்டி காட்டுவதின் மூலமாக, சோவியத் அரசு பொருளா தார ரீதியிலே முதலாளித்துவ அரசுடன் வேறுபட்டது என்று புரிந்துகொள்ளத் தவறுவதைக் காட்டிக் கொள் கிருர்கள்.

இந்த மூன்று விஷயங்களையும் பரிசீலிப்போம்.

ருஷ்யாவின் பொருளாதார அமைப்பு பற்றிய பிரச் சினையைப் பயில்வதில் யாருமே அதன் மாறிக் கொண் டிருக்கிற தன்மையை மறுக்கவில்லை என்று நினைக்கிறேன். அல்லது சோவியத் சோஷலிசக் குடியரசு என்கிற சொல் லுக்குப் பொருள் சோஷலிசத்துக்குக் கொண்டு போகும் மாற்ற நிலையைச் சாதிப்பதில் சோவியத் ஆட்சிக்குள்ள மன உறுதியைக் குறிக்கிறதே தவிர, புதிய பொருளாதார அமைப்பை ஒரு சோஷலிஸ்டு அமைப்பாக அங்கீகரிப் பதல்ல என்பதையும் எந்தக் கம்யூனிஸ்டும் மறுக்கவில்லை என்றும் நினைக்கிறேன்.

ஆனுல் மாற்றம் என்கிற சொல்லுக்குப் பொருள் என்ன? பொருளாதாரத்தோடு பொருத்திப் பேசும்போது, சோஷலிசம் முதலாளித்துவம் ஆகிய இரண்டின் அம்சங் களும், துகள்களும், கூறுகளும் இன்றைய அமைப்பில் அடங்கியுள்ளன என்பதுதானே இதற்குப் பொருள்? இதன் பொருள் இது தான் என்று எல்லோரும் ஒப்புக்கொள்வார் கள். ஆனுல் இதை ஒப்புக்கொள்கிறவர்கள் எல்லோரும் இன்று ருஷ்யாவிலுள்ள பல்வேறு சமுதாயப் பொருளா தாரக் கட்டமைப்புக்களில் எதார்த்தத்தில் என்னென்ன அம்சங்கள் அடங்கியுள்ளன என்று சிந்திக்க முயல்வதில்லை. இதுவே பிரச்சினையின் கருப்பொருளாகும்.

இந்த அம்சங்களை விவரிப்போம்:

1) தந்தைவழி, அதாவது கணிச அளவுக்கு இயற்கை வழிப்பட்ட விவசாயியின் சாகுபடி;

2) சிறு வீதப் பண்ட உற்பத்தி (தாங்கள் சாகுபடி செய்யும் தானியத்தை விற்கிற விவசாயிகளில் பெரும் பான்மையினர் இதில் அடங்குவார்கள்);

3) தனியார் முதலாளித்துவம்;

4) அரசு முதலாளித்துவம்;

5) சோஷலிசம்.

ருஷ்யா எவ்வளவோ பெரிதாக, வேறுபட்டதாக இருக்கிறதினாலே இந்த வெவ்வேறான சமுதாய-பொருளாதாரக் கட்டமைப்புக்களின் மாதிரிகள் எல்லாம் கலந்து இருக்கின்றன. இதுவே நிலைமையில் குறிப்பான குணாம்சமாக அமைந்துள்ளது.

எத்தகைய அம்சங்கள் மேலோங்கி இருக்கின்றன? என்ற கேள்வி எழுகிறது. சிறு விவசாயிகளைப் பெருமளவு கொண்ட நாட்டில் குட்டி முதலாளித்துவ அம்சமே மேலோங்கியிருக்கும், மேலோங்கியிருந்தே தீரவேண்டும். ஏனெனில் நிலத்தில் பாடுபடுகிறவர்களில் மிகப் பெரும் பான்மையினர் சிறு வீதப் பண்ட உற்பத்தியாளர்கள். நமது அரசு முதலாளித்துவத்தின் மேல் ஓடு (தானிய ஏகபோகம், அரசுக் கட்டுப்பாட்டிலுள்ள தொழிலதிபர்கள், வர்த்தகர்கள், முதலாளித்துவ கூட்டுறவாளர்கள்) ஒரு சமயம் ஓரிடத்திலும் மறு சமயம் வேறொரு இடத்திலும் கொள்ளை லாபக்காரர்களால் துளைக்கப்படுகிறது; கொள்ளை லாபமடிப் பதற்குப் பிரதானக் குறியாகவிருப்பது தானியமே.

இந்தக் களத்திலேதான் பிரதானமான சண்டை நடத்தப்பட்டு வருகிறது. ''அரசு முதலாளித்துவம்'' போன்ற பொருளாதார வகைப்பிரிவுகளின் ரீதியிலே நாம் பேசுவதானால், எந்த அம்சங்களுக்கிடையே இந்தப் போராட்டம் நடத்தப் பெறுகிறது? நான் இப்போது விவரித்த வரிசையில் நான்காவதற்கும் ஐந்தாவதற்கும் இடையிலா? நிச்சயமாக இல்லை. சோஷலிசத்தோடு சண்டை போட்டுக் கொண்டிருப்பது அரசு முதலாளித்துவமல்ல; பதிலாக, குட்டி முதலாளிகளும் தனியார் முதலாளித்துவமும் ஒருங்கே சேர்ந்து அரசு முதலாளித்துவம், சோஷலிசம்

ஆகிய இரண்டையும் எதிர்த்துச் சண்டையிட்டு வருகின்றன. ஒவ்வொரு வகைப்பட்ட அரசுத் தலையீட்டையும், கணக்கு வைப்பதையும், கண்காணிப்பையும் — அது அரசு முதலாளித்துவ ரீதியானதாயிருந்தாலும் சரியே, அரசு சோஷலிச ரீதியானதாக இருந்தாலும் சரியே — குட்டி முதலாளிகள் எதிர்க்கிறார்கள். இது எதார்த்தத்தின் முற்றான, கேள்விக்கிடமற்ற உண்மையாகும்; இதைப் புரிந்து கொள்ளாததுதான் ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்'' பொருளாதாரத் தவறின் வேர் ஆகும். கொள்ளைலாபக்காரன், வியாபாரக் கொள்ளைக்காரன், ஏகபோகத்தைச் சிதறடிப்பவன்—இவர்கள்தான் நமது பிரதான ''உள்நாட்டு'' விரோதிகள், சோவியத் ஆட்சியின் பொருளாதார நடவடிக்கைகளின் விரோதிகள். ஒரு நூற்று இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன், மிகமிக ஆர்வமுள்ள, நேர்மையான புரட்சியாளர்களாகிய பிரெஞ்சுக் குட்டி முதலாளிகள் ''பொறுக்கியெடுத்த'' சிலரைத் தண்டித்துக் கொன்றதன் மூலமாகவும் இடி முழக்கம் போன்ற பிரகடனங்கள் மூலமாகவும் கொள்ளைலாபக்காரனை நசுக்க முயன்றது மன்னிக்கக் கூடியதாய் இருந்திருக்கலாம். ஆனால் இன்று, இந்தப் பிரச்சினை மீது சில இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் காட்டுகிற வெறும் அலங்காரச் சொல் கண்ணோட்டம் ஒவ்வொரு அரசியல் உணர்வுள்ள புரட்சியாளரிடமும் வெறுப்பையும் எதிர்ப்பு உணர்ச்சியையும் தவிர, வேறெதையும் எழுப்ப முடியாது. கொள்ளைலாபத் தனத்தின் பொருளாதார அடிப்படை, ருஷ்யாவில் அசாதாரணமான அளவுக்குப் பரவலாயிருக்கிற சிறு உடைமையாளர்களும், தனியார் முதலாளித்துவமும் — ஒவ்வொரு குட்டி முதலாளியும் அதன் ஏஜெண்டுதான்—ஆகிய இரண்டுமேயாகும் என்பதை நாம் நன்றாக அறிவோம். இந்தக் குட்டி முதலாளி விஷஜந்துவின் லட்சக்கணக்கான நச்சுக் கரங்கள் அடிக்கடி தொழிலாளர்களின் பல்வேறு பகுதிகளைச் சூழ்ந்து கவ்விக் கொள்கின்றன என்றும், அரசு ஏகபோகத்திற்குப் பதிலாகக் கொள்ளைலாபத்தனம் நமது சமுதாய - பொருளாதார அமைப்பின் ஒவ்வொரு மயிர்க்கால் வழியேயும்

முட்டிக் கொண்டு வெளிப்படுகிறது என்றும், நாம் அறிவோம்.

இதைப் பார்க்கத் தவறுகிறவர்கள் தங்களுடைய குருட்டுத்தனத்தால் தாங்கள் குட்டி முதலாளித்துவக் காழ்ப்புக்களின் அடிமைகள் என்று காட்டிக் கொள்கிறார்கள். ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'' இப்படித்தான் இருக்கிறார்கள். அவர்கள், சொல்லளவிலே (மிக நேர்மையுடன் அப்படித்தான் அவர்கள் நம்புகிறார்கள்) குட்டி முதலாளிகளின் ஈவிரக்கமற்ற எதிரிகளே, ஆனால் செயலளவிலோ எனில், அவர்கள் குட்டி முதலாளித்துவ வர்க்கத்துக்கு மட்டுமே உதவுகிறார்கள்; ஜனத்தொகையின் இந்தப் பகுதிக்கு மட்டும் சேவை செய்கிறார்கள்; அதன் கருத்தை மட்டுமே வெளியிடுகிறார்கள்—''அரசு முதலாளித்துவத்தை'' எதிர்த்து போராடியபடி—1918 ஏப்ரலில்!!—குறிதவறி எங்கேயோ போய் விட்டார்கள்!

''நேர்மையான'' வழியிலேயும், குறிப்பாக, நேர்மையற்ற முறையிலேயும் யுத்த காலத்திலே சம்பாதித்த சில ஆயிரம் ரூபிள்களை குட்டி முதலாளிகள் பத்திரப்படுத்திக் கொண்டுள்ளனர். கொள்ளைலாபத்துக்கும் தனியார் முதலாளித்துவத்துக்கும் அடிப்படையாக விளங்குகிற பொருளாதார வடிவின் சரியான மாதிரியாகும் இது. பணம் என்பது சமுதாயச் செல்வத்தைப் பெறுவதற்கு உரிமையளிக்கும் ஒரு சான்றிதழேயாகும்; பல லட்சக் கணக்கிலே இருக்கிற சிறு உடைமையாளர்கள் இந்தச் சான்றிதழை இறுகப் பிடித்து ''அரசிடமிருந்து'' ஒளித்து வைத்திருக்கிறார்கள்; அவர்கள் எந்தவொரு சோஷலிசத்திலோ கம்யூனிசத்திலோ நம்பிக்கையில்லாதவர்கள், பாட்டாளி வர்க்கப் புயல் வீசி ஓயும் வரை ''நின்று காத்திருக்கிறார்கள்''. ஒன்று, நாம் குட்டி முதலாளிகளை நமது கண்காணிப்புக்கும் கணக்கு வைத்தலுக்கும் கீழ்ப்படுத்த வேண்டும் (வர்க்க உணர்வுள்ள பாட்டாளிகளின் முன்னணிப் படையைச் சூழ்ந்து ஏழைகளை, அதாவது ஜனத்தொகையில் பெரும்பான்மையினரை, அல்லது அரைப் பாட்டாளிகளை, திரட்டி ஒழுங்கமைத்தால் இதை நாம் செய்ய முடியும்)

அல்லது, சிறு சொத்து உடைமை என்கிற இத்தகைய மண்ணிலிருந்து தோன்றிய நெப்போலியன்களும் கவிஞக்கு களும் புரட்சியைத் தூக்கியெறிந்தது போலவே, நிச்சய மாகவும், தவிர்க்க முடியாத வகையிலும் அவர்கள் நம்முடைய தொழிலாளர்களின் அதிகாரத்தைத் தூக்கி யெறிவார்கள். இதுதான் பிரச்சினை. ''உழைக்கும்'' விவ சாயிகளைப் பற்றிய தங்களுடைய வெற்றுச் சொற்களின் பனிமூட்டத்தினூடே இருந்துகொண்டு இடதுசாரி சோஷ லிஸ்டு-புரட்சியாளர்கள் மட்டுமே வெளிப்படை யான, பச்சையான இந்த உண்மையைப் பார்க்கத் தவறுகிறார்கள், ஆனால் வாய்ச்சொல் வீச்சுள்ள இந்த இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களை யார் மதிக் கிறார்கள்?

ஆயிரக் கணக்கில் பணத்தைப் பதுக்கும் குட்டி முதலாளி, அரசு முதலாளித்துவத்தின் விரோதியாவான். ஏழை மக்களுக்கு எதிராக, எல்லா அரசுக் கண்காணிப்புக் கும் எதிராக தன்னுடைய சில்லறைப் பணத்தை அவன் தனக்காக மட்டுமே பயன்படுத்த விரும்புகிறான். பலப்பல கோடிகளாகக் கூடும் இந்த ஆயிரங்களின் ஒட்டு மொத் தமே, கொள்ளைலாபத்தனத்துக்கு அடிப்படையாகிறது; அது நமது சோஷலிச நிர்மாணத்தைப் பலவீனப்படுத்து கிறது. 1,000க்குச் சமமான மதிப்புகளை ஒரு சில நாட்களில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள தொழிலாளர்கள் உற்பத்தி செய்வதாக வைத்துக்கொள்வோம். பிறகு, சிறு அளவான கள்ள வியாபாரத்தாலும் பலவிதமான கையாடல்களாலும், சிறு உடைமையாளர்கள் சோவியத் உத்தரவுகளையும் விதிகளையும் ஏய்ப்பதாலும் இந்த மொத் தத்தில் 200 மறைந்துவிட்டது என்றும் வைத்துக்கொள் வோம். அந்த 1,000ல் 300 கொடுப்பதின் மூலமாக இன்னமும் மேலான ஒழுங்கும் ஒழுங்கமைப்பும் பெற முடியு மாயின், தான் 200க்குப் பதிலாக 300 விரும்பிக் கொடுப் பதாக ஒவ்வொரு வர்க்க உணர்வுள்ள தொழிலாளியும் சொல்வான்; ஏனெனில் பின்னால் — ஒழுங்கும் ஒழுங்கமைப் பும் நிலைநிறுத்தப்பெற்றதும், அரசு ஏகபோகத்தைக் குட்டி

முதலாளி சிதறடிப்பதை முற்றாக ஒழித்ததும் — இந்தக் ''கப்பத்தை'' 100 ஆகவோ 50 ஆகவோ (எடுத்துக் காட்டாகச் சொல்கிறேன்) குறைத்து விடுவது சோவியத் ஆட்சியின் கீழ் மிகச் சுலபமாகும்.

இந்த எளிய எண் ரூபத்திலுள்ள உதாரணவிளக்கம்—எல்லோருக்கும் புரிய வேண்டுமென்பதற்காக நான் மிகவும் எளிதாக்கி இருக்கிறேன்—அரசு முதலாளித்துவத்துக்கும் சோஷலிசத்துக்கும் உள்ள தற்போதைய சார்பு உறவு நிலையை விளக்குகிறது. வேறு எதற்கும் ஒரு கோபெக்கு கூடத் தராமல், இந்த ஆயிரங்கள் அனைத்தையும் சோஷலிசத்துக்காக ''எடுத்துக் கொள்ளுவதற்கு'' ஏற்றவாறு, சட்டபூர்வ அரசாங்க அதிகாரம் தொழிலாளர்கள் கைகளில் இருக்கிறது. எதார்த்தத்தில் தொழிலாளர் கைகளுக்கு அதிகாரம் மாறியிருப்பதைச் சார்ந்துள்ள இந்தச் சட்டவாய்ப்பு சோஷலிசத்தின் ஓர் அம்சம்.

ஆனால், பல வழிகளிலே, சிறு உடைமை அம்சமும் தனிப்பட்ட முதலாளித்துவ அம்சமும் இந்தச் சட்ட நிலையைப் பலவீனப்படுத்துகின்றன; அவை கள்ள வியாபாரத்தை இழுத்து வருகின்றன; சோவியத் உத்தரவுகளை நிறைவேற்றுவதற்குத் தடங்கல் செய்கின்றன. நாம் இன்று கொடுப்பதைவிட அதிகமாகக் கொடுத்த போதிலும்கூட (இதைப் பளிச்செனத் தெளிவாக்கும் பொருட்டு வேண்டுமென்றே இப்படிப்பட்ட எண் ரூபமுள்ள உதாரணத்தை எடுத்துக் கொண்டேன்) அரசு முதலாளித்துவம் ஒரு மிகப் பெரிய முன்னேற்றப்படியாக இருக்கும்; ஏனெனில் ''பாடம் கற்பதன்'' பொருட்டு அதிக விலை கொடுப்பது லாபகரமானது; தொழிலாளர்களுக்குப் பயனுள்ளது; ஏனெனில் ஒழுங்கின்மை, பொருளாதார நாசம், கண்டிப்பின்மை ஆகியவற்றை வெல்வதுதான் மிகமிக முக்கியமான விஷயம்; சிறு உடைமையின் அராஜகம் நீடிப்பதானது மிகப் பெரிய, மிகத் தீவிரமான அபாயமாகும்; அது நிச்சயமாக நமக்குக் கேடாக அமையும் (அதை நாம் வெல்லா விட்டால்). ஆனால் அரசு முதலாளித்துவத்துக்கு இன்னும் அதிக அளவில் கப்பம் கொடுப்பதால் நாம்

நாசமாக மாட்டோம். அது நம்மை நிச்சயமான பாதையிலே சோஷலிசத்துக்குக் கொண்டு போய்விடும். சிறு உடைமையின் அராஜகத்திலிருந்து அரசு அமைப்பை எப்படிப் பாதுகாப்பது என்று தொழிலாளி வர்க்கம் கற்றுக் கொள்ளும் பொழுது, பெரும் அளவு உற்பத்தியை தேச ரீதியிலே அரசு முதலாளித்துவப் பாதையிலே அமைக்க அது கற்றுக் கொள்ளும் பொழுது, அது தன் கையில் (இந்தச் சொல்லை நான் உபயோகிக்கக் கூடுமானால்) எல்லாத் துருப்புச் சீட்டுகளையும் வைத்திருக்கும், சோஷலிசத்தைக் கெட்டிப்படுத்துவது நிச்சயமாகிவிடும்.

முதலாவதாக, பொருளாதார ரீதியிலே, நம்முடைய இன்றைய பொருளாதார அமைப்பைவிட அளவிடமுடியாத அளவுக்கு எவ்வளவோ மேலானது அரசு முதலாளித்துவம்.

இரண்டாவதாக, இதில் சோவியத் ஆட்சிக்குப் பயங்கரமானதாக ஒன்றுமில்லை. ஏனெனில் சோவியத் அரசு என்பது தொழிலாளர்களின், ஏழை மக்களின் அதிகாரம் உறுதிப்படுத்தப் பெற்றுள்ள ஓர் அரசாகும். ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'' இந்தக் கேள்விக்கிடமற்ற உண்மைகளைப் புரிந்துகொள்ளத் தவறிவிட்டார்கள்; பொதுவாகவே அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய எந்தக் கருத்துக்களையும் மண்டையிலே ஏற்றிக்கொள்ள முடியாத ஓர் ''இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்'' இவற்றை என்றைக்கும் புரிந்துகொள்ள மாட்டான்; ஆனால் அவற்றை ஒவ்வொரு மார்க்சியவாதியும் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஓர் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளரோடு விவாதிப்பதிலும்கூடப் பயனில்லை. ஒரு வாய்வீச்சுக்காரனுக்கு ''வெறுப்பூட்டும் உதாரணமாக'' அவனைச் சுட்டிக் காட்டுவதே போதுமானது. ஆனால் ''இடதுசாரிக் கம்யூனிஸ்டோடு'' விவாதித்தாக வேண்டும்; ஏனெனில் தவறு செய்பவன் மார்க்சியவாதி, அவனுடைய தவறைப் பகுத்தாராய்வது தொழிலாளி வர்க்கம் உண்மையான பாதையைக் கண்டு செல்வதற்கு உதவும்.

## 4

விஷயத்தை இன்னும் தெளிவாக்க, நாம் அரசு முதலாளித்துவத்தின் மிகவும் திட்டவட்டமான ஓர் உதாரணத்தை முதலில் எடுத்துக் கொள்வோம். இந்த உதாரணம் எது என்று எல்லோருக்கும் தெரியும். அது ஜெர்மனிதான். இங்கே, நவீன பெருமளவு முதலாளித்துவத் தொழில் நுணுக்கம், ஐங்கர்-முதலாளித்துவ ஏகாதிபத்தியத்துக்குக் கீழ்ப்படுத்தப்பட்டுள்ள திட்டமிட்ட ஒழுங்கமைப்பின் ''மிகச் செவ்வையான வடிவத்தைப்'' பார்க்கிறோம். கொட்டை எழுத்துக்களில் உள்ள சொற்களை அடித்து விடுங்கள், இராணுவ ஐங்கர், முதலாளித்துவ, ஏகாதிபத்திய அரசுக்குப் பதிலாக இன்னொரு அரசை வையுங்கள், வேறொரு சமுதாய மாதிரியைச் சேர்ந்த, வேறொரு வர்க்க உள்ளடக்கமுள்ள அரசை, ஒரு சோவியத் அரசை, அதாவது ஒரு பாட்டாளி வர்க்க அரசை வையுங்கள்; சோஷலிஸத்திற்கு வேண்டிய நிலைமைகளின் மொத்தத் தொகை உங்களுக்குக் கிடைத்துவிடும்.

நவீன விஞ்ஞானத்தில் கடைசியாக வந்த கண்டு பிடிப்புகளின் அடிப்படையில் அமைந்த பெருமளவு முதலாளித்துவத் தொழில் நுணுக்கம் இல்லாமல் சோஷலிசத்தைப் பற்றிச் சிந்திக்கவே முடியாது. உற்பத்தியிலும் விநியோகத்திலும் ஒன்றேயான தரத்தை மிகமிகக் கண்டிப்புடன் பின்பற்றி வருமாறு பல கோடிக்கணக்கான மக்களை வைக்கிற திட்டமிட்ட அரசு அமைப்பு இல்லாமல் அதைப் பற்றிச் சிந்திக்கவே முடியாது. இதைப் பற்றி மார்க்சியவாதிகளாகிய நாம் எப்போதும் பேசி வந்திருக்கிறோம். இதைக்கூடப் புரிந்துகொள்ளாதவர்களோடு (அராஜகவாதிகளும் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களில் சரிபாதிப் பேரும்) இரண்டு விநாடிகள் கூட பேசி வீணாக்குவதிலும் பயனில்லை.

அதே நேரத்தில் பாட்டாளி வர்க்கத்தின் அரசாங்க ஆதிக்கம் இல்லாமல் சோஷலிசத்தைப் பற்றிச் சிந்திக்கவே முடியாது. இதுவும் அரிச்சுவடி. மேலும், வரலாறு

(''முழுமையான'' சோஷலிசத்தை மென்மையாக, மிருதுவாக, சுலபமாக, எளிதாக இது கொண்டுவந்து விடும் என்று முதல் தரமான மென்ஷிவிக் முட்டாள்கள் தவிர வேறு யாரும் எதிர்பார்க்கவில்லை) சர்வதேச ஏகாதிபத்தியத்தின் முட்டை ஓட்டுக்குள் எதிர்காலத்திய இரண்டு கோழிக்குஞ்சுகள் இருக்கிற மாதிரி ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாது அக்கம் பக்கமாக இருந்து கொண்டிருக்கும் சோஷலிசத்தின் இரண்டு பாதிகளை 1918ல் பெற்றெடுத்திருக்கிற அளவுக்கு ஒரு விநோதமான போக்கிலே போயுள்ளது. 1918ல் ஜெர்மனியும் ருஷ்யாவும், ஒரு பக்கத்தில், சோஷலிசத்திற்குரிய பொருளாதார, உற்பத்தி ரீதியான, சமுதாய-பொருளாதார நிலைமைகளையும், இன்னொரு பக்கத்தில், அதற்குரிய அரசியல் நிலைமைகளையும் பொருளாயத நிறைவேற்றத்தின் கண்கூடான வெளிப்பாடு ஆகும்.

ஜெர்மனியில் உண்டாகும் ஒரு வெற்றிகரமான பாட்டாளி வர்க்கப் புரட்சி எந்த விதமான ஏகாதிபத்திய முட்டையோட்டையும் உடனடியாக, வெகு சுலபமாக உடைத்தெறியும் (அந்த முட்டை ஓடு, துரதிர்ஷ்டவசமாக, மிக நேர்த்தியான உருக்கிலே செய்யப்பட்டது; எனவே அதை எந்த... கோழிக்குஞ்சின் முயற்சிகளாலும் உடைத்தெறிய முடியாது), எவ்விதக் கஷ்டங்களுமில்லாமல், அல்லது கொஞ்சக் கஷ்டங்களுடன்—''கஷ்டம்'' எனும் போது மிகக் குறுகிய அர்த்தத்தில் அல்லாமல் உலக வரலாற்று அளவிலே கஷ்டமானது என்கிற பொருளில் கொண்டால்—உலக சோஷலிசத்தின் வெற்றியை நிச்சயமாகச் சாதிக்கும்.

ஜெர்மனியில் புரட்சி ''பிறப்பது'' இன்னமும் மெதுவாகவே இருந்து வருகையில், ஜெர்மானியர்களின் அரசு முதலாளித்துவத்தைப் பயில்வதும், அதை மேற்கொள்வதில் எந்த முயற்சியையும் மிச்சம் வைக்காமலிருப்பதும், அதை மேற்கொள்வதைத் துரிதப்படுத்துவதற்கு சர்வாதிகார வழிமுறைகளை மேற்கொள்ளப் பின்வாங்காமலிருப்பதும் நம் கடமையாகும். அநாகரிகத்தை எதிர்த்துப் போராட அநாகரிகமான வழிமுறைகளைப் பயன்படுத்தத்

தயங்காமல், அநாகரிக நிலையிலிருந்த ருஷ்யா மேற்கத்தியப் பண்பாட்டை மேற்கொள்வதைப் பீட்டர் துரிதப் படுத்தியதைவிட நாம் அதிகமாகத் துரிதப்படுத்த வேண்டும். நார்ஸிஸஸ் போன்ற சிந்தனைகளில் ஆழ்ந்து ஜெர்மன் ஏகாதிபத்தியத்திடமிருந்து ''பாடம் கற்றுக்கொள்வது'' புரட்சியாளர்களாகிய நமக்குத் தகுதியல்ல என்று சொல்கிற அராஜகவாதிகளும் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் இருப்பார்களேயானால் (மத்திய நிர்வாகக் கமிட்டிக்கு முன் கரேலின், கே ஆகியோரின் பேச்சுக்கள் தற்செயலாக நினைவுக்கு வந்தன), நாம் பதிலுக்குப் பின்வருமாறு சொல்ல முடியும்: இவர்களைப் பொருட்படுத்துகிற புரட்சி மீட்க முடியாத படி அழிவுறும் (அழியத் தகுதியுடையதுமாகும்).

தற்சமயம், ருஷ்யாவில் குட்டி பூர்ஷ்வா முதலாளித்துவம் மேலோங்குகிறது. அதிலிருந்து ஒரேயொரு பாதைதான் பெருமளவு அரசு முதலாளித்துவம், சோஷலிசம் ஆகிய இரண்டுக்கும் இட்டுச் செல்கிறது; ''தேசிய ரீதியான கணக்கு வைத்தல், உற்பத்தியையும் வினியோகத்தையும் கண்காணித்தல்'' என்று அழைக்கப்படுகிற ஒரே இடைக்கால நிலையத்தின் மூலமாக. இதைப் புரிந்துகொள்ளத் தவறுகிறவர்கள் ஒரு மன்னிக்க முடியாத பொருளாதாரத் தவறு செய்கிறார்கள்: ஒன்று, அவர்கள் வாழ்க்கையின் உண்மைகளை அறியவில்லை, எதார்த்தத்தில் இருக்கிறதைப் பார்க்கவில்லை, உண்மையை நேர்முகமாகப் பார்க்க முடியாமலிருக்கிறார்கள்; அல்லது, அவர்கள் சூட்சுமமான நிலையிலே ''முதலாளித்துவத்தை'' ''சோஷலிசத்துடன்'' ஒப்புநோக்குவதோடு நிறுத்திக் கொள்கிறார்கள், நம் நாட்டில் ஏற்பட்டு வருகிற மாற்றத்தின் திட்டவட்டமான வடிவங்களையும் கட்டங்களையும் பயிலத் தவறுகிறார்கள். தத்துவரீதியான இதே தவறுதான் நோவயா ஷீஸ்ன், வ்பெரியோத் முகாமைச் சேர்ந்த தலைசிறந்த நபர்களை வழிதவறச் செய்தது என்று இடையுரையாக இங்கு சொல்லலாம். இவர்களில் மிக மோசமானவர்களும் நடுத்தரப் பேர்வழிகளும் தங்களுடைய முட்டாள்

தனத்தாலும் முதுகெலும்பற்ற தன்மையாலும், தாங்கள் பயபக்தியோடு பார்க்கிற முதலாளித்துவ வர்க்கத்தின் பின்னே ஒட்டிக்கொண்டு செல்கிறார்கள். சோஷலிசத்தின் போதகர்கள், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கு மாறிச் செல்வதின் ஒரு முழுக் காலகட்டத்தைப் பற்றிப் பேசியதும் புதிய சமுதாயத்தின் ''நீடித்த பிரசவ வேதனைகளைப்'' பற்றி வலியுறுத்தியதும் காரணம் இல்லாமல் அல்ல என்பதை அவர்களில் தலைசிறந்தவர்கள் புரிந்து கொள்ளத் தவறியிருக்கிறார்கள். மேலும், இந்தப் புதிய சமுதாயம் என்பதும் ஒரு சூட்சும விஷயமே; அது ஏதாவதொரு சோஷலிஸ்டு அரசை உருவாக்க தொடர்ச்சியான, பல்வகையான, செவ்வைப் பாடற்ற திட்டவட்டமான முயற்சிகளைக் கடந்து செல்வதன் மூலமாகத்தான் பிறக்க முடியும்.

அரசு முதலாளித்துவத்துக்கும் சோஷலிசத்துக்கும் பொதுவாயுள்ளதைத் (தேசியரீதியான கணக்கு வைத்தல், கண்காணித்தல்) கடந்து செல்லாமல் இன்றிருக்கிற பொருளாதார நிலைமையிலிருந்து ருஷ்யா முன்னேற முடியாது என்ற காரணத்தினாலேதான் ''அரசு முதலாளித்துவத்தை நோக்கிப் போகிற பரிணாம வளர்ச்சி'' என்கிறதைக் கொண்டு (கம்யூனிஸ்ட், இதழ் 1, பக்கம் 8, பத்தி 1) தங்களையும் பிறரையும் பயமுறுத்தும் முயற்சி தத்துவரீதியிலே முற்றான அபத்தமாகும். இது, ''பரிணாம வளர்ச்சியின்'' உண்மையான பாதையை விட்டுச் சிந்தனைகளை ''வேறெங்கோ'' அலைந்து திரிய விடுவதாகும்; அந்தப் பாதை எது என்று புரிந்துகொள்ளத் தவறுவதாகும். நடைமுறையிலே, அது நம்மைச் சிறு உடைமை முதலாளித்துவத்தை நோக்கிப் பின்னுக்கு இழுப்பதற்குச் சமம்.

அரசு முதலாளித்துவத்தைப் பற்றி இந்த ''உயர்வான'' மதிப்பு, நான் கொடுத்திருப்பது இது முதல் தடவை அல்ல என்றும், போல்ஷிவிக்குகள் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு முன்பே அதைக் கொடுத்தேன் என்றும் வாசகர்களை நம்பச் செய்வதற்காக நிகழவிருக்கும் விபத்து, அதை எதிர்த்து எப்படிப் போராடுவது என்கிற 1917, செப்டம்

பரில் எழுதிய என்னுடைய சிறு நூலிலிருந்து பின்வரும் பகுதியை மேற்கோள் காட்ட உரிமை எடுத்துக் கொள்கிறேன்:

''... ஜங்கர்-முதலாளித்துவ அரசுக்குப் பதிலாக, நிலப்பிரபு-முதலாளித்துவ அரசுக்குப் பதிலாக, ஒரு புரட்சிகரமான-ஜனநாயக அரசை, அதாவது எல்லாவிதச் சிறப்புச் சலுகைகளையும் புரட்சிகரமான வழியிலே அழிக்கிற, புரட்சிகரமான வழியிலே முழுமையான ஜன நாயகத்தைப் புகுத்தப் பயப்படாத ஓர் அரசை, வைக்க முயலுங்கள்; உண்மையான ஒரு புரட்சிகரமான-ஜன நாயக அரசு இருக்கிறதாக இருந்தால் அரசு-ஏகபோக முதலாளித்துவம் என்பது சோஷலிசத்தை நோக்கிச் செல்லுவதற்குரிய ஒரு படி, ஒரு படிக்கும் மேலானதே என்று தவிர்க்க முடியாதபடி, தப்பிக்க முடியாதபடி அது உட்கிடையாக உணர்த்தும்!

''... ஏனெனில் சோஷலிசம் என்பது அரசு-முதலாளித்துவ ஏகபோகத்திலிருந்து செல்கிற அடுத்த முன்னேற்றப் படியே தவிர வேறில்லை.

''... அரசு-ஏகபோக முதலாளித்துவம் சோஷலிசத்திற்குரிய ஒரு முழுமையான பொருளாயதத் தயாரிப்பு, சோஷலிசத்தின் புகுவாயில், வரலாற்று ஏணியில் ஒரு படி, அதற்கும் சோஷலிசம் என்கிற படிக்கும் இடையே வேறு இடைப்பட்ட படிகள் கிடையாது'' (பக்கங்கள் 27, 28).

இது கேரென்ஸ்கி அதிகாரத்தில் இருந்தபோது எழுதப்பட்டது என்பதையும், நாம் விவாதிப்பது பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைப் பற்றியல்ல, சோஷலிஸ்டு அரசு பற்றியல்ல, ''புரட்சிகரமான-ஜனநாயக'' அரசு பற்றியே ''என்பதையும் தயவு செய்து கவனியுங்கள்; இந்த அரசியல் ஏணியிலே நாம் எவ்வளவுக்கெவ்வளவு அதிக உயரத்தில் இருக்கிறோமோ, எவ்வளவுக்கெவ்வளவு அதிக முழுமையாக நாம் சோஷலிஸ்டு அரசையும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தையும் சோவியத்துக்களில் இணைத்துக் கலந்து விடுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு

குறைவாக நாம் ''அரசு முதலாளித்துவத்தைப்'' பற்றி பயப்பட வேண்டியிருக்கும் என்று தெளிவாகவில்லையா? பொருளாயத, பொருளாதார, உற்பத்திப் பார்வைநிலையிலிருந்து பார்க்கையில் நாம் இன்னும் சோஷலிசத்தின் ''புகுவாயிலில்'' அடிவைக்கவில்லை என்று தெளிவாகவில்லையா? நாம் இன்னும் எட்டாத ''புகுவாயிலைத்'' தாண்டாமல் சோஷலிசத்தின் கதவு வழியே நுழைந்து செல்ல முடியாது என்று தெளிவாகவில்லையா?

பிரச்சினையை எந்தப் பக்கத்திலிருந்து அணுகினாலும், ஒரேயொரு முடிவுதான் எடுக்க முடியும், நம்மைப் பயமுறுத்தச் சொல்லப்படுகிற ''அரசு முதலாளித்துவம்'' பற்றிய ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்'' வாதம் பொருளாதாரரீதியில் ஒரு முற்றான தவறாகும், அவர்கள் குட்டி முதலாளித்துவத் தத்துவார்த்தத்தின் முழு அடிமைகள் என்பதற்கு வெளிப்படையான சான்றாகும்.

## 5

பின்வருவது மிகவும் படிப்பினையளிக்கும் விஷயமேயாகும்.

மத்திய செயற் குழுவில் நாங்கள் தோழர் புகாரினோடு விவாதித்த போது, மற்ற விஷயங்களுக்கிடையே அவர் சொன்னார்: நிபுணர்களுக்கு உயர்ந்த சம்பளங்கள் கொடுக்கிற பிரச்சினையில் ''நாங்கள்'' (''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளையே'' அவர் குறிப்பிட்டார் என்பது தெளிவு) ''லெனினைவிட வலதுசாரியாக இருந்தோம்''; ஏனெனில் இந்த வழக்கில் ''நாங்கள்'' கோட்பாட்டிலிருந்து விலகுகிற திரிபைப் பார்க்கவில்லை; ''அவர்கள் அத்தனை பேரையுமே பணம் கொடுத்துச் சரிக்கட்டி விடுவது''[54] (அதாவது, முதலாளிகள் அத்தனை பேரையும் பணம் கொடுத்து சரிக்கட்டி விடுவது, முதலாளித்துவ வர்க்கத்திடமிருந்து நிலத்தையும், தொழிற்சாலைகளையும், உற்பத்திக் கூடங்களையும், மற்ற உற்பத்திச் சாதனங்களையும் விலைக்கு

வாங்கிப் போடுவது) சில குறிப்பிட்ட நிலைமைகளில் தொழிலாளி வர்க்கத்துக்குச் சந்தர்ப்பப் பயனுள்ள தாகும் என்கிற மார்க்சின் சொற்களை நினைவில் வைத்திருந் தோம்.

முதன் முதலிலே, மிகவும் அக்கறைக்குரிய இந்தக் கூற்று தோழர் புகாரின் அராஜகவாதிகளைவிட, இடது சாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களைவிட, எவ்வளவோ உயர்ந்தவர் என்றும், வாய்ச்சொல்வீச்சுச் சகதியிலே நம் பிக்கைக்கிடமற்ற முறையிலே அவர் நிச்சயமாக அழுந்திக் கிடக்கவில்லை, அதற்கு மாருக முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்குப் போகிற மாற்ற நிலையின் — வேதனை தருகிற, கஷ்டமான மாற்ற நிலையின் — திட்டவட்டமான கஷ்டங்களைச் சிந்தித்தறிய முயற்சிகள் எடுத்து வருகிருர் என்றும் காட்டுகிறது.

இரண்டாவதாக, இந்தக் கூற்று புகாரினுடைய தவறை மேலும் தெளிவாகக் காட்டுகிறது.

மார்க்சின் கருத்தைக் கவனமாகப் பார்ப்போம்.

சென்ற நூற்ருண்டின் எழுபதாம் ஆண்டுகளைச் சேர்ந்த பிரிட்டனைப் பற்றி, ஏகபோகத்துக்கு முந்திய முதலாளித்துவ வளர்ச்சியின் உச்ச நிலையில் இருந்த, அந்தக் காலத்தில் மற்ற நாடுகளைவிட இராணுவ வெறியும் அதிகார வர்க்கமும் குறைவாக இருந்த நாடாக பிரிட்டன் இருந்தது; தொழிலாளர்கள் முதலாளித்துவ வர்க் கத்தைப் ''பணம் கொடுத்துச் சரிக்கட்டிவிடுவது'' என்கிற அர்த்தத்தில் சோஷலிசத்துக்கு ''சமாதானபூர்வமான'' வெற்றி கிடைக்கும் சாத்தியப்பாடு மிக அதிகமாக உள்ள நாடாக பிரிட்டன் இருந்தது. சில குறிப்பிட்ட சந்தர்ப் பங்களில் தொழிலாளர்கள் முதலாளித்துவ வர்க்கத்தைப் பணம் கொடுத்துச் சரிக்கட்டிவிட நிச்சயமாக மறுக்க மாட்டார்கள் என்று மார்க்ஸ் சொன்ருர். வடிவ விவ காரங்களை பற்றி, புரட்சியை உண்டாக்குவதற்குரிய வழி வகைகளைப் பற்றி, மார்க்ஸ் தம்மையோ, சோஷலிசப் புரட்சியின் எதிர்காலத் தலைவர்களையோ, கட்டுப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. பெரும் எண்ணிக்கையில் புதிய

பிரச்சினைகள் எழும் என்றும் புரட்சியின் போக்கிலே மொத்த நிலைமையே மாறும் என்றும் நிலைமை தீவிர மாகவும் அடிக்கடியும் மாறும் என்றும் மார்க்ஸ் நன்குகப் புரிந்து கொண்டிருந்தார்.

சரி, சோவியத் ருஷ்யாவைப் பற்றி என்ன? பாட்டாளி வர்க்கம் அதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகு, சுரண்டு பவர்களின் ஆயுதமேந்திய எதிர்ப்பையும் நாச வேலையையும் நசுக்கிய பிறகு, சில நிலைமைகள் தோன்றி உள்ளன. அரை நூற்றுண்டுக்கு முன் பிரிட்டனில் சோஷலிசத்துக்குரிய ஒரு சமாதான பூர்வமான மாற்றம் தொடங்கியிருந்தால் என்ன நிலைமைகள் இருந்திருக்கக் கூடுமோ அவற் றுக்குப் பொருத்தமாக அவை உள்ளன என்று தெளிவாக வில்லையா? பிரிட்டனில் முதலாளிகள் தொழிலாளர்களுக்குக் கீழ்ப்படுவது பின்வரும் சந்தர்ப்பங்களின் காரணமாக உறுதிப் படுத்தப் பட்டிருக்கும்: (1) விவசாயி மக்கள் இல்லாததால் ஜனத்தொகையில் தொழிலாளர்களின், பாட்டாளிகளின் முற்றுன பெரும்பான்மை இருந்தது (பிரிட்டனில், எழுபதுகளில், விவசாயத் தொழிலாளர் களிடையே சோஷலிசம் மிகத் துரிதமாகப் பரவும் என்கிற நம்பிக்கை இருந்தது); (2) பாட்டாளிகள் தொழிற்சங்கங் களிலே மிக நேர்த்தியாக ஸ்தாபன ரீதியில் அமைப்பு பெற்றிருந்தது (அப்போது இந்த அம்சத்தில் பிரிட்டன் உலகத்திலேயே தலைமை ஸ்தானத்தில் இருந்த நாடாகும்); (3) நூற்றுண்டுக் காலத்திய அரசியல் சுதந்திரத்தின் வளர்ச்சியால் பயிற்றுவிக்கப் பட்டிருந்த பாட்டாளி வர்க் கம் ஒப்புநோக்கில் உயர்ந்த பண்பாட்டுத் தரம் கொண் டிருந்தது; (4) நன்கு ஒழுங்கமைப்பு பெற்றுள்ள ஆங்கிலேய முதலாளிகள்—அந்தச் சமயத்தில் உலகத்தில் வேறெந்த நாட்டையும்விட இங்கிலாந்திலே தான் முதலாளிகள் நன்கு ஒழுங்கமைப்பு பெற்றிருந்தனர் (இந்த மேல்நிலை இப்போது ஜெர்மனிக்கு மாறிப் போயுள்ளது)—அரசியல், பொருளா தாரப் பிரச்சினைகளைச் சமரசம் மூலமாகத் தீர்க்கும் பழைய பழக்கம் பெற்றிருந்தது. ஆங்கிலேயத் தொழிலாளர்கள் தாங்கள் நாட்டின் முதலாளிகளைச் சமாதான பூர்வமாகக்

கீழ்ப்படியச் செய்வது சாத்தியமே என்கிற கருத்தை இந்தச் சந்தர்ப்பங்களே அக்காலத்தில் எழச்செய்தன.

நம் நாட்டில், தற்சமயம், அடிப்படையான குறி பொருளுள்ள சில முதனிலைகளால் (அக்டோபரின் வெற்றி, அக்டோபரிலிருந்து பிப்ரவரி வரை முதலாளிகளின் நாச வேலையையும் ஆயுதமேந்திய எதிர்ப்பையும் ஒடுக்கியது) இந்தக் கீழ்ப்படியச் செய்தல் உறுதிப் படுத்தப்பட்டுள்ளது. ஆனால் ஜனத்தொகையில் தொழிலாளர்களின், பாட்டாளிகளின் முற்றுன மேல்நிலைக்குப் பதிலாக, அவர்களிடையே அதி உயர்தரமான அளவிலே ஸ்தாபன அமைப்பு இருப்பதற்குப் பதிலாக, ருஷ்யாவில் வெற்றிக்குரிய முக்கியமான காரணமாக விளங்கியது ஏழை விவசாயிகளிடமிருந்தும், திடீரென்று நாசமடைந்த விவசாயிகளிடமிருந்தும் தொழிலாளர்கள் பெற்ற ஆதரவாகும். கடைசியாக, ஓர் உயர்தரமான அளவுக்குப் பண்பாடோ சமரசம் செய்து கொள்ளும் பழக்கமோ நமக்கு இல்லை. இந்த திட்டவட்டமான நிலைமைகளைக் கவனமாகப் பரிசீலித்தால், நாம் இரண்டு வழிமுறைகளை ஒரே காலத்தில் பயன்படுத்த முடியும், பயன்படுத்த வேண்டும் என்று தெளிவாகும். ஒரு பக்கத்தில், ''அரசு முதலாளித்துவத்தோடு'' எவ்விதச் சம்பந்தத்தையும் அல்லது எந்த விதச் சமரசத்தையும் நிராகரிக்கிற, சோவியத் நடவடிக்கைகளின் நிறைவேற்றத்துக்கு கள்ள வியாபாரம். ஏழை விவசாயிகளுக்கு லஞ்சம் கொடுப்பது முதலியவற்றுலும், தொடர்ந்து தடங்கல் செய்து வருகிற, பண்பாடற்ற முதலாளிகளை நாம் ஈவிரக்கமின்றி நசுக்க வேண்டும்.* மற்றொரு

* இந்த நிகழ்விலும் நாம் உண்மையை நேரடியாகப் பார்க்கவேண்டும். சோஷலிசத்தின் வெற்றிக்கு இன்றியமையாத ஈவிரக்கமின்மை நமக்கு இன்னும் குறைவாகவே இருக்கிறது. குறைவாக இருப்பதற்குக் காரணம் நமக்குத் துணிவு இல்லாதது அல்ல. நமக்குப் போதிய துணிவு உண்டு. நமக்கு இல்லாதிருப்பது எதுவெனில், போதிய எண்ணிக்கையில் கள்ள வியாபாரிகளை, கொள்ளைக்காரர்களை, முதலாளிகளை — சோவியத்துக்கள் நிறைவேற்றும் நடவடிக்கைகளை மீறுகிற பேர்வழிகளை — வேகமாகப்

பக்கத்தில், சமரசம் செய்து கொள்ளும் வழிமுறையைப் பயன்படுத்த வேண்டும்; அல்லது ''அரசு முதலாளித் துவத்துக்கு'' ஒத்துக் கொள்கிற, அதை நடைமுறையில் செயலாக்கத் திறமையுள்ள, கோடானு கோடி மக்களுக்குப் பண்டங்களை எதார்த்தத்தில் சப்ளை செய்கிற மிகப் பெரிய தொழிற்சாலைகளின் அறிவுள்ள, அனுபவமுள்ள ஒழுங்கமைப்பாளர்கள் என்கிற ரீதியிலே தொழிலாளி வர்க்கத்துக்குப் பயனுள்ளவர்களாயுள்ள, பண்பாடுள்ள முதலாளிகளைப் பணம் கொடுத்துச் சரிக்கட்டிவிடும் வழி முறையைப் பயன்படுத்த வேண்டும்.

புகாரின் நன்கு படித்த ஒரு மார்க்சிய-பொருளாதார வாதி. ஆகவே, சோஷலிஸத்துக்கு மாறிச் செல்வதைச் சுளுவாக்குவதற்காகவே பெரும் அளவு உற்பத்திக்குரிய அமைப்பை வைத்துப் பாதுகாப்பதின் முக்கியத்துவத்தைத் தொழிலாளர்களுக்குப் போதித்த போது மார்க்ஸ் மிக ஆழ்ந்த ரீதியிலே சரியான நிலைதான் எடுத்தார் என்று அவர் நினைவில் கொண்டார். பணம் கொடுக்கப் பட்டால் முதலாளிகள் சமாதானமாகக் கீழ்ப்படிந்து, பண்பாடுள்ள, ஒழுங்கமைந்த வகையில் சோஷலிசத்தின் பக்கம் வரும்படி அவர்களை நிர்பந்திக்கத்தக்க சந்தர்ப்பங்கள் இருந்தால் (ஒரு விதிவிலக்காக—அப்பொழுது இங்கிலாந்து ஒரு விதிவிலக்கு தான்) முதலாளிகளுக்கு நன்றாகப் பணம் கொடுக்கும் கருத்து சிந்திக்கத் தக்கதே என்று போதித் தார் மார்க்ஸ்.

---

பிடிக்கும் திறமையேயாகும். இதைச் செய்வதற்குரிய ''திறமையைக்'' கணக்கு வைப்பதையும் கண்காணிப்பை யும் நிலைநிறுத்துவதின் மூலமாக மட்டுமே பெறமுடியும்! மற்றொரு விஷயம், நீதி மன்றங்கள் போதிய அளவுக்கு உறுதியாக இல்லை. லஞ்சம் வாங்கும் பேர்வழிகளைச் சுட்டுத் தள்ளத் தீர்ப்பளிப்பதற்குப் பதிலாக, அவை ஆறு மாத சிறைத் தண்டனை விதிக்கின்றன. இவ்விரண்டு குறைபாடுகளுக்கும் ஒரேமாதிரியான வேர் உண்டு; அது தான் குட்டி முதலாளித்துவத்தின் செல்வாக்கு, அதன் தொளதொளாத் தன்மை.

ஆனால் புகாரின் வழிதவறிச் சென்றார்; காரணம், தற்சமயம் ருஷ்யாவிலுள்ள நிலைமையின் குறிப்பான குணம்சங்களுக்குள்ளே அவர் போதிய ஆழத்துடன் புக வில்லை — அது ஓர் அசாதாரணமான நிலைமை, அதில் ருஷ்யப் பாட்டாளி வர்க்கமாகிய நாம், நம்முடைய அரசியல் அமைப்பையும் தொழிலாளர்களின் அரசியல் அதிகாரத்தின் பலத்தையும் பொறுத்த வரையில் எந்த பிரிட்டனையும்விட, எந்த ஜெர்மனியையும்விட முன்னேறிய நிலையில் இருக்கும்போதே, ஒரு நல்ல அரசு முதலாளித்து வத்தை ஒழுங்காக அமைப்பதைப் பொறுத்தவரையில், பண்பாட்டின் தரம், சோஷலிசத்தைப் ''புகுத்துவதற்கு'' வேண்டிய பொருளாயத, உற்பத்தி தயாரிப்பு நிலையின் அளவு ஆகியவற்றைப் பொறுத்தவரையில் மிகமிகப் பிற்பட்ட மேற்கு ஐரோப்பிய நாட்டையும்விட பின்தங்கி இருக்கிறோம். இன்றைய நிலைமையின் குறிப்பான தன்மை யானது ஒரு குறிப்பிட்ட விதமான ''பணம் கொடுத்துச் சரிக்கட்டுதலின்'' அவசியத்தை உண்டாக்குகிறது. அதைத் தொழிலாளர்கள், சோவியத் அதிகாரத்தின் சேவையில் ஈடுபடவும், கூடியவரை பெரிய அளவிலே, மிகப் பெரிய அளவிலே ''அரசு'' உற்பத்தியை ஒழுங்கமைப்பதிலே நேர்மையோடு உதவி புரியவும் தயாராயிருக்கும் முதலாளி களிடையேயுள்ள மேலான பண்பாடு கொண்ட, மேலான திறனுடைய, மேலான சக்தி வாய்ந்த ஒழுங்கமைப்பாளர் களுக்கு வழங்கவேண்டும் என்று தெளிவாகவில்லையா? இந்தக் குறிப்பிட்ட நிலைமையில் இரண்டு தவறுகளை— அவ்விரண்டுமே ஒரு குட்டி முதலாளித்துவ இயல்புள்ளவை —தவிர்க்க நாம் எல்லா முயற்சிகளும் செய்ய வேண்டும் என்று தெளிவாகவில்லையா? ஒரு பக்கத்தில், நமது பொரு ளாதாரச் ''சக்திகளுக்கும்'' நமது அரசியல் பலத்துக்கும் இடையே ஓர் இசைவின்மை இருக்கிற படியால் நாம் அதி காரத்தைக் கைப்பற்றியிருக்கக் கூடாது என்று அதிலிருந்து ''பெறப்படுகிறது'' எனப் பிரகடனப்படுத்துவது ஒரு மரண ஆபத்தான தவருக இருக்கும். அப்படிப்பட்ட ஓர் ''இசைவின்மை'' எப்போதும் இருக்கும்; இயற்கையின்

வளர்ச்சியிலும் சமுதாயத்தின் வளர்ச்சியிலும் அது எப்போதும் இருந்து வருகிறது; வரிசையான முயற்சிகள் மூலமாக மட்டுமே—அவற்றில் ஒவ்வொன்றும், தனித்தனியாக எடுத்துப்பார்த்தால், ஒரு சார்பானதாக இருக்கும், சில இசைவின்மைகளைக் கொண்டதாக இருக்கும் — எல்லா நாடுகளையும் சேர்ந்த தொழிலாளர்களின் புரட்சிகரமான ஒத்துழைப்பால் முழுமையான சோஷலிசம் உண்டாக்கப் படும் என்பதை மறக்கிற ஒரு ''கூட்டில் அடைந்த மனிதன்''[62] மட்டுமே அப்படிப்பட்ட வாதத்தை முன்வைக்க முடியும்.

இன்னொரு பக்கத்தில், ''கண்ணைப் பறிக்கும்'' புரட்சி உணர்ச்சியால் நிலைகுலைய இடம் கொடுத்து விடுகிற, ஆனால் மிகக் கஷ்டமான மாற்றக் கட்டங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்கிற, தொடர்ச்சியான, சிந்தனை பூர்வமான, நிதானப் புத்தியுள்ள புரட்சி வேலைக்குத் திறனற்ற, வாய் வீரர்களுக்கும் வாய்வீச்சுக்காரர்களுக்கும் முழுச் சுதந்திரம் கொடுத்து விடுவதும் ஒரு வெளிப்படையான தவறாகவே இருக்கும்.

அதிருஷ்டவசமாக, புரட்சிகரமான கட்சிகளின் வளர்ச்சி வரலாறும், அவற்றை எதிர்த்து போல்ஷிவிஸம் நடத்திய போராட்டத்தின் வரலாறும், நமக்குக் கூர்மையாக வரையறை செய்யப்பட்ட மாதிரிகளின் பரம்பரையைத் தந்துள்ளன; அதில் மோசமான புரட்சியாளர்கள் என்பதற்குத் தெளிவாகத் தெரியும் எடுத்துக்காட்டுகளாக இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் அராஜகவாதிகளும் உள்ளனர். அவர்கள் இப்போது ''வலதுசாரி போல்ஷிவிக்குகளின்'' ''சமரசத்துக்கு'' எதிராக ஜன்னிக் கூச்சல் போட்டு வருகிறார்கள்; தொண்டை அடைத்துக் கட்டிக் கொள்ளும் முறையில் கூக்குரலிட்டு வருகின்றனர். ஆனால், ''சமரசத்திலே'' எது தப்பு என்றும், வரலாறும் புரட்சியின் போக்கும் ஏன் ''சமரசத்தை'' நியாயமாகவே கண்டித்துள்ளன என்றும் சிந்திக்க அவர்கள் திறனற்றவர்கள்.

கேரென்ஸ்கி காலத்தில் சமரசம் என்பதற்குப் பொருள் அதிகாரத்தை ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கத்

திற்கு விட்டுக் கொடுப்பதாகும்; மேலும் அதிகாரம் பற்றிய பிரச்சினையே ஒவ்வொரு புரட்சியின் அடிப்படையான பிரச்சினையாகும். 1917, அக்டோபர் — நவம்பர் மாதங்களில் போல்ஷிவிக்குகளில் ஒரு பகுதியினர் சமரசம் செய்து கொள்வது என்பதற்குப் பொருள், ஒன்று, அவர்கள் பாட்டாளி வர்க்கம் அதிகாரத்தைக் கைப்பற்றுவதைப் பற்றி பயப்பட்டனர்; அல்லது, அதிகாரத்தைச் சரிசமமாக இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் போன்ற ''நம்பத் தகுதியற்ற சகபிரயாணிகளோடு'' மட்டுமல்லாமல் எதிரிகளுடனும், செர்னேவ் வகையறுக் களுடனும் மென்ஷிவிக்குகளுடனும் பங்கிட்டுக் கொள்ள விரும்பினர் என்பதேயாகும். பின்குறிப்பிட்டவர்கள், அரசியல் நிர்ணய சபையைக் கலைத்தது, பொகயேவ்ஸ்கி வகையறுக்களை ஈவிரக்கமின்றி நசுக்கியது, சர்வவியாபகமாக சோவியத் ஸ்தாபனங்களை நிறுவியது, ஒவ்வொரு பறிமுதல் நடவடிக்கை போன்ற அடிப்படையான விவகாரங்களில் தவிர்க்க இயலாத முறையில் நமக்குத் தடங்கல் செய்திருப்பார்கள்.

இப்போது ''நம்பத் தகுதியற்ற சகபிரயாணிகள்'' கூட இல்லாமலே ஒரு கட்சியால், பாட்டாளி வர்க்கக் கட்சியால், அதிகாரம் கைப்பற்றப்பட்டு, நிலை நிறுத்தப்பட்டு, கெட்டிப்படுத்தப்பட்டுள்ளது. அதிகாரத்தைப் பங்கிடுவது, முதலாளித்துவ வர்க்கத்தின் மேலுள்ள பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை விட்டுக் கொடுப்பது பற்றிய பிரச்சினையே இல்லாதிருக்கையில், இருக்க முடியாதிருக்கையில், இந்தச் சமயத்தில் சமரசம் பற்றிப் பேசுவது புரிந்து கொள்ளாமல் மனப்பாடம் செய்து கொண்ட வார்த்தைகளைக் கிளிப்பிள்ளை போல் திருப்பிச் சொல்வதேயாகும். நாம் நாட்டை ஆள முடியும், ஆள வேண்டும் என்கிற நிலைமையை எட்டிவிட்ட பிறகு, முதலாளித்துவம் பயிற்றுவித்த மிகவும் திறமையுள்ள நபர்களை, செலவைப் பொருட்படுத்தாமல் நம் பக்கத்திற்கு வரச் செய்யவும், சிறு உடைமையின் உடைவை எதிர்த்து நம் சேவையில் அவர்களை எடுத்துக்கொள்ளவும், நாம் முயல்கிற

விஷயத்தை ''சமரசம்'' என்று வர்ணிப்பது சோஷலிச நிர்மாணத்தின் பொருளாதாரக் கடமைகளைத் தீர்க்கமாகச் சிந்தித்தறிய அறவே சக்தியில்லாத் தன்மையைத் தான் வெளிப் படுத்துகிறது.

எனவே, மத்தியச் செயற்குழுவில் தோழர் புகாரின் தனக்குக் கரேலினும் கேயும் செய்த ''சேவையைப்'' பற்றி உடனேயே ''வெட்கப்பட்டது'' அவருக்குப் பெருமையே என்றாலும், ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுப்'' போக்கைப் பொறுத்த மட்டில், அவர்களுடைய அரசியல் தோழர்களைப் பற்றிய குறியீடு இன்னமும் ஒரு கடுமையான எச்சரிக்கையாகவே இருந்து வருகிறது.

உதாரணத்துக்கு இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் பத்திரிகையான **ஸ்நாமியா த்ருதா, 1918,** ஏப்ரல் 18 இதழை எடுத்துக் கொள்ளுங்கள். ''நம் கட்சியின் இன்றைய நிலை போல்ஷிவிஸத்திலுள்ள மற்றொரு போக்குடன் (புகாரின், பக்ரோவ்ஸ்கி, மற்றவர்கள்) ஒன்றாகப் பொருந்துகிறது'' என்று அது பெருமையுடன் அறிவிக்கிறது. அல்லது அதே தேதியிட்ட மென்ஷிவிக் **வ்பெரியோத்** என்ற பத்திரிகையை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் மற்ற கட்டுரைகளுக்கிடையே, அபகீர்த்தி மிக்க மென்ஷிவிக் ஈஸூவ் எழுதிய பின்வரும் ''ஆய்வுரையைப்'' பாருங்கள்:

''தொடக்கத்திலிருந்தே ஓர் உண்மையான பாட்டாளி வர்க்கத் தன்மை இல்லாதிருக்கும் சோவியத் அதிகாரத்தின் கொள்கை, சமீபகாலத்தில் மேலும் மேலும் பகிரங்கமாக முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் செய்து கொள்ளும் போக்கைப் பின்பற்றியுள்ளது, வெளிப்படையான தொழிலாளி வர்க்கத்துக்கு விரோதமான தன்மையைப் பெற்றுள்ளது. தொழிலைத் தேசியமயமாக்குகின்ற சாக்கிலே தொழில் டிரஸ்டுகளை நிலைநாட்டும் கொள்கையை அவர்கள் பின்பற்றுகிறார்கள்; நாட்டின் உற்பத்திச் சக்திகளை மீட்டு நிறுவுவதின் சாக்கிலே அவர்கள் எட்டு மணி நேர வேலையை ஒழிக்கவும், வேலை அளவுக்கேற்ற சம்பள ஏற்பாட்டையும், டெய்லர் முறையையும் கறுப்புப் பட்டியல்களையும், குற்றஞ்சாட்டி வேலையிலிருந்து

நீக்குவதையும் புகுத்த முயல்கிறார்கள். இந்தக் கொள்கை பாட்டாளி வர்க்கத்திலிருந்து அதன் அதிமுக்கியமான பொருளாதார ஆதாயங்களைப் பறிக்கவும், முதலாளித்துவ வர்க்கத்தின் வரம்பற்ற சுரண்டலுக்கு அதை இரையாக்கவும் அடிகோலுகிறது.''

பிரமாதம், இல்லையா?

ருஷ்ய முதலாளிகளுக்கு நாட்டைத் தாரை வார்த்துத் தந்த இரகசிய ஒப்பந்தங்களுக்காக ஓர் ஏகாதிபத்திய யுத்தத்தைக் கேரென்ஸ்கியோடு சேர்ந்து நடத்திய அவருடைய நண்பர்கள், ஜூன் 11ம் தேதியன்று தொழிலாளர்களை நிராயுதபாணியாக்குவதாகப் பயமுறுத்திய தெஸெரெத்தேலியின் கூட்டாளிகள்[52], படாடோபமான சொற்களைக் கொண்டு முதலாளித்துவ வர்க்கத்தின் ஆட்சியைத் திரையிட்டு மறைத்த லீபெர்டான்கள்[53],— இதே பேர்வழிகள் தாம் சோவியத் ஆட்சி ''முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் செய்து கொள்கிறது'' என்றும், ''டிரஸ்டுகளை நிலைநாட்டுகிறது'' என்றும் (அதாவது ''அரசு முதலாளித்துவத்தை'' நிலைநாட்டுகிறது!), டெய்லர் முறையைப் புகுத்துகிறது என்றும் குற்றம் சாட்டுகிறார்கள்.

உண்மைதான், போல்ஷிவிக்குகள் ஈஸூவுக்கு ஒரு பதக்கம் அளிக்கவேண்டும்; அவருடைய ஆய்வுரை ஒவ்வொரு தொழிலாளர் கிளப்பிலும் சங்கத்திலும் காட்சிக்கு வைக்கப்பட வேண்டும் — முதலாளித்துவ வர்க்கத்தின் ஆத்திரமூட்டும் பிரசுரங்கங்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாக தொழிலாளர்களுக்கு இந்த லீபெர்டான்களையும், தெஸெரெத்தேலிகளையும், ஈஸூவ்களையும் நன்றாகத் தெரியும். இப்பேர்ப்பட்ட நபர்களை அனுபவத்திலிருந்து அவர்கள் தெரிந்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட முதலாளித்துவ வர்க்கத்தின் ஏவலாட்கள் தொழிலாளர்களை டெய்லர் முறையையும் ''டிரஸ்டுகளை நிறுவுவதையும்'' எதிர்க்கும்படி தூண்டுவதற்குக் காரணம் என்ன என்பதைத் தொழிலாளர்கள் சிந்தித்துப் பார்ப்பது மிகவும் பயனுள்ளதாயிருக்கும்.

வர்க்க உணர்வுள்ள தொழிலாளர்கள் லீபெர்டான்களின், தெஸெரெத்தேலி வகையறுக்களின் நண்பனுகிய

*ஈஸாவின் ''ஆய்வுரையையும்'' ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்'' பின்வரும் ஆய்வுரையையும் கவனமாக ஒப்பு நோக்குவார்கள்:*

*''தொழில் துறையில் முதலாளிகளின் நிர்வாகத்தை மீட்டு நிறுவுவது சம்பந்தமாக உழைப்புக் கட்டுப்பாடு புகுத்துவது மூலம் உழைப்பின் உற்பத்தித் திறனைக் கணிசமான அளவுக்கு அதிகப்படுத்த முடியாது; ஆனால் அது பாட்டாளிகளின் வர்க்க முன்முயற்சியையும், செயலூக்கத்தையும், ஒழுங்கமைப்பையும் குறைக்கும். அது தொழிலாளி வர்க்கத்தை அடிமைப் படுத்த வழிகோலுகிறது; அது பிற்பட்ட நிலையிலுள்ள நபர்களிடையேயும் பாட்டாளி வர்க்கத்தின் முன்னணிப் படையின் இடையேயும் அதிருப்தியை உண்டாக்கும். 'முதலாளித்துவ நாசவேலைக்காரர்களை' எதிர்த்துப் பாட்டாளி வர்க்கத்திடையே நிலவும் பகைமைக்கு எதிர்முகமாக இந்த முறையை அமுலாக்குவதற்குக் கம்யூனிஸ்டு கட்சியானது, தொழிலாளிகளுக்கு எதிராகக் குட்டி முதலாளிகளைச் சார்ந்திருக்க வேண்டியிருக்கும்; இந்த வழியிலே அது பாட்டாளி வர்க்கத்தின் கட்சி என்ற முறையில் தன்னைத்தானே நாசப்படுத்திக் கொள்ளும்''* (கம்யூனிஸ்ட், *இதழ் 1, பக்கம் 8, பத்தி 2).*

*''இடதுசாரிகள்'' அந்த வலையில் வீழ்ந்து விட்டார்கள், ஈஸாவ் வகையறுக்களும் முதலாளித்துவத்தைச் சேர்ந்த மற்ற துரோகிகளும் தங்களை ஆத்திரமூட்டிவிட இடங் கொடுத்து விட்டார்கள் என்பதற்கு இது மிகத் தெளிவான சான்றாகும். இது தொழிலாளர்களுக்கு ஒரு நல்ல பாடமாகப் பயன்படுகிறது; பாட்டாளி வர்க்கத்தின் முன்னணிப் படையேதான் உழைப்புக் கட்டுப்பாடு புகுத்தப் படுவதற்கு ஆதரவாக நிற்கிறது என்பதையும், குட்டி முதலாளித்துவ வர்க்கம்தான் இந்தக் கட்டுப்பாட்டைச் சிதறடிக்கத் தன்னாலான அனைத்தையும் செய்து வருகிறது என்பதையும் அவர்கள் அறிவார்கள். ''இடது சாரிகளின்'' மேலே எடுத்துக் காட்டிய ''ஆய்வுரை'' போன்ற பிரசங்கங்கள் பயங்கரமான மானக்கேடாகும், அதன் உட்குறிப்பு கம்யூனிசத்தை நடைமுறையில் முற்றாகக் கைவிடுவது,*

குட்டி முதலாளித்துவ வர்க்கத்தின் முகாமுக்கு முற்ருக
ஓடிப்போய் விடுவது, ஆகும்.
''முதலாளிகளின் நிர்வாகத்தை மீட்டு நிறுவுவது
சம்பந்தமாக''—இந்த வார்த்தைகளைக் கொண்டு ''இடது
சாரிக் கம்யூனிஸ்டுகள்'' ''தங்களைத் தற்காத்துக் கொள்ள
லாம்'' என்று நம்புகிருர்கள். அறவே பயனற்ற ஒரு
தற்காப்பு இது—ஏனெனில், முதலாவதாக, சோவியத் ஆட்சி
முதலாளிகளின் கையில் ''நிர்வாகத்தை'' வைக்கும்போது,
தொழிலாளர்களின் கமிசார்களை அல்லது தொழிலாளர்
களின் கமிட்டிகளை நியமிக்கிறது; அவை நிர்வாகி எடுத்து
வைக்கும் ஒவ்வொரு அடியையும் கண்காணிக்கின்றன,
அவை அவனுடைய நிர்வாகத்திலிருந்து அனுபவத்தைக்
கற்றுக் கொள்கின்றன, அவனுடைய உத்தரவுகளுக்கு
எதிராக அப்பீல் செய்து கொள்ள அவற்றிற்கு உரிமை
இருப்பது மட்டுமல்ல, சோவியத் ஆட்சியின் உறுப்புகளின்
மூலமாக அவனைப் பதவியிலிருந்து நீக்கச் செய்யவும்
முடியும். இரண்டாவதாக, வேலை செய்கிறபோது நிர்வாகக்
காரியங்களுக்கு மட்டுமே முதலாளிகளிடம் ''நிர்வாகம்''
கொடுக்கப்படுகிறது; அவற்றின் நிபந்தனைகளை சோவியத்
ஆட்சி நிர்ணயிக்கிறது; அவற்றை சோவியத் ஆட்சி
ஒழிக்கக்கூடும், மாற்றக்கூடும். மூன்ருவதாக, சோவியத்
அதிகாரம் ''நிர்வாகத்தை'' முதலாளிகளிடம் முதலாளிகள்
என்கிற வகையில் அல்லாமல் தொழில்நுட்ப நிபுணர்கள்
அல்லது ஒழுங்கமைப்பாளர்கள் என்கிற வகையில் தந்து
அவர்களுக்கு உயர்ந்த சம்பளம் கொடுக்கிறது. உண்மையிலே
பெருமளவிலுள்ள, பிரமாண்டமான தொழிற்சாலைகளின்,
டிரஸ்டுகளின் அல்லது பிற நிறுவனங்களின் ஒழுங்கமைப்
பாளர்களிலும் முதல்தரமான தொழில்நுட்ப நிபுணர்
களிலும் நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது பேர் முதலாளி
வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்று தொழிலாளர்கள்
நன்ருக அறிவார்கள். பாட்டாளி வர்க்கக் கட்சியாகிய
நாம் இவர்களைத்தான் உழைப்பின் போக்கை ''நிர்வகிக்க
வும்'', உற்பத்தியை ஒழுங்கமைக்கவும் நியமிக்க வேண்
டும்; காரணம், இந்த விஷயத்தில் நடைமுறை அனுபவ

முள்ள நபர்கள் வேறு யாரும் கிடையாது. ''இடதுசாரிச்'' சொற்களாலோ குட்டி முதலாளித்துவத்தனமான தொள தொளத்த சிந்தனையாலோ தடம்புரளச் செய்யப்படக் கூடிய தங்களுடைய குழந்தைப் பருவத்தைக் கடந்து வந்துள்ள தொழிலாளர்கள் டிரஸ்டுகளில் முதலாளித்துவ நிர்வாகத்தின் மூலமாகத்தான், பிரமாண்டமான இயந்திரத் தொழில் மூலமாகத்தான், ஆண்டுதோறும் பலகோடிப் பணப் புழக்கமுள்ள தொழில் அமைப்புகள் மூலமாகத் தான்—அப்படிப்பட்ட உற்பத்திமுறையின், அப்படிப்பட்ட தொழில் அமைப்புகளின் மூலமாகத்தான் — சோஷலிசத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிருர்கள். தொழிலாளர்கள் குட்டி முதலாளித்துவத் தன்மை உடையவர்களல்ல. பெருமளவு ''அரசு முதலாளித்துவத்தைக்'' கண்டு அவர்கள் பயப்படவில்லை. அதை அவர்கள் தங்களுடைய, பாட்டாளி வர்க்கத்தினுடைய, உற்பத்திக்குரிய ஆயுதம் என்று, தங்களுடைய, சோவியத் ஆட்சி சிறு உடைமையின் வீழ்ச்சிக்கும் குலைவுக்கும் எதிராக அதைப் பயன்படுத்தும் என்று போற்றிப் பாவிக்கிருர்கள்.

இது வர்க்கத்தன்மை இழந்த, அதன் மூலமாக முற்றுகக் குட்டி முதலாளியாகிப்போன படிப்பாளிக் கூட்டத்துக்குத் தான் புரியக்கூடியதாயில்லை; ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளிலே'' ஒஸீன்ஸ்கி பின்வருமாறு எழுதும் போது இதை மாதிரியாக்கிக் காட்டுகிருர்:

''.... எந்தத் தொழில் நிறுவனத்தின் அமைப்பிலும் நிர்வாகத்திலும் முன்முயற்சி முழுவதும் 'டிரஸ்டுகளின் ஒழுங்கமைப்பாளர்களுக்குச்' சொந்தமாயிருக்கும். அவர்களுக்கு நாம் கற்றுத்தரப் போவதில்லை, அல்லது அவர்களைச் சாதாரணத் தொழிலாளர்களாக ஆக்கப் போவதுமில்லை; அவர்களிடமிருந்து நாம் கற்றுக் கொள்ளப் போகிருேம்'' (கம்யூனிஸ்ட், இதழ் 1, பக்கம் 14, பத்தி 2).

இந்தப் பகுதியில் முயலப்பட்டுள்ள நையாண்டி ''டிரஸ்டுகளின் ஒழுங்கமைப்பாளர்களிடமிருந்து சோஷ

லிஸத்தைக் கற்றுக்கொள்ளுங்கள்'' என்கிற எனது சொற்கள் மீது எய்ததாகும்.

இதை வேடிக்கை என்று ஒஸீன்ஸ்கி நினைக்கிறார். டிரஸ்டுகளின் ஒழுங்கமைப்பாளர்களை அவர் ''சாதாரணத் தொழிலாளர்களாக'' ஆக்க விரும்புகிறார். ''என்ன, பதினைந்து வயதுதானா. அதற்குமேல் இல்லையா?''[54] என்று கவிஞன் எழுதிய பருவத்தைச் சேர்ந்த ஒரு மனிதன் இப்படி எழுதியிருந்தால், அதில் வியப்படைய ஒன்றும் இருக்காது. ஆனால் பெருமளவு முதலாளித்துவம் படைத்த தொழில் நுட்ப, பண்பாட்டுத் துறைகளின் சாதனைகளைத் தான் பயன்படுத்தாவிட்டால் சோஷலிசம் சாத்தியமேயில்லை என்று போதிக்கப்பட்டுள்ள ஒரு மார்க்சியவாதியிடமிருந்து இவற்றைக் கேட்பது கொஞ்சம் விநோதமாகத்தான் இருக்கிறது. இதில் மார்க்சியத்தின் சாயல் அறவே கிடையாது.

இல்லை. டிரஸ்டுகளின் ஒழுங்கமைப்பாளர்களிடமிருந்து கற்றுக் கொள்ளாமல் சோஷலிசத்தை உருவாக்குவதோ, புகுத்துவதோ அசாத்தியம் என்று புரிந்துகொள்கிறவர்கள் தான் கம்யூனிஸ்டுகள் என்கிற பெயருக்குத் தகுதியுடையவர்கள். காரணம், சோஷலிசம் என்பது கற்பனையின் ஒரு புனைவு அல்ல; ஆட்சியை வென்று பெற்ற பாட்டாளி வர்க்க முன்னணிப் படை டிரஸ்டுகளால் உருவாக்கப் பட்டிருப்பவற்றை உட்கொண்டு செயல்படுத்தப் படுவதே அது. டிரஸ்டு வழியில் பெருமளவு உற்பத்தியை அமைக்கும் திறமையை முதல்தரமான முதலாளித்துவ நிபுணர்களிடமிருந்து பெறுவதைத் தவிர, பாட்டாளி வர்க்கக் கட்சியாகிய நமக்கு வேறு வழி இல்லை.

முதலாளித்துவப் படிப்பாளிகளுக்கு சோஷலிசம் ''கற்றுக் கொடுப்பது'' என்கிற சிறுபிள்ளைத்தனமான வேலையை நாம் மேற்கொண்டாலொழிய, அவர்களுக்குக் கற்றுத்தர நம்மிடம் எதுவுமில்லை. அவர்களுக்கு நாம் கற்றுத்தரலாகாது, அவர்களை உடைமை நீக்கம் தான் செய்ய வேண்டும் (ருஷ்யாவில் போதிய அளவுக்கு ''உறுதியோடு'' செய்யப்பட்டு வருவது போல), அவர்களின்

நாசவேலைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்; அவர்களை ஒரு பகுதியாகவோ, குழுவாகவோ சோவியத் ஆட்சிக்குக் கீழ்ப்படுத்த வேண்டும். மறுபக்கத்தில், குழந்தை வயதுள்ள, குழந்தை அறிவுள்ள கம்யூனிஸ்டுகளாக நாம் இராவிட்டால்—அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும், கற்றுக் கொள்வதற்கு விஷயம் இருக்கிறது; ஏனெனில் பாட்டாளி வர்க்கக் கட்சிக்கும் அதன் முன்னணிப் படைக்கும் கோடானுகோடி மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கிற பிரமாண்டமான தொழில் நிறுவனங்களை ஒழுங்கமைப்பதில் சுதந்திரமாக வேலை செய்த அனுபவம் கிடையாது.

ருஷ்யாவிலுள்ள தலைசிறந்த தொழிலாளர்கள் இதை உணர்ந்து கொண்டனர். அவர்கள் முதலாளித்துவ ஒழுங்கமைப்பாளர்களிடமிருந்தும் நிர்வகிக்கும் இஞ்சினீயர்களிடமிருந்தும் தொழில்நுட்ப நிபுணர்களிடமிருந்தும் கற்றுக் கொள்ளத் தொடங்கியுள்ளனர். திடமாக, எச்சரிக்கையாக, சிறு விஷயங்களிலிருந்து தொடங்கி, படிப்படியாக அதைவிட அதிகக் கடினமான விடியங்களுக்கும் போகிறவாறு கற்கத் தொங்கியுள்ளனர். உலோகத் தொழிலிலும் இயந்திர நிர்மாணத் தொழிலிலும் விவகாரங்கள் இன்னமும் மெதுவாகப் போய்க் கொண்டிருக்கின்றன என்றால் அதற்குக் காரணம், அவை அதிகக் கடினமாக உள்ளன. ஆனால் ஜவுளி, புகையிலைத் தொழிலாளிகள், தோல் பதனிடும் தொழிலாளிகள், ''அரசு முதலாளித்துவத்தைப்'' பற்றியோ, ''டிரஸ்டுகளின் ஒழுங்கமைப்பாளர்களிடம் கற்றுக் கொள்வது'' பற்றியோ வர்க்கத் தன்மையிழந்த குட்டி முதலாளித்துவப் படிப்பாளிக் கூட்டம் பயப்படுவது போல பயப்படவில்லை. ''பிரதான தோல் கமிட்டி,'' ''மத்திய ஜவுளிக் கமிட்டி'' ஆகிய பிரதான மத்திய நிலையங்களிலுள்ள இந்தத் தொழிலாளர்கள் முதலாளிகள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, அவர்களிடமிருந்து கற்றுக்கொள்கிறார்கள், டிரஸ்டுகளை நிலைநாட்டுகிறார்கள்; ''அரசு முதலாளித்துவத்தை'' — அது சோவியத் ஆட்சியின் கீழ் சோஷலிசத்தின் வாயிற்படியைக் குறிக்கிறது, அதன் உறுதியான வெற்றிக்கு ஒரு நிபந்தனையாக இருக்கிறது.

ருஷ்யாவின் முன்னேறிய தொழிலாளிகளின் இந்த வேலையும், உழைப்புக் கட்டுப்பாடு புகுத்தும் அவர்களின் வேலையோடு கூடவே தொடங்கி விட்டது; சந்தடியில்லாமல், படாடோபம் இல்லாமல், சில ''இடதுசாரிகளுக்கு'' எவ்வளவோ அவசியமாயிருக்கிற சத்தமும் ஆர்ப்பாட்டமும் இல்லாமல் இது நடந்து கொண்டிருக்கிறது. இது நடைமுறை அனுபவத்தின் படிப்பினைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு, அதிக எச்சரிக்கையோடு, படிப்படியாக நடந்து கொண்டிருக்கிறது. இந்தக் கடினமான வேலை, பெருமளவு உற்பத்தியை எப்படி நிர்மாணிப்பது என்று நடைமுறையில் கற்றுக் கொள்ளும் வேலை, நாம் சரியான பாதையிலேதான் செல்கிறோம் என்பதற்கு உத்தரவாதமாகும். சிறு உடைமையாளரீதியான வீழ்ச்சியையும் குலைவையும் எதிர்த்தும், குட்டி முதலாளித்துவக் கட்டுப்பாடின்மையை* எதிர்த்தும் ருஷ்யாவின் வர்க்க உணர்வுள்ள தொழிலாளர்கள் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு உத்தரவாதமாகும், கம்யூனிஸத்தின் வெற்றிக்கு உத்தரவாதமாகும்.

## 6

முடிவாக இரண்டு குறிப்புக்கள்.

*1918*, ஏப்ரல் *4*ம் தேதியன்று, ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளோடு'' வாதம் புரியும்போது (கம்யூனிஸ்ட்,

* பொருளாதாரத் துறையில் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் முக்கியத்துவம் பற்றி ஒரு வார்த்தைகூட ஆய்வுரைகளின் ஆசிரியர்கள் சொல்லாமலிருப்பது மிகவும் குறிப்பிடத்தக்க விஷயமாகும். ''ஒழுங்கமைப்பு'' வகையறா என்று மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள். ஆனால் பொருளாதார உறவுகளில் தொழிலாளர்களின் சர்வாதிகாரத்தைத் தவிர்த்து ஒதுக்குகிற குட்டி முதலாளிகள்கூட அதை ஒப்புக் கொள்கிறார்கள். பாட்டாளி வர்க்கப் புரட்சியின் இந்தக் ''கருப்பொருளை'', முதலாளித்துவத்தின் பொருளாதார அடிப்படைகளுக்கு எதிராகச் செலுத்தப்படுகிற இதை, இப்படிப்பட்ட தருணத்தில் ஒரு பாட்டாளி வர்க்கப் புரட்சியாளர் என்றைக்கும் ''மறக்க'' முடியாது.

இதழ் 1, பக்கம் 4, அடிக்குறிப்பைப் பார்க்க) ''ரயில்வே அரசாணையில் உங்களுக்கு அதிருப்தியளிப்பதை விளக்குங் கள்; உங்களுடைய திருத்தங்களைக் கொடுங்கள். பாட்டாளி வர்க்கத்தின் சோவியத் தலைவர்கள் என்கிற வகையில் அது உங்கள் கடமையாகும்; இல்லையேல் நீங்கள் சொல் வது வெறும் சொல் வீச்சு தவிர வேறில்லை'' என்று நான் அவர்களிடம் பச்சையாகச் சொன்னேன்.

கம்யூனிஸ்டின் முதல் இதழ் 1918, ஏப்ரல் 20ம் தேதி யில் வெளிவந்தது; ஆனால், ''இடதுசாரிக் கம்யூனிஸ்டு களின்'' கருத்துப்படி ரயில்வே அரசாணையை எப்படி மாற்றவேண்டும் அல்லது திருத்தவேண்டும் என்பது பற்றி ஒரு வார்த்தையேனும் அதில் இல்லை.

''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளின்'' மௌனமே அவர் களைத் தண்டித்து விட்டது. எல்லா விதமான மறைமுகக் குற்றச்சாட்டுகளையும் கொண்டு (இதழ் 1, பக்கங்கள் 8, 16 பார்க்க) ரயில்வே அரசாணையைத் தாக்குவதைத் தவிர அவர்கள் வேறொன்றும் செய்யவில்லை; ''அரசாணை தவறான தென்றால் அதை எப்படித் திருத்தவேண்டும்?'' என்கிற கேள்விக்குத் தெளிவான விடை தரவில்லை.

இதைப் பற்றி மேலும் சொல்லத் தேவையில்லை. ரயில்வே அரசாணையைப் பற்றிய (நம்முடைய செயலுக்குரிய கொள்கைக்கு, கண்டிப்புள்ள கொள்கைக்கு, சர்வாதி காரத்திற்குரிய கொள்கைக்கு, பாட்டாளி வர்க்கக் கட்டு பாட்டுக்குரிய கொள்கைக்கு அது ஒரு குறிப்பான எடுத்துக் காட்டாகும்) இப்படிப்பட்ட ''விமர்சனத்தை'' ''ஈஸௌவ் வகைப்பட்ட'' விமர்சனம் என்றோ வெறும் வாய்ச்சொல் வீச்சு என்றோதான் வர்க்க உணர்வுள்ள தொழிலாளிகள் அழைப்பார்கள்.

இரண்டாவது குறிப்பு. கம்யூனிஸ்டின் முதல் இதழில் அரசும் புரட்சியும் என்கிற என்னுடைய சிறுநூலை புகாரின் மிகவும் புகழ்ந்து எழுதிய விமர்சனம் இருந்தது. புகாரின் போன்றவர்களின் அபிப்பிராயத்தை நான் எவ்வளவுதான் மதித்த போதிலுங்கூட, அந்த விமர்சனத்தின் தன்மை ஒரு வருந்தத்தக்க, கவனிக்கத்தக்க விஷயத்தை வெளிப்படுத்து

கிறது என்று சொல்லுமாறு என் மனச்சாட்சி கட்டாயப் படுத்துகிறது. புகாரின் பாட்டாளி வர்க்கத்தின் கடமைகளைச் சென்ற காலத்தின் நிலையிலிருந்து கவனிக்கிறாரே தவிர எதிர்காலத்தின் நிலையிலிருந்து அல்ல. அரசு பற்றிய பிரச்சினையில் பாட்டாளி வர்க்கப் புரட்சியாளருக்கும் குட்டி முதலாளித்துவப் புரட்சியாளருக்கும் இடையே பொதுவாக இருக்கக்கூடியதை புகாரின் குறிப்பிட்டார், வலியுறுத்தினார். ஆனால் அவர்களில் ஒருவரிடமிருந்து மற்றொருவரை வேறுபடுத்திக் காட்டுவது எதுவோ அதை புகாரின் ''குறிப்பிடத் தவறினார்''.

பழைய அரசு இயந்திரத்தை ''நொறுக்க வேண்டும்'', ''தகர்க்க வேண்டும்'', முதலாளித்துவ வர்க்கத்தை ''இறுதியாக, முற்றாக நசுக்கிக் கொல்ல வேண்டும்'' என்றெல்லாம் புகாரின் குறிப்பிட்டார், வலியுறுத்தினார். வெறி கொண்ட குட்டி முதலாளியும் இதை விரும்பக் கூடும். இதைத்தான், பிரதானமாக, நமது புரட்சி **1917** அக்டோபருக்கும் **1918** பிப்ரவரிக்கும் இடையே ஏற்கெனவே செய்துள்ளது.

மிகமிகப் புரட்சிகரமான குட்டிமுதலாளிகூட விரும்ப முடியாத, வர்க்க உணர்வுள்ள பாட்டாளி விரும்புகிற, நமது புரட்சி இன்னமும் செய்து முடிக்காமலிருக்கிற விஷயத்தையும் கூட என் சிறுநூலில் குறிப்பிட்டிருக்கிறேன். இந்தக் கடமையைப் பற்றி, நாளைய கடமையைப் பற்றி, புகாரின் எதுவும் சொல்லவில்லை.

இவ்விஷயத்தைப் பற்றி நான் மௌனம் சாதிக்காமலிருப்பதற்கு இன்னமும் காரணமிருக்கிறது; ஏனெனில், முதலாவதாக, நாளைய கடமைகளிலேதான், நேற்றைய கடமைகளில் அல்ல, அதிகமாகக் கவனம் செலுத்த வேண்டும் என்று கம்யூனிஸ்டிடம் எதிர்பார்க்கப் படுகிறது; இரண்டாவதாக, போல்ஷிவிக்குகள் அதிகாரத்தைக் கைப் பற்றுவதற்கு முன் எழுதப்பட்டது எனது பிரசுரம்; அச்சமயத்தில் ''ஆமாம், அதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகும் நீங்கள் கட்டுப்பாட்டைப் பற்றிக் கட்டாயம் பேசத் தொடங்குவீர்கள்...'' என்பது போன்ற கொச்சையான

குட்டி முதலாளித்துவ வாதங்களை போல்ஷிவிக்குகளிடம் வைப்பது சாத்தியமற்று இருந்தது.

''... சோஷலிசம் கம்யூனிசமாய் வளர்ச்சியுறும்... ஏனெனில் பலாத்காரம் இல்லாமலே, கீழ்ப்படிதல் இல்லாமலே மக்கள் சமுதாய வாழ்வின் சர்வ சாதாரண நெறிமுறைகளை அனுசரித்து நடக்கப் பழக்கப்பட்டுவிடுவார்கள்'' (அரசும் புரட்சியும், பக்கம் 117; ஆக, ''சாதாரணமான நெறிமுறைகள்'' அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு முன்பே விவாதிக்கப்பட்டன).

''...பல நூறு ஆண்டுகளாய் அறிந்துள்ள ஆயிரக் கணக்கான ஆண்டுகளாய் அரிச்சுவடி நீதிவிளக்கங்களில் எல்லாம் மீண்டும் மீண்டும் கூறப்பட்டு வந்துள்ள சமுதாய ஒட்டுறவின் சர்வசாதாரண விதிகளைப் பற்றியொழுகச் சிறிது சிறிதாய்ப் பழகிக் கொள்வார்கள். பலாத்காரம் இல்லாமலே, பலவந்தம் இல்லாமலே, கீழ்ப்படிதல் இல்லாமலே, பலவந்தத்துக்கான அரசு எனப்படும் தனிவகை இயந்திரம் இல்லாமலே அவர்கள் இவ்விதிகளைப் பற்றியொழுகப் பழகிக்கொள்கிற'' காலத்தில் தான் ''ஜனநாயகம் உலர்ந்து உதிரத் தொடங்கும்'' (மேற்குறிப்பிட்ட நூல், பக்கங்கள் 126-127; ஆக ''அரிச்சுவடி நீதிவிளக்கங்கள்'' பற்றி அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு முன்பே குறிப்பிடப்பட்டது).

''...கம்யூனிச வளர்ச்சியின் உயர் கட்டம்'' (தேவைக்குத் தக்க ஊதியம், திறனுக்குத் தக்க உழைப்பு) ''உழைப்பின் தற்போதைய உற்பத்தித் திறனையோ, பொமியலோவ்ஸ்கியின் கதைகளில் வரும் புர்சாக்கியைப்[55] போல 'வேடிக்கைக்காக வேண்டி' பொதுச் செல்வங்களுக்குச் சேதம் விளைவிக்கக் கூடியவர்களும், முடியாததைக் கொடு என்று கோரக் கூடியவர்களுமான தற்போதுள்ள சராசரி மனிதர்களையோ மனதிற் கொண்டு கூறப் பட்டதல்ல (அதே நூல், பக்கம் 138).

''...கம்யூனிசத்தின் 'உயர்' கட்டம் வரும்வரை, உழைப்பின் அளவைமீதும் நுகர்வின் அளவைமீதும் சமுதாயமும் அரசும் மிகவும் கண்டிப்பான கண்காணிப்பு

செய்ய வேண்டுமென்று சோஷலிஸ்டுகள் கோருகின்றனர்...'' (அதே நூல், அதே பக்கம்).

''...கணக்கீடு, கண்காணிப்பு — கம்யூனிச சமுதாயத்தின் முதற்கட்டம் தடங்கலின்றி இயங்கவும் சரிவரச் செயற்படவும் பிரதானமாய்த் தேவைப் படுகிறவை இவையே'' (அதே நூல், பக்கம் 144). ''மிகச் சொற்பத் தொகையினரே ஆன முதலாளித்துவச் சிறுபான்மையோரையும், தமது முதலாளித்துவப் பழக்கங்களை விட்டொழிக்க விரும்பாத கனவான்களையும்'' மட்டுமல்ல ''முதலாளித்துவத்தால் அறவே பாழ்படுத்தப்பட்டு விட்ட தொழிலாளர்களையும்'' (அதே நூல், பக்கம் 145) ''சோம்பேறிகளையும் செல்வச் சீமான்களது புதல்வர்களையும் மோசடிக்காரர்களையும் ஏனைய 'முதலாளித்துவ மரபுகளின் காவலர்களையும்' '' கண்காணிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் (அதே நூல், பக்கங்கள் 145-146).

இதை புகாரின் வலியுறுத்தாமல் விட்டது கவனிக்கத் தக்கதாகும்.

*1918, மே 5*

*1918,*மே *9, 10, 11* தேதிகள்,
பிராவ்தா, இதழ்கள் *88, 89, 90*ல்
பதிப்பிக்கப்பட்டது

கையொப்பம்: நி. லெனின்

நூல் திரட்டு,
தொகுதி *36,*
பக்கங்கள் *283-314*

# அமெரிக்கத் தொழிலாளர்களுக்கு எழுதிய கடிதம்[56]

தோழர்களே, 1905ஆம் ஆண்டுப் புரட்சியில் கலந்துகொண்டு அதற்குப்பிறகு பல ஆண்டுகள் உங்கள் நாட்டில் வாழ்ந்திருந்த ஒரு ருஷ்ய போல்ஷிவிக் எனது கடிதத்தை உங்களிடம் சேர்ப்பிக்க முன்வந்திருக்கிறார். அவரது யோசனையை நான் மேலதிகமான மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டேன், காரணம் இன்றைய கட்டத்தில், மிகவும் புதியதும், ஆகவலிமையானதும், முதலாளித்துவ லாபங்களைப் பங்கீடு செய்துகொள்வதற்காக தேசங்களை உலகுதழுவிய ரீதியில் படுகொலை செய்வதற்கு வெகு அண்மையில் சேர்ந்துள்ளதுமான — அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் சமரசத்திற்கு இடந்தராத விரோதிகளாக விளங்கும் அமெரிக்காவின் புரட்சிகரத் தொழிலாளர்கள் தனிச் சிறப்பான முக்கியமான பாத்திரத்தை வகிக்க வேண்டும். இந்தத் தருணத்திலேயே, அமெரிக்கக் கோடீசுவரர்கள் இந்த நவீன அடிமை உடைமையாளர்கள், முதல் சோஷலிசக் குடியரசை நெரித்து அழிக்கும் நோக்கத்திற்காகக் கொடிய ஆங்கில-ஜப்பானிய ஏகாதிபத்தியவாதிகள் தொடுத்துவிட்டுள்ள ஆயுதத் தாக்குதல் படையெடுப்புக்கு—நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ, பகிரங்கமாகவோ அல்லது வஞ்சனையாக மூடிமறைத்தோ எப்படிச் செய்தாலும் இதில் வித்தியாசமில்லை—தமது ஆதரவை வழங்குவது மூலம் இரத்தவெறி ஏகாதிபத்தியத்தின் இரத்தவெறி வரலாற்றில் ஒரு தனிப்பட்ட துன்பியல் ஏட்டைப் புரட்டிவிட்டார்கள்.

நவீன நாகரிக அமெரிக்காவின் வரலாறு உண்மையிலேயே விடுதலை தந்த, உண்மையிலேயே புரட்சிகரமான, அந்த மகத்தான போர்களில் ஒன்ருேடு துவங்கியது. பெருவாரியான நாடுபிடிக்கும் போர்களுடன் ஒப்புநோக்கில் அத்தகைய போர்கள் மிகச் சிலவே. இந்த நாடுபிடிக்கும் போர்கள் இன்றைய ஏகாதிபத்தியப் போரைப் போலவே அநீதியாகப் பறித்துக் கொண்ட நிலங்கள் இழிவழியில் திரட்டிய ஆதாயங்களைப் பங்கீடுசெய்துகொள்வதன் மீது மன்னர்கள், நிலப்பிரபுக்கள் அல்லது முதலாளிகளிடையான பூசல்களால் விளைந்தவை. அந்தப் போரோ, இன்னும் இந்தியா, எகிப்து, உலகின் எல்லாப் பகுதிகளிலும் கோடிக்கணக்கான மக்களை காலனி அடிமைத்தனத்தில் வைத்து ஒடுக்கி வரும் அதே வழியில் அமெரிக்காவை ஒடுக்கி அந்த நாட்டைக் காலனி அடிமைத்தனத்தில் வைத்திருந்த இந்த ''நாகரிக'' இரத்தவெறியர்களான பிரிட்டிஷ் கொள்ளைக்காரர்களை எதிர்த்து அமெரிக்க மக்கள் தொடுத்த போராகும்.

அதற்குப் பிறகு ஏறத்தாழ 150 ஆண்டுகள் கடந்து விட்டன. முதலாளித்துவ நாகரிகம் அதன் செழிப்பான கனிகள் அனைத்தையும் ஈன்றளித்து விட்டது. அமெரிக்கா கூட்டுமனித முயற்சியின் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி மட்டத்தில், இயந்திரங்கள் மற்றும் நவீனப் பொறியியலின் அற்புதங்களைப் பயன்படுத்துவதில் சுதந்திரமான கல்விபெற்ற நாடுகளிடையே முதலிடத்தைப் பெற்றிருக்கிறது. அதே சமயம் அமெரிக்காவானது சக்தியிலும் செல்வச் செழிப்பிலும் புரளும் விரல்விட்டெண்ணத்தக்க ஆணவம் பிடித்த கோடீசுவரர்களுக்கும் பஞ்சைப்பனுதி வாழ்வின் விளிம்பில் இடையருது வாழ்ந்துவரும் கோடிக்கணக்கான உழைப்பாளி மக்களுக்கும் இடையில் கிடக்கும் படுபாதாளத்தின் ஆழத்தைப் பொருத்தவரை முன்னணியில் நிற்கும் நாடுகளில் ஒன்ருக இருக்கிறது. நிலப்பிரபுத்துவ அடிமைத்தனத்தை எதிர்த்து ஒரு புரட்சிகரமான போரினைத் தொடுத்தது மூலம் உலகத்திற்கு ஓர் உதாரணத்தை நிலைநாட்டிய அமெரிக்க மக்கள், இப்பொழுது விரல்

விட்டெண்ணக் கூடிய ஒரு சில கோடீசுவரர்களுக்கு மிகவும் அணித்தான முதலாளித்துவக் கட்டத்தின் கூலி அடிமைத் தனத்தில் இருப்பதை அறிகிருர்கள்; கூலிக்கு மாரடிக்கும் போக்கிரிகள் பாத்திரத்தைத் தாம் வகித்துவருவதை அறிகிருர்கள். இந்தக் கூலிக்கு மாரடிக்கும் போக்கிரிகள் செல்வந்தக் கயவர்களின் நலனுக்காக ''விடுதலை செய்கிருேம்'' என்ற சாக்குப் போக்கில் ஃபிலிப்பைன் குடியரசை 1898ல் நெரித்து அழித்தார்கள்,[57] 1918ல் ஜெர்மானியரிடமிருந்து ''பாதுகாக்கிருேம்'' என்ற சாக்குப் போக்கில் ருஷ்ய சோஷலிசக் குடியரசை நெரித்தழிக்கின்றனர்.

தேசங்களை நான்காண்டுகள் ஏகாதிபத்தியவாதிகள் படுகொலை செய்தது விளைவின்றிப் போய்விடவில்லை. பிரிட்டிஷ் மற்றும் ஜெர்மன் இரு கொள்ளைக்கார கோஷ்டியின் கயவர்களும் மக்களை ஏமாற்றியது மறுக்கமுடியாத தெட்டத் தெளிவான உண்மைகளால் அறவே அம்பலப்படுத்தப் பட்டுவிட்டது. நாலாண்டுகள் நடந்த போரின் விளைவுகள் லாபத்தைப் பங்கீடு செய்து கொள்வதில் கொள்ளைக் காரர்களிடையிலான போருக்குப் பொருத்தமான முதலாளித்துவத்தின் பொது விதியினை வெளிப்படுத்தியது; ஆகச் செல்வந்தர்களும் வலிமை மிக்கவர்களும் ஆதாயமடைந் தார்கள், பெரும்பகுதியைக் கபளீகரம் செய்தார்கள்; ஆகப் பலவீனமானவர்கள் அப்பட்டமாகக் கொள்ளையடிக்கப்பட்டனர், துன்புறுத்தப்பட்டனர், நசுக்கப்பட்டு நெரித்துக் கொல்லப்பட்டனர்.

''காலனி அடிமைகளை'' எண்ணிக்கையில் அதிகமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்ளைக்காரர்களே வைத்திருந்தார்கள். பிரிட்டிஷ் முதலாளிகள் ''தமது'' பிரதேசத்தில் (பல நூற்ருண்டுகளாக அவர்கள் கபளீகரம் செய்த பிரதேசத்தில்) ஓர் அங்குலத்தைக்கூட இழக்கவில்லை; மாருக ஆப்பிரிக்காவில் இருந்த ஜெர்மனியின் காலனிகளைக் கபளீகரம் செய்தார்கள், மெசபொடாமியாவையும் பாலஸ்தீனத்தையும் கபளீகரம் செய்தார்கள், கிரீசை நெருக்கி நசுக்கிஞர்கள், ருஷ்யாவைச் சூறையாடத் தொடங்கி விட்டார்கள்.

ஜெர்மன் ஏகாதிபத்தியத்தின் கொள்ளைக்காரர்கள் வலுவான ஸ்தாபனமும் கட்டுப்பாடுமுள்ள "தமது" சேனைகளை வைத்திருந்தார்கள், ஆனால் காலனிகள் விஷயத்தில் பலவீனமாக இருந்தார்கள். அவர்கள் தமது காலனிகள் அனைத்தையும் இழந்து விட்டார்கள் ஆனால் ஐரோப்பாவில் பாதியை சூறையாடி, பெருமளவிலான சிறு நாடுகளையும் பலவீன தேசங்களையும் நெருக்கி நசுக்கினார்கள். இரு பக்கங்களிலும் எத்தகைய "விடுதலைப்" போர்! இரு கோஷ்டிகளையும் சேர்ந்த ஆங்கில-பிரெஞ்சு மற்றும் ஜெர்மன் முதலாளிகள் தமது அடிவருடிகளான சமூக-தேசியவெறியருடன் அதாவது "தமது சொந்த" முதலாளி வர்க்கத்தின் பக்கத்தில் போய்ச் சேர்ந்து கொண்ட சோஷலிஸ்டுகளுடன் சேர்ந்து நின்று எத்துணை நன்றாகத் "தமது நாட்டைக் காத்தனர்"!

அமெரிக்க கோடீசுவரர்களே ஆகப் பெரிய செல்வந்தர்களாகி, பூகோளரீதியில் மிகவும் பாதுகாப்புடன் இருந்தார்கள். மற்ற எல்லோரையும் விட அவர்கள் அதிக லாபமடைந்தார்கள். அவர்கள் செல்வமிக்க நாடுகள் உள்ளிட்டு எல்லா நாடுகளையும் தமக்குத் திறை செலுத்தும் நாடுகளாக மாற்றிவிட்டார்கள். கோடிக்கணக்கான டாலர்களை அவர்கள் பேராசையுடன் பறித்துக்கொண்டார்கள். ஒவ்வொரு டாலரும் சகதியால் கறைப்பட்டதாகும். பிரிட்டனுக்கும் அதன் "நேச நாடுகளுக்கும்" இடையிலான இரகசிய உடன்படிக்கைகள், ஜெர்மனிக்கும் அதன் அடிமை நாடுகளுக்கும் இடையிலான இரகசிய உடன்படிக்கைகள், அடித்த கொள்ளையைப் பங்கீடு செய்வதற்கான உடன்படிக்கைகள், தொழிலாளர்களை ஒடுக்கவும் சர்வதேசிய சோஷலிஸ்டுகள் மீது அடக்குமுறை ஏவவும் பரஸ்பர "உதவி" உடன்பாடுகள் என்ற சகதியால் அது கறைப்பட்டிருந்தது. ஒவ்வொரு நாட்டிலும் செல்வந்தர்களை மேலும் செல்வந்தர்களாக்கியும் ஏழைகளை மேலும் ஏழைகளுமாக்கிய "லாபகரமான" யுத்த கண்ட்ராக்டுகள் என்ற சகதியால் ஒவ்வொரு டாலரும் கறைப்பட்டிருந்தது. அடித்த கொள்ளையில் ஆக அதிகப் பங்கு பிரிட்டிஷ்

அல்லது ஜெர்மன் கொள்ளைக்காரர்களில் யாருக்கு, உலக முழுதிலுமுள்ள பலவீன நாடுகளை நெரித்து ஒடுக்குவதில் பிரிட்டிஷ் அல்லது ஜெர்மன் போக்கிரிகளில் யார் முன்னணியில் என்பதை முடிவு செய்வதற்காக நடைபெற்ற இந்த மாபெரும், உன்னத, விடுதலை, புனித யுத்தத்தில் கொல்லப்பட்ட ஒரு கோடிப் பேர், அங்கவீனமடைந்த இரண்டு கோடிப் பேர் சிந்திய இரத்தக் கடலின் இரத்தத்தால் ஒவ்வொரு டாலரும் கறைப்பட்டிருந்தது.

ஜெர்மன் கொள்ளைக்காரர்கள் யுத்த அட்டூழியங்களில் எல்லா சாதனைகளையும் விஞ்சிவிட்டார்கள், அதே பொழுதில் பிரிட்டிஷார் அவர்கள் கபளீகரம் செய்த காலனிகளின் எண்ணிக்கையில் மட்டுமன்றி அவர்களது வெறுப்புத் தரும் நயவஞ்சகத்திலும் எல்லா சாதனைகளையும் விஞ்சி விட்டார்கள். இன்றும் கூட ஆங்கில-பிரெஞ்சு மற்றும் அமெரிக்க முதலாளித்துவச் செய்தி ஏடுகள் தமது லட்சோபலட்சம் பிரதிகள் மூலம் ருஷ்யாவைப் பற்றிப் பொய்களையும் அவதூறுகளையும் பரப்பி வருகின்றன, ருஷ்யாவை ஜெர்மானியரிடமிருந்து ''காப்பதற்கு'' என்ற சாக்குப் போக்கில் அந்த நாட்டுக்கு விரோதமான தமது கொள்ளைக் காரப் படையெடுப்பை வஞ்சகமான முறையில் நியாயப் படுத்துகின்றன!

இந்த வெறுக்கத்தக்க அருவருப்பான பொய்யை மறுக்க அதிகச் சொற்கள் தேவையில்லை; நன்கறிந்த ஓர் உண்மையை சுட்டிக் காட்டுவதே போதுமானது. 1917 அக்டோபரில் ருஷ்யத் தொழிலாளர்கள் அவர்களது ஏகாதிபத்திய அரசாங்கத்தை வீழ்த்திய பிறகு, சோவியத் அரசாங்கம், புரட்சிகரத் தொழிலாளர் விவசாயிகளின் அரசாங்கம் ஒரு நீதியான சமாதானத்தை, நாடுகளை பறித்துச் சேர்த்துக் கொள்வதோ அல்லது இழப்பீடுகளோ இல்லாத ஒரு சமாதானத்தை, எல்லா தேசங்களின் சம உரிமைகளை முழுமையாக உத்தரவாதம் செய்யும் ஒரு சமாதானத்தைக் கோரிப் பகிரங்கமாகப் பிரேரணை செய்தது, — போரில் ஈடுபட்ட நாடுகள் அனைத்திற்கும் அத்தகைய சமாதானம் தேவை என்று பிரேரேபித்தது.

ஆங்கில-பிரெஞ்சு மற்றும் அமெரிக்க முதலாளிகள் எமது யோசனையை ஏற்க மறுத்தார்கள், ஒரு பொது சமாதானம் பற்றி எம்முடன் பேச்சு நடத்தவும் அவர்கள் மறுத்தார்கள்! அவர்கள் தான் அனைத்து நாடுகளின் நலன்களுக்கும் துரோகம் விளைத்தார்கள், அவர்கள் தான் ஏகாதிபத்தியப் படுகொலையை நீட்டித்தார்கள்.

ருஷ்யாவை மீண்டும் ஏகாதிபத்தியப் போரில் இழுக்கலாம் என்ற சாத்தியக் கூறை நம்பி சமாதானப் பேச்சு வார்த்தைகளில் கலந்துகொள்ள மறுத்தார்கள், அதன் மூலம் கொள்ளைக் காரத்தனத்தில் சற்றும் குறையாத ஜெர்மன் முதலாளிகள் நாட்டைப் பிடித்துச் சேர்த்துக் கொள்ளும் கடுமையான பிரேஸ்த் சமாதானத்தை ருஷ்யா மீது திணிக்க இஷ்டம் போல் இடமளித்தார்கள்.

பிரேஸ்த் சமாதான உடன்படிக்கைக்காக இப்போது ஆங்கில-பிரெஞ்சு மற்றும் அமெரிக்க முதலாளிகள் நம்மைக் ''குற்றம் சாட்டுவது'' போன்று ஒரு வெறுக்கத் தக்க வஞ்சகமான செயல் எதையும் கற்பனை செய்வது கூடக் கடினமாகும். பிரேஸ்த் பேச்சுவார்த்தைகளை ஒரு பொது சமாதானத்திற்கான பொதுப் பேச்சுவார்த்தைகளாக மாற்றிவிடக் கூடிய அந்த நாடுகளின் அதே முதலாளிகள் இப்போது நம்மீது ''குற்றம் சாட்டுவோராகிறார்கள்''! காலனிகளைக் கொள்ளையடித்தல், தேசங்களைப் படுகொலை செய்தல், ஆகியவற்றிலிருந்து லாபமடைந்த ஆங்கில-பிரெஞ்சு ஏகாதிபத்தியக் கழுகுகள், பிரேஸ்துக்குப் பிறகு போரை ஏறத்தாழ ஒரு முழு ஆண்டு நீட்டித்திருக்கிறார்கள், அப்படியிருக்க எல்லா நாடுகளுக்கும் நீதியான சமாதானம் வேண்டும் என்று பிரேரணை செய்த போல்ஷிவிக்குகளாகிய எம்மீது ''குற்றம் சாட்டுகிறார்கள்'', முன்னாள் ஜாருக்கும் ஆங்கில-பிரெஞ்சு முதலாளிகளுக்கும் இடையில் செய்து கொள்ளப்பட்ட இரகசியமான கொலைகாரத்தனமான உடன்படிக்கைகளை[58] ரத்து செய்து, அவற்றைப் பொது மக்கள் வெறுத்து இகழும்படி அம்பலப் படுத்திய எம்மீது ''குற்றம் சாட்டுகிறார்கள்''.

உலக முழுதிலுமுள்ள தொழிலாளர்கள், அவர்கள் எந்த நாட்டில் வாழ்ந்தாலும் சரி எம்மை வாழ்த்துகிறார்கள், எம்மிடம் பரிவு காட்டுகிறார்கள், ஏகாதிபத்தியத் தளைகளின் இரும்பு வளையத்தைத் தகர்த்ததற்காகவும், படுகேடான ஏகாதிபத்திய உடன்படிக்கைகளையும், ஏகாதிபத்திய விலங்குகளையும் தகர்த்ததற்காகவும் — சுதந்திரத்தை நோக்கித் தடைகளைத் தகர்த்து முன்னேறியதற்காகவும், அவ்வாறு செய்யும் பொழுது மாபெரும் தியாகங்களைப் புரிந்ததற்காகவும் எம்மைப் பாராட்டுகிறார்கள் — ஒரு சோஷலிசக் குடியரசு என்ற முறையில் ஏகாதிபத்தியவாதிகளால் சித்திரவதை செய்யப்பட்டும் சூறையாடப்பட்டும் வந்த போதிலும் ஏகாதிபத்தியப் போரிலிருந்து வெளியே நின்று உலகம் முழுவதும் காணும் வகையில் சமாதானத்தின் பதாகையை, சோஷலிசத்தின் பதாகையை ஓங்க உயர்த்தியதற்காக எம்மைப் பாராட்டுகிறார்கள்.

இதற்காக சர்வதேச ஏகாதிபத்தியக் கும்பல் எம்மீது பகைமை பாராட்டுகிறது, எம்மீது ''குற்றம் சாட்டுகிறது'', எமது வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மற்றும் மென்ஷிவிக்குகள் உட்பட ஏகாதிபத்தியத்தின் அடிவருடிகள் அனைவரும் எம்மீது ''குற்றம் சாட்டுகின்றனர்'' என்றால் இதில் சிறிதும் வியப்பில்லை. போல்ஷிவிக்குகள் பால் ஏகாதிபத்தியத்தின் இந்தக் காவல் நாய்கள் தோற்றுவிக்கும் பகைமையும், வர்க்க உணர்வுடைய உலகத் தொழிலாளர்கள் காட்டும் ஆதரவும் எமது லட்சியம் நீதியானது என்பதை முன் என்றையும் விட அதிகமாக மெய்ப்படுத்திக் காட்டியுள்ளன.

முதலாளி வர்க்கத்தை எதிர்த்து வெற்றியடைவதற்காக, ஆட்சி அதிகாரத்தைத் தொழிலாளர் கரங்களுக்கு மாற்றுவதற்காக, உலகப் பாட்டாளி வர்க்கப் புரட்சியைத் துவக்குவதற்காக, நாம் நமது நிலப்பரப்பில் ஒரு பகுதியைத் தியாகம் செய்வது, ஏகாதிபத்தியத்திடம் கடுமையான தோல்விகளை அடையும் தியாகம் உள்ளிட்டு, மிகவும் வீறார்ந்த தியாகங்களைச் செய்வதற்கு நாம் தயங்க

முடியாது, தயங்கக் கூடாது என்பதை ஓர் உண்மையான சோஷலிஸ்டு புரிந்துகொள்ளத் தவறமாட்டார். சோஷலிசப் புரட்சியின் லட்சியத்தை உண்மையிலேயே முன்கொண்டு செல்வதற்காகத் "தனது" நாடு ஆக மகத்தான தியாகம் புரிவதை ஆதரித்து தனது விருப்பத்தை ஓர் உண்மையான சோஷலிஸ்டு செயல்கள் மூலம் நிரூபித்திருப்பார்.

"தமது" நோக்கத்திற்காக, அதாவது உலக மேலாதிக்கத்தை வென்று பெறுவதற்காக பிரிட்டன் மற்றும் ஜெர்மனியின் ஏகாதிபத்தியவாதிகள் பெல்ஜியம் மற்றும் செர்பியா தொட்டு பாலஸ்தீனம் மற்றும் மெசபொடோமியா வரையில் எண்ணற்ற பல நாடுகளை அறவே நாசமாக்கி நெரித்து அழிக்கத் தயங்கவில்லை. ஆனால் சோஷலிஸ்டுகள் "தமது" நோக்கத்திற்காக மூலதனத்தின் அடிமைத்தளையிலிருந்து உலகம் முழுவதன் உழைப்பாளி மக்களை விடுதலைசெய்யும், சர்வப்பொதுவான நிரந்தரமான சமாதானத்தை வென்று பெறுவதற்குத் தியாகம் இல்லாத ஒரு பாதையைக் கண்டுபிடிக்கும் வரையில் காத்துக் கிடக்க வேண்டுமா? எளிதான வெற்றி "உத்தரவாதம்" செய்யப் படும் வரை, அவர்கள் போராட்டத்தைத் துவக்க அஞ்சித் தயங்க வேண்டுமா? "அவர்களது", முதலாளிகளால் சிருஷ்டிக்கப்பட்ட "தந்தையர் நாட்டின்" பிரதேச உரிமையையும் பாதுகாப்பையும் உலக சோஷலிசப் புரட்சியின் நலன்களுக்கு மேலாகக் கருத வேண்டுமா? இந்த வழியில் சிந்தனை செய்யும் சர்வதேச சோஷலிஸ்டு இயக்கத்தின் கயவர்கள், முதலாளித்துவ ஒழுக்கநெறியில் மானங்கெட்டு நடக்கும் அந்த அடிவருடிகள் மும்முறையும் கண்டனத்திற்குரியவர்கள்.

ஜெர்மன் ஏகாதிபத்தியத்தோடு ஓர் "உடன்படிக்கை" செய்துகொண்டதற்காக ஆங்கில-பிரெஞ்சு மற்றும் அமெரிக்க ஏகாதிபத்தியக் கழுகுகள் நம்மீது "குற்றம் சாட்டுகின்றன". "தமது" சொந்த நாடுகளின் தொழிலாளர்கள் எம்பால் வெளிப்படுத்திய ஆதரவின் காரணமாக நடு நடுங்கும் அவர்கள், தொழிலாளர் அரசாங்கத்தை அவதூறு

செய்யும் எத்தகைய வஞ்சகர்கள் எத்தகைய கயவர்கள்! அவர்களது போலித்தனம் அம்பலப்படுத்தப்படும். தொழிலாளர்களுக்கு எதிராக உழைக்கும் மக்களுக்கு எதிராக ''சோஷலிஸ்டுகள்'' முதலாளி வர்க்கத்துடன் (அவர்களது சொந்த நாட்டு முதலாளி வர்க்கத்துடன் அல்லது வெளி நாட்டு முதலாளி வர்க்கத்துடன்) செய்து கொண்ட உடன்படிக்கைக்கும், தமது முதலாளி வர்க்கத்தைத் தோற்கடித்துவிட்ட தொழிலாளர்களின் பாதுகாப்புக்காக ஒரு தேசிய சாயல் கொண்ட முதலாளி வர்க்கத்துடன் இன்னொரு தேசிய சாயல் கொண்ட முதலாளி வர்க்கத்திற்கு எதிராக முதலாளித்துவ வர்க்கத்தினிடையேயுள்ள வெவ்வேறு குழுக்களிடையிலான பகைமைகளைப் பாட்டாளி வர்க்கம் சாதகப்படுத்திக் கொள்வதற்காகச் செய்து கொள்ளும் உடன்படிக்கைக்கும் இடையிலான வேற்றுமையைக் காணாதது போல அவர்கள் பாசாங்கு செய்கிறார்கள்.

ஒவ்வொரு ஐரோப்பியனும் இந்த வேற்றுமையை மிகவும் நன்றாகப் பார்க்கிறார் என்பது எதார்த்த உண்மை, அமெரிக்க மக்களுக்கு அவர்களது சொந்த வரலாற்றிலேயே இதற்கான, குறிப்பாயும் எடுப்பான ''உதாரணம்'' ஒன்று இருந்தது என்பதை இன்னும் ஒரு நொடியில் நான் காட்டுகிறேன். உடன்படிக்கைக்கு மேல் உடன்படிக்கைகள் உள்ளன; பிரெஞ்சுக்காரர்கள் கூறுவது போல fagots et fagots*.

உலகப் புரட்சி முழுமையாக முதிர்ச்சியடைவதற்கு முன்னால் சர்வதேச ஒருமைப்பாட்டைச் சார்ந்து நின்ற, நிராயுத பாணியும் படைக்கலைப்புச் செய்ததுமான ருஷ்யாவை 1918 பிப்ரவரியில் ஜெர்மன் ஏகாதிபத்தியக் கழுகுகள் தமது படைகளால் தாக்கிய பொழுது, பிரெஞ்சு முடியரசுவாதிகளுடன் ஓர் ''உடன்படிக்கை'' செய்து கொள்ள நான் சற்றும் தயங்கவில்லை. சொல்லில் போல்ஷிவிக்குகளிடம் பரிவும், செயலில் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்திற்கு விசுவாசமும் பற்றுறுதியும் தோற்றுவித்த பிரெஞ்சு ராணுவ அதிகாரி கேப்டன் சதூல் என்னைக் காண

* விறகு கட்டுகளுக்கு மேல் விறகு கட்டுகள்.—(ப-ர்.)

பிரெஞ்சு அதிகாரி டி லுபெர்சாக்கை அழைத்து வந்தார். ''நான் ஒரு முடியரசுவாதி, எனது ஒரே நோக்கம் ஜெர்மனியின் தோல்வியை உறுதிசெய்வதே'' என்று டி லுபெர்சாக் என்னிடம் கூறினர். ''அது சொல்லாமலே வளங்கும்'' (Cela va sans dire) என்று நான் பதிலளித்தேன். ஆனால் இது, ஜெர்மன் படையெடுப்பைத் தடங்கல் செய்யவும், ரயில்வேப் பாதைகளை வெடிவைத்துத் தகர்க்கவும், பிரெஞ்சு ராணுவ அதிகாரிகளான வெடிமருந்து சாதன நிபுணர்கள் நமக்குச் சில சேவைகள் புரிவது சம்பந்தமாக டி லுபெர்சாக்குடன் ஓர் ''உடன்படிக்கை'' செய்துகொள்வதிலிருந்து என்னைச் சிறிதளவும் தடுக்கவில்லை. இது வர்க்க உணர்வுடைய ஒவ்வொரு தொழிலாளியும் ஏற்றுக்கொள்ளும் ''உடன்படிக்கைக்கு'' ஓர் உதாரணம், சோஷலிசத்தின் நலன்களுக்குச் சாதகமான ஓர் உடன்படிக்கை. நாங்கள் ஒவ்வொருவரும் தமது ''கூட்டாளியை'' சுயவிருப்பத்தோடு தூக்கிலேற்றுவோம் என்பதை நாங்கள் அறிந்திருந்த போதிலும் பிரெஞ்சு முடியரசுவாதியும் நானும் கை குலுக்கினேம். சில காலத்திற்கு எங்கள் நலன்கள் தற்செயலாக இசைந்திருந்தன. முன்னேறிக் கொண்டு வந்த பேராசை வெறிபிடித்த ஜெர்மானியருக்கு எதிராக நாங்கள் ருஷ்யாவின் மற்றும் உலக சோஷலிசப் புரட்சியின் நலன்களுக்காக இதற்குச் சமமான பேராசை வெறிபிடித்த இதர ஏகாதிபத்தியவாதிகளின் எதிர்-நலன்களைப் பயன்படுத்தினேம். இந்த வழியில் நாங்கள் ருஷ்யாவின் மற்றும் இதர நாடுகளின் தொழிலாளி வர்க்கத்தின் நலன்களுக்குப் பாடுபட்டோம்; உலக முழுதிலுமான பாட்டாளி வர்க்கத்தை வலுப்படுத்தினேம், முதலாளி வர்க்கத்தைப் பலவீனமாக்கினேம்; பல முன்னேற்றமடைந்த நாடுகளில் துரிதமாக முதிர்ச்சியடைந்து வரும் பாட்டாளி வர்க்கப் புரட்சி பூரணமாக முதிர்ச்சியடையும் தருணத்தை எதிர்நோக்கி மறைத்திட்டம், ஆதாரப் போர்த்தந்திரம், பின்வாங்குதல் என்று ஒவ்வொரு போரிலும் மிகவும் நியாயமாகவும் இன்றியமையாததாயும் இருக்கும் முறைகளை நாங்கள் கையாண்டோம்.

ஆங்கில-பிரெஞ்சு மற்றும் அமெரிக்கச் சுருமீன்கள் ஆத்திரத்தால் எவ்வளவு தான் பொங்கிப்புகைந்தாலும் எவ்வளவுதான் அவர்கள் எம்மை அவதூறு செய்தாலும், வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக் மற்றும் இதர சமூக-தேசபக்த செய்தித்தாள்களுக்கு லஞ்சமளிக்க எத்தனை கோடிகளை அவர்கள் செலவிட்டாலும் சரி, ஆங்கில-பிரெஞ்சுப் படைகள் ருஷ்யாவைத் தாக்குமானல் அவசிய நிலைமை ஏற்படுமானல் இதே போன்ற ஓர் ''உடன்படிக்கையை'' ஜெர்மன் ஏகாதிபத்தியக் கழுகுகளுடன் செய்து கொள்ள நான் ஒரு விநாடிகூடத் தயங்கமாட்டேன். எனது போர்த்தந்திரம் ருஷ்யா, ஜெர்மனி, பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளின் — சுருங்கக் கூறின் நாகரிக உலகம் முழுவதன் — வர்க்க உணர்வுடைய பாட்டாளி வர்க்கத்தால் ஒப்புக்கொள்ளப்படும் என்பதை நான் முற்றிலும் நன்ருக அறிவேன். இத்தகைய போர்த்தந்திரங்கள் சோஷலிசப் புரட்சியின் கடமைகளை எளிதாக்கும், அதனை விரைவுபடுத்தும், சர்வதேச முதலாளி வர்க்கத்தினைப் பலவீனமாக்கும், முதலாளி வர்க்கத்தை முறியடித்து வருகின்ற தொழிலாளி வர்க்கத்தின் நிலைகளை வலுப்படுத்தும்.

அமெரிக்க மக்கள் இந்தப் போர்த்தந்திரங்களை நெடுங்கால முன்பே (புரட்சிக்குச் சாதகமாகக்) கையாண்டார்கள். பிரிட்டிஷ் ஒடுக்குமுறையாளர்களை எதிர்த்து அவர்கள் தமது மாபெரும் விடுதலைப் போராட்டத்தை நடத்திய பொழுது, இப்பொழுது வட அமெரிக்காவின் ஐக்கிய நாடு என்று குறிப்பிடப்படுவதில் ஒரு பகுதியை உடமையாக வைத்திருந்த பிரெஞ்சு மற்றும் ஸ்பானிய ஒடுக்குமுறையாளர்களும் அவர்களுக்கு எதிராக இருந்தார்கள். விடுதலைக்கான தமது கடினமான போரில் அமெரிக்க மக்கள் ஒடுக்குமுறையாளர்களைப் பலவீனமாக்கவும், ஒடுக்குமுறையை எதிர்த்துப் புரட்சிகரமான முறையில் போராடிக் கொண்டிருப்பவர்களை வலுப்படுத்தவும், ஒடுக்கப்பட்ட மக்கள் திரளின் நலன்களுக்குப் பாடுபடவும் வேண்டி சில ஒடுக்குமுறையாளர்களுடன் இதர ஒடுக்குமுறை

யாளர்களை எதிர்த்து ''உடன்படிக்கைகள்'' ஏற்படுத்திக் கொண்டார்கள். அமெரிக்க மக்கள் பிரெஞ்சுக்காரர்கள் ஸ்பெயின் நாட்டவர்கள் மற்றும் பிரிட்டிஷ்காரர்களுக்கு இடையிலான பூசல்களைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டார்கள், சில சமயங்களில் அவர்கள் பிரிட்டிஷ் ஒடுக்கு முறையாளர்களை எதிர்த்து பிரெஞ்சு மற்றும் ஸ்பானிய ஒடுக்குமுறையாளர்களின் படைகளுடன் கூட அக்கம் பக்க மாக நின்று போராடியிருக்கிறார்கள்; முதலில் அவர்கள் பிரிட்டிஷ்காரர்களைத் தோற்கடித்தார்கள், பிறகு (ஓரள வுக்கு மீட்புப் பணம் மூலம்) பிரெஞ்சுக்காரர்கள் மற்றும் ஸ்பெயின் நாட்டவர்களிடமிருந்து தம்மை விடுவித்துக் கொண்டார்கள்.

மாபெரும் ருஷ்யப் புரட்சியாளரான செர்னிஷேவ்ஸ்கி வரலாற்று நடவடிக்கை நேவ்ஸ்கி நெடுஞ்சாலையின் நடைபாதையல்ல என்று கூறினார். புரட்சி எளிதாகவும் இடர் இன்றியும் நடத்திச் செல்லப்படும், துவக்க முதலே பல் வேறு நாடுகளின் பாட்டாளிகளின் ஒன்றிணைந்த போராட்டம் இருக்கும், தோல்விகளுக்கு எதிராக உத்தரவாத முண்டு, புரட்சியின் பாதை விரிவானதாய், தடங்கலற்றதாய், நேராக இருக்கும், வெற்றியை நோக்கி அணி வகுத்துச் செல்லும்போது சில சமயங்களில் மிகவும் கடுமையான உயிர்ச் சேதங்களை அடைய வேண்டி இருக்காது, ''முற்றுகையிடப்பட்ட கோட்டையில் காத்திருக்கவேண்டியிருக்காது'', மிகவும் குறுகலான, கடக்கமுடியாத, சுற்றி வளைத்த, அபாயகரமான மலைப் பாதைகளில் செல்ல வேண்டிய அவசியம் இருக்காது என்ற ''நிபந்தனைகள் மீது'' மட்டுமே ஒரு பாட்டாளி வர்க்கப் புரட்சிக்கு ''ஒப்புதல்'' தருவேன் என்று எந்த ஒரு நபரும் இருந்தால் அவன் புரட்சியாளரல்ல, அத்தகைய நபர் முதலாளித்துவ அறிவுத் துறையினரின் பண்டிதப் பாணியிலிருந்து தன்னை இன்னும் விடுவித்துக் கொள்ளவில்லை; அத்தகைய நபர், நமது வலது சாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், மென்ஷிவிக்குகள் ஏன் (சற்றே அரிதாகவாயினும்) இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் போன்று எதிர்ப்புரட்சி

முதலாளி வர்க்கத்தின் முகாமுக்குள் அடிக்கடி நழுவிச் செல்வதைக் காணலாம்.

முதலாளி வர்க்கத்தை எதிரொலிக்கும் இந்தக் கனவான்கள் புரட்சியினால் விளைந்த "குழப்பம்", தொழில் "நாசம்", வேலையில்லாத் திண்டாட்டம் மற்றும் உணவுப் பற்றாக்குறை ஆகியவற்றுக்கு நம்மைக் குறைகூற விரும்புவார்கள். ஏகாதிபத்திய யுத்தத்தை வரவேற்று ஆதரித்தவர்கள், இந்தப் போரைத் தொடர்ந்து நடத்திய கேரென்ஸ்கியுடன் "உடன்படிக்கை" செய்துகொண்டவர்களிடமிருந்து வரும் இந்தக் குற்றச் சாட்டுகள் எவ்வளவு வஞ்சனையானவை! இந்த இன்னல்கள் அனைத்திற்கும் காரணம் இந்த ஏகாதிபத்திய யுத்தமே. போரினால் தோற்றுவிக்கப்பட்ட புரட்சி, நீண்டநெடும், நாசகரமான, பிற்போக்குத்தனமான தேசங்களின் படுகொலையின் பின்விளைவான பயங்கர இடர்ப்பாடுகளையும் துன்பதுயரங்களையும் தவிர்த்திருக்க முடியாது. தொழில் "நாசம்" அல்லது "பயங்கரத்திற்கு" எம்மீது குற்றம் சாட்டுவது வஞ்சகம் அல்லது மடத்தனமான பண்டித பாணியாகும்; புரட்சி என்று அழைக்கப்படும் ஆக உயர்ந்த அளவுக்கு முனைப்பாக, மூர்க்கமான வர்க்கப் போராட்டம் எழுச்சியடைந்திருப்பதன் அடிப்படை நிலைமைகளைப் புரிந்து கொள்ள இயலாத தன்மையையே இது வெளிப்படுத்துகிறது.

இந்த மாதிரியான "குற்றம் சாட்டுவோர்" வர்க்கப் போராட்டத்தை "ஏற்றுகொண்டாலும்" கூட அவர்கள் சொல்லளவில் அந்த அங்கீகாரத்திற்கு வரம்பு கட்டிவிடுகின்றனர்; உண்மையில், பெரும்பாலும் வர்க்க "ஒத்துழைப்பு" மற்றும் "சமரசம்" என்ற பிலிஸ்தைன் கற்பனைக்குள் நழுவிச் சென்று விடுகிறார்கள்; ஏனெனில் புரட்சிகர சகாப்தங்களில் வர்க்கப் போராட்டமானது தவிர்க்க வொண்ணாத வகையில் எப்போதும் ஒவ்வொரு நாட்டிலும் உள்நாட்டுப் போர் வடிவத்தை மேற்கொண்டது; மிகவும் கடுமையான நாசம், பயங்கரமுறை, போரின் நலனுக்காக சம்பிரதாயமான ஜனநாயகத்தைக் கட்டுப்படுத்தல் ஆகியவை இன்றி உள்நாட்டுப் போரைக் கருதிப்பார்க்க

இயலாது. ''வீட்டு'', பேச்சு மேடை நாடாளுமன்ற சோஷ லிஸ்டுகள் வடிவிலான கிறிஸ்துவ அல்லது ''சமயச்சார் பற்ற'' பசப்பும் சமயகுருமார்கள் இந்த அவசியத்தைப் பார்க்க முடியாது, இதைப் புரிந்து கொள்ளவோ உண ரவோ முடியாது. மனித குலத்தின் மாபெரும் பிரச்சினை களுக்குப் போராட்டத்தாலும் மற்றும் போரினாலும் தீர்வு காணுமாறு வரலாறு கோருகிற ஒரு தருணத்தில் அதிகப் பட்ச ஆர்வத்தோடும் உறுதியுடனும் போராட்டத்தில் குதிக்காமல் இந்தக் காரணத்திற்காகப் புரட்சியைத் தவிர்த்து ஒதுக்குபவன் உயிர்ப்பற்ற ''கூட்டில் அடைந்த மனிதன்'' ஆவான்.

அமெரிக்க மக்களுக்கு ஒரு புரட்சிகரமான மரபு உண்டு; இதை அமெரிக்கப் பாட்டாளி வர்க்கத்தின் தலை சிறந்த பிரதிநிதிகள் சுவீகாரம் செய்துகொண்டிருக்கிறார் கள். அவர்கள் போல்ஷிவிக்குகளான எம்முடன் தமது பூரண ஒருமைப்பாட்டை மீண்டும் மீண்டும் பிரகடனம் செய்துள்ளனர். அந்த மரபே பதினெட்டாம் நூற்றாண் டில் பிரிட்டிஷ்காரர்களை எதிர்த்து நடந்த விடுதலைப் போரும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் உள்நாட்டுப் போருமாகும். சில விஷயங்களில், தொழில்கள், தேசியப் பொருளாதாரத்தின் சில கிளைகளில் ஏற்பட்ட ''நாசத் தை'' மட்டும் கவனத்தில் எடுத்துக் கொள்வோமானால், 1870ல் அமெரிக்கா 1860ஐ விடப் பின்னால் இருந்தது. இந்தக் காரணங்களால் 1863-1865 அமெரிக்க உள்நாட்டுப் போரின்[59] உலக வரலாற்று, முற்போக்கு, புரட்சிகர முக்கியத்துவத்தை எவரேனும் மறுத்தால் அவர் எத் தகைய புலமைப் பகட்டராய், எத்தகைய முட்டாளாக இருந்திருப்பார்!

நீக்ரோ அடிமைத்தனத்தை ஒழிப்பதற்காக, அடிமை உடமையாளர் ஆட்சியை ஒழிப்பதற்காக, நீண்ட பல ஆண்டு காலம் உள்நாட்டுப் போரினூடே, ஒவ்வொரு போரையும் தொடர்ந்துவரும் எல்லையற்ற அழிவு சேதம் பயங்கரம் ஆகியவற்றினூடேயும் நாடு செல்ல அனுமதிக்கப்பட்டது பயனுள்ளதே என்பதை முதலாளி வர்க்கப் பிரதிநிதி

கள் புரிந்துகொள்கிருர்கள். ஆனுல் இப்பொழுது அதை விடப் பெரிய கடமையான முதலாளித்துவ கூலியடிமைத் தனத்தை ஒழிக்கும், முதலாளி வர்க்க ஆட்சியை ஒழிக்கும் கடமையினை எதிரிட்டுள்ள சமயத்தில் முதலாளி வர்க்கத்தின் பிரதிநிதிகளும் ஆதரவாளர்களும், முதலாளி வர்க்கத்தால் அச்சுறுத்தப்பட்டுப் புரட்சியைத் தவிர்த்து ஒதுக்குகிற சீர்திருத்தவாத சோஷலிஸ்டுகளும் உள்நாட்டுப் போர் அவசியம் மற்றும் நியாயம் என்பதை புரிந்து கொள்ள முடியவில்லை, விரும்பவில்லை.

அமெரிக்கத் தொழிலாளர்கள் முதலாளி வர்க்கத்தைப் பின்பற்ற மாட்டார்கள். முதலாளி வர்க்கத்தை எதிர்த்து உள்நாட்டுப் போரை நடத்துவதில் அவர்கள் எங்களுடன் இருப்பார்கள். இது அவ்வாறுதான் இருக்கும் என்ற எனது நம்பிக்கையை உலகின் முழு வரலாறும் அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தின் வரலாறும் வலுப்படுத்துகின்றன. அமெரிக்கப் பாட்டாளி வர்க்கத்தின் மிகவும் அன்புக்குரிய தலைவருள் ஒருவரான யூஜின் டெப்சின் சொற்களை நான் நினைவுகூருகிறேன். பகுத்தறிவுக்கு வேண்டுகோள் ("Appeal to Reason")[60] என்ற பத்திரிகையில் 1915 இறுதியில் என்று நம்புகிறேன் "நான் எதற்காகப் போராட வேண்டும்" என்ற கட்டுரையிலும் (இந்தக் கட்டுரையை சுவிட்சர்லாந்திலுள்ள பெர்னில் தொழிலாளர் பொதுக் கூட்டம் ஒன்றில் 1916ஆம் ஆண்டுத் துவக்கத்தில் மேற்கோள் காட்டினேன்)—அவர் (டெப்ஸ்) இன்றைய கொலைகாரப் பிற்போக்குப் போருக்கு கடனுதவிகள் வழங்குவதை ஆதரிப்பதை விடத் தாம் சுடப்படுவது மேல் என்ற கருத்தை வெளியிட்டார். ஒரே ஒரு புனிதமான போர், பாட்டாளி வர்க்கத்தின் நோக்கு நிலையிலிருந்து நியாயமான போர், முதலாளிகளை எதிர்த்த போரே, மனித குலத்தைக் கூலியடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கும் போரே என்பதை அவர் அறிந்திருந்தார்.

அமெரிக்கக் கோடீசுவரர்களின் தலைவரும் முதலாளித்துவச் சுருமீன்களின் ஊழியருமான வில்சன், டெப்சைச் சிறையில் தள்ளியது பற்றி நான் வியப்படையவில்லை. உண்

மையான சர்வதேசியவாதிகளிடம் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் உண்மையான பிரதிநிதிகளிடம் முதலாளி வர்க்கம் கொடுமையாகவே இருக்கட்டும்! அவர்கள் எந்த அளவு அதிக மூர்க்கமாகவும் கொடுமையாகவும் இருக்கிறார்களோ அந்தளவுக்குப் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் வெற்றி நாள் மேலும் நெருங்கிவரும்.

எமது புரட்சியால் விளையும் நாசத்திற்காக நாம் குற்றஞ்சாட்டப்படுகிறோம்... குற்றம் சாட்டுவோர் யார்? முதலாளி வர்க்கத்தின் தாசர்கள்; இந்த முதலாளி வர்க்கம் தான் நாலாண்டுகால ஏகாதிபத்தியப் போரில் ஏறத்தாழ ஐரோப்பியக் கலாசாரம் முழுவதையும் அழித்து, ஐரோப்பாவைக் காட்டுமிராண்டித் தனத்துக்கும் வன்கொடுமைக்கும் பட்டினிக்கும் இரையாக்கியது. இந்த முதலாளிகள், இந்த இடிபாடுகளின் மீது, கலாச்சாரத்தின் அழிவின் மீது, போரினால் விளைக்கப்பெற்ற அழிவு மற்றும் இடிபாடுகளினிடையேயோ, போரினால் வன்கொடுமைத்தன்மை பெற்ற மக்களுடனே இப்போது நாம் ஒரு புரட்சியை நடத்தக் கூடாது என்று கோருகிறார்கள். இந்த முதலாளிகள் எவ்வளவு இரக்கமுள்ளவர்கள், எவ்வளவு நேர்மையுள்ளவர்கள்!

அவர்களது ஏவலாளர்கள் நாம் பயங்கரச் செயல்களில் ஈடுபடுவதாகக் குற்றம் சாட்டுகிறார்கள். பிரிட்டிஷ் முதலாளிகள் தமது 1649ஆம் ஆண்டையும் பிரெஞ்சு முதலாளிகள் தமது 1793ஆம் ஆண்டையும்[61] மறந்துவிட்டார்கள். முதலாளிகள் நிலப்பிரபுத்துவத்திற்கு எதிராகத் தமது சொந்த நன்மைக்காகப் பயங்கரச் செயல்களைக் கையாண்ட பொழுது அவை நீதியானவை, நியாயமானவை. ஆனால் தொழிலாளர்களும் ஏழை விவசாயிகளும் இவற்றை முதலாளிகளுக்கு எதிராகப் பயன்படுத்தத் துணிந்தவுடன் இவை அட்டூழியமாகிவிட்டன, குற்றகரமானதாகி விட்டன! சுரண்டும் ஒரு சிறுபான்மையினரை அகற்றி அந்த இடத்தில் வேறு ஒரு சுரண்டும் சிறுபான்மையினரை அமர்த்துவதற்குப் பயன்படுத்திய பயங்கரச் செயல்கள் நீதியானவை, நியாயமானவை. ஆனால் எல்லாச்

சுரண்டும் சிறுபான்மையினரையும் ஒழிக்கும் நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட பொழுது, விரிவான உண்மையான பெரும்பான்மையினரின் நலன்களுக்காகப் பயன்படுத்தப்பட்ட பொழுது, பாட்டாளி வர்க்கம், அரைப் பாட்டாளி வர்க்கம், தொழிலாளி வர்க்கம், ஏழை விவசாயிகளின் நலன்களுக்காகப் பயன்படுத்தப்பட்ட பொழுது இந்தப் பயங்கரச் செயல்கள் அட்டூழியங்களாயின, குற்றச் செயல்களாயின!

''அவர்களது'' யுத்தத்தில், உலகை ஆளப்போவது பிரிட்டிஷ் கழுகுகளா அல்லது ஜெர்மன் கழுகுகளா என்பதை முடிவு செய்வதற்கான யுத்தத்தில், சர்வதேச ஏகாதிபத்திய முதலாளிகள் ஒரு கோடி மனிதர்களைப் படு கொலை செய்தார்கள், இரண்டு கோடிப் பேர்களை முடமாக்கினார்கள்.

எமது போரில், ஒடுக்குவோரையும் சுரண்டுவோரையும் எதிர்த்து ஒடுக்கப்படுவோரும் சுரண்டப்படுவோரும் நடத்திய போரில், எல்லா நாடுகளிலுமாக ஐந்து லட்சம் அல்லது பத்து லட்சம் உயிரிழப்புகள் ஏற்பட்டிருக்குமானால், முதலாளிகள் முந்திய உயிரிழப்புகள் நியாயமானவை அதே பொழுதில் பிந்தியவை குற்றகரமானவை என்று கூறுவார்கள்.

பாட்டாளி வர்க்கத்திற்கு எடுத்துக் கூற இதற்கு முற்றிலும் வேறுபட்ட சில தகவல்கள் உள்ளன.

ஏகாதிபத்தியப் போரின் பயங்கரங்களுக்கிடையே, இப்போது பாட்டாளி வர்க்கம், எல்லாப் புரட்சிகளும் போதித்துள்ளதும் தொழிலாளர்களுக்கு அவர்களது சிறந்த ஆசான்களால், நவீன சோஷலிசத்தின் மூலவர்களால் மரபுரிமையாக விட்டுச் செல்லப்பட்டதுமான மாபெரும் உண்மையை மிகவும் தெளிவாகவும் எடுப்பாகவும் கற்றுக் கொள்கிறது. சுரண்டலாளர் எதிர்ப்பை நசுக்காமல் எந்தப் புரட்சியும் வெற்றிகரமாக நிறைவேறாது என்பதே அந்த உண்மை. தொழிலாளர்களும் உழைக்கும் விவசாயிகளுமான நாம் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிய பொழுது சுரண்டுவோரின் எதிர்ப்பை நசுக்குவது எமது கடமையாகிவிட்டது. இதை நாம் செய்தோம், செய்து வருகிறோம் என்று நாம் பெருமைப்படுகிறோம்.

நாம் இதைப் போதிய உறுதியுடனும் தீர்மானமாகவும் செய்யவில்லை என்பது பற்றி வருந்துகிறோம்.

சோஷலிசப் புரட்சிக்கு முதலாளி வர்க்கத்திடமிருந்து எல்லாநாடுகளிலும் மூர்க்கமான எதிர்ப்பு தவிர்க்க முடியாதது என்பதையும் இந்த எதிர்ப்பு இந்தப் புரட்சியின் வளர்ச்சியோடு அதிகரிக்கும் என்பதையும் நாம் அறிவோம். பாட்டாளி வர்க்கம் இந்த எதிர்ப்பை நசுக்கும்; எதிர்க்கும் முதலாளி வர்க்கத்தை எதிர்த்த போராட்டத்தின் பொழுது அது இறுதியாக வெற்றிக்கும் ஆட்சி அதிகாரத்திற்குமாக முதிர்ச்சியடையும்.

ஊழல்பிடித்த முதலாளித்துவப் பத்திரிகைகள் எமது புரட்சி செய்கிற ஒவ்வொரு தவறையும் பற்றி உலக முழுதிற்கும் ஓலமிடட்டும். எமது தவறுகளைக் கண்டு நாங்கள் அஞ்சவில்லை. புரட்சி தொடங்கி விட்டது என்பதால் மக்கள் முனிவர்களாகி விடவில்லை. பல நூற்றுண்டுகளாக ஒடுக்கப்பட்டு, மிதித்துத் துவைக்கப்பட்டு, வறுமை, கொடுமை, அறியாமையினுல் பலவந்தமாகப் பீடிக்கப்பட்டிருந்த உழைப்பாளி வர்க்கங்கள் ஒரு புரட்சியை நடத்தும் போது தவறுகள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது. மேலும் நான் முன்பே ஒரு முறை சுட்டிக்காட்டியிருந்தது போன்று முதலாளித்துவ சமுதாயம் என்ற பிணத்தை ஒரு சவப்பெட்டியில் ஆணியறைந்து புதைத்துவிட முடியாது. முதலாளித்துவப் பிணம் அழுகிப்போய் நம்மிடையே சிதைவுற்று, காற்றைத் தூய்மை கெடுத்தும், எமது வாழ்க்கையில் நச்சூட்டியும் வருகிறது; பழமையானதும் அழிந்துவருவதும் அழுகிப்போனதுமான ஆயிரக் கணக்கான இழைகள் மற்றும் தளைகளில் புதியதும் பசுமையானதும் இளமையானதும் வீரியம் மிக்கதும் ஆனவற்றைச் சிக்குறச் செய்கிறது.

எதைப்பற்றி முதலாளி வர்க்கமும் அதன் அடிவருடிகளும் (நமது சொந்த வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மற்றும் மென்ஷிவிக்குகள் உட்பட) உலகம் முழுதுக்கும் கூக்குரலிடுகிருர்களோ, நாம் புரியும் ஒவ்வொரு நூறு தவறுகளுக்கும் 10,000 மாபெரும் வீரஞ்செறிந்த

செயல்கள் புரியப்படுகின்றன. அவை மேலும் மகத்தானவை மேலும் வீரஞ்செறிந்தவை காரணம் அவை ஒரு தொழில் மாவட்டம் அல்லது தொலைவிலுள்ள கிராமத்தில் அன்றாட வாழ்க்கையினிடையே எளிமையாயும் ஒதுக்கமாயும் நடைபெறுபவை. தமது வெற்றிகளைப் பற்றி உலக முழுதிற்கும் கூக்குரலிட்டுக் கூறும் (அதற்கான வாய்ப்பில்லாத) வழக்கமில்லாத மக்களால் புரியப்பட்டவை.

இதற்கு நேர்மாறான நிலையை உண்மையில் ஏற்படினும் சரி—அவ்வாறு கருதுவது தவறு என்பதை நான் அறிவேன்—நாம் புரிந்த 100 சரியான செயல்களுக்கு நாம் 10,000 தவறுகளைச் செய்தாலுங்கூட, அப்படியிருந்தாலுங்கூட நமது புரட்சி மகத்தானதாயும் வெல்லற்கரியதாகவும் இருக்கவேண்டும், உலக வரலாற்றின் பார்வையிலும் அவ்வாறே நிச்சயமாக இருக்கும்; காரணம் முதல் தடவையாகச் சிறுபான்மையோரல்ல, செல்வந்தர் மட்டுமல்ல, கல்வி கற்றவர்கள் மட்டுமல்ல, ஆனால் உண்மையான மக்கட்திரள், விரிவான பெரும்பான்மையான உழைப்பாளி மக்கள் தாமே புதிய வாழ்க்கையைக் கட்டி வருகின்றனர், தமது சொந்த அனுபவம் மூலம் சோஷலிஸ கட்டுமானத்தின் மிகவும் கடினமான பிரச்சினைகளைத் தீர்த்துவருகிறார்கள்.

இத்தகைய பணியின் போக்கில் இழைக்கப்படும் ஒவ்வொரு தவறும் தமது முழு வாழ்வையும் மறு அமைப்புச் செய்து கொள்வதிலான பல லட்சக் கணக்கான சாமான்யத் தொழிலாளர் மற்றும் விவசாயிகளின் இந்த மிகவும் கடமையுணர்வும் முனைப்பார்வமும் கொண்ட இந்தப் பணியின் போக்கில் இத்தகைய ஒவ்வொரு தவறும் சுரண்டும் சிறுபான்மையினர் அடையும் ''குறையில்லாத'' ஆயிரம் லட்சம் வெற்றிகளைக் காட்டிலும்—அவர்கள் உழைக்கும் மக்களை மோசடிசெய்து ஏமாற்றுவதில் அடையும் வெற்றிகளைவிடவும் — சால மதிப்புடையதாகும். ஏனெனில் இத்தகைய தவறுகள் மூலமே தொழிலாளர்களும் விவசாயிகளும் ஒரு புது வாழ்வை நிர்மாணிக்கக் கற்றுக் கொள்வார்கள்; முதலாளிகள் இல்லாமல் வாழக் கற்றுக் கொள்வார்கள்; இந்த வழியில் மட்டுமே

அவர்கள் — ஆயிரக் கணக்கான தடைகளின் ஊடே — வெற்றிகரமான சோஷலிசத்தை நோக்கித் தமக்கென ஒரு பாதையை வகுத்துக் கொள்வார்கள்.

அவர்களது புரட்சிகரப் பணிகளின் போக்கில் நமது விவசாயிகளால் தவறுகள் செய்யப்படுகின்றன, ஆனால் இவர்கள் ஒரே அடியாக 1917 அக்டோபர் 25-26 (பழைய பாணி) ஒரே இரவில் நிலத்தில் தனியுடைமையை முற்றாக ஒழித்துவிட்டார்கள்[62], இப்போது மாதத்திற்கு மாதம் மிகப் பெரிய இடர்ப்பாடுகளை வென்று சமாளித்து, தமது தவறுகளைத் தாமே திருத்திக் கொண்டு, பொருளாதார வாழ்வில் புதிய நிலைமைகளை அமைத்தல், குலாக்குகளை எதிர்த்துப் போராடுதல், உழைக்கும் மக்களுக்கு (செல்வந்தருக்கு அல்ல) நிலம் வழங்குதல், கம்யூனிஸ்டு பெருவீத விவசாயத்திற்கு மாறிச் செல்லுதல் போன்ற மிகவும் கடினமான கடமைகளுக்குப் பயன்தரும் வழியில் தீர்வு காண்கிறார்கள்.

அவர்களது புரட்சிகரப் பணிகளின் போக்கில் நமது தொழிலாளர்களால் தவறுகள் செய்யப்படுகின்றன, ஆனால் அவர்கள் ஏற்கெனவே சில மாதங்களுக்குப் பிறகு ஏறத்தாழ எல்லா ஆகப்பெரிய ஆலைகளையும் தொழிற்சாலைகளையும் தேசவுடைமையாக்கிவிட்டார்கள், கடினமான அன்றாட வேலை மூலம் தொழில்களின் முழுப் பிரிவுகளையும் நிர்வாகம் செய்யும் புதிய கடமையைக் கற்றுக் கொண்டு இருக்கிறார்கள்; தேசவுடைமையாக்கப்பட்ட நிறுவனங்களைச் செயல்பட வைத்திருக்கிறார்கள்; சோம்பலின் வலிமை மிக்க எதிர்ப்பு, குட்டி முதலாளித்துவ மனப்பாங்கு, தன்னலம் ஆகியவற்றை வென்று அகற்றி, புதிய சமூக உறவுகள், புதிய உழைப்புக் கட்டுப்பாடு, உறுப்பினர்கள் மீது தொழிலாளர் தொழிற்சங்கங்களின் புதிய செல்வாக்கு ஆகியவற்றுக்கான அடித்தளத்தை செங்கலுக்கு மேல் செங்கலாகக் கட்டி வருகிறார்கள்.

1905ஆம் ஆண்டிலேயே மக்களின் வலிமைமிகுந்த எழுச்சியால் படைக்கப்பெற்ற நமது சோவியத்துகள் அவற்றின் புரட்சிகரப் பணிகளின் போக்கில் தவறுகள்

செய்கின்றன. தொழிலாளர் விவசாயிகளின் சோவியத்துகள் ஒரு புது மாதிரி அரசாகும், ஒரு புதிய உயர் மாதிரி ஜனநாயகம், பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் ஒரு வடிவம், முதலாளி வர்க்கம் இல்லாமலும் முதலாளி வர்க்கத்திற்கு எதிராகவும் அரசாங்கத்தை நிர்வாகம் செய்யும் ஒரு சாதனம். முதல் தடவையாக இங்கு ஜனநாயகம் மக்கட்திரளுக்கு, உழைக்கும் மக்களுக்குச் சேவை செய்கிறது. இன்னும் ஆக ஜனநாயகமானது என்று கருதப்படும் எல்லா முதலாளித்துவக் குடியரசுகளிலும் கூட இருப்பது போன்று செல்வந்தருக்கான ஜனநாயகம் என்ற நிலை இங்கு போய்விட்டது. முதல் தடவையாக பத்துக் கோடிப் பேர் ஈடுபடுத்தப்படும் அளவிற்குப் பாட்டாளி வர்க்க மற்றும் அரைப்பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைச் செயலாக்கும் பிரச்சினையுடன் மக்கள் மல்லாடிக் கொண்டிருக்கிறார்கள், — இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணாவிட்டால் சோஷலிசம் குறித்துப் பேசவே முடியாது.

புலமைப் பகட்டர்களும் அல்லது முதலாளித்துவ-ஜனநாயகம் அல்லது நாடாளுமன்றத் தப்பெண்ணங்கள் திருத்தமுடியாத அளவுக்குத் திணிக்கப்பட்ட மனங்களைக் கொண்ட மக்கள், எமது சோவியத்துகளின் உறுப்பினர்களைப் பற்றியும், உதாரணமாக நேரடித் தேர்தல் இல்லாதது பற்றியும் குழம்பிப் போய் மறுப்புத் தெரிவிக்கிறார்கள். இந்தப் பேர்வழிகள் 1914-1918ஆம் ஆண்டுகளின் மாபெரும் எழுச்சிகளின் காலகட்டத்திலிருந்து எதையும் மறக்கவில்லை, எதையும் கற்றுக்கொள்ளவில்லை. பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை உழைக்கும் மக்களுக்கான புதிய ஜனநாயகத்துடன் இணைப்பது,—உள்நாட்டுப் போரை அரசியலில் மக்கள் ஆகவிரிவான முறையில் பங்குபற்றுவதோடு இணைப்பது,—இத்தகைய இணைப்பை ஒரேயடியாகக் கொண்டுவர முடியாது; மேலும் இது நைந்துபோன மாமூல் நாடாளுமன்ற ஜனநாயகத்தோடு பொருந்துவதும் அல்ல. ஒரு புதிய உலகத்தின், சோஷலிச உலகத்தின் பொதுத் தோற்றம் சோவியத் குடியரசின் உருவில் எம்முன் எழுந்து வருகிறது. இந்த உலகம் தயார்

நிலையில் இருந்து உருவான ஒன்றல்ல, ஜூபிடரின் தலையிலிருந்து உதித்தெழுந்த மினர்வா போல எழுவதல்ல என்பதில் வியப்புக்கு இடமில்லை.[63]

பழைய முதலாளித்துவ-ஜனநாயக அரசியல் அமைப்புச் சட்டங்கள் சம்பிரதாயமான சமத்துவம், கூட்டம் கூடும் உரிமை பற்றிச் சொல்வன்மையுடன் அளந்தன; ஆனால் நமது பாட்டாளி வர்க்கத்தின், விவசாயிகளின், சோவியத் அரசியல் அமைப்புச் சட்டம் சம்பிரதாய சமத்துவம் என்ற போலித்தனத்தை அகற்றி எறிந்துவிட்டது. முதலாளித்துவக் குடியரசுவாதிகள் அரசு பீடங்களைக் கவிழ்த்த பொழுது அவர்கள் முடியரசுவாதிகளுக்கும் குடியரசுவாதிகளுக்கும் இடையிலான சம்பிரதாய சமத்துவம் பற்றிக் கவலைப்படவில்லை. முதலாளித்துவ வர்க்கத்தை ஒழித்துக் கட்டும் விஷயத்தில் துரோகிகள் அல்லது முட்டாள்கள் மட்டுமே முதலாளி வர்க்கத்திற்கு சம்பிரதாய சமத்துவம் வேண்டும் என்று கோர முடியும். சிறந்த கட்டிடங்கள் முதலாளித்துவ வர்க்கத்திற்குச் சொந்தமாக இருக்கும் பொழுது தொழிலாளர் மற்றும் விவசாயிகளுக்குக் ''கூட்டம் கூடும் சுதந்திரம்'' என்பது ஒரு காசின் மதிப்புக் கூடப் பெறாது. எமது சோவியத்துகள் செல்வந்தர்களிடமிருந்து நகரத்திலும் கிராமத்திலும் இருந்த சிறந்த கட்டிடங்களைப் பறிமுதல் செய்து அவை அனைத்தையும் தொழிலாளர், விவசாயிகளுக்கு அவர்களது சங்கங்களுக்கும் கூட்டங்களுக்குமாக உடமை மாற்றியளித்துள்ளன. இது உழைக்கும் மக்களுக்கான எமது கூட்டம் கூடும் சுதந்திரமாகும்! இதுவே எமது சோவியத்தின் எமது சோஷலிச அரசியல் அமைப்புச் சட்டத்தின் பொருளும் உள்ளடக்கமுமாகும்![64]

இதனால்தான் நாங்கள் அனைவரும் இன்னும் என்ன இன்னல்கள் எதிர்காலத்தில் உற்ற போதிலும் எமது சோவியத் குடியரசு வெல்லற்கரியது என்பதில் உறுதியாக நம்பிக்கை கொண்டிருக்கிறோம்.

அது வெல்லற்கரியது, காரணம் வெறிபிடித்த ஏகாதிபத்தியவாதிகளின் ஒவ்வொரு தாக்குதலும், சர்வதேச

முதலாளி வர்க்கம் எம்மீது சுமத்தும் ஒவ்வொரு தோல்வியும், தொழிலாளர் மற்றும் விவசாயிகளின் மேலும் மேலும் அதிகமான பகுதிகளைப் போராட்டத்தில் எழுச்சியுறும்படி செய்கின்றன, அளப்பரிய தியாகம் செய்து அவர்கள் படிப்பினை பெற உதவுகின்றன. அவர்களை உருக்குப்போல உறுதிப்படுத்தி மிகவும் பரந்த அளவில் புதிய செயல்வீரத்தைத் தோற்றுவிக்கின்றன.

அமெரிக்கத் தொழிலாளர் தோழர்களே, உங்களிடமிருந்து உதவி விரைவில் வராது இருக்கலாம் என்பதை நாங்கள் அறிவோம், ஏனெனில் புரட்சி, வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு வடிவங்களில் வெவ்வேறு உணர்ச்சி வேகத்தில் (வேறுவகையில் இருக்க முடியாது) வளர்ச்சியடைந்து வருகிறது. ஐரோப்பியப் பாட்டாளி வர்க்கப் புரட்சி அண்மைக் காலத்தில் மிகவும் விரைவாக முதிர்ச்சியடைந்து வந்த பொழுதிலும், அது அடுத்த சில வாரங்களுக்குள் வெடிக்காமற் போகலாம். நாம் உலகப் புரட்சியின் தவிர்க்கவொண்ணுத் தன்மையில் நம்பிக்கை வைத்திருக்கிருேம், ஆனுல் இந்தப் புரட்சி தவிர்க்கவொண்ணுத வகையில் ஒரு நிர்ணயமான குறுகிய கால அளவில் வரும் என்று நம்பும் அளவுக்கு நாம் அத்தகைய முட்டாள்கள் என்று இதனுல் அர்த்தமல்ல. எமது நாட்டில் 1905 மற்றும் 1917ஆம் ஆண்டுகளில் இரண்டு மாபெரும் புரட்சிகளை நாம் கண்டிருக்கிருேம், புரட்சிகள் உத்தரவு போடப்பட்டோ உடன்படிக்கை மூலமோ நடப்பனவல்ல என்பதை நாம் அறிவோம். சோஷலிசப் பாட்டாளி வர்க்கத்தின் எமது ருஷ்யப் படைப்பிரிவை முன்னணிக்குக் கொண்டு வந்தது சூழ்நிலையேயாகும், அதற்குக் காரணம் ருஷ்யாவின் விதிவிலக்கான பின்தங்கிய தன்மை என்பதையும், எமது திறன்கள் காரணமல்ல என்பதையும் உலகப் புரட்சி வெடிப்பதற்கு முன்னுல் பல தனிப் புரட்சிகள் தோற்கடிக்கப்படலாம் என்பதையும் நாங்கள் அறிவோம்.

இருப்பினும் நாம் வெல்லற்கரியவர்கள் என்பதை உறுதியாக நம்புகிருேம், காரணம் மனித குலத்தின் உணர்ச்சியினை ஏகாதிபத்தியப் படுகொலையால் தகர்க்க முடியாது.

மனித குலம் அதை முறியடிக்கும். ஏகாதிபத்திய யுத்தத்தின் குற்றவாளித்தளைகளைத் தகர்த்த முதல் நாடு எமது நாடாகும். இந்தத் தளைகளை உடைப்பதற்கான போராட்டத்தில் நாம் மிகப் பெரும் துயரார்ந்த உயிர்ச்சேதங்களை அடைய நேர்ந்தது. எனினும் அவற்றை நாம் உடைத்தோம். ஏகாதிபத்திய சார்புத்தன்மையிலிருந்து நாம் சுதந்திரமாகியுள்ளோம், நாம் உலகம் முழுவதும் காணும்படி ஏகாதிபத்தியத்தைப் பூரணமாக அழித்தொழிக்கும் போராட்டத்தின் பதாகையினை உயர்த்தியுள்ளோம்.

நாம் முற்றுகையிடப்பட்ட கோட்டையினுள் இருப்பது போலத் தற்போது உள்ளோம், உலக சோஷலிசப் புரட்சியின் இதர படைப்பிரிவுகள் நமக்கு உதவிக்குவரும் என்று காத்துக் கொண்டிருக்கிறோம். இந்தப் படைப் பிரிவுகள் இருக்கின்றன, அவை எம்முடையவற்றைக் காட்டிலும் எண்ணிக்கையில் அதிகமானவை, ஏகாதிபத்தியத்தின் அட்டூழியங்கள் எந்தளவு நீடித்துத் தொடர்கின்றனவோ, அந்தளவுக்கு அப்படைப் பிரிவுகள் முதிர்ச்சியுற்று, வளர்ந்து மேலும் அதிக வலுவடைந்து வருகின்றன. தொழிலாளர்கள் தமது சமூகத்-துரோகிகளான கோம்பர்ஸ்கள், ஹேண்டர்சன்கள், ரெனோடேல்கள், ஷெய்டெமன்கள் மற்றும் ரென்னர்களிடமிருந்து விலகிக் கொண்டு விட்டார்கள். தொழிலாளர்கள் மெதுவாக ஆனால் உறுதியாக கம்யூனிஸ்டு, போல்ஷிவிக் போர்த்தந்திரங்களைப் பொருத்தமாகத் தழுவிப் பாட்டாளி வர்க்கப் புரட்சியை நோக்கி அணிவகுத்து முன்செல்கிறார்கள்; அது மட்டுமே அழிந்துவரும் கலாசாரத்தை, அழிந்துவரும் மனித குலத்தைக் காப்பாற்றும் ஆற்றலுடையதாகும்.

சுருங்கக் கூறின் நாம் வெல்லற்கரியவர்கள், காரணம் உலகப் பாட்டாளி வர்க்கப் புரட்சி வெல்லற்கரியது.

**நி. லெனின்**

*ஆகஸ்ட் 20, 1918*

பிராவ்தா, இதழ் 178,
ஆகஸ்ட் 22, 1918

நூல் திரட்டு,
தொகுதி 37,
பக்கங்கள் 48-64

# பாட்டாளி வர்க்கப் புரட்சியும் ஓடுகாலி காவுத்ஸ்கியும்

வியன்னுவில் இப்போது வெளிவந்திருக்கும் காவுத்ஸ்கியின் பிரசுரமாகிய **பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்** என்பதை விமர்சித்து நான் எழுத ஆரம்பித்திருக்கும் ஒரு பிரசுரத்தின்[65] தலைப்பாகும் இது. ஆனுல் இந்நூல் நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் அதிக காலம் எடுத்து வருவதால், இப்பொருள் குறித்துச் சுருக்கமான ஒரு கட்டுரைக்கு இடம் தேடித் தரும்படி **பிராவ்தா** செய்தியேட்டின்[66] ஆசிரியர் குழுவைக் கேட்டுக் கொள்வதென முடிவு செய்துள்ளேன்.

வெகுவாய் ஒய்ந்து போகச் செய்வதான பிற்போக்கு யுத்தம் நான்கு ஆண்டுகளுக்கு மேல் நடைபெற்று அதன் வேலையைச் செய்திருக்கிறது. ஐரோப்பாவில் பாட்டாளி வர்க்கப் புரட்சி மூண்டு வருவதை உணர முடிகிறது—ஆஸ்திரியாவிலும் இத்தாலியிலும் ஜெர்மனியிலும் பிரான்சிலும் மற்றும் பிரிட்டனிலுங்கூட (உதாரணமாக, அரை-மிதவாதியான ராம்சே மாக்டொனல்ட் பதிப்பித்து வரும் முதல் தர சந்தர்ப்பவாத *The Socialist Review*[67] ஏட்டின் ஜூலை மாத இதழில் வெளிவந்திருக்கும் "முதலாளியின் ஒப்புதல்கள்" என்னும் கட்டுரை மிகவும் குறிப்பிடத்தக்கது).

இம்மாதிரியான ஒரு நேரத்தில், இரண்டாவது அகிலத்தின்[68] தலைவர் திருவாளர் காவுத்ஸ்கி பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் குறித்து — வேறு விதமாகச் சொல்வதெனில், பாட்டாளி வர்க்கப் புரட்சி குறித்து — பெர்ன்ஷ்டைனின் அபகீர்த்தி வாய்ந்த சோஷலிசத்தின்

முதற்கோள்களைக் காட்டிலும் நூறு மடங்கு இழிவார்ந்ததும் மானக்கேடானதும் ஓடுகாலித்தனமானதுமாகிய ஒரு புத்தகத்தைக் கொண்டு வருகிறார். பெர்ன்ஷ்டைனின் ஓடுகாலிப் புத்தகம் வெளிவந்து ஏறத்தாழ இருபது ஆண்டுகள் கழிந்துவிட்டன, இப்போது காவுத்ஸ்கி இதே ஓடுகாலித்தனத்தை இன்னுங்கூட அப்பட்டமான வடிவத்தில் மறுபடியும் செய்து காட்டுகிறார்.

இப்புத்தகத்தில் மிகச் சிறியதொரு பகுதியே நேரடியாய் ருஷ்யப் போல்ஷிவிக்குப் புரட்சியைப் பற்றியது. ருஷ்யத் தொழிலாளியை வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும் படியான விதத்தில் மென்ஷிவிக்குகளது ஞானவொளி முத்துகள் ஒவ்வொன்றையும் காவுத்ஸ்கி திருப்பிச் சொல்கின்றார். ''மார்க்சியம்'' என்பதாய்ப் பெயர் சூட்டி, உதாரணமாய், என்ன அளிக்கப்படுகிறது, பாருங்கள்: பணக்கார விவசாயிகள் நிலத்தைச் சுவீகரித்துக் கொள்ள முயலுவதாகவும் (புதுமைதான்!), தானியத்தின் உயர்ந்த விலைகள் அவர்களுக்கு இலாபகரமாக இருப்பதாகவும், இன்ன பலவாறாகவும் கூறும் வாதம் — அரை-மிதவாதி மாஸ்லவின் அரை-மிதவாத நூல்களிலிருந்து மேற்கோள்கள் வாரிக் கொட்டப்பட்டு — அளிக்கப்படுகிறது. பிறகு நமது ''மார்க்சியவாதி'' அருவருக்கத்தக்கதும், அறவே மிதவாதத் தன்மையதுமான பின்வரும் வாக்குமூலத்தை அளிக்கின்றார்: ''ஏழை விவசாயி 'பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தில்' சோஷலிச நிலச் சீர்திருத்தத்தின் நிரந்தரமான, முழுமொத்த விளைவாக இங்கே (அதாவது, சோவியத் குடியரசில் போல்ஷிவிக்குகளால்) அங்கீகரிக்கப்படுகிறார்'' (பக்கம் 48, காவுத்ஸ்கியின் பிரசுரம்).

அருமையிலும் அருமை. இவர் ஒரு சோஷலிஸ்டாம், ஒரு மார்க்சியவாதியாம், புரட்சியின் முதலாளித்துவத் தன்மையை நமக்கு நிரூபித்துக் காட்ட முயலுகிறார்; அதே போது ஏழை விவசாயிகளது நிறுவன ஒழுங்கமைப்பு குறித்து, முற்றிலும் மாஸ்லவின், பத்ரேசவின், மற்றும் காடேட்டுகளின் மனப்பாங்குக்கு ஏற்ப ஏளனம் புரிகிறார்.

''பணக்கார விவசாயிகளை உடைமை நீக்கம் செய்வதானது, புத்துயிர் பெற்றெழ அவசரமாய்ச் சமாதானமும் பாதுகாப்பான நிலைமையும் தேவையாயிருக்கும் உற்பத்தி நிகழ்முறையினுள், அமைதியின்மைக்கும் உள்நாட்டு யுத்தத்துக்குமான ஒரு புதிய செயற்கூறினையே புகுத்துகிறது'' (பக்கம் 49).

நம்பமுடியாததுதான், ஆனால் கூறப்படுவது இதுவேதான். அதே சொற்கள்தான் — சாவின்கவினுடையவையோ, மில்யுக்கோவினுடையவையோ அல்ல, காவுத்ஸ்கியினுடையவை!

காவுத்ஸ்கி நம்மை வியப்புறச் செய்துவிடவில்லை, ஏனெனில் குலாக்குகளைப் பாதுகாப்போர் ''மார்க்சியத்தைத்'' தமக்கு ஒரு மூடுதிரையாக உபயோகித்துக் கொள்வதை இங்கே ருஷ்யாவில் நாம் அத்தனை தரம் பார்த்திருக்கிறோம். இப்படி இழிந்துபட்டு முதலாளித்துவ வர்க்கத்தின் காலில் விழுவது குறித்தும், உள்நாட்டு யுத்தம் பற்றிய இந்த மிதவாத அச்சம் குறித்தும், ஐரோப்பிய வாசகருக்கு வேண்டுமானால் மேலும் விவரமாய் பரிசீலிப்பது தேவையாய் இருக்கலாம். ஆனால் ருஷ்யாவின் தொழிலாளியையும் விவசாயியையும் பொறுத்த வரை, காவுத்ஸ்கியின் ஒடுகாலித்தனத்தைச் சுட்டிக் காட்டினால் போதும்—வேறு ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை, மேலே செல்லலாம்.

* * *

காவுத்ஸ்கியின் புத்தகத்தில் ஏறத்தாழ பத்தில் ஒன்பது பகுதி ''ஜனநாயகத்தின்'' பால் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்குள்ள உறவு பற்றிய பிரச்சினையாகிய தலையாய முக்கியத்துவம் வாய்ந்த பொதுவான ஒரு பிரச்சினை குறித்ததாகும். மார்க்சியத்திடமிருந்து காவுத்ஸ்கி முற்றாக முறித்துக் கொண்டுவிடுவது இங்கு குறிப்பிடத் தக்கவாறு கண்கூடாகிறது.

முற்றிலும் கருத்தூன்றிய முறையில், பெரும் ''புலமை வாய்ந்தவருக்குரிய'' தொனியில் காவுத்ஸ்கி தமது வாசக

ருக்கு அறுதியிட்டுக் கூறுகின்றார்: ''பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகர சர்வாதிகாரம்'' என்பதன் மூலம் மார்க்ஸ் ஜனநாயகத்துக்கு இடமில்லாத ''ஆட்சி வடிவத்தைக்'' குறிப்பிடவில்லை, நிலவுதலேயே, அதாவது ''ஆட்சி நிலவுதலையே'' குறிப்பிட்டார் என்கிறார். தேச மக்களில் பெரும்பான்மையோர் என்ற முறையில் பாட்டாளி வர்க்கத்தாரது ஆட்சி, கண்டிப்பான முறையில் ஜனநாயகத்தைக் கடைப்பிடிக்கும் ஆட்சியாய் இருப்பது சாத்தியமே. உதாரணமாய், மெய்யாகவே பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமாய் இருந்த பாரிஸ் கம்யூனைது அனைத்து மக்கள் வாக்குரிமையின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டதாகும். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்பதாகப் பேசிய போது மார்க்ஸ் ''ஆட்சி வடிவத்தை'' (அல்லது அரசாங்க வடிவத்தை, Regierungsform) மனதிற் கொண்டிருக்கவில்லை என்பதை, ''இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் (கம்யூனிசத்துக்கு) மாறிச் செல்வதானது சமாதான வழியில், அதாவது ஜனநாயக வழியில், நடந்தேறக் கூடுமென மார்க்ஸ் நினைத்ததானது நிரூபிக்கின்றது'' (பக்கங்கள் 20-21).

நம்பமுடியாததுதான், ஆனால் கூறப்படுவது இதுவேதான்! இதே முறையில்தான் வாதாடுகிறார் காவுத்ஸ்கி. போல்ஷிவிக்குகள் அவர்களது அரசியலமைப்புச் சட்டத்திலும் அவர்களது கொள்கை பூராவிலுமே ''ஜனநாயகத்தை'' மீறிச் செல்கிறார்களெனக் காவுத்ஸ்கி சீற்றம் கொண்டு, அவர்கள் மீது குற்றம் சாட்டுகிறார். ''சர்வாதிகார முறைக்குப் பதில் ஜனநாயக முறையை'' மும்முரமாய் முனைந்து உபதேசிக்க ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் அவர் பயன்படுத்திக் கொள்கிறார்.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தைப் பற்றிய மார்க்சின் போதனையானது ஜனநாயகத்துக்குப் புறம்பாய் இருக்கும் காரணத்தால் தாம் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை என்று மேலும் நேர்மையோடு ஒளிவுமறைவின்றி அறிவித்திருக்கும் சந்தர்ப்பவாதிகளது தரப்புக்கு (டேவிட், கோல்ப், ஜெர்மன் சமூக-தேசியவெறியின் ஏனைய ஆதாரத் தூண்களையும், ஆங்கிலேய ஃபேபியன்களையும்[69],

சுயேச்சையாளர்களையும்,[70] பிரெஞ்சு, இத்தாலியச் சீர்திருத்தவாதிகளையும் போன்றோரது தரப்புக்கு) அறவே துறந்தோடுவதே ஆகும் இது.

''சுதந்திர மக்கள் அரசையே'' தாம் விரும்புவதாக வலியுறுத்தி வந்தவர்களான மார்க்சியத்துக்கு முற்காலத்திய ஜெர்மன் சோஷலிஸ்டுகளது கருத்துக்களுக்கும், அரசு ஒவ்வொன்றும் ஒரு வர்க்கம் இன்னொன்றை நசுக்கி அடக்குவதற்கான இயந்திரமே ஆகுமென்பதைப் புரிந்து கொள்ளாதவர்களான குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளது கருத்துக்களுக்கும் முழு அளவில் திரும்பிவிடுவதே ஆகும் இது.

பாட்டாளி வர்க்கப் புரட்சியை அறவே துறந்துவிட்டு, அதற்குப்பதில், ''பெரும்பான்மையை வென்று கொள்ளுதல்'', ''ஜனநாயகத்தைப் பயன்படுத்திக் கொள்ளுதல்'' என்பதான மிதவாதத் தத்துவத்தைக் கைக்கொள்வதே ஆகும் இது! முதலாளித்துவ அரசு இயந்திரத்தைப் பாட்டாளி வர்க்கம் ''நொறுக்க'' வேண்டியதன் அவசியத்தை நிரூபித்துக் காட்டி, 1852 லிருந்து 1891 வரை நாற்பது ஆண்டுகளாய் மார்க்சும் எங்கெல்சும் போதித்து வந்ததை ஓடுகாலி காவுத்ஸ்கி அறவே மறந்துவிடுகிறார், திரித்துப் புரட்டுகிறார், கழித்துக் கட்டுகிறார்.

காவுத்ஸ்கியின் தத்துவார்த்தத் தவறுகளை விவரமாகப் பகுத்தாய்வதெனில், **அரசும் புரட்சியும்** என்பதில் நான் கூறியுள்ளவற்றைத் திருப்பிச் சொல்வதாய் அமைந்துவிடும். அதைச் செய்யத் தேவையில்லை. சுருக்கமாய் இதை மட்டும் சொல்கிறேன்:

அரசு **ஒவ்வொன்றும்** ஒரு வர்க்கம் இன்னொன்றை நசுக்கி அடக்குவதற்கான இயந்திரமே ஆகுமென்பதையும், மிகமிக **ஜனநாயகத் தன்மையதான** முதலாளித்துவக் குடியரசுங்கூட முதலாளித்துவ வர்க்கம் பாட்டாளி வர்க்கத்தை நசுக்கி அடக்குவதற்கான இயந்திரமே ஆகுமென்பதையும் மறப்பதன் மூலம் மார்க்சியத்தைத் துறந்து ஓடுகிறார் காவுத்ஸ்கி.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்பது **பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ வர்க்கத்தை** நசுக்கி அடக்குவதற்

கான இயந்திரமாகிய பாட்டாளி வர்க்க அரசாகும்; இது வேறொரு ரகத்தைச் சேர்ந்த அரசு ஆகுமே அன்றி, ஓர் ''ஆட்சி வடிவம்'' அல்ல. முதலாளித்துவ வர்க்கம் தான் உடைமை நீக்கம் செய்யப்படுவதை எப்போதுமே மூர்க்கமாய் எதிர்க்குமாதலால், நசுக்கி அடக்குதல் அவசியமாகும்.

(இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் சமாதான வழியில் சோஷலிசத்துக்கு மாறிச் செல்லும் சாத்தியப்பாட்டுக்கு எழுபதாம் ஆண்டுகளில் மார்க்ஸ் இடமளித்தார் என்று வாதாடுதல் குதர்க்கவாதமே ஆகும், அல்லது பச்சையாகச் சொல்வதெனில் மேற்கோள்களையும் சுட்டுரைகளையும் எடுத்தாண்டு செப்படி வித்தை செய்து ஏமாற்றுவதே ஆகும். முதலாவதாக, அந்தக் காலத்திலேயே மார்க்ஸ் இந்த சாத்தியப்பாட்டை ஒரு விதிவிலக்காகவே கருதினார். இரண்டாவதாக, அக்காலத்தில் ஏகபோக முதலாளித்துவம், அதாவது ஏகாதிபத்தியம் இருக்கவில்லை. மூன்றாவதாக, இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அக்காலத்தில் இராணுவாதிக்கக் கும்பல் முதலாளித்துவ அரசு இயந்திரத்தின் பிரதான பொறியமைவாய்—இப்போது இருப்பது போல்—இருக்கவில்லை.)

நசுக்கி அடக்கப்படுதல் நடைபெறுகையில் சுதந்திரமும் சமத்துவமும் இன்ன பிறவும் இருக்க முடியாது. எனவே தான் ஏங்கெல்ஸ் கூறினார்: ''பாட்டாளி வர்க்கத்துக்கு அரசு தேவையாயிருக்கும் வரையில், தனது எதிராளிகளை அடக்கி வைக்கும் பொருட்டே அல்லாமல், சுதந்திரத்தின் நலன்களுக்காக அதற்கு அரசு தேவைப்படவில்லை, சுதந்திரம் குறித்துப் பேசுவது சாத்தியமானதுமே அரசானது அரசாய் இல்லாதொழிகிறது.''[71]

பாட்டாளி வர்க்கத்துக்குக் கல்விபோதம் அளிப்பதிலும் போராட்டத்துக்காக அதற்குப் பயிற்சி அளிப்பதிலும் மதிப்பிடற்கரியதாகிய முதலாளித்துவ ஜனநாயகம், எப்போதுமே குறுகலாகவும் வஞ்சகமானதாகவும் போலியாகவும் புரட்டாகவுமே இருக்கிறது; எப்போதுமே அது

17*

செல்வந்தர்களுக்கான ஜனநாயகமாகவும் ஏழைகளை ஏமாற்றும் மோசடியாகவும் இருக்கிறது.

பாட்டாளி வர்க்க ஜனநாயகமானது சுரண்டலாளர்களாகிய முதலாளித்துவ வர்க்கத்தினரை நசுக்கி அடக்குகிறது — ஆகவே அது வஞ்சகமானதல்ல, சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் அவர்களுக்கு அளிப்பதாய் வாக்குறுதி செய்யவில்லை — உழைப்பாளி மக்களுக்கு மெய்யான ஜனநாயகத்தை அளிக்கிறது. சோவியத் ருஷ்யாதான், எந்த முதலாளித்துவ ஜனநாயகக் குடியரசிலும் முன்பின் காணப்பட்டிராததும் அசாத்தியமானதும் நினைக்கவே முடியாததுமான அளவில் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் ருஷ்யாவின் பாட்டாளி வர்க்கத்தினருக்கும் உழைப்பாளர்களாகிய பிரம்மாண்டப் பெரும்பான்மையோர் அனைவருக்கும் கிடைக்கச் செய்திருக்கிறது. உதாரணமாய், மாளிகைகளையும் பெரிய கட்டடங்களையும் முதலாளித்துவ வர்க்கத்திடமிருந்து எடுத்துக் கொண்டதன் மூலமும் (இதைச் செய்யாத வரை கூட்டம் கூடுவதற்கான சுதந்திரம் கபட நாடகமே ஆகும்), அச்சகங்களையும் காகித இருப்புகளையும் முதலாளிகளிடமிருந்து எடுத்துக் கொண்டதன் மூலமும் (இதைச் செய்யாத வரை தேசத்தின் உழைப்பாளர்களாகிய பெரும்பான்மையோருக்குப் பத்திரிகைச் சுதந்திரம் பொய்க் கூற்றே ஆகும்), முதலாளித்துவ நாடாளுமன்ற முறைக்குப் பதிலாய், மிகமிக ஜனநாயகத் தன்மையதான முதலாளித்துவ நாடாளுமன்றத்தையும் விட ஆயிரம் மடங்கு ''மக்களுக்கு'' அருகாமையில் இருப்பவையும் ''ஜனநாயகத் தன்மை'' வாய்ந்தவையுமாகிய சோவியத்துகளால் ஆகிய ஜனநாயக ஒழுங்கமைப்பை நிறுவியதன் மூலமும், இப்படி இன்னும் பலவற்றின் மூலமும் இதைச் செய்திருக்கிறது.

காவுத்ஸ்கி கழித்துக் கட்டிவிடுகிறார்... ''வர்க்கப் போராட்டத்தினை'', ஜனநாயகம் சம்பந்தமாய்! ஒளிவு மறைவற்ற அப்பட்டமான ஓடுகாலியாகி விடுகிறார், முதலாளித்துவ வர்க்கத்தின் கைக்கூலியாகி விடுகிறார் காவுத்ஸ்கி.

* * *

அவரது ஓடுகாலித்தனத்துக்குச் சான்றுகத் திகழும் முத்துகளில் சிலவற்றை நான் சுருக்கமாகவேனும் குறிப்பிட்டாக வேண்டும்.

நிறுவன ஒழுங்கமைப்புக்கான சோவியத் வடிவம், ருஷ்ய முக்கியத்துவம் மட்டுமின்றி உலகளாவிய முக்கியத்துவம் வாய்ந்ததென்பதையும், ''நாம் வாழும் இக்காலத்தின் மிக முக்கிய நிகழ்வுகளில்'' ஒன்றுகும் என்பதையும், வருங் காலத்துப் பெரும் போர்களில் — ''மூலதனத்துக்கும் உழைப்புக்கும் இடையிலான போர்களில்''—இது ''தீர் மானகர முக்கியத்துவம்'' பெறுமென நம்பிக்கையுடன் எதிர்பார்க்கலாம் என்பதையும் காவுத்ஸ்கி ஒத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால், பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராய் முதலாளித்துவ வர்க்கத்தின் தரப்புக்கு மகிழ்வுடன் போய்ச் சேர்ந்துவிட்ட மென்ஷிவிக்குகளது நல்லறிவினை அப்படியே காப்பியடித்து, ''போராட்ட நிறுவனங்கள்'' என்ற முறையில் சோவியத்துகள் சிறப்பானவையே எனினும் அவை ''அரசு நிறுவனங்கள்'' ஆகிவிடலாகாது என்னும் முடிவை அவர் ''வந்தடைகிருர்''.

அருமையிலும் அருமைதான்! பாட்டாளிகளே, ஏழை விவசாயிகளே, சோவியத்துகளை நிறுவி அவற்றில் ஒன்று சேருங்கள்! ஆனல், உங்களுக்குப் புண்ணியம் உண்டு, துணிந்து வெற்றி மட்டும் பெற்றுவிடாதீர்கள்! வெற்றி பெற வேண்டுமென்ற நினைப்புக்குங்கூட இடந் தராதீர்கள்! நீங்கள் வெற்றி பெற்று முதலாளித்துவ வர்க்கத்தைத் தோற்கடிக்கும் அதே கணத்தில் நீங்கள் இறுதி எய்திவிட வேண்டும், ஏனெனில் பாட்டாளி வர்க்க அரசில் நீங்கள் ''அரசு'' நிறுவனங்களாய் இருக்கலாகாது. ஆம், வெற்றியடைந்ததும் உடனே நீங்கள் கலைந்துவிட வேண்டும்!!

இந்த ஆள் காவுத்ஸ்கி இருக்கிருரே, எப்படிப்பட்ட அதியற்புத ''மார்க்சியவாதி'' இவர்! ஓடுகாலித்தனத்தின் ஒப்புயர்வற்ற ''தத்துவார்த்தி'' ஆக அல்லவா இருக்கிருர்!

இரண்டாவது முத்து. உள்நாட்டு யுத்தமானது ''சமுதாயப் புரட்சியின்'' ''ஜன்மப் பகை'' ஆகும்; ஏனெனில்,

முன்பே நமக்குத் தெரிவிக்கப்பட்டது போல, புரட்சிக்குத் "தேவையாய் இருப்பது சமாதானமும்" (செல்வந்தர்களுக்கா?), "பாதுகாப்பும்" (முதலாளிகளுக்கா?).

ஐரோப்பியத் தொழிலாளர்களே, உங்களுக்கு எதிராய் உள்நாட்டு யுத்தம் நடத்த சாவின்கவையும் டானேயும், துத்தவையும் கிராஸ்னேவையும், செக்கோஸ்லோவாக்குகளையும்[73] குலாக்குகளையும் கூலிக்கு அமர்த்தாத ஒரு முதலாளித்துவ வர்க்கத்தை நீங்கள் தேடிப் பிடிக்கும் வரை, புரட்சியைப் பற்றி நினைக்கவே நினைக்காதீர்கள்!

1870ல் மார்க்ஸ் எழுதினர், யுத்தத்தால் பிரெஞ்சுத் தொழிலாளர்களுக்குக் கிடைத்த ஆயுதங்களை நடைமுறையில் பயன்படுத்துவதில்தான் பிரதான நம்பிக்கை அடங்கியிருந்தது என்று. "மார்க்சியவாதி" காவுத்ஸ்கி நான்கு ஆண்டுகளாய் நடைபெற்ற யுத்தத்திலிருந்து எதிர்பார்ப்பது, முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிராய்த் தொழிலாளர்கள் ஆயுதங்களைப் பயன்படுத்துவதை அல்ல (அப்படி நடைபெருதபடி ஆண்டவன் அருள் புரிவாஞக, அப்படி நடைபெறுவது உண்மையில் "ஜனநாயகமாய்" இராது!), மாருக... ஆசையும் நேசமும் மிக்க முதலாளிமார்கள் ஆசையும் நேசமும் மிக்க சமாதானம் முடித்துக் கொள்வதையே எதிர்பார்க்கின்ருர்!

மூன்ருவது முத்து, உள்நாட்டு யுத்தத்தில் விரும்பத்தகாத இன்னெரு அம்சமும் இருக்கிறது: "ஜனநாயகமானது" "சிறுபான்மையின் பாதுகாப்புக்கு" வகை செய்கிறது (இடைக்குறிப்பாய் நாம் குறிப்பிடலாம்—பிரான்சில் டிரைஃபஸுக்கு ஆதரவாக இருந்தோரும், மற்றும் இன்னும் அண்மைக் காலத்தில் லீப்க்னெஹ்ட், மக்லின், அல்லது டெப்ஸைப் போன்ரேர் தமது சொந்த அனுபவத்திலிருந்து அவ்வளவு சிறப்பாய்த் தெரிந்து கொண்டார்களே, அதைப் போல), ஆனல் உள்நாட்டு யுத்தமானது (இதைக் கவனியுங்கள்!) "தோல்வியுறுவோர் அடியோடு ஒழிந்துவிடும்படியான அபாயத்தை உண்டாக்குகிறது".

ஆமாம், இப்படிப்பட்ட ஆளாகிய இந்த காவுத்ஸ்கி மெய்யான புரட்சியாளர் அல்லாமல் வேறு என்னவாம்? புரட்சியை இவர் முழு மனதாய் ஆதரிக்கவே செய்கிறுர்... ஒழிந்துவிடும்படியான அபாயத்தை உண்டாக்கும் முனேப் பான் போராட்டம் எதுவும் இல்லாமற் போகுமாயின்! பலாத்காரப் புரட்சிகளுக்குள்ள கல்விபோதப் பயன் மதிப்பை அத்தனே ஆர்வமோடு போற்றிப் புகழ்ந்த மூதாளரான அந்த எங்கெல்ஸ் புரிந்த பழைய தவறு களே ''வென்று சமாளித்துவிடுகிறுர்'' இவர். சுரண்டப்படு வோரை உள்நாட்டு யுத்தம் உருக்கு உறுதி பெறச் செய்கிறது, சுரண்டலாளர்கள் இல்லாத ஒரு புதிய சமு தாயத்தைக் கட்டியமைத்திட அவர்களுக்குப் போதமளிக் கிறது என்று கூறியவர்களுடைய மன மயக்கங்களே, ''முனேப்பு மிக்க'' வரலாற்றியலாளரான இவர் அறவே துறந்துவிடுகிறுர்.

நான்காவது முத்து. வரலாற்று வழியில் பார்க்கையில், 1789ஆம் ஆண்டுப் புரட்சியில் தொழிலாளர்கள், குட்டி முதலாளித்துவப் பகுதியோரது சர்வாதிகாரம் பெருமைக் குரியதாகவும் பயனுடையதாகவுமா இருந்தது? இல் லவேஇல்லே. ஏனெனில் நெப்போலியனே வரச் செய்ததே. ''மக் களது அடிப் பகுதியோரது சர்வாதிகாரம் கொடுவாளின் சர்வாதிகாரத்துக்குப் பாதையைச் செப்பனிடுகிறது'' (பக் கம் 26). மிதவாதிகளது முகாமுக்குத் துறந்தோடி விட் டார் இவர், எல்லா மிதவாதிகளேயும் போலவே நமது ''முனேப்பு மிக்க'' வரலாற்றியலாளரும் ''அடிப் பகுதி யோரது சர்வாதிகாரத்தை அறிந்திராத நாடுகளில்—உதா ரணமாய் ஜெர்மனியில்—கொடுவாளின் சர்வாதிகாரம் இருந்ததே இல்லேயென ஐயப்பாட்டுக்கு இடமின்றி திட மாக நம்புகிறுர். பிரான்சில் இருந்ததைக் காட்டிலும் அப் பட்டமான, இழிவான கொடுவாள் சர்வாதிகாரத்தைப் பெறும் சிறப்பு எந்நாளும் ஜெர்மனிக்கு இருந்ததில்லே— அதெல்லாம் மார்க்சும் எங்கெல்சும் புனேந்தளித்த அவ தூறே ஆகும். இங்கிலாந்திலோ ஜெர்மனியிலோ இருந் துள்ளதைக் காட்டிலும் பிரான்சில்தான் ''மக்களிடத்தே''

இதுகாறும் அதிக அளவு சுதந்திரத் தாகமும் நேயமும் ஒடுக்கப்படுவோர் குறித்து அதிக அளவு பெருமித உணர்வும் இருந்துள்ளன என்றும், பிரான்சு இதற்காகத் தனது புரட்சிகளுக்கே நன்றிக் கடன் செலுத்த வேண்டும் என்றும் மார்க்சும் எங்கெல்சும் கூறியதுங்கூட வெட்கங் கெட்ட பொய்யே ஆகும்.

...ஆனால் போதும் இவ்வளவு! இழிவுக்குரிய ஓடுகாலியான அந்த காவுத்ஸ்கியின் ஓடுகாலித்தனத்துக்குச் சான்று பகரும் எல்லா முத்துகளையும் குறிப்பிட்டுச் சொல்வதெனில், ஒரு பிரசுரமே எழுத வேண்டியிருக்கும்.

* * *

திருவாளர் காவுத்ஸ்கியின் ''சர்வதேசியம்'' குறித்து நான் இரண்டொரு வார்த்தை கூறியாக வேண்டும். மென்ஷிவிக்குகளின் சர்வதேசியத்தை மிகுந்த பரிவுணர்வோடு அவர் சித்திரிப்பதன் மூலம் தம்மையும் அறியாமலே இதனை வெளிச்சத்துக்கு வரச் செய்து விடுகிறார். மென்ஷிவிக்குகளுங்கூட சிம்மர்வால்டிஸ்டுகள்தானும்,[73] போல்ஷிவிக்குகளது ''சோதரர்கள்'' என்றுகூட சொல்லலாமாம்!—உயர்திரு காவுத்ஸ்கி நமக்கு உறுதி கூறுகின்றார்.

மென்ஷிவிக்குகளது ''ஸிம்மர்வால்டியம்'' குறித்து அவர் தீட்டும் நேர்த்தியான அரிய சித்திரம் இதோ இருக்கிறது:

''மென்ஷிவிக்குகள் அனைத்துலக சமாதானத்தை விரும்பினார்கள். யுத்தத்தில் ஈடுபட்டிருந்த எல்லாரும், பிரதேசக் கைப்பற்றல்களோ, இழப்பீட்டுத் தண்டத் தொகைகளோ கூடாதென்ற கோஷத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றே அவர்கள் விரும்பினார்கள். இது சாதிக்கப்படும் வரையில் ருஷ்யச் சேனையானது, அவர்களது கருத்துப்படி, போர் புரிவதற்குரிய தயார் நிலையிலே தன்னை நிலை நிறுத்திக் கொள்ள வேண்டும்...'' ஆனால் பாழாய்ப் போன போல்ஷிவிக்குகள் சேனையை ''ஒழுங்கு குலையும்படிச்'' செய்து விட்டார்கள், நாசமாய்ப் போன பிரேஸ்த்-

லித்தோவ்ஸ்க் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டார்கள்... அரசியல் நிர்ணயச் சபை பாதுகாக்கப்பட் டிருக்க வேண்டுமென்றும், போல்ஷிவிக்குகள் ஆட்சியதி காரத்தைக் கைக்கொண்டிருக்கக் கூடாதென்றும் தெக்கத் தெளிவாகவே கூறுகிறுர் காவுத்ஸ்கி.

ஆக, மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர் களும் கேரென்ஸ்கியை ஆதரித்தார்களே, அது போல தத்தமது "சொந்த" ஏகாதிபத்திய அரசாங்கத்தை ஆதரிப்பதுதான் சர்வதேசியம்; அந்த அரசாங்கத்தின் இரகசிய ஒப்பந்தங்களை மூடி மறைப்பதும், கொடிய காட்டு மிருகங்கள் சாதுவாகிவிட வேண்டுமென நாம் "கோருகிறேம்", ஏகாதிபத்திய அரசாங்கங்கள் "பிரதேசக் கைப்பற்றல்களோ இழப்பீட்டுத் தண்டத் தொகை களோ கூடாதென்ற கோஷத்தை ஏற்றுக் கொள்ள வேண்டு" மென நாம் "கோருகிறேம்" என்பன போன்ற வாய்ச் சவடால்களைக் கொண்டு மக்களை ஏமாற்றுவதும்தான் சர்வதேசியம்.

காவுத்ஸ்கியின் கருத்துப்படி இதுவேதான் சர்வதே சியம்.

நம்முடைய கருத்துப்படி இது அப்பட்டமான ஓடு காலித்தனமே அன்றி வேறல்ல.

சர்வதேசியம் என்பது, தமது சொந்த சமூக-தேசிய வெறியர்களிடமிருந்தும் (அதாவது பாதுகாப்புவாதிகளிட மிருந்தும்) தமது சொந்த ஏகாதிபத்திய அரசாங்கத்திட மிருந்தும் முறித்துக் கொள்வதைக் குறிப்பதாகும்; அந்த அரசாங்கத்தை எதிர்த்துப் புரட்சிப் போராட்டம் நடத்துவதையும், அதை வீழ்த்துவதையும், மிகப் பெரிய தேசியத் தியாகங்களை (பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் சமாதான ஒப்பந்தம் ஒன்று வரையிலான தியாகங்களையுங்கூட) — உலகத் தொழிலாளர்களது புரட்சியின் வளர்ச்சிக்கு அது பயன் தருவதாய் இருக்குமாயின் — செய்யத் தயாராய் இருப்பதையும் குறிப்பதாகும்.

பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் சமாதான ஒப்பந்தத்தால் காவுத்ஸ்கியும் அவரது நண்பர்களும் (ஷ்டிரேபெலும்

யில் சுபோத்னிக்குகளின் எண்ணிக்கை அற்ப சொற்ப மாய் இருப்பது குறித்து அவர்கள் ஏளனம் செய்கிறுர்கள். இந்தக் கனவான்களுக்கு நாம் கூறும் பதில் இதுவே: முத லாளித்துவ அறிவாளிகள் தமது அறிவாற்றலை ருஷ்ய, அந்நிய முதலாளிகளது ஆட்சியதிகாரத்தைத் திரும்பவும் கொண்டுவரும் பொருட்டு இந்த முதலாளிகளுக்கு அளிப் பதற்குப் பதிலாய், உழைப்பாளி மக்களுக்கு உதவுவதற் காக அதை அர்ப்பணித்திருந்தார்களாயின், புரட்சி மேலும் விரைவாகவும், மேலும் சமாதான பூர்வமாகவும், நடந்தேறியிருக்கும். ஆனுல், இது கற்பனுவாதமாகும். ஏனெனில் பிரச்சினை தீர்க்கப்படுவது வர்க்கப் போராட் டத்தால். அறிவாளிகளில் பெரும்பாலோர் முதலாளித்துவ வர்க்கத்தின் பக்கம் தான் சாய்கின்றனர். பாட்டாளி வர்க் கம் வெற்றி வாகை சூடப் போவது அறிவாளிகளின் உதவி யால் அல்ல, அவர்களுடைய எதிர்ப்பை மீறித்தான் (எப் படியும் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இப்படித்தான்). அவர்களில் திருத்த முடியாதபடி சீர்கேடுற்றேரை ஒதுக்கித் தள்ளியும், சஞ்சலவாதிகளைச் சீர்திருத்தியும் மறு கல்வியும் போதனையும் அளித்தும் கீழ்ப்படிய வைத்தும், அது படிப்படியாய் அவர்களில் மேலும் மேலும் அதிகமா ஞேரைத் தம் பக்கத்துக்கு வென்று வெற்றி வாகை சூடப் போகிறது. புரட்சிக்கு ஏற்படும் இன்னல்களையும் இடர்ப் பாடுகளையும் கண்டு ஆர்ப்பரித்து அகமகிழ்தல், பீதியைப் பரப்புதல், கடந்த காலத்துக்குத் திரும்பிவிட வேண்டு மெனப் பிரசாரம் செய்தல்—இவை யாவும்தான் வர்க்கப் போராட்டத்தில் முதலாளித்துவ அறிவாளிகளின் ஆயுதங் களும் வழிமுறைகளும். இவற்றுல் தான் ஏமாற்றப்படு வதற்குப் பாட்டாளி வர்க்கம் அனுமதிக்கப் போவதில்லை.

ஆனுல் உண்மை விவரங்களைப் பரிசீலித்தால், புதிய பொருளுற்பத்தி முறை எதுவும் வரிசையாய்ப் பல தோல்வி களும் தவறுகளும் மறுதலிப்புகளும் இல்லாமல் உடனடி யாகவே உறுதியாய் நிலைபெற்றதை வரலாற்றில் எப்பொழுதாவது கண்டதுண்டா? பண்ணை அடிமை முறை ஒழிக்கப்பட்டு[82] அரை நூற்றுண்டு கழிந்த பிறகும்

ருஷ்யக் கிராமப்புறங்களில் பண்ணை அடிமை முறையின் மீதமிச்சங்கள் பலவும் இருந்தன. அமெரிக்காவில் அடிமை முறை ஒழிக்கப்பட்டு அரை நூற்றாண்டு ஆன பிறகும் நீக்ரோக்கள் பல சந்தர்ப்பங்களில் அரை அடிமை நிலையிலேயே இருந்தனர். மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் அடங்கலான முதலாளித்துவ அறிவாளிகள் மூலதனத்துக்குப் பணியாற்றுவதிலும் முழுக்க முழுக்கப் பொய்யான வாதங்களைத் தொடர்ந்து கையாளுவதிலும் இம்மியும் நெறி பிறழாதவர்களாகவே இருக்கின்றனர் — பாட்டாளி வர்க்கப் புரட்சிக்கு முன்பு, அவர்கள் நாம் கற்பனாவாதிகளாய் இருப்பதாய்க் குற்றம் கூறினர்; இந்தப் புரட்சிக்குப் பிறகு, கடந்த காலத்தின் சாயல்கள் யாவற்றையும் நாம் கற்பனா வேகத்தில் துடைத்தெறிய வேண்டுமெனக் கோருகின்றனர்!

ஆனால் நாம் கற்பனாவாதிகள் அல்ல. முதலாளித்துவ ''வாதங்களின்'' உண்மை அர்த்தத்தை நாம் அறிவோம். புரட்சிக்குப் பிறகு சில காலத்துக்குப் பழைய அறநெறியின் சாயல்கள் புதியதன் இளங் குருத்துக்களை விஞ்சி ஆதிக்கம் புரியவே செய்யும் என்பதையும் அறிவோம். புதியது இப்பொழுதுதான் பிறந்ததாய் இருக்கையில் குறிப்பிட்ட சிறிது காலத்துக்குப் பழையது அதைக் காட்டிலும் பலம் கொண்டதாகவே இருக்கும். இயற்கையிலும் சமூக வாழ்விலும் எப்பொழுதும் இப்படித்தான். புதியதன் இளங் குருத்துக்களின் வலுவின்மையை ஏளனம் செய்தலும், அறிவாளிகளின் கீழ்த்தரமான ஐயுறவு மனப்பான்மையும், இன்ன பிறவும் சாராம்சத்தில் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிரான முதலாளித்துவ வர்க்கப் போராட்ட முறைகளே ஆகும், சோஷலிசத்துக்கு எதிராய் முதலாளித்துவத்தைப் பாதுகாப்பதே ஆகும். புதியதன் வலுவில்லாத குருத்துக்களை நாம் கருத்துடன் ஆராய்ந்தாக வேண்டும். அவற்றின்பால் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். அவற்றின் வளர்ச்சியை ஓங்கச் செய்யவும் அவற்றைப் ''பேணிக் காக்கவும்'' யாவும் செய்தாக வேண்டும். அவற்றில் சில தவிர்க்க முடியாதபடி மடிந்து

விடலாம். ''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள்'' தான் குறிப்பிடத்தக்க முக்கிய பங்காற்றப் போகிறவை என்று நாம் உறுதி மொழி கூற முடியாது. ஆனால் அதுவல்ல விவகாரம். புதியதன் குருத்துக்கள் யாவற்றையும் ஒன்று விடாது பேணி வளர்த்திடுவதே இங்குள்ள விவகாரம். இவற்றுள் நிலைத்து வாழத் தக்கனவற்றை வாழ்க்கை தேர்ந்தெடுத்துக் கொள்ளும். மனிதகுலம் மேக நோயை ஒழித்துக்கட்ட உதவும் பொருட்டு, ஜப்பானிய விஞ்ஞானிக்கு அறுநூற்று ஐந்து மருந்து தயாரிப்புகளைச் சோதித்துப் பார்த்துக் குறிப்பிட்ட தேவைகளுக்கு உகந்தபடி அமைந்த அறுநூற்று ஆறுவது தயாரிப்பை உருவாக்கும் பொறுமை இருந்ததென்றால், இதை விட கடினமான ஒரு பிரச்சினைக்கு, அதாவது முதலாளித்துவத்தை ஒழித்துக்கட்டுவதென்ற பிரச்சினைக்குத் தீர்வு காண விரும்புவோர் யாவற்றிலும் மிகப் பொருத்தமானதை உருவாக்கும் பொருட்டு, நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் புதிய போராட்ட முறைகளையும் வழிகளையும் ஆயுதங்களையும் சோதித்துப் பார்க்கும்படியான விடாமுயற்சி உடையோராய் இருக்க வேண்டும் அல்லவா?

''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள்'' இவ்வளவு முக்கியமானவையாய் இருக்கக் காரணம் என்னவெனில், விதிவிலக்கான சிறந்த நிலைமைகளில் அமைந்தோராய் எவ்வகையிலும் கொள்ள முடியாத தொழிலாளர்களால் இவை ஆரம்பித்து வைக்கப்பட்டவை; **சர்வசாதாரண** நிலைமைகளில், அதாவது **அளவு கடந்த கடின** நிலைமைகளில் வாழும் பல்வேறு தேர்ச்சித் துறைகளையும் சேர்ந்த தொழிலாளர்களாலும் எந்தத் தேர்ச்சியுமில்லாத சாதாரணத் தொழிலாளர்களாலும் ஆரம்பித்து வைக்கப்பட்டவை. உழைப்பின் உற்பத்தித் திறன் சரிவதன் பிரதான காரணத்தை, ருஷ்யாவில் மட்டுமின்றி உலகெங்குமே காணக்கூடிய இந்தப் பிரதான காரணத்தை நாம் எல்லோரும் நன்கு அறிவோம். ஏகாதிபத்தியப் போரால் விளைந்த அழிவும் வறுமையும் கசப்பும் தளர்வும்தான் காரணம், நோயும் பட்டினியும்தான் காரணம். இறுதியாகச் சொன்னதே

தலையாய முக்கியத்துவம் வாய்ந்தது. பட்டினி—இதுவே தான் காரணம். பட்டினியை ஒழிக்க விவசாயத்திலும், போக்குவரத்திலும், தொழில் துறையிலும் உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்தியாக வேண்டும். இவ்வாறு, நாம் ஒரு நச்சுச் சுழலை அடைகிறோம்: உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்த நம்மை நாம் பட்டினியிலிருந்து காப்பாற்றிக் கொண்டாக வேண்டும், பட்டினியிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள உழைப்பின் உற்பத்தித் திறனை நாம் உயர்த்தியாக வேண்டும்.

நச்சுச் சுழலை உடைப்பதே இத்தகைய முரண்பாடுகளை நடைமுறையில் தீர்ப்பதற்குரிய வழி என்பதை நாம் அறிவோம். மக்களுடைய மனோபாவத்தில் ஒரு தீவிர மாற்றத்தை உண்டாக்குவதே, இத்தகைய தீவிர மாற்றத்தின் பகைப்புலனில் அடிக்கடி தீர்மானகரமான பங்காற்றிடும் தனிப்பட்ட கோஷ்டிகளின் வீரமிக்க முன்முயற்சியே இதற்குரிய வழி என்பதை அறிவோம். மாஸ்கோவின் தேர்ச்சியற்ற தொழிலாளர்களும் ரயில்வேயில் வேலை செய்வோரும் (இவர்களில் பெரும்பான்மையோரையே மனதில் கொண்டுள்ளோம், மிகவும் சொற்பமான லாப வேட்டைக்காரர்களையும் அதிகாரிகளையும் பிற வெள்ளைப் படைத் தரப்பினரையும் அல்லவென்பதைக் கூற வேண்டியதில்லை) படுமோசமான மிகக் கடின நிலைமைகளில் வாழும் உழைப்பாளி மக்களாவர். எந்நேரமும் போதிய உணவில்லாதவர்கள்; புதிய அறுவடைக்கு முன்பான இந்நேரத்தில், பொதுவாகவே உணவு நிலைமை மோசமாயுள்ள இப்பொழுது, மெய்யாகவே பட்டினி கிடப்பவர்கள். ஆயினும் பட்டினி கிடக்கும் இந்தத் தொழிலாளர்கள், முதலாளித்துவ வர்க்கத்தாரும் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் நடத்தும் கேடுகெட்ட எதிர்ப்புரட்சிக் கிளர்ச்சியால் சூழப்பெற்றுள்ள இவர்கள் "கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகளுக்கு" ஏற்பாடு செய்கின்றனர்; சம்பளம் இல்லாமலே வேலை நேரத்துக்குப் பிற்பாடு வேலை செய்கின்றனர்; போதிய உணவின்றி, ஒய்ந்து போய் வேதனைக்குள்ளாகி, பலமிழந்த நிலையில் இருப்பினும், உழைப்பின்

உற்பத்தித் திறனில் மிகப் பெரிய அதிகரிப்பை உண்டாக்கி வருகிறார்கள். அருந்திறல் வீரமல்லவா இது? உலக வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மாற்றத்தின் தொடக்கமல்லவா?

புதிய சமுதாய அமைப்பு வெற்றி பெற, இறுதியாய்ப் பார்க்குமிடத்து, உழைப்பின் உற்பத்தித் திறன்தான் மிக முக்கியமானது, தலைமையானது. உழைப்பின் உற்பத்தித் திறனில் பண்ணையடிமை முறை அறியாத உயர் நிலையை முதலாளித்துவம் உண்டாக்கிற்று. உழைப்பின் உற்பத்தித் திறனில் மேலும் மிக உயர்ந்த ஒரு புதிய நிலையை உண்டாக்குவதன் மூலம் சோஷலிசமானது முதலாளித்துவத்தை அடியோடு தோற்கடிக்க முடியும், தோற்கடிக்கவும் போகிறது. இது மிகவும் கடினமான பணி, இதற்கு நீண்ட காலம் பிடிக்கும். ஆனால் இது துவக்கப்பட்டு விட்டது, இதுவே பிரதானமாகும். பட்டினி கிடக்கும் மாஸ்கோவில், பட்டினி கிடக்கும் தொழிலாளர்களால், சோதனை வாய்ந்த நான்கு ஆண்டுக் கால ஏகாதிபத்திய யுத்தத்தையும் பிறகு மேலும் பெருஞ் சோதனையாயிருந்த ஒன்றரை ஆண்டுக்கால உள்நாட்டுப் போரையும் கடந்து வந்த இத் தொழிலாளர்களால் 1919 கோடையில் இந்த மாபெரும் பணியினைத் துவக்க முடிந்ததெனில், பிற்பாடு நாம் உள்நாட்டுப் போரில் வாகை சூடி சமாதானம் வென்று கொள்ளும் போது எப்படிப்பட்ட வளர்ச்சி ஏற்படும்?

முன்னேறிய தொழில்நுட்ப முறைகளைக் கையாளும் வர்க்க உணர்வு படைத்த, ஒன்றுபட்ட தொழிலாளர்களின் மனமுவந்த உழைப்பின் உயர்வான—முதலாளித்துவத்தில் நிலவுவதுடன் ஒப்பிடுகையில்—உற்பத்தித் திறனே கம்யூனிசம். கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள் கம்யூனிசத்தின் மெய்யான தொடக்கமாய் அமைந்து அளவு கடந்த மதிப்புடையனவாகின்றன. இது அரிதினும் அரிய ஒன்று, ஏனெனில் (நமது கட்சி வேலைத்திட்டம்[83] முற்றிலும் சரியானபடி கூறுவது போல) நாம் ''முதலாளித்துவத்திலிருந்து கம்யூனிசத்துக்கு மாறிச் செல்வதற்குரிய முதல் நடவடிக்கைகள் எடுக்கப்படும்'' கட்டத்தில்தான் இருக்கிறோம்.

சர்வசாதாரணமான தொழிலாளர்கள் கடின உழைப்பைக் கண்டு அஞ்சாமல் உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்துவதில், ஒவ்வொரு பூடு தானியத்தையும் நிலக்கரியையும் இரும்பையும் பிற பொருள்களையும்—நேரடியாகத் தொழிலாளர்கள் கைக்கோ அவர்களது ''நெருங்கிய'' உற்றார் உறவினர் கைக்கோ அல்லாமல் ''தொலைவான'' உற்றார் உறவினர் கைக்கு, அதாவது சமுதாயம் அனைத்தின், முதலில் தனியொரு சோஷலிச அரசிலும், பிறகு சோவியத் குடியரசுகளது ஐக்கியத்திலும் ஒன்றுபட்ட கோடானு கோடியான மக்கள் அனைவரின் கைக்கு உரியனவாகிய இவற்றை—சேதமின்றிக் காப்பதில் ஆர்வமிக்க அக்கறை காட்டுகையில் கம்யூனிசம் தொடங்குகிறது.

சுதந்திரத்தையும் மனித உரிமைகளையும் பற்றிய ஆடம்பரமான, பகட்டு ஆரவாரமான முதலாளித்துவ-ஜனநாயக உரிமை சாசனத்தைக் கார்ல் மார்க்ஸ் மூலதனத்தில் எள்ளி நகையாடுகிறார். பொதுப்பட சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்று பேசப்படும் சொல்வீச்சுக்கள் யாவற்றையும் அவர் எள்ளி நகையாடுகிறார். அவக்கேடு வாய்ந்த பெர்ன் அகிலத்தின், அவக்கேடு வாய்ந்த இன்றைய தலைவர்களும் அடங்கலாய், எல்லா நாடுகளின் குட்டிமுதலாளி வர்க்கத்தாரையும் போலிப்பண்பாளர்களையும் இந்தச் சொல்வீச்சுக்கள் மதி மயங்கச் செய்து விடுகின்றன. இந்த ஆடம்பரமான உரிமைப் பிரகடனங்களுக்கு நேர் மாறாய்ப் பாட்டாளி வர்க்கம் பிரச்சினையை எடுத்துரைக்கும் பகட்டற்ற, நிதானமான, நடைமுறைச் செயல் சார்ந்த, எளிய முறையினை மார்க்ஸ் சுட்டிக் காட்டுகிறார்—வேலை நேரத்தைக் குறைப்பதற்காகச் சட்டம் இயற்றுதல் இத்தகைய செயல் முறைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். மார்க்ஸ் எடுத்துரைப்பது எவ்வளவு பொருத்தமானது, பொருட் செறிவு கொண்டது என்பது பாட்டாளி வர்க்கப் புரட்சியின் உள்ளடக்கம் கண்கூடாய்த் தெரியத் தெரிய மேலும் மேலும் தெளிவாகவும் வெளிப்படையாகவும் விளங்குகிறது. மெய்யான கம்யூனிசத்தின் ''சூத்திரங்கள்'' காவுத்ஸ்கிகளும் மென்ஷிவிக்கு

களும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் பெர்ன் அகிலத்தைச் சேர்ந்த அவர்களது அருமைச் ''சோதரர்களும்'' கையாளும் ஆடம்பரமான சிக்கல் வாய்ந்த புனிதச் சொல்லடுக்குகளிலிருந்து வேறுபடுகிறவை, எப்படியெனில் யாவற்றையும் அவை உழைப்பு நிலைமைகளாய்ச் சுருக்கிக் காட்டுகின்றன. ''உழைப்பு ஜனநாயகம்'', ''சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்'', ''மக்களாலான அரசாங்கம்'' இத்தியாதி வாய்ப் பேச்சுக்கள் எல்லாம் வேண்டாம். வர்க்க உணர்வு படைத்த இன்றைய தொழிலாளர்களும் விவசாயிகளும் முதலாளித்துவ அறிவாளிகளது இந்த ஆடம்பரச் சொல்லடுக்குகளின் அர்த்தத்தைக் கண்டு கொண்டு விடுகிறார்கள். ''தளுக்குப் பேர்வழியின்'' குறை சொல்ல முடியாத ''நேர்த்தியான'' பாவனையையும் அப்பழுக்கில்லாத தோற்றத்தையும் கண்ட மாத்திரத்திலே, சாதாரண பகுத்தறிவும் அனுபவமும் உடையவர் ஒருவர் பிழையற்றவாறு ''மோசடிக்காரனாய்த்தான் இருப்பான்'' என்று எடுத்த எடுப்பிலே எவ்வளவு சுலபமாய்ச் சொல்லி விடுகிறாரோ அதே போலச் சுலபமாய் இவர்கள் இதிலுள்ள சூதைக் கண்டு கொண்டுவிடுகிறார்கள்.

ஆடம்பரச் சொல்லடுக்குகள் குறைய வேண்டும், சர்வசாதாரணமான அன்றாட வேலையும் ஒவ்வொரு பூடு தானியத்திலும் ஒவ்வொரு பூடு நிலக்கரியிலும் காட்டப் படும் அக்கறையும் ஓங்க வேண்டும்! பட்டினி கிடக்கும் தொழிலாளர்களுக்கும் கந்தல் உடுத்தி வெறுங் காலுடன் நிற்கும் விவசாயிகளுக்கும் தேவைப்படும் இந்தப் பூடு தானியத்தையும் பூடு நிலக்கரியையும் அளித்திடுவதில்—பேரம் பேசி அல்ல, முதலாளித்துவ வழியில் அல்ல, மாஸ்கோ-கஸான் ரயில் பாதையைச் சேர்ந்த தேர்ச்சியில்லா வேலையாட்களையும் ஊழியர்களையும் போன்ற சாதாரண உழைப்பாளர்களின் உணர்வுபூர்வமான மனமுவந்த, அளவிலா வீரம் வாய்ந்த உழைப்பின் மூலம் அளித்திடுவதில்— அக்கறை ஓங்க வேண்டும்.

புரட்சிப் பிரச்சினைகள் குறித்து முதலாளித்துவ அறிவாளிகள் அனுசரிக்கும் வாய்ச்சவடால் போக்கின் மீத

மிச்சங்கள் எங்கும், நம்முடைய அணிகளிலேகூட காணப் படுகின்றன என்பதை நாம் எல்லோரும் ஒத்துக்கொண்டே ஆக வேண்டும். உதாரணமாய் நமது பத்திரிகைகள் அழுகிப் போன முதலாளித்துவ - ஜனநாயகப் பழங் காலத்தின் இந்த அழுகிப்போன மீதமிச்சங்களை எதிர்த்துப் போராட அதிகமாய் எதுவும் செய்யவில்லை. மெய்யான கம்யூனிசத் தின் ஆடம்பரமற்ற எளிய, சர்வசாதாரணமான, ஆனால் உயிர் சக்தி மிக்க குருத்துக்களை வளர்த்திட அவை அதிக மாய் எதுவும் செய்யவில்லை.

பெண்களின் நிலையை எடுத்துக் கொள்வோம். ஆட்சி யதிகாரத்துக்கு வந்த முதலாவது ஆண்டிலேயே இந்தத் துறையில் நாம் செய்ததில் நூற்றில் ஒரு பங்கைக்கூட உலகில் எந்த ஜனநாயகக் கட்சியும், மிகவும் முன்னேறிய முதலாளித்துவக் குடியரசிலுங்கூட பல பத்தாண்டுகளிலும் செய்ததில்லை. பெண்களை அசமத்துவ நிலையில் வைக்கும் இழிவான சட்டங்களை, திருமண ரத்துக்கு விலங்குகளிட்டும் அருவருக்கத்தக்க வினைமுறைகளால் அதைச் சுற்றிவளைத் தும், திருமணத்துக்குப் புறம்பாய்ப் பிறந்த குழந்தை களுக்கு அங்கீகாரம் அளிக்க மறுத்தும், அவற்றின் தந்தை யரைத் தேடிப் பிடிக்கும்படி விதித்தும், இன்ன பலவாறாக வும் இழிமை செய்யும் சட்டங்களை மெய்யாகவே நாம் தகர்த்துத் தரை மட்டமாக்கினோம். இச்சட்டங்களின் எண்ணற்ற மீதமிச்சங்கள் முதலாளித்துவ வர்க்கத்துக் கும் முதலாளித்துவத்துக்கும் வெட்கக் கேடாய் எல்லா நாகரிக நாடுகளிலும் இருக்கக் காணலாம். இத்துறையில் நாம் செய்திருப்பவை குறித்துப் பெருமைகொள்ள நமக்கு ஆயிரம் மடங்கு உரிமை உண்டு. பழைய முதலாளித்துவச் சட்டங்கள், ஏற்பாடுகளின் குப்பை கூளங்களை எவ்வளவுக்கு எவ்வளவு சுத்தமாய்க் கூட்டிப் பெருக்கி அறவே அகற்றி னோமோ, கட்டியமைப்பதற்காகத் தரையைச் சுத்தம் செய்துள்ளோமே தவிர இன்னும் கட்டியமைத்தாகவில்லை என்பது நமக்கு அவ்வளவுக்கு அவ்வளவு தெளிவாய்த் தெரிகிறது.

பெண் விடுதலைச் சட்டங்கள் யாவும் இருந்த போதிலும் தொடர்ந்து அவள் இல்லத்து அடிமையாகவே வாழ்கிறாள். ஏனெனில், அற்பத்தனமான வீட்டு வேலைகள் அவளை நசுக்கி நெரித்து மழுங்க வைத்து இழிவுறச் செய்கின்றன; அடுப்படியிலும் குழந்தைத் தொட்டிலுடனும் கட்டுண்டுவிடச் செய்கின்றன. உற்பத்தித் திறனில் படுகேவலமான கீழ்நிலைக்கு உரிய அற்ப வேலைகளில், உயிரை வதைக்கும், சிந்தனையை மழுங்கச் செய்யும், நசுக்கி ஒடுக்கும் ஓயாத நச்சரிப்பு வேலைகளில் அவள் தன் உழைப்பைப் பாழாக்குகிறாள். இந்த அற்பத்தனமான வீட்டுவேலை நச்சரிப்பை எதிர்த்து எங்கே, எப்பொழுது முழு முனைப்பான போராட்டம் (அரசு ஆட்சியதிகாரம் செலுத்தும் பாட்டாளி வர்க்கத்தின் தலைமையில்) தொடங்குகிறதோ, அல்லது இன்னும் சரிவரக் கூறுவோமாயின் பெரிய அளவு சோஷலிசப் பொருளாதாரமாய் அதன் முழு அளவிலான மாற்றம் தொடங்குகிறதோ, அங்கேதான், அப்பொழுதுதான் மெய்யான பெண் விடுதலை, மெய்யான கம்யூனிசம் தொடங்கும்.

மறுக்க முடியாத ஒன்றாய் ஒவ்வொரு கம்யூனிஸ்டும் தத்துவார்த்த அளவில் கருதும் இந்தப் பிரச்சினையில் நாம் நடைமுறையில் போதிய கவனம் செலுத்துகிறோமா? இல்லவே இல்லை. கம்யூனிசத்தின் குருத்துக்கள் இத்துறையில் ஏற்கெனவே இருப்பவற்றை நாம் வேண்டிய அளவு பேணிக் காக்கிறோமா? இல்லை என்றே திரும்பவும் பதிலளிக்க வேண்டியிருக்கிறது. பொது உண்டி நிலையங்கள், பிள்ளைப் பராமரிப்பகங்கள், குழந்தைப் பள்ளிகள் — இவைதாம் இந்தக் குருத்துக்களுக்கான உதாரணங்கள். ஆடம்பரமோ படாடோபமோ மினுக்கோ எதுவும் இல்லாத எளிய, அன்றாட சாதனங்கள் இவை — பெண்களை மெய்யாகவே விடுவிக்க வல்லவை, சமூகப் பொருளுற்பத்தியிலும் பொது வாழ்விலும் பெண்களின் பாத்திரத்தைப் பொருத்தவரை ஆடவர்களுக்கு அவர்கள் சரிசமத்துவமாய் இல்லாத நிலையை மெய்யாகவே மட்டுப்படுத்தவும் ஒழிக்கவும் வல்லவை. இந்தச் சாதனங்கள் புதியவை அல்ல, (சோஷலிசத்

துக்கான எல்லா முன்தேவைகளையும் போல) இவையும் பெருமளவு முதலாளித்துவத்தால் உண்டாக்கப்பட்டவையே. ஆனால் முதலாளித்துவத்தில் இவை முதலாவதாக, அரிதாகவே இருந்தன; இரண்டாவதாக—இது குறிப்பான முக்கியத்துவம் வாய்ந்தது—லாபமடிக்கும் நிலையங்களாய், ஊக வாணிபம், லாப வேட்டை, ஏமாற்று, மோசடி ஆகியவற்றின் படுமோசமான எல்லா இயல்புகளும் மிகுந்தவையாகவும், ''முதலாளித்துவக் கொடையின் கழைக் கூத்துகளாகி'' சிறந்த தொழிலாளர்களது நியாயமான வெறுப்புக்கும் இகழ்ச்சிக்கும் உரியனவாகவும் இருந்தன.

நமது நாட்டில் இந்த நிலையங்களின் எண்ணிக்கை வெகுவாய் அதிகரித்திருப்பதிலும், இந்நிலையங்களின் தன்மை மாற்றமுறத் தொடங்கியிருப்பதிலும் சந்தேகமில்லை. தொழிலாளி, விவசாயிப் பெண்களிடம் நாம் உணர்வதற்கும் கூடுதலான அளவில் நிறுவன ஒழுங்கமைப்புத் திறன் இருப்பதிலும், ஏராளமான தொழிலாளர்களது பங்குடனும் இன்னும் ஏராளமான நுகர்வாளர்களது பங்குடனும் நடைமுறைப் பணிக்கு ஏற்பாடு செய்யக்கூடியவர்கள் நாம் அறிந்ததைக் காட்டிலும் மிக அதிகம் பேர் இருப்பதிலும் சந்தேகமில்லை. பெருமையடித்துக் கொள்ளும் நமது ''அறிவுத் துறையினரையோ'' அரை வேக்காட்டுக் ''கம்யூனிஸ்டுகளையோ'' ''பீடித்துக் கொண்டுவிடும்'' அபரிமிதமான வாய்ப் பேச்சும், அமளியும், சச்சரவும், திட்டங்களையும் அமைப்புகளையும் பிறவற்றையும் பற்றிய கூச்சலும் இல்லாமலே, இவர்கள் இப்பணிக்கு ஏற்பாடு செய்யக் கூடியவர்கள். ஆனால் புதியதன் இந்தக் குருத்துக்களை வேண்டிய அளவுக்கு நாம் பேணி வளர்த்திடவில்லை.

முதலாளித்துவ வர்க்கத்தாரைப் பாருங்கள். அவர்களுக்குத் தேவையானதை விளம்பரப்படுத்த எவ்வளவு நன்றாய்த் தெரிந்து வைத்திருக்கிறார்கள்! ''முன்மாதிரி'' நிலையங்களாய் முதலாளிகள் கருதுகிறவற்றை அவர்களுடைய செய்தியேடுகளின் கோடிக் கணக்கான பிரதிகள் எப்படி மெச்சிப் புகழ்கின்றன பாருங்கள்! ''முன்மாதிரி'' முதலாளித்துவ நிலையங்கள் எப்படித் தேசியப் பெருமைக்

குரியனவாய் ஆக்கப்படுகின்றன பாருங்கள்! நமது பத்திரிகைகள் சிறந்த உண்டி நிலையங்களையோ பிள்ளைப் பராமரிப்பகங்களையோ விவரித்துக் கூறி, தினசரி வற்புறுத்தலின் மூலம் அவற்றில் சிலவற்றை முன்மாதிரிகளாய் மாறச் செய்வதற்காக முயற்சி செய்வதில்லை, அல்லது மிக அரிதாகவே செய்கின்றன. நமது பத்திரிகைகள் அவற்றைப் போதிய அளவு விளம்பரப்படுத்துவதில்லை, முன்மாதிரியான கம்யூனிஸ்டுப் பணியால் எப்படி மனித உழைப்பை மிச்சப்படுத்த முடியும், நுகர்வாளர்களுக்கு வசதிகள் செய்து தர முடியும், பண்டங்களைச் சேமிக்க முடியும், இல்லத்து அடிமை வாழ்விலிருந்து பெண்களை விடுவிக்க முடியும், சுகாதார நிலைமைகளை மேம்படச் செய்ய முடியும், இச்சாதனைகளை சமுதாயம் அனைத்துக்கும் உழைப்பாளி மக்கள் எல்லோருக்கும் விரிந்து பரவச் செய்ய முடியும் என்பதை அவை விளக்கமாய் விவரிப்பதில்லை.

முன்மாதிரியான பொருளுற்பத்தி, முன்மாதிரியான கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள், ஒவ்வொரு பூடு தானியத்தையும் கொள்முதல் செய்வதிலும் வினியோகிப்பதிலும் முன்மாதிரியான கவனம், கடமையுணர்ச்சி, முன்மாதிரியான உண்டி நிலையங்கள், இந்தத் தொகுதியில் இந்தத் தொழிலாளர் வீட்டில் காணக்கூடிய முன்மாதிரியான சுத்தம் முதலானவை யாவற்றிலும் நமது பத்திரிகைகளும் மற்றும் தொழிலாளர்கள், விவசாயிகளின் நிறுவனம் ஒவ்வொன்றும் தற்போது செலுத்துவதைக் காட்டிலும் பத்து மடங்கு கூடுதலான கவனமும் கருத்தும் செலுத்த வேண்டும். இவை எல்லாம் கம்யூனிசத்தின் குருத்துக்கள். இவற்றைப் பேணி வளர்த்திடுவது நமக்குரிய பொதுவான, தலையாய கடமை. நமது உணவு நிலைமையும் பொருளுற்பத்தி நிலைமையும் கடினமாகவே இருப்பினும், போல்ஷிவிக் ஆட்சியின் ஒன்றரை ஆண்டில் நிச்சயமாய் நெடுகிலும் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது: தானியக் கொள்முதல் 3 கோடிப் பூடுகளிலிருந்து (1917 ஆகஸ்டு 1லிருந்து 1918 ஆகஸ்டு 1வரை) 10 கோடிப் பூடுகளாய் (1918 ஆகஸ்டு 1லிருந்து 1919 மே 1வரை) உயர்ந்திருக்கிறது;

காய்கறிகள் பயிரிடுதல் விரிவடைந்திருக்கிறது; பயிரிடப் படாத நிலப் பரப்பு குறைந்திருக்கிறது; எரிபொருள் இடர்ப்பாடுகள் பெருமளவில் இருந்துங்கூட ரயில் போக்கு வரத்து மேம்படத் தொடங்கியிருக்கிறது; மற்றும் பலவற்றையும் குறிப்பிடலாம். இந்தப் பொதுச் சூழலிலும் பாட்டாளி வர்க்க அரசு அதிகாரத்தின் ஆதரவிலும் கம்யூனிசத்தின் குருத்துக்கள் காய்ந்து கருகிவிட மாட்டா, அவை வளர்ந்து முழுமையான கம்யூனிசமாய் மலரும்.

* * *

''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகளின்'' முக்கியத்துவத்தில் நாம் மிகப் பெரிய அளவில் கருத்து செலுத்தியாக வேண்டும், அப்பொழுதுதான் நாம் இந்த மாபெரும் தொடக்கத்திலிருந்து எழும் மிக முக்கிய நடைமுறைப் படிப்பினைகள் யாவற்றையும் பெற முடியும்.

முதலாவதும் முதன்மையானதுமான படிப்பினை என்னவென்றால் இந்தத் தொடக்கத்துக்கு எல்லா வழிகளிலும் உதவி புரிய வேண்டும். ''கம்யூன்'' என்னும் சொல் மிகவும் தாராளமாய்க் கையாளப்பட்டு வருகிறது. கம்யூனிஸ்டுகளால் துவக்கப்படும் அல்லது அவர்களுடைய பங்குடன் துவக்கப்படும் எந்த வகையான நிலையமும் உடனே ''கம்யூன்'' என்பதாய்ப் பறைசாற்றப்படுவது சகஜமாகி விட்டது. இது விடாப்பிடியான நீண்ட நெடிய உழைப்பால், கம்யூனிச நிர்மாணத்தில் மெய்யான நடைமுறை சாதனை காண்பதால் பெற வேண்டிய மாண்பு மிக்க பட்டம் என்பது அடிக்கடி மறக்கப்பட்டு விடுகிறது.

எனவேதான் மக்கள் கமிசார் அவையின் அரசாணையை ''நுகர்வாளர் கம்யூன்கள்''[84] என்கிற பெயரைப் பொருத்த மட்டில் ரத்து செய்வதென்ற தீர்மானம் மத்தியச் செயற் குழுவின் உறுப்பினர்களில் பெரும்பான்மையானோரின் மனத்தில் உருவாகி முற்றியதானது என்னுடைய அபிப்பிராயத்தில் முற்றிலும் நியாயமே. பெயர் எளியதாகவே இருக்கட்டும் — புதிய, ஒழுங்கமைப்புப் பணியின்

துவக்கக் கட்டங்களில் காணக்கூடிய தவறுகளுக்கும் குறைபாடுகளுக்குமான பழி ''கம்யூன்கள்'' மீது சுமத்தப் படாமல், (நியாயமாய்ச் செய்யப்பட வேண்டியது போல) மோசமான கம்யூனிஸ்டுகள் மீதே சுமத்தப்படும் அல்லவா? ''கம்யூன்'' என்னும் சொல்லை பொதுப் பிரயோகத்திலிருந்து விலக்கி, நினைத்தவர் எல்லாம் இதை எடுத்தாளாதபடித் தடை செய்வது நல்லது தான். தமது பணியைக் கம்யூனிஸ்டுக்குரிய பாணியில் ஒழுங்கமைத்துக் கொள்ளத் தக்கவை என்பதை நடைமுறையில் மெய்ப்பித்தும் (சுற்றி லுமுள்ள மக்கள் அனைவரின் ஒருமனதான அங்கீகாரத்தின் மூலம் நிரூபித்தும்) காட்டியுள்ள மெய்யான கம்யூன்கள் மட்டுமே இந்தப் பெயரைச் சூட்டிக் கொள்ள அனு மதிக்கப்பட வேண்டும். சமுதாயத்தின் நலன்களுக்காக, உழைப்பாளி மக்கள் அனைவரின் நலன்களுக்காக ஊதிய மின்றி உழைக்கக் கூடியவர் என்பதை முதலில் நிரூபித்துக் காட்டுங்கள், ''புரட்சிகர முறையில் வேலை செய்யக்'' கூடியவர்தான், உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்த வும் முன்மாதிரியான முறையில் வேலையை ஒழுங்கமைக்க வும் கூடியவர்தான் என்பதை நிரூபித்துக் காட்டுங்கள், பிறகு ''கம்யூன்'' என்ற மாண்புமிக்க பெயரைப் பெற முன்வாருங்கள்!

இந்த விவகாரத்தில் ''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள்'' மிகவும் உயர் மதிப்புக்குரிய விதிவிலக்கானவை. எப்படி யெனில் மாஸ்கோ - கஸான் ரயில்பாதையின் தேர்ச்சி யில்லா வேலையாட்களும் ஊழியர்களும் தாம் கம்யூனிஸ்டு கள் போல் வேலை செய்யக் கூடியவர்கள் என்பதைச் செயல்களின் வாயிலாய் முதலில் நிரூபித்துக் காட்டிவிட்டு, பிறகு தமது முன்முயற்சிக்குக் ''கம்யூனிஸ்டு சுபோத்னிக்கு கள்'' என்று பெயர் சூட்டிக் கொண்டனர். இதற்குரிய தகுதி உண்டென்பதைக் கடினமான உழைப்பாலும், நீடித்த செயற்பாட்டில் பெறும் நடைமுறை வெற்றியாலும், முன்மாதிரியான மெய்யான கம்யூனிஸ்டு ஒழுங்கமைப் பாலும் நிரூபித்துக் காட்டாதவர் எவரும் இனி தமது நிலையம் அல்லது அலுவலகம் அல்லது ஏற்பாட்டிற்குக்

கம்யூன் என்று பெயரிட்டுக் கொள்வாராயின் அவர் ஈவிரக்கமின்றி ஏளனம் செய்யப்பட்டு மோசடிக்காரர் அல்லது வாய்ச்சவடால்காரரென நிந்திக்கப்படும்படி நாம் விழிப்புடன் இருந்து உறுதி செய்தாக வேண்டும்.

மாபெரும் தொடக்கமான ''கம்யூனிஸ்டு சுபோத்னிக்கு களை'' மற்றொரு காரியத்துக்காகவும், அதாவது தகா தோரை நீக்கிக் கட்சியைத் தூய்மை ஆக்குவதற்காகவும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். புரட்சியை அடுத்து ஆரம்பக் காலத்தில், ''நேர்மையான'' குட்டி முதலாளித் துவ மனப்பாங்கினர் மிகவும் சந்தேகங் கொண்டிருந்த போது, முதலாளித்துவ அறிவாளிகள்—மென்ஷிவிக்கு களும் சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் அடங்கலாய்த் தான்—ஒருவர் பாக்கியில்லாமல் முதலாளித்துவ வர்க்கத் தாரின் அடிவருடிகளாய்ச் செயல்பட்டு சீர்குலைவு வேலைகள் புரிந்தபோது, சாகசக்காரர்களும் ஏனைய தீயவர்களும் ஆளும் கட்சியுடன் ஒட்டிக் கொண்டு விட்டனர். இது சிறிதும் தவிர்க்க முடியாத நிகழ்ச்சியே. இது நடைபெறாத ஒரு புரட்சி என்றுமே இருந்ததில்லை, இருக்கவும் முடி யாது. ஆளும் கட்சியானது வன்மையும் திண்மையும் வாய்ந்த முன்னேறிய வர்க்கத்தை ஆதாரமாய்க் கொண்டு தனது அணிகளிலிருந்து தகாதோரை நீக்கித் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் ஆற்றலுடையதாய் இருக்க வேண்டும்.

இந்தப் பணியை நாம் நெடுநாட்களுக்கு முன்பே தொடங்கினோம். இது முறையாகவும் அயராமலும் தொடர்ந்து நடைபெற வேண்டும். போருக்காகக் கம்யூ னிஸ்டுகள் படை திரட்டப்பட்டதானது இத்துறையில் நமக்கு உதவியாய் இருந்தது: கட்சி அணிகளிலிருந்து கோழைகளும் கயவர்களும் ஓட்டம் பிடித்தனர். இவர்கள் ஒழிந்தது நல்லது தான்! கட்சி உறுப்பினர் தொகை இவ்வாறு குறைவதானது கட்சியின் வலிமையிலும் செல் வாக்கிலும் பிரம்மாண்ட அதிகரிப்பைக் குறிக்கிறது. தகா தோரைக் கழித்தொதுக்கும் வேலையை நாம் தொடர்ந்து செய்ய வேண்டும். புதிய தொடக்கமான ''கம்யூனிஸ்டு

சுபோத்னிக்குகளை'' இதற்காகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்; ''புரட்சிகர வழியில் வேலை செய்வதில்'' சில காலம், உதாரணமாய் ஆறு மாத காலம், ''சோதிக்கப் பட்ட'' அல்லது ''பரீட்சிக்கப்பட்ட'' பிறகே எவரும் கட்சியினுள் ஏற்கப்பட வேண்டும். 1917 அக்டோபர் 25க்குப் பிற்பாடு சேர்ந்து கொண்டோரும், முற்றிலும் தாம் நம்பத் தக்கவரே, பற்றுறுதி வாய்ந்தோரே, கம்யூனிஸ்டுகளாய் இருக்கத் தகுதியுடையோரே என்று விசேஷ வேலை அல்லது சேவையின் மூலம் நிரூபித்துக் காட்டாதோருமான கட்சி உறுப்பினர்கள் எல்லோரும் இது போன்ற சோதனைக்கு உள்ளாக வேண்டுமென்று கோர வேண்டும்.

மெய்யான கம்யூனிஸ்டு வழியில் வேலை செய்வது குறித்து கட்சி இடையறுது மேலும் மேலும் கூடுதலாய்க் கண்டிப்பான கோரிக்கைகளை வைப்பதன் மூலம் தகாதோரைக் கழித்து விடுமாயின் அரசு இயந்திரம் மேம்பாடுற்றுச் செம்மையாகும்; விவசாயிகள் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் பக்கத்துக்கு முடிவாய் மாறிவிடும் காலம் மிகவும் நெருங்கி வந்துவிடும்.

''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள்'' பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தில் அரசு இயந்திரத்தின் வர்க்க இயல்பை எடுப்பாய்த் தெரியச் செய்வதை இங்கு குறிப்பிடலாம். ''புரட்சிகர வழியில் செயலாற்றுவது'' குறித்து கட்சியின் மத்தியக் கமிட்டி ஒரு கடிதம் தயாரித்தது. 1,00,000 லிருந்து 2,00,000 வரையிலான உறுப்பினர்களைக் கொண்ட கட்சியின் மத்திய கமிட்டி ஒரு கருத்தை முன்வைக்கிறது (தகாதோரைப் பூரணமாய்க் கழித்தபின் எஞ்சும் எண்ணிக்கை இதுவாகவே இருக்குமெனக் கொள்கிறேன்; தற்போது உறுப்பினர் தொகை அதிகமாகும்).

தொழிற் சங்கங்களில் ஒன்றுதிரண்டுள்ள தொழிலாளர்கள் இந்தக் கருத்தைப் பற்றிக் கொள்கிருர்கள். ருஷ்யாவிலும் உக்ரேனியாவிலும் இவர்களுடைய எண்ணிக்கை சுமார் நாற்பது லட்சமாகும். இவர்களில் மிகப் பெரும்பான்மையோர் பாட்டாளி வர்க்க அரசு அதிகாரத்தை,

பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை ஆதரிப்பவர்கள். இரண்டு லட்சமும் நாற்பது லட்சமும், ''பற்சக்கரங் களுக்கு'' — இப்படிக் கூறலாமெனில் — இடையிலுள்ள விகிதம் இவ்வாறு இருக்கிறது. பிறகு கோடானு கோடியான விவசாயிகள் உள்ளனர். இவர்கள் மூன்று பிரதான பகுதி களாய்ப் பிரிந்திருக்கிறூர்கள்: எண்ணிக்கையில் மிகுதி யானதும் பாட்டாளி வர்க்கத்துக்கு மிக நெருங்கியதுமான பகுதி, அரைப் பாட்டாளி வர்க்கத்தினர் அல்லது ஏழை விவசாயிகளின் பகுதி; பிறகு நடுத்தர விவசாயிகளின் பகுதி; முடிவில் எண்ணிக்கையில் மிகச் சொற்பமான குலாக்குகள் அல்லது கிராமப்புற முதலாளித்துவ வர்க்கத் தினரின் பகுதி.

தானிய வியாபாரம் புரிந்து பஞ்சத்திலிருந்து லாபம் பெறுவது சாத்தியமாயிருக்கும் வரை விவசாயி பாதி உழைப்பாளியாகவும் பாதி லாப வேட்டைக்காரனுகவும் தான் இருப்பான் (பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தில் சில காலத்துக்கு இது தவிர்க்க முடியாததே). லாப வேட் டைக்காரன் என்ற முறையில் விவசாயி நமக்குப் பகை மையாய், பாட்டாளி வர்க்க அரசுக்குப் பகைமையாய் இருக்கிறுன்; முதலாளித்துவ வர்க்கத்தாருடனும் அவர் களது விசுவாசமான அடிவருடிகளுடனும் — தானியத்தில் வர்த்தகச் சுதந்திரம் வேண்டுமெனக் கோரும் மென்ஷிவிக் ஷேரையும் சோஷலிஸ்டு - புரட்சியாளர் பி. செர்னென் கோவையும் உள்ளடக்கி — உடன்பாடு கொள்ள விரும்பு கிறுன். ஆனுல் உழைப்பாளி என்ற முறையில் விவசாயி பாட்டாளி வர்க்க அரசின் நண்பன், நிலப்பிரபுவுக்கும் முதலாளிக்கும் எதிரான போராட்டத்தில் தொழிலாளி யின் மிகவும் விசுவாசமான கூட்டாளி. உழைப்பாளர்கள் என்ற முறையில் பெருந் திரளான விவசாயிகள், கோடானு கோடியான விவசாயிகள் இந்த அரசு ''இயந்திரத்தை'' — பாட்டாளி வர்க்க முன்னணிப் படையின் ஒன்று அல்லது இரண்டு லட்சம் கம்யூனிஸ்டுகளால் தலைமை தாங்கப்பட்டதும், நிறுவன ஒழுங்கமைப்பு கொண்ட பத்துலட்சக் கணக்கான பாட்டாளி வர்க்கத்தாராலான

தும் ஆகிய இந்த அரசு ''இயந்திரத்தை'' — ஆதரிக்கின்றனர்.

இதைக் காட்டிலும் ஜனநாயகத் தன்மையதான—இச் சொல்லின் மெய்ப் பொருளில்—ஓர் அரசு, உழைப்போரும் சுரண்டப்படுவோருமான மக்கள் திரளுடன் இதைக் காட்டிலும் நெருக்கமாய் இணைந்த ஓர் அரசு இதற்குமுன் எப்போதும் இருந்ததில்லை.

''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகளில்'' செய்யப்படுவதைப் போன்ற இந்தப் பாட்டாளி வர்க்கத் தன்மையதான பணி தான் பாட்டாளி வர்க்க அரசுக்கு விவசாயிகளுடைய நன் மதிப்பையும் பாசத்தையும் முழு அளவில் பெற்றுத் தரப்போகிறது. இத்தகைய பணியேதான், இது மட்டுமேதான், நமது கட்சியே சரி, கம்யூனிசம்தான் சரி என்கிற உறுதியான முழு நம்பிக்கையை விவசாயிகளுக்கு உண்டாக்கி அவர்களை நமது பற்றுறுதி மிக்க கூட்டாளிகளாக்கப் போகிறது; இவ்வழியில் உணவுத் தட்டுப்பாடு அறவே ஒழிவதற்கும், தானிய உற்பத்தியிலும் வினியோகத்திலும் முதலாளித்துவத்தின் மீது கம்யூனிசம் முழு வெற்றி பெறுவதற்கும், கம்யூனிசம் தங்குதடையின்றி உறுதியடைவதற்கும் வழி செய்யப் போகிறது.

*1919, ஜூன் 28*

*1919 ஜூலை மாதத்தில்*
*அரசாங்க அச்சகத்தால்*
*தனிப் பிரசுரமாக*
*வெளியிடப்பட்டது*

நூல் திரட்டு,
*தொகுதி 39,*
*பக்கங்கள் 1-29*

*கையொப்பம்:* நி. லெனின்

## பாட்டாளி வர்க்க சர்வாதிகார சகாப்தத்தில் பொருளியலும் அரசியலும்

சோவியத் ஆட்சியின் இரண்டாம் ஆண்டுவிழாத் தறுவாயில், மேலே கண்ட தலைப்பில் சுட்டிக் காட்டப்பட்டுள்ள பொருள் பற்றி ஒரு சிறு பிரசுரம் எழுத உத்தேசித்திருந்தேன். ஆனால் அன்றாட வேலைகளின் நெருக்குதல் காரணமாக சில பகுதிகளுக்கான பூர்வாங்கத் தயாரிப்புகளுக்கு அப்பால் இதுவரைச் செல்லமுடியவில்லை. எனவே இந்தப் பொருளின் ஆகமுக்கியமான கருத்துக்கள் என்று நான் கருதுவதன் சுருக்கமான தொகுப்பான விளக்கத்தை இங்கு அளிப்பதென்று முடிவு செய்துள்ளேன். தொகுத்தளிக்கும் ஒரு விளக்கம் பல பிரதிகூலங்களையும் குறைபாடுகளையும் கொண்டதாக இருக்கும் என்பது இயல்பே. இருந்தபோதிலும் ஒரு சிறிய சஞ்சிகைக் கட்டுரை, கருத்தில் உள்ள எளிய நோக்கம் நிறைவேற உதவலாம்; அந்த நோக்கம், பல்வேறு நாடுகளின் கம்யூனிஸ்டுகள் இந்தப் பிரச்சினையையும் அதன் அடிப்படையையும் விவாதிக்கும்படி செய்வதேயாகும்.

### 1

முதலாளித்துவத்திற்கும் கம்யூனிசத்திற்கும் இடையே திட்டவட்டமான மாறுதல் காலகட்டம் இருக்கிறது, அது சமூகப் பொருளாதாரத்தின் இந்த இருவடிவங்களின் அம்சங்களையும் தன்மைகளையும் இணைக்க வேண்டும் என்பதற்குத் தத்துவார்த்த ரீதியில் எவ்வித ஐயப்பாடும்

கிடையாது. இந்த மாறுதல் காலகட்டம், மடிந்துவரும் முதலாளித்துவத்திற்கும் இளம் பருவத்திலுள்ள கம்யூனிசத்திற்கும் இடையிலான போராட்டக் காலகட்டமாகும்—அல்லது வேறு சொற்களில் கூறினுல் தோற்கடிக்கப்பட்ட ஆனுல் இன்னும் அழிக்கப்படாத முதலாளித்துவத்துக்கும் பிறந்துள்ள ஆனுல் இன்னும் மிகவும் வலுக்குறைந்த கம்யூனிசத்திற்கும் இடையிலான போராட்டக் காலகட்டம் எனலாம்.

இந்த மாறுதல் காலகட்ட அம்சங்களால் வேறுபடுத்திக் காட்டப்பெறும் முழுமையான வரலாற்று சகாப்தத்தின் அவசியம், மார்க்சியவாதிகளுக்கு மட்டுமன்றி, வளர்ச்சியின் தத்துவத்தை எந்தளவுக்காவது அறிந்துள்ள எந்த ஒரு கல்வி கற்ற நபருக்கும் கண்கூடாகத் தெரிய வேண்டும். இருப்பினும், இன்றைய குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளிடமிருந்து (அவர்களது போலியான சோஷலிச முத்திரை இருப்பினும் அத்தகையோராகக் காட்சி தரும் இரண்டாம் அகிலத்தின் எல்லாத் தலைவர்களும்—மாக்டொனுல்ட், ஜான் லொங்கே, காவுத்ஸ்கி, ஃபிரீட்ரிஹ் ஆட்லெர் உள்ளிட்டு) சோஷலிசத்தை நோக்கிய மாறுதல் கட்டம் குறித்து நாம் கேள்விப்படும் பேச்சுகள் யாவும் இந்தக் கண்கூடான உண்மையை முற்றிலும் புறக்கணிப்பதாகவே காணப்படுகின்றன. குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளுக்கு வர்க்கப் போராட்டத்தின் மேல் வெறுப்பு, அதைத் தவிர்ப்பது பற்றிக் கனவு காணுதல், வேற்றுமைகளை மழுப்புதல், சமரசப்படுத்தல், கூரிய முனைகளை அகற்றுதல் ஆகியவை அவர்களது இயல்பாக இருக்கிறது. எனவே அத்தகைய ஜனநாயகவாதிகள், ஒருக்கால் முதலாளித்துவத்திலிருந்து கம்யூனிசத்திற்கு மாறிச் செல்லும் முழு வரலாற்றுக் காலகட்டத்தின் அவசியத்தை அங்கீகரிக்காமல் தவிர்ப்பார்கள், அல்லது இந்த சக்திகளில் ஒன்று நடத்தும் போராட்டத்திற்குத் தலைமை தாங்குவதற்கு மாருக, மோதும் இந்த இரு சக்திகளையும் சமரசப்படுத்தச் சூழ்ச்சிகளைப் புனைவது தமது கடமை என்று கருதுவார்கள்.

## 2

நமது நாட்டின் மிகப் பெரிய பின்தங்கிய நிலைமை மற்றும் குட்டிமுதலாளித்துவத் தன்மை காரணமாக ருஷ்யாவில் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் முன்னேற்ற மடைந்த நாடுகளிலுள்ள சர்வாதிகாரத்திலிருந்து சில தனிப்பட்ட இயல்புகளில் நிச்சயமாயும் தவிர்க்கமுடியாத வகையில் வேறுபடும். ஆனால் அடிப்படையான சக்திகளும் சமூகப் பொருளாதாரத்தின் அடிப்படை வடிவங்களும் வேறு எந்த ஒரு முதலாளித்துவ நாட்டிலும் இருப்பது போலவே ருஷ்யாவிலும் இருக்கும், எனவே தனிப்பட்ட இயல்புகள் குறைந்த முக்கியத்துவமுடையவற்றுக்கு மட்டுமே பொருந்தும்.

சமூகப் பொருளாதாரத்தின் அடிப்படை வடிவங்கள்: முதலாளித்துவம், சிறு பண்ட உற்பத்தி மற்றும் கம்யூனிசம். அடிப்படை சக்திகள்: முதலாளித்துவ வர்க்கம், குட்டி முதலாளித்துவ வர்க்கம் (குறிப்பாக விவசாயிகள்) மற்றும் பாட்டாளி வர்க்கம்.

பாட்டாளி வர்க்க சர்வாதிகார சகாப்தத்தில் ருஷ்யாவின் பொருளாதார அமைப்பு கம்யூனிஸ்டுக் கோட்பாடுகளின் மீது ஒரு பரந்த அரசின் அளவுக்கு ஒன்றிணைந்துள்ள தனது முதல் படிகளை மேற்கொண்டுள்ள தொழிலாளர் போராட்டத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது— இது சிறு பண்ட உற்பத்தியை எதிர்த்தும் தொடர்ந்து நிலவும் முதலாளித்துவத்தை எதிர்த்தும், சிறுபண்ட உற்பத்தியை அடிப்படையாக்கிய முதலாளித்துவத்தை எதிர்த்தும் நடைபெறும் போராட்டமாகும்.

ருஷ்யாவில் முதலாவதாக உற்பத்தி சாதனங்களின் தனியார் உடமை ஒழிக்கப்பட்டு விட்டது, இரண்டாவதாக, பாட்டாளி வர்க்க ஆட்சி அதிகாரம் தேசிய அளவில் அரசுக்கு உடமையான நிலத்திலும் அரசுக்கு உடமையான நிறுவனங்களிலும் பெருவீத உற்பத்தியை ஒழுங்கமைத்து வருகிறது, பல்வேறு தொழில் துறைகளுக்கும் பல்வேறு நிறுவனங்களுக்கும் உழைப்புச் சக்தியை வினியோகம்

செய்கிறது, உழைக்கும் மக்களிடையில் அரசுக்குச் சொந்தமான நுகர் பொருள்களைப் பெரிய அளவில் வினியோகித்து வருகிறது. இவற்றை எல்லாம் பொருத்த வரை ருஷ்யாவில் தொழிலாளர்கள் கம்யூனிஸ்டு முறையில் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறார்கள்.

நாம் ருஷ்யாவில் கம்யூனிசத்தின் ''முதல் படிகள்'' பற்றிப் பேசுகிறோம் (1919 மார்ச் மாதத்தில் ஏற்கப்பட்ட எமது கட்சியின் வேலைத்திட்டத்திலும் அவ்வாறே குறிப்பிடப்பட்டுள்ளது) காரணம் இவையாவும் எமது நாட்டில் ஒரு பகுதியளவிலேயே செயல்படுத்தப்பட்டுள்ளன அல்லது வேறுவிதமாகக் கூறினால் அவற்றின் சாதனைகள் அவற்றின் ஆரம்ப கட்டங்களில் மட்டுமே உள்ளன. நாம் ஒரே ஒரு புரட்சிகரத்தாக்குதலில் பொதுவாக மிக அவசரமாக வெற்றி சாதனையாகக் கூடிய அனைத்தையும் அவசரமாக வெற்றி சாதனையாக்கினோம்; உதாரணமாக பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் முதல் நாள் 1917 அக்டோபர் 26ல் (நவம்பர் 8) நிலத்திலிருந்த தனியுடைமை ஒழிக்கப்பட்டது — பெரிய நிலவுடைமையாளர்களுக்கு எவ்வித நஷ்ட ஈடும் அளிக்காமல் உடமைகள் பறிமுதல் செய்யப்பட்டன. ஒரு சில மாத அளவுக்குள் கிட்டத்தட்ட எல்லாப் பெரிய முதலாளிகளின் உடைமைகள்—ஆலை, கூட்டுப் பங்கு நிறுவனங்கள், வங்கிகள், ரயில்வே ஆகியவையும் — நஷ்ட ஈடின்றிப் பறிமுதல் செய்யப்பட்டன. தொழில் துறையில் பெருவீத உற்பத்திக்கான அரசாங்க அமைப்பும், ஆலைகள், ரயில்வேக்கள் சம்பந்தமாகத் ''தொழிலாளர் கண்காணிப்பிலிருந்து'' ''தொழிலாளர் நிர்வாகத்திற்கான'' மாற்றமும்—இது பெரும்பாலும் ஏற்கெனவே சாதனையாகிவிட்டது. ஆனால் விவசாயம் சம்பந்தப்பட்ட வரை இது இப்போதுதான் துவங்கியது (''அரசாங்கப் பண்ணைகள்'' அதாவது அரசுக்குச் சொந்தமான நிலத்தில் தொழிலாளரின் அரசாங்கம் பெரிய பண்ணைகளை நிறுவுவது). இதேபோல சிறு பண்ட விவசாயத்திலிருந்து கம்யூனிஸ்டு விவசாயத்திற்கான மாறுதல் கட்டம் என்ற முறையில் சிறிய விவசாயிகளின் பல்வேறு வடிவிலான

கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவதும் இப்போதுதான் தொடங்கியது*. தனியார் வர்த்தகம் அகற்றப்பட்டு அத னிடத்தில் அரசு நிர்வாகத்திலான பண்டங்கள் வினி யோகம் நடத்தப்படுவது குறித்தும் இதையே கூறவேண்டும். அதாவது நகரங்களுக்கு தானியங்களையும் கிராமப் புறங் களுக்குத் தொழிற்துறைப் பண்டங்களையும் அரசு கொள் முதல் செய்து வழங்குவது. இது சம்பந்தமாகக் கிடைத் துள்ள புள்ளிவிவரத் தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

விவசாயிகளின் பண்ணை வேலை தொடர்ந்து சிறு பண்ட உற்பத்தியையே செய்தது. இங்கு முதலாளித்துவத்திற்கு மிகவும் விரிவான மிகவும் உறுதியான ஆழவேரூன்றிய அடிப்படை இருக்கிறது. இந்த அடிப்படையில் முதலாளித் துவம் நீடித்து நிலவுகிறது, கம்யூனிசத்தை எதிர்த்து ஒரு கடுமையான போராட்டத்தில் புதிதாகத் தோன்றுகிறது. இந்தப் போராட்டத்தின் வடிவங்கள்: அரசின் தானியம் (இதர பொருட்கள்) கொள் முதலும் பொதுவாக அரசின் பண்டங்கள் வினியோகத்தையும் எதிர்த்த தனிப்பட்ட வர்த்தகச் சூதாட்டமும் லாபவேட்டையும் ஆகும்.

## 3

இந்த ஸ்தூலமற்ற தத்துவார்த்தப் புத்துரைகளை விளக்கிக் காட்ட நாம் உண்மையான புள்ளிவிபரங்களை மேற்கோள் காட்டுவோம்.

உணவுத்துறை மக்கள் கமிசாரகத்தின் புள்ளிவிபரங் களின்படி ருஷ்யாவில் 1917 ஆகஸ்ட் 1ந் தேதிக்கும், 1918

* சோவியத் ருஷ்யாவிலுள்ள ''அரசாங்கப் பண்ணை கள்'' மற்றும் ''விவசாயக் கம்யூன்கள்'' எண்ணிக்கை நமக்குத் தெரிந்த வரை முறையே 3536 மற்றும் 1961ம் ஆகும். விவசாயக் கழகங்கள் எண்ணிக்கை 3696. எல்லா அரசாங்கப் பண்ணைகள் மற்றும் கம்யூன்கள் பற்றிய சரி யான கணக்குகளை நமது மத்தியப் புள்ளிவிவர வாரியம் தற்போது எடுத்து வருகிறது. இதன் முடிவுகள் 1919 நவம்பரில் வெளி வரத் தொடங்கும்.

ஆகஸ்ட் 1ந் தேதிக்கும் இடையே அரசு கொள்முதல் செய்த தானியம் சுமார் 30,000,000 பூடுகளாகும்; அடுத்த ஆண்டில் இது சுமார் 110,000,000 பூடுகளாக இருக்கும். அடுத்த கொள்முதல் இயக்கத்தின் முதல் மூன்று மாதங்களில் (1919-20) கொள்முதல் மொத்தம் சுமார் 45,000,000 பூடுகளாக இருக்கலாம் — 1918ல் (ஆகஸ்ட்-அக்டோபரில்) இதே காலகட்டத்தில் இது 37,000,000 பூடுகளாக இருந்தது.

இந்தப் புள்ளிவிபரங்கள் முதலாளித்துவத்தை எதிர்த்த கம்யூனிசத்தின் வெற்றி என்ற கருத்துக் கோணத்திலிருந்து நிலைமைகள் மெதுவாக ஆனால் உறுதியாக மேம்பட்டு வருவதைத் தெளிவாகக் காட்டுகின்றன. உலகில் முன்னறியாத, இடர்ப்பாடுகள், உலகின் வலிமை மிக்க நாடுகளின் எல்லா சக்திகளையும் ஒன்றுதிரட்டி ருஷ்யாவின் மற்றும் அயல் நாடுகளின் முதலாளிகள் உருவாக்கியுள்ள உள் நாட்டுப் போரினால் ஏற்பட்ட இடர்ப்பாடுகள் இருந்த போதிலும் இந்த முன்னேற்றம் சாதனையாகியுள்ளது.

எனவே, அனைத்து நாடுகளின் முதலாளிகள் அவர்களது பகிரங்க அல்லது முகமூடிக் கையாட்கள் (இரண்டாம் அகிலத்தின் ''சோஷலிஸ்டுகள்'') ஆகியோர் எத்தனை பொய்களையும் அவதூறுகளையும் பரப்பிய போதிலும் ஓர் உண்மை மறுக்க முடியாதபடி நிலவுகிறது—பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் அடிப்படையான பொருளாதாரப் பிரச்சினையைப் பொறுத்த வரையில் எமது நாட்டில் முதலாளித்துவத்தை எதிர்த்து கம்யூனிசத்தின் வெற்றி உத்தரவாதம் செய்யப்பட்டு விட்டது. உலகம் முழுவதிலும் முதலாளி வர்க்கம் போல்ஷிவிசத்தை எதிர்த்து வெஞ்சினமும் புகையும் பகையும் தோற்றுவித்து,போல்ஷிவிக்குகளை எதிர்த்து ராணுவப்படை யெடுப்புகள் சதித்திட்டங்கள் ஆகியவற்றை ஏற்பாடு செய்து வருகிறது, காரணம் ராணுவ வன்மையினால் நாம் நசுக்கப்படாத வரையில் சமூகப் பொருளாதாரத்தை மறுநிர்மாணம் செய்வதில் நமது வெற்றி தவிர்க்கமுடியாததாகி விடும் என்பதை அது நன்கு முழுமையாக உணர்ந்திருக்கிறது. மேலும்

விளைவுகள் பின்வருமாறு:

| சோவியத் ருஷ்யாவின் 26 குபெர்னியாக்கள் | மக்கள்தொகை (பத்து லட்சம்) | | தானிய உற்பத்தி (விதை, தீவனம் தவிர) (பத்து லட்சம் பூடுகள்*) | தானிய வழங்கல் மிலியன் பூடுகள் | | மக்களுக்கு கிட்டிய மொத்த தானியம் (பத்து லட்சம் பூடுகள்) | நபர் விகித தானியப் பயனீடு (பூடுகள்) |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | உணவுக் கமிசாரகம் | லாப வேட்டைக்காரர்கள் | | |
| உற்பத்தி செய்யும் குபெர்னியாக்கள் | நகரங்கள் | 4.4 | — | 20.9 | 20.6 | 41.5 | 9.5 |
| | கிராமங்கள் | 28.6 | 625.4 | — | — | 481.8 | 16.9 |
| பயனீடு செய்யும் குபெர்னியாக்கள் | நகரங்கள் | 5.9 | — | 20.0 | 20.0 | 40.0 | 6.8 |
| | கிராமங்கள் | 13.8 | 114.0 | 12.1 | 27.8 | 151.4 | 11.0 |
| மொத்தம் (26 குபெர்னியாக்கள்) | | 52.7 | 739.4 | 53.0 | 68.4 | 714.7 | 13.6 |

*பூடு என்பது 16 கிலோகிராமுக்குச் சமமாகும்.—(ப-ர்.)

இந்த வழியில் நம்மை நசுக்க அது புரியும் முயற்சிகள் வெற்றியடைவதில்லை.

நம்பற்கரிய இடர்ப்பாடுகளின் கீழ் நாம் பணியாற்ற வேண்டி இருந்த போதிலும் நமக்குக் கிட்டிய குறைந்த காலத்தில் நாம் ஏற்கெனவே முதலாளித்துவத்தை எந்தளவுக்கு தோற்கடித்திருக்கிறோம் என்பதைப் பின்வரும் சுருக்கமாகத் தொகுத்தளித்துள்ள விபரங்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். மத்திய புள்ளிவிவர வாரியம் பத்திரிகைகளுக்காக சோவியத் ருஷ்யா முழுவதற்கும் அன்றி இருபத்தாறு குபெர்னியாக்களுக்கு (மாவட்டம்) மட்டும் தானிய உற்பத்தி மற்றும் நுகர்வு பற்றிய புள்ளிவிபரங்களைத் தயாரித்துள்ளது.

இவ்வாறாக நகரங்களுக்கு வழங்கப்பட்ட தானியத்தில் தோராயமாகப் பாதி அளவு உணவுக் கமிசாரகத்தாலும் மற்ற பாதி லாபவேட்டைக்காரர்களாலும் வழங்கப்பட்டது. நகரத் தொழிலாளர் பயன்படுத்திய உணவு சம்பந்தமாக 1918ல் நடத்தப்பட்ட ஒரு கவனமான ஆய்வில் இதே சராசரி வெளிப்பட்டுள்ளது. அரசாங்கம் வழங்கும் ரொட்டிக்கு ஒரு தொழிலாளி கொடுக்கும் விலை அதே ரொட்டிக்கு அவன் லாபவேட்டைக்காரருக்குத் தருவது போன்று ஒன்பதில் ஒரு பங்கேயாகும் என்பதை மனதில் வைக்க வேண்டும். லாபவேட்டைக்காரரின் ரொட்டி விலை அரசுவிலையைப் போலப் பத்து மடங்கு அதிகம். இது தொழிலாளர் வரவு செலவு பற்றிய விரிவான ஆய்வில் வெளியாகியுள்ளது.

## 4

மேற்கோள் காட்டப்பட்ட புள்ளிவிவரங்களைக் கவனமாக ஆராய்ந்தால், அவை ருஷ்யாவின் இன்றையப் பொருளாதாரத்தின் அடிப்படை அம்சங்களின் சரியான சித்திரத்தை அளிப்பதைக் காணலாம்.

உழைப்பாளி மக்கள், அவர்களது காலகாலமான ஒடுக்குமுறையாளர்கள் மற்றும் சுரண்டுவோரான நிலப்பிரபுக்

கள் மற்றும் முதலாளிகளிடமிருந்து விடுதலை செய்யப் பட்டுள்ளனர். உண்மையான சுதந்திரம், உண்மையான சமத்துவத்தின் திசையிலான இந்த முன்னேற்றம் அதன் விரிவு பரிமாணம் மற்றும் வேகத்தில் உலகில் ஈடிணையற்ற இந்த முன்னேற்றம், குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதி கள் உள்ளிட்ட முதலாளி வர்க்கத்தின் ஆதரவாளர்களால் புறக்கணிக்கப்படுகிறது. அவர்கள் சுதந்திரம் மற்றும் சமத்துவம் பற்றிப் பேசும் பொழுது நாடாளுமன்ற முத லாளித்துவ ஜனநாயகத்தையே குறிப்பிடுகிறார்கள், இதை அவர்கள் பொதுவாக ''ஜனநாயகம்'' அல்லது ''சுத்த ஜனநாயகம்'' என்று பொய்யாகப் பிரகடனம் செய்கிறார்கள் (காவுத்ஸ்கி).

ஆனால் உழைக்கும் மக்கள் உண்மையான சமத்துவம் உண்மையான சுதந்திரம் பற்றி மட்டுமே அக்கறை கொண் டிருக்கிறார்கள் (நிலப்பிரபுக்கள் மற்றும் முதலாளிகளிட மிருந்து சுதந்திரம்), இதனால்தான் அவர்கள் சோவியத் அரசாங்கத்துக்கு இத்தகைய உறுதியான ஆதரவு தரு கிறார்கள்.

இந்த விவசாய நாட்டில் பாட்டாளி வர்க்க சர்வாதி காரத்தால் முதலில் நன்மையடைந்தது ஒட்டுமொத்தமாக விவசாயிகளே, அவர்களே ஆக அதிக நன்மையடைந்தார் கள், உடனடியாக நன்மையடைந்தார்கள். நிலப்பிரபுக்கள் மற்றும் முதலாளிகளின் கீழ் ருஷ்யாவிலிருந்த விவசாயிகள் பட்டினி கிடந்தார்கள். எமது வரலாற்றின் நீண்ட பல நூற்றாண்டுகள் முழுவதிலும் விவசாயிக்குத் தனக்காகப் பாடுபடுவதற்கான வாய்ப்பு என்றுமே கிடைத்ததில்லை: முதலாளிகளுக்கும் நகரங்களுக்கும் ஏற்றுமதிக்கும் கோடிக் கணக்கான பூடுகள் தானியத்தைக் கொடுத்துவிட்டு அவன் பட்டினி கிடந்தான். பாட்டாளி வர்க்க சர்வாதி காரத்தின் கீழ் விவசாயி முதல் தடவையாக தனக்காக உழைக்கிறான் நகரவாசியை விட நல்ல முறையில் உண வருந்துகிறான். முதல் தடவையாக விவசாயி உண்மையான சுதந்திரத்தை—தனது ரொட்டியைதான் உண்ணும் சுதந் திரத்தை, பட்டினி கிடக்காதிருக்கும் சுதந்திரத்தைக்

கண்டு விட்டான். நில வினியோகத்தில் அதிகப்பட்சமான சமத்துவம் நிலைநாட்டப்பட்டது என்பதை நாம் அறிவோம்; மிகப் பெரும்பாலான இடங்களில் விவசாயிகள் ''உணவளிக்க வேண்டிய வயிறுகளின்'' எண்ணிக்கைக்கு ஏற்ப நிலத்தைப் பங்கு போட்டுக் கொண்டுள்ளனர்.

சோஷலிசம் என்றால் வர்க்கங்கள் ஒழிக்கப்படும் என்று பொருளாகும்.

வர்க்கங்களை ஒழிப்பதற்கு முதலாவதாக நிலப்பிரபுக்கள் மற்றும் முதலாளிகளை வீழ்த்த வேண்டும். எமது கடமையின் இந்தப் பகுதி நிறைவேற்றப்பட்டு விட்டது, ஆனால் இது ஒரு பகுதி மட்டுமே மேலும் இது ஆகக் கடினமான பகுதி அன்று. வர்க்கங்களை ஒழிப்பதற்கு, இரண்டாவதாக, ஆலைத் தொழிலாளிக்கும் விவசாயிக்கும் இடையிலான வித்தியாசத்தை ஒழிக்க வேண்டுவதும், அவர்கள் எல்லோரையும் தொழிலாளர்களாக்க வேண்டுவதும் அவசியம். இதைத் திடுமெனச் செய்து விட முடியாது. இந்தக் கடமை ஒப்புவமையற்ற அளவுக்கு அதிகக் கடினமானது, அவசியமாயும் அதிக காலம் எடுப்பதுமாகும். ஒரு வர்க்கத்தை வீழ்த்துவது மூலம் தீர்வு கண்டுவிடக் கூடிய ஒரு பிரச்சினையல்ல இது. சமூகப் பொருளாதாரம் முழுவதையும் ஒழுங்கமைத்து மறுநிர்மாணம் செய்வது மூலமும், தனிநபரின், பிரிந்த நிலையிலான சிறு பண்ட உற்பத்தி முறையிலிருந்து பெருவீத சமூக உற்பத்திக்கு மாறிச்செல்வது மூலமும் மட்டுமே இதற்குத் தீர்வு காணமுடியும். இந்த மாறுதல் கட்டம் அவசியமாயும் மிகவும் நீடித்ததாக இருக்கும். அவசரமான, துடுக்கான நிர்வாக மற்றும் சட்டமியற்றும் நடவடிக்கைகளால் இது தவக்கமடையலாம், சிக்கலாகலாம். விவசாயி தனது விவசாயத் தொழில் சாதனங்கள் முழுவதையும் பெருமளவுக்கு மேம்படுத்திக் கொள்ளவும் அவற்றை அடிப்படையாகச் சீர்திருத்திக் கொள்ளவும் சாத்தியமாக்கும் வகையில் அத்தகைய உதவிகளை வழங்குவது மூலம் மட்டுமே இதனை விரைவுபடுத்த முடியும்.

இந்தப் பிரச்சினையின் இரண்டாவதும், மிகவும் கடின மானதுமான பகுதிக்குத் தீர்வு காணப் பாட்டாளி வர்க்க மானது, முதலாளித்துவ வர்க்கத்தைத் தோற்கடித்த பிறகு விவசாயிகளின் பாலான தனது கொள்கையினைப் பின்வரும் அடிப்படையான வழிகளில் நெறிதிறம்பாது கட்டாயம் நடைமுறைப்படுத்த வேண்டும். பாட்டாளி வர்க்கமானது உழைக்கும் விவசாயியை உடமை விவசாயி யிடமிருந்தும், விவசாயத் தொழிலாளியை விவசாய சிறு வணிகரிடமிருந்தும், பாடுபடும் விவசாயியை லாபவேட்டை யாடும் விவசாயியிடமிருந்தும் பிரித்துத் தனி வரையறை செய்ய வேண்டும்.

இந்தத் தனிவரையறையில் தான் சோஷலிசத்தின் முழு சாரமும் காணக் கிடக்கிறது.

சொல்லில் சோஷலிஸ்டுகளாகவும் செயலில் குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளாயும் இருக்கும் சோஷ லிஸ்டுகள் (மார்த்தவ்கள், செர்னேவ்கள், காவுத்ஸ்கிகள் மற்றவர்கள்) சோஷலிசத்தின் இந்த சாரத்தைப் புரிந்து கொள்ளவில்லை என்றால் அதில் வியப்பேதுமில்லை.

இங்கு நாம் குறிப்பிடும் தனிவரையறை மிகவும் இடர்ப்பாடான ஒன்று, காரணம் எதார்த்த வாழ்வில் ''விவசாயியின்'' அம்சங்கள் அனைத்தும் அவை எவ்வளவு தான் பல்வேறு வகைப்பட்டதாயும், எவ்வளவுதான் முரண் பாடானதாகவும் இருந்த போதிலும் ஒரு முழுமையில் கலந்திணைந்துள்ளன. இருந்த போதிலும் தனிவரையறை சாத்தியமே; அது சாத்தியம் என்பது மட்டுமல்ல விவ சாயியின் பண்ணை வேலை மற்றும் விவசாயியின் வாழ்க்கை நிலைமைகளிலிருந்து இது தவிர்க்க முடியாது தொடர் வதாகும். உழைக்கும் விவசாயி காலகாலமாக நிலப்பிரபுக் கள், முதலாளிகள், சிறுவணிகர்கள், லாபவேட்டைக்காரர் கள் ஆகியோராலும் ஆக ஜனநாயகமான முதலாளித்துவக் குடியரசு உள்ளிட்ட அவர்களது அரசுகளாலும் ஒடுக்கப் பட்டுள்ளான். இந்தக் காலங்கள் முழுவதிலும் உழைக்கும் விவசாயி இந்த ஒடுக்குமுறையாளர்களையும் சுரண்டு வோரையும் பகைக்கவும் வெறுக்கவும் தன்னைத்தானே பயிற்று

வித்துக் கொண்டிருக்கிறன், வாழ்க்கை நிலைமைகளால் தோற்றுவிக்கப்பட்ட இந்தப் ''பயிற்சி'' முதலாளியை எதிர்த்தும், லாபவேட்டைக்காரன் மற்றும் சிறு வணிகரை எதிர்த்தும் தொழிலாளியுடன் ஒரு கூட்டணியை நாடும்படி அவனைக் கட்டாயப்படுத்துகிறது. எனினும் அதே சமயம் பொருளாதார நிலைமைகள், பண்ட உற்பத்தி நிலைமைகள் விவசாயியை (எப்பொழுதுமல்ல ஆனால் பெருவாரியான சந்தர்ப்பங்களில்) தவிர்க்க முடியாத வகையில் ஒரு சிறு வணிகர் மற்றும் லாபவேட்டைக்காரராக மாற்றிவிடுகிறது.

மேலே மேற்கோள் காட்டப்பட்ட புள்ளிவிபரங்கள் உழைக்கும் விவசாயிக்கும் விவசாய லாபவேட்டையாளருக்கும் இடையே எடுப்பான வித்தியாசம் இருப்பதை வெளிப்படுத்துகிறது. 1918-19 ஆண்டுகளின் போது நகரங்களில் பசியால் வாடிய தொழிலாளர்களுக்கு, நிர்ணயமான அரசாங்க விலைக்கு 40,000,000 பூடுகள் தானியத்தை வழங்கிய, அந்த விவசாயி இந்த தானியத்தை அரசாங்க நிறுவனங்களுக்கு (அவற்றின் குறைபாடுகள் அனைத்தையும் பாராட்டாமல்) வழங்கிய—இந்தக் குறைபாடுகளைத் தொழிலாளர் அரசாங்கம் முழுமையாக உணர்ந்திருந்தது ஆயினும் அவை சோஷலிசத்தை நோக்கி மாறிச் செல்லும் முதல் காலகட்டத்தில் தவிர்க்க முடியாதவை—அந்த விவசாயி ஓர் உழைக்கும் விவசாயி, சோஷலிஸ்டுத் தொழிலாளியின் தோழர், அவருக்குச் சமமானவர், அவரது மிகவும் விசுவாசமுள்ள கூட்டாளி, முதலாளித்துவ அடிமைத்தளையை எதிர்த்த போராட்டத்தில் அவரது உடன்பிறப்பாளர் ஆவார். அப்படியிருக்க, அரசாங்க விலையைப் போலப் பத்து மடங்கு அதிக விலைக்கு இரகசியமாக 40,000,000 பூடுகள் தானியத்தை விற்பனை செய்த அந்த விவசாயி, நகரத் தொழிலாளர்களின் தேவையையும் பசிக் கொடுமையையும் சாதகமாக்கி, அரசாங்கத்தை ஏமாற்றி, எங்கு பார்த்தாலும் ஏமாற்று, மோசடி, திருட்டு ஆகியவற்றை அதிகரித்தும் உருவாக்கியும் வரும்—அந்த விவசாயி ஒரு லாபவேட்டையாளர், முதலாளியின் கூட்டாளி, தொழி

லாளியின் வர்க்க விரோதி, ஒரு சுரண்டலாளர் ஆவார். நாடு முழுவதற்கும் சொந்தமான நிலத்தில் இருந்து ஏதாவது ஒருவகையில் விவசாயியினது மட்டுமன்றி தொழிலாளரின் உழைப்பும் உருவகம் பெற்றுள்ள கருவிகளின் உதவியுடன் சேகரிக்கப்பட்ட உபரி தானியத்தை வைத்திருப்பவர் யாராக இருப்பினும், தானியத்தை உபரியாக வைத் திருந்து லாபக்கொள்ளையடிப்பவர் யாராக இருப்பினும் அவர் பட்டினியால் வாடும் தொழிலாளியைச் சுரண்டு பவராவார்.

நீங்கள் சுதந்திரத்தை, சமத்துவத்தை மற்றும் ஜன நாயகத்தைக் குலைப்பவர்கள், என்று நமது அரசியல் அமைப்புச் சட்டத்தின்[85] கீழ் தொழிலாளிக்கும் விவசாயிக்கு முள்ள அசமத்துவத்தையும், அரசியல் நிர்ணய சபை கலைக்கப்பட்டதையும், உபரி தானியம் பலாத்காரமாகப் பறிமுதல் செய்யப்பட்டதையும் சுட்டிக் காட்டி அவர்கள் எம்மை நோக்கி எல்லாத் திசைகளிலிருந்தும் கூச்சல் போடுகிறுர்கள். பல நூற்றுண்டுகளாக உழைக்கும் விவ சாயி இன்னலுற்று வந்த உண்மையான அசமத்துவம், உண்மையான சுதந்திரமின்மையை அகற்ற இந்தளவுக்குப் பணி செய்துள்ள ஓர் அரசு உலகில் என்றுமே இருந்தது கிடையாது என்று நாம் பதில் கூறுகிறேம். விவசாயி லாப வேட்டைக்காரனுடன் சமத்துவத்தை நாம் என்றுமே அங்கீ கரிக்க மாட்டோம், சுரண்டுவோருக்கும் சுரண்டப்படு வோருக்கும் இடையேயும் உண்டு கொழுத்தவருக்கும் பட் டினி கிடப்போருக்கும் இடையிலேயும் ''சமத்துவத்தை'' அங்கீகரிக்க மாட்டோம், முந்திய பகுதியினர் பிந்திய பகுதியினரைக் கொள்ளையடிப்பதற்கான ''சுதந்திரத்தை யும்'' அங்கீகரிக்க மாட்டோம். இந்த வேற்றுமையை அங்கீகரிக்க மறுக்கும் அந்தப் படித்த நபர்களே, அவர்கள் தம்மைத்தாமே ஜனநாயகவாதிகள் சோஷலிஸ்டுகள், சர் வதேசியவாதிகள், காவுத்ஸ்கிகள், செர்னேவ்கள் அல்லது மார்த்தவ்கள் என்று அழைத்துக் கொண்டாலும், வெண் படையினர்களாகவே கருதுவோம்,

## 5

சோஷலிசம் என்ருல் வர்க்கங்கள் ஒழிக்கப்படும் என்று பொருளாகும். வர்க்கங்களை ஒழிப்பதற்கு பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் தன்னுல் இயன்றதனைத்தையும் செய்துள்ளது. ஆனுல் வர்க்கங்களை ஒரே அடியில் ஒழித்துவிட முடியாது.

பாட்டாளி வர்க்க சர்வாதிகார சகாப்தத்தில் வர்க்கங்கள் இன்னும் இருக்கின்றன, இருக்கப் போகின்றன. வர்க்கங்கள் மறைந்துவிடும் பொழுது சர்வாதிகாரம் தேவையற்றதாகி விடுகிறது. பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் இல்லாமல் வர்க்கங்கள் மறைந்து விடமாட்டா.

வர்க்கங்கள் தொடர்ந்து இருந்திருக்கின்றன ஆனுல் பாட்டாளி வர்க்க சர்வாதிகார சகாப்தத்தில் ஒவ்வொரு வர்க்கமும் மாறுதல் அடைந்துள்ளது, வர்க்கங்களிடையிலான உறவுகளும் மாற்றமடைந்திருக்கின்றன. பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கீழ் வர்க்கப் போராட்டம் மறைந்துவிடுவதில்லை, அது முற்றிலும் வெவ்வேறு வடிவங்களை எடுத்துக் கொள்கிறது.

முதலாளித்துவத்தின் கீழ் பாட்டாளி வர்க்கம் ஓர் ஒடுக்கப்பட்ட வர்க்கமாகும், உற்பத்தி சாதனங்கள் இல்லாத ஒரு வர்க்கம், முதலாளி வர்க்கத்தை நேரடியாகவும் முழுமையாகவும் எதிர்த்து நின்ற ஒரே வர்க்கம், எனவே, அது இறுதிவரையில் புரட்சிகரமாக இருக்கும் ஆற்றலுடைய ஒரே ஒரு வர்க்கமாகும். முதலாளி வர்க்கத்தை வீழ்த்தி அரசியல் அதிகாரத்தை வென்றபின் பாட்டாளி வர்க்கம் ஆளும் வர்க்கமாகி விட்டது; அது ஆட்சி அதிகாரம் செலுத்துகிறது; ஏற்கெனவே சமுதாயமயமாக்கப்பட்ட உற்பத்தி சாதனங்கள் மீது கட்டுப்பாட்டைச் செயல் படுத்துகிறது; ஊசலாடுகிற இடைத்தட்டு சக்திகள் மற்றும் வர்க்கங்களுக்கு வழி காட்டுகிறது; சுரண்டலாளர்களின் அதிகரித்துவரும் பிடிவாதமான எதிர்ப்பை நசுக்குகிறது. இவையாவும் வர்க்கப் போராட்டத்தின் பிரத்தியேக கடமைகள், இந்தக் கடமைகளைப் பாட்டாளி வர்க்கம் முற்

காலங்களில் தானே முன்வைக்கவில்லை, முன்வைத்திருக்க முடியாது.

சுரண்டலாளர்கள், நிலப்பிரபுக்கள், முதலாளிகளின் வர்க்கம் மறைந்து விடவில்லை, பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கீழ் திடுமென மறைந்துவிட முடியாது. சுரண்டலாளர்கள் தகர்க்கப்பட்டிருக்கிறார்கள் ஆனால் அழிக்கப்படவில்லை. அவர்களுக்கு சர்வதேச மூலதனம் என்ற வடிவில் இன்னும் ஒரு சர்வதேச அடித்தளம் இருக்கிறது, அவர்கள் அதன் ஒரு கிளையே. அவர்கள் இன்னும் ஓரளவு உற்பத்தி சாதனங்களை வைத்துக் கொண்டிருக்கிறார்கள், அவர்களிடம் இன்னும் பணம் இருக்கிறது, அவர்களுக்கு இன்னும் மிகவும் விரிவான சமுதாயத் தொடர்புகள் உள்ளன. அவர்கள் தோற்கடிக்கப்பட்டதால் அவர்களது எதிர்ப்பின் சக்தி நூறு மற்றும் ஆயிரம் மடங்கு அதிகரித்திருக்கிறது. அரசாங்க, ராணுவ, மற்றும் பொருளாதார நிர்வாகக் ''கலை'' அவர்களுக்கு மேன்மையை, மிகப் பெரிய மேன்மையைத் தருகிறது. அதன் காரணமாக மக்கள் தொகையிலான அவர்களது எண்ணிக்கையின் சராசரியினைவிட ஒப்புவமையற்ற முறையில் அவர்களது முக்கியத்துவம் அதிகரித்திருக்கிறது. வீழ்த்தப்பட்ட சுரண்டலாளர்கள் வெற்றிவாகை சூடிய சுரண்டப்பட்ட மக்களின் முன்னணிப்படையினை அதாவது பாட்டாளி வர்க்கத்தை எதிர்த்து நடத்தும் வர்க்கப் போராட்டம் ஒப்புவமையற்ற முறையில் அதிகக் கடுமையாகிவிட்டது. இந்தக் கருத்தோட்டத்தை (இரண்டாம் அகிலத்தின் எல்லா வீரர்களும் விரும்புவது போல) அகற்றி அந்த இடத்தில் சீர்திருத்தவாதப் பிரமைகளைப் புகுத்தினால் ஒழிய புரட்சி வேறுவிதமாக இருக்க முடியாது.

இறுதியாக, விவசாயிகள் பொதுவாக குட்டி முதலாளிகளைப் போலவே பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கீழும் கூட ஒரு பாதி வழி இடைத் தட்டு நிலையிலேயே இருக்கிறார்கள்: ஒரு புறம் அவர்கள் ஓரளவு பெரிய (பின் தங்கிய ருஷ்யாவில் பரந்தளவு) வெகுஜன உழைக்கும் மக்களாக, நிலப்பிரபுக்கள் மற்றும் முதலாளியிடமிருந்து

தம்மைத் தாமே விடுதலே செயது கொள்ள வேண்டும் என்ற அனைத்து உழைக்கும் மக்களின் பொது நலனால் ஒன்றிணைக்கப்பட்டிருக்கிறார்கள்; மறு புறம் அவர்கள் பிரிந்து கிடக்கும் சிறு உரிமையாளர்கள், சொத்துடமையாளர்கள் மற்றும் வர்த்தகர்களாக இருக்கிறார்கள். இத்தகைய பொருளாதார நிலைமை பாட்டாளி வர்க்கத்திற்கும் முதலாளித்துவ வர்க்கத்திற்கும் இடையே ஊசலாடுவதைத் தவிர்க்க முடியாத வகையில் விளைவிக்கிறது. இந்த இரண்டு வர்க்கங்களுக்கிடையிலான போராட்டம் கடுமையான வடிவத்தை மேற்கொண்டு விட்டதாலும், அனைத்து சமூக உறவுகளும் நம்ப முடியாதளவு கடுமையாகத் தகர்ந்திருப்பதாலும், விவசாயிகளும் குட்டி முதலாளிகளும் பொதுவாக பழைய, மாமூலான மாறுதலற்றவற்றில் பெருமளவு பற்றுக்கொண்டிருப்பதாலும், அவர்கள் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கம் அலையாடுவதைத் தவிர்க்க முடியாதவகையில் நாம் காண நேர்ந்துள்ளது, அவர்கள் ஊசலாடுகிற, மாறுபடக் கூடிய, உறுதியற்றவர்களாக இருப்பதைக் காண நேர்ந்துள்ளது.

இந்த வர்க்கம் — அல்லது இந்த சமூக சக்திகள் — சம்பந்தமாகப் பாட்டாளி வர்க்கம் அதன் மீது தனது செல்வாக்கை நிலைநாட்டவும் அதற்கு வழி காட்டவும் முயல வேண்டும். ஊசலாடுகிற உறுதியற்ற சக்திகளுக்குத் தலைமை வழங்குவது—இதுவே பாட்டாளி வர்க்கத்தின் கடமை.

அனைத்து அடிப்படை சக்திகள் அல்லது வர்க்கங்களையும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தால் மாற்றம் செய்யப்பட்ட அவற்றின் இடையுறவுகளையும் ஒப்புநோக்குவோமானால் சோஷலிசத்தை நோக்கிய மாறுதல் கட்டம் பொதுவாக ''ஜனநாயகத்தின் வழியில்'' சாத்தியம் என்று இரண்டாம் அகிலத்தின் பிரதிநிதிகள் அனைவரும் ஏற்றுக் கொண்டுள்ள பொதுவான குட்டி முதலாளித்துவக் கருத்து எவ்வளவு வர்ணிக்க முடியாத அளவுக்கு முட்டாள்த்தனமானது, தத்துவார்த்த ரீதியில் மடத்தனமானது என்பதை நாம் அறிவோம். இந்தத் தவறுக்கு அடிப்படை ஆதாரம் முதலாளித்துவ வர்க்கத்திடமிருந்து பரம்பரையாகப்

பெற்ற ''ஜனநாயகம்'' முற்றமுழுமையான ஏதோ ஒன்று, அது வர்க்கங்களுக்கு அப்பாற்பட்டது என்ற தப்பெண்ண மேயாகும். உண்மையில் ஜனநாயகம் தானே பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கீழ் முற்றிலும் ஒரு புதிய கட்டத்திற்குள் கடந்து செல்கிறது, வர்க்கப் போராட்டம் எல்லா வடிவங்கள் மீதும் ஆதிக்கம் செலுத்தி உயர் மட்டத்திற்கு எழுகிறது.

சுதந்திரம், சமத்துவம், மற்றும் ஜனநாயகம் பற்றிய பொதுவான பேச்சுகள் உண்மையில் பண்ட உற்பத்தி உறவு களால் உருவாக்கப்பட்ட கருத்தோட்டங்களைக் கண்ணை மூடிக்கொண்டு உருவிடுவதாகும். அத்தகைய பொதுப் போக்குகளைக் கொண்டு பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத் தின் ஸ்தூலமான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முயல் வது முதலாளி வர்க்கத்தின் தத்துவங்களையும் கோட்பாடு களையும் முழுமையாக ஏற்றுக்கொள்வதற்குச் சமமாகும். பாட்டாளி வர்க்கத்தின் கருத்து முனையிலிருந்து இந்தப் பிரச்சினையைப் பின்வரும் வழியில் மட்டுமே முன்வைக்க லாம்: எந்த வர்க்கத்திடமிருந்து எந்த ஒடுக்குமுறை யிலிருந்து சுதந்திரம்? எந்த வர்க்கத்திற்கு எந்த வர்க்கத் துடன் சமத்துவம்? ஜனநாயகம் தனியார் சொத்துடைமை அடிப்படையிலா அல்லது தனியார் உடைமையை ஒழிப் பதற்கான போராட்டத்தின் அடிப்படையிலா? என்று இவ்வாறு கேட்கலாம்.

நெடுங்கால முன்பாக எங்கெல்ஸ் தனது டூரிங்குக்கு **மறுப்பு** என்ற நூலில் சமத்துவம் என்ற கருத்தோட்டம் பண்ட உற்பத்தி உறவுகளிலிருந்து உருவாக்கப்பட்டது, அதன் பொருள் **வர்க்கங்களை ஒழிப்பதே** என்று புரிந்து கொள்ளப்படா விட்டால் சமத்துவம் ஒரு தப்பெண்ணமாகி விடுகிறது என்று விளக்கம் தந்தார். சமத்துவம் பற்றிய முதலாளித்துவ-ஜனநாயகக் கருத்தமைப்புக்கும் சோஷ லிசக் கருத்தமைப்புக்கும் இடையிலான வேறுபாடு பற்றிய இந்த சாதாரண உண்மை பெரும்பாலும் மறக்கப்பட்டு விடுகிறது. இது மறக்கப்படாதிருக்குமானால், முதலாளி வர்க்கத்தை வீழ்த்துவது மூலம் பாட்டாளி வர்க்கம் வர்க்

கங்களை ஒழிப்பதற்கான திசையில் மிகவும் நிர்ணயமான நடவடிக்கையை எடுக்கிறது என்பதும், இந்த நிகழ்ச்சிப் போக்கைப் பூர்த்தி செய்யப் பாட்டாளி வர்க்கம் தனது வர்க்கப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்பதும், வீழ்த்தப்பட்ட முதலாளி வர்க்கத்தின் மீதும் ஊசலாடும் குட்டி முதலாளிகள் மீதும் ஆட்சி அதிகார இயந்திரத்தைப் பயன்படுத்தியும் பல்வேறு முறைகளைக் கையாண்டு போராடியும், செல்வாக்குச் செலுத்தியும் நிர்ப்பந்தம் கொண்டு வந்தும் செயல் பட வேண்டும் என்பதும் தெட்டத் தெளிவாகும்.

(தொடரும்)[86]

*அக்டோபர் 30, 1919*

பிராவ்தா, *இதழ் 250,*
*நவம்பர் 7, 1919*

கையொப்பம்: நி. லெனின்

நூல் திரட்டு,
*தொகுதி 39,*
*பக்கங்கள் 271-282*

## கீழ்த்திசை மக்களது கம்யூனிஸ்டு நிறுவனங்களின் இரண்டாம் அகில ருஷ்ய காங்கிரசில் ஆற்றிய உரை

1919, நவம்பர் 22

தோழர்களே, கிழக்கு மக்களது முஸ்லிம் நிறுவனங்களின் பிரதிநிதிகளாகிய கம்யூனிஸ்டுத் தோழர்களது இந்தக் காங்கிரசிற்கு வாழ்த்துக் கூறவும், தற்போது ருஷ்யாவிலும் உலகெங்கணும் இருந்துவரும் சூழ்நிலை பற்றி சில வார்த்தைகள் கூறவும் கிடைத்திருக்கும் இந்த வாய்ப்பு குறித்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். நடப்பு விவகாரங்களே எனது உரையின் கருப்பொருள். கீழ்த்திசை மக்களுக்கு ஏகாதிபத்தியத்தின் பாலுள்ள போக்கும் இம்மக்களிடையே நடைபெறும் புரட்சிகர இயக்கமும்தான் இப்பிரச்சினையின் அத்தியாவசியக் கூறுகளாய் எனக்குத் தோன்றுகின்றன. சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கு எதிராய் நமது சோவியத் குடியரசு நடத்தும் புரட்சிகரப் போராட்டத்துடன்—நேரடித் தொடர்பு கொண்டு தான் கீழ்த்திசை மக்களின் புரட்சிகர இயக்கம் இப்பொழுது பயனுள்ள முறையில் வளர முடியும், வெற்றிகர முடிவை எய்த முடியும் என்பது வெள்ளிடை மலை. ருஷ்யாவின் பிற்பட்ட நிலையும் அதன் மிகப்பெரும் பரப்பும் அடங்கிய பல சூழ்நிலைகளின் காரணமாகவும், ருஷ்யாவானது ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் இடைப்பட்ட, மேற்குலகுக்கும் கிழக்குலகுக்கும் இடைப்பட்ட ஓர் எல்லையாய் இருப்பதாலும், ஏகாதிபத்தியத்துக்கு எதிரான உலகப் போராட்டத்தின் முன்னோடிகளாய்ச் செயல்படும் முழு உக்கிரத்தையும் நாம் ஏற்றுச் சகித்துக் கொள்ள வேண்டியதாயிற்று—இதை நாம் ஒரு பெரும் சிறப்பாகவே கருதுகிறோம்.

ஆகவே, உடனடியான வருங்காலத்தின் வளர்ச்சிப் போக்கு அனைத்தும் சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கு எதிரான மேலும் விரிவான, மேலும் கடுமையான போராட்டத் தையே எதிர்நோக்குகிறது. இந்தப் போராட்டம் ஜெர் மனி, பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடு ஆகியவற்றின் ஒன்றுபட்ட ஏகாதிபத்தியத்தின் சக்திகளை எதிர்த்து சோவியத் குடியரசு நடத்திவரும் போராட்டத் துடன் தவிர்க்க முடியாதபடி இணைந்ததாகவே இருக்கும்.

இராணுவ அம்சத்தைப் பொறுத்தவரை எல்லாப் போர்முனைகளிலும் நமது நிலைமை எவ்வளவு சாதகமாய் இருக்கிறது என்பது உங்களுக்குத் தெரிந்ததே. இப்பிரச்சினை குறித்து நான் விவரமாய்க் கூற வேண்டியதில்லை. சர்வதேச ஏகாதிபத்தியத்தால் நம்மீது திணிக்கப்பட்ட இந்த உள்நாட்டுப் போர் இரண்டு ஆண்டுகளில் ருஷ்ய சோஷலிசக் கூட்டாட்சி சோவியத் குடியரசுக்குச் சொல் லொணு இன்னல் இழைத்திருக்கிறது; விவசாயிகளாலும் தொழிலாளர்களாலும் சகிக்கவே முடியாதெனை அடிக்கடித் தோன்றும்படியான பொறுக்க முடியாத சுமையை அவர் கள்மீது இருத்திற்று என்பதை மட்டும் இங்கு கூறுகிறேன். அதேபோதில் இந்தப் போர் அதன் மிருகத்தனமான வன் முறை காரணமாகவும், நமது ''நேசக் கூட்டாளிகள்'' எனப் படுவோர், சோஷலிஸப் புரட்சிக்கு முன்பே கூட நம்மைச் சூறையாடி வந்த இவர்கள், இப்பொழுது மூர்க்க மான காட்டு விலங்குகளாய் மாறி, ஈவிரக்கமின்றி நடத்தி வரும் கொடுந் தாக்குதல் காரணமாகவும், ஒரு பெரிய விந்தை புரிந்துள்ளது; போர்களால் களைத்துப்போய் ஓய்ந்து விட்ட மக்களை, மற்றொரு போருக்குத் தாக்குப் பிடிக்க சக்தியற்றோராய்த் தோன்றிய இவர்களை, இரண்டு ஆண்டுகளாய் போரைத் தாக்குப்பிடித்ததோடல்லாமல் அதனை வெற்றிகர முடிவுக்குக் கொண்டு வருவோருமான வீரர்களாய் மாற்றியிருக்கிறது. கல்ச்சாக், யுதேனிச், தெனீக்கின் இவர்கள்மீது இப்பொழுது நாம் பெற்றுவரும் வெற்றிகள், தமது விடுதலைக்காகப் போராடக் கிளர்ந் தெழுந்துவிட்ட நாடுகள், மக்களை எதிர்த்து உலக ஏகாதி

பத்தியம் நடத்தும் போராட்டத்தின் வரலாற்றில் ஒரு புதிய கட்டம் துவங்கியிருப்பதைக் குறிக்கின்றன. இத் துறையில், நமது உள்நாட்டுப் போரின் இந்த இரண்டு ஆண்டுகளும் நெடுங்காலமாய் வரலாற்றுக்கு தெரிந்த ஓர் உண்மையை முற்றிலும் உறுதி செய்திருக்கின்றன— போரின் தன்மையும் அதன் வெற்றியும் போருக்குச் செல் லும் நாட்டினுள் இருக்கும் அமைப்பையே பிரதானமாய்ப் பொறுத்துள்ளன, போரானது குறிப்பிட்ட அந்த நாடு போருக்கு முன்பு அனுசரித்த உள்நாட்டுக் கொள்கையின் பிரதிபலிப்பே ஆகும் என்கிற இவ்வுண்மையை உறுதி செய்துள்ளன. போரை நடத்திச் செல்வதில் இவை யாவும் தவிர்க்க முடியாத வகையில் பிரதிபலிக்கின்றன.

எந்த வர்க்கம் போரை நடத்திற்று, தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கிறது என்பது மிகவும் முக்கியமான பிரச்சினை. நமது உள்நாட்டுப் போர் தம்மை விடுவித்துக் கொண்டுவிட்ட தொழிலாளர்களாலும் விவசாயிகளாலும் நடத்தப்படுகிறது என்ற காரணத்தாலும், உழைப்பாளி மக்கள் தமது சொந்த நாட்டையும் அனைத்து உலகையும் சேர்ந்த முதலாளிகளிடமிருந்து விடுதலை பெறுவதற்காக நடத்தும் அரசியல் போராட்டத்தின் தொடர்ச்சியே இந்த உள்நாட்டுப் போர் என்ற காரணத்தாலும் மட்டும்தான்— இக்காரணங்களால் மட்டுமேதான்—ருஷ்யாவைப் போன்ற ஒரு பிற்பட்ட நாட்டில், நான்கு ஆண்டுக் கால ஏகாதி பத்தியப் போரால் ஓய்ந்து ஒடுங்கிய ஒரு நாட்டில், நம்புதற்கரிய, ஈடிணையற்ற துன்பத்துக்கும் இன்னலுக்கு முரிய இரண்டு ஆண்டுகளாய் அந்த உள்நாட்டுப் போரை நடத்திச் செல்வதற்கு வேண்டிய வைராக்கிய மனம் படைத்த மக்களைக் காண முடிகிறது.

உள்நாட்டுப் போரின் வரலாற்றில் கல்ச்சாக்கின் விவ காரம் இதற்குத் தெளிவான எடுத்துக்காட்டு. கல்ச்சாக் உலகின் மிகுந்த பலம் படைத்த எல்லா அரசுகளின் உதவி யையும் பெற்ற பகைவன். உதாரணமாய் ஏகாதிபத்தியப் போருக்காகப் பயிற்சி செய்யப்பட்டு, ஆனால் அனேகமாய் அதில் பங்கு கொள்ளாமலும், ஆகவே சேதமுறாமலும்

இருந்த ஜப்பானியத் துருப்புக்களைப் போன்ற உலக ஏகாதிபத்தியவாதிகளது மிகச் சிறந்த துருப்புக்களும் அடங் கலாய்ச் - சுமார் ஒரு லட்சம் அந்நியத் துருப்புக்களால் பாதுகாக்கப் பெற்ற ஒரு ரயில்பாதையும் கல்ச்சாக் வச மிருந்தது. சைபீரிய விவசாயிகளுடைய பக்கபலம் கல்ச்சாக் கிற்குக் கிடைத்திருந்தது. சைபீரிய விவசாயிகள் பண்ணை யடிமை முறையை அறியாதவர்கள், மிகவும் சுபிட்ச நிலையில் இருந்தவர்கள், ஆகவே கம்யூனிசத்திலிருந்து ஏனைய யாரையும் விட நெடுந் தொலைவு விலகி நின்ற வர்கள். கல்ச்சாக் வெல்லற்கரிய சக்தியாகவே தோன்றி னார், ஏனெனில் அவருடைய துருப்புக்கள் சர்வதேச ஏகாதி பத்தியத்தின் முன்னிலைப் படைகளாய் இருந்தவை. இது நாள் வரையில் ஜப்பானிய, செக்கோஸ்லோவாக்கியத் துருப்புக்களும் ஏனைய பல ஏகாதிபத்திய நாடுகளின் துருப்புக்களும் சைபீரியாவில் செயல்பட்டு வருகின்றன. இருந்தபோதிலும் சைபீரியாமீதும் அதன் அளவுகடந்த இயற்கைச் செல்வாதாரங்கள் மீதும் கல்ச்சாக் நடத்தி வரும் ஆட்சியின் ஓராண்டுக்கும் அதிகமான அனுபவம்—ஆரம்பத்தில் இரண்டாவது அகிலத்தின் சோஷலிஸ்டுக் கட்சிகளாலும் அரசியல் நிர்ணய சபைக் கமிட்டியின்[88] அணியை நிறுவிக் கொண்ட மென்ஷிவிக்குகளாலும் சோஷலிஸ்டு - புரட்சியாளர்களாலும் ஆதரிக்கப்பட்டு, ஆகவே இந்நிலைமைகளில் சாமான்ய ஆளின் கண்ணோட்டத் திலும் வரலாற்றின் சாதாரணப் போக்கின் கண்ணோட்டத் திலும் உறுதியானதாகவும் வெல்ல முடியாததாகவும் தோன்றிய இந்த ஆட்சியின் ஓராண்டுக்கும் அதிகமான அனுபவம் பின்வருவதை உண்மையில் கண்கூடாய்ப் புலப் படுத்திற்று: கல்ச்சாக் ருஷ்யாவின் மையப் பகுதிக்குள் முன்னேறி வர வர அவர் மேலும் மேலும் தேய்ந்து குறு கவே நேர்ந்தது; முடிவில் கல்ச்சாக்கின்மீது சோவியத் ருஷ்யா முழுமையான வெற்றிவாகை சூடியதைக் கண் ணுற்றுள்ளோம். முதலாளித்துவ ஒடுக்குமுறையிலிருந்து விடுதலை பெற்ற தொழிலாளர்கள், விவசாயிகளுடைய ஒன்றுபட்ட சக்திகள் மெய்யான விந்தைகள் புரிய

வல்லவை என்பதற்குச் சந்தேகத்துக்கு இடமில்லாத நடைமுறை நிரூபணம் இங்கு நமக்குக் கிடைக்கிறது. புரட்சிகரப் போர் ஒன்று ஒடுக்கப்பட்ட உழைப்பாளி மக்களை மெய்யாகவே கவர்ந்திழுத்து அவர்களது நாட்டத்துக்கு உரியதாகும்போது, சுரண்டுவோரைத் தாம் எதிர்த்துப் போராடுகிறோம் என்று அவர்களை உணர்வு பெறச் செய்யும் போது—இத்தகைய புரட்சிகரப் போர் விந்தைகள் புரிவதற்கான பலத்தையும் வல்லமையையும் ஊற்றெடுக்கச் செய்கிறது என்பதற்கு நடைமுறை நிரூபணம் இங்கு நமக்குக் கிடைக்கிறது.

செஞ்சேனை கண்டிருக்கும் இச்சாதனையும், அதன் போராட்டமும் அதன் வெற்றியின் வரலாறும் கீழ்த்திசை மக்கள் அனைவருக்கும் பிரம்மாண்டமான, சகாப்தகரமான முக்கியத்துவமுடையனவாய் இருக்குமென நினைக்கிறேன். கீழ்த்திசை மக்கள் பலமில்லாதோராய் இருக்கலாம், தொழில் நுட்பத்தின், இராணுவக் கலையின் எல்லா அதிசயங்களையும் கையாண்டு போராடும் ஐரோப்பிய ஒடுக்குமுறையாளர்கள் வெல்லற்கரிய பலமுடையோராய்த் தோன்றலாம் — இருப்பினும் ஒடுக்கப்பட்ட மக்கள் நடத்தும் புரட்சிகரப் போர் உழைப்பாளர்களும் சுரண்டப்படுவோருமான மக்களில் லட்சோப லட்சக் கணக்கானோரைத் தட்டியெழுப்புவதில் மெய்யாகவே வெற்றி பெறுமாயின், கீழ்த்திசை மக்களுடைய விடுதலை இப்பொழுது முற்றிலும் நடைமுறை சாத்தியமானதாகி விடும்படி இந்தப் புரட்சிகரப் போர் அவ்வளவு உள்ளாற்றல்களும் விந்தைகளும் நிறைந்ததாகும் என்பதை அவர்களுக்கு தெளிவுபடுத்தும். சர்வதேசப் புரட்சிக்குரிய வாய்ப்புக்களின் கண்ணோட்டத்திலிருந்து மட்டுமின்றி, ஆசியாவில், சைபீரியாவில் கிடைத்திருக்கும் நேரடி இராணுவ அனுபவத்தின், பலம் படைத்த எல்லா ஏகாதிபத்திய நாடுகளின் ஆயுதப் படையெடுப்புக்கு உள்ளாகியுள்ள சோவியத் குடியரசின் அனுபவத்தின் கண்ணோட்டத்திலிருந்தும் கீழ்த்திசை மக்களின் விடுதலை இப்பொழுது முற்றிலும் நடைமுறை சாத்தியமானதாகிவிட்டது.

தவிரவும் ருஷ்யாவில் உள்நாட்டுப் போரின் அனுபவ மானது, உள்நாட்டு யுத்தத் தீயிலே புரட்சிகர ஆர்வத்தின் வளர்ச்சியுடன் கூடவே சக்திமிக்க உள் ஒருமைப்பாடும் ஏற்படுகிறது என்பதை நமக்கும் எல்லா நாடுகளின் கம்யூ னிஸ்டுகளுக்கும் தெளிவுபடுத்தி இருக்கிறது. ஒரு தேசத் தின் பொருளாதார, நிறுவன ஒழுங்கமைப்பு சக்திகள் அனைத்தையும் சோதித்துப் பார்க்கிறது போர். முடி வாய்ப் பார்க்குமிடத்து, பஞ்சத்திலும் குளிரிலும் துய ருறும் தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் இந்தப் போர் அளவு மீறிக் கடுமையானதாய் இருந்துள்ளதென்று லும், நாம் வெற்றி பெற்று வருகிறோம், தொடர்ந்து வெற்றி பெறுவோம் என்று இந்த இரு ஆண்டு அனுபவத் தின் அடிப்படையில் கூறலாம். ஏனெனில் நாட்டின் உள் மண்டலம், பலம் பொருந்திய ஒன்று, நம்மிடம் இருக் கிறது; பஞ்சத்தையும் குளிரையும் மீறி விவசாயிகளும் தொழிலாளர்களும் ஒன்று சேர்ந்து நிற்கின்றனர், வலு மிக்கோராய் வளர்ந்துள்ளனர், பலத்த ஒவ்வொரு அடியை யும் அடுத்துத் தமது சக்திகளை மேலும் கெட்டியாய் ஒன் றிணைத்துக் கொண்டும் மேலும் கூடுதலான பொருளா தார வலிமை பெற்றும் பதிலளிக்கின்றனர். இது ஒன்றினால் மட்டுமே கல்ச்சாக் மீதும் யுதேனிச் மீதும் இவர்களுடைய கூட்டாளிகளான உலகின் வலுமிக்க அரசுகள் மீதுமான வெற்றிகள் சாத்தியமாகியுள்ளன. ஒரு புறத்தில் புரட்சி கரப் போரை வளர்த்துக் கொள்ள முடியுமென்பதையும், மறு புறத்தில் அந்நியப் படையெடுப்பின் பலத்த அடிகளை அடுத்து சோவியத் அதிகாரம் வளர்ந்து வலுவடைந்து செல்கிறதென்பதையும் கடந்த இரு ஆண்டுகளும் காட்டி யுள்ளன. புரட்சியின் மையத்தை, சர்வதேச ஏகாதி பத்தியத்தின்மீது போர்ப் பிரகடனம் செய்யத் துணிந்த தொழிலாளர்கள், விவசாயிகளது குடியரசை விரைவில் அழித்திடுவதே இந்த அந்நியப் படையெடுப்பு தந்த பலத்த அடிகளின் நோக்கமாகும். ஆனால் ருஷ்யாவின் தொழி லாளர்களையும் விவசாயிகளையும் அழிப்பதற்குப் பதில் இந்த பலத்த அடிகள் அவர்களை மேலும் உறுதி பெறவே செய்தன.

இதுவே தற்போதைய காலகட்டத்தின் பிரதான படிப்பினை, பிரதான உள்ளடக்கம். நமது மண்ணில் எஞ்சியிருக்கும் கடைசிப் பகைவனை தெனீக்கின் மீது தீர்மானகரமான வெற்றிகள் பெறும் தறுவாயில் நாம் இருக்கிறோம். நாங்கள் வலுவுடையவர்கள் என்ற உணர்வு கொண்டுள்ளோம். எங்கள் குடியரசு உள்ளார்ந்த உறுதியடைந்திருக்கிறது, தெனீக்கினுக்கு எதிரான போரிலிருந்து மேலும் அதிக வலுப்பெற்று, சோஷலிசக் கட்டமைப்பை எழுப்பும் பணிக்கு மேலும் சிறப்பான ஆயத்த நிலையில் வெளிவருவோமெனக் கூறுவது தவறல்ல என்று ஓராயிரம் தரம் திரும்பத் திரும்ப நாம் பறைசாற்றலாம். சோஷலிசக் கட்டமைப்பை எழுப்புவதற்கு உள்நாட்டுப் போரின் போது நாங்கள் மிகக் குறைவான நேரமும் ஆற்றலும்தான் செலவிட முடிந்தது. ஆனால் இப்பொழுது நாங்கள் தங்கு தடையற்ற சுதந்திரப் பாதையில் அடியெடுத்து வைக்கிறபடியால் சந்தேகத்துக்கு இடமின்றி இதற்கு எங்களது நேரத்தை முழுமையாய்ச் செல்லவிட முடியும்.

மேற்கு ஐரோப்பாவில் எகாதிபத்தியம் சிதைந்து வருவதைப் பார்க்கிறோம். சோஷலிஸ்டுகளின் மிகப் பெரும் பான்மையினரைப் போலவே, ஜெர்மன் சோஷலிஸ்டுகளுக்கும் கூட — நிலவரங்களை இவர்கள் புரிந்து கொள்ளவில்லை — உலக ஏகாதிபத்தியத்தின் இரு கோஷ்டிகளுக்கு இடையே போராட்டம் நடக்கிறது என்று தோன்றியது; இந்தப் போராட்டமே முழுமையான வரலாறு என்றும், வேறு எதையும் உண்டாக்க வல்ல சக்தி எதுவுமே இல்லை என்றும் அவர்கள் நம்பினர். பலம் படைத்த இந்த உலகக் கொள்ளைக்காரர்களின் கோஷ்டிகளில் ஒன்றின் பக்கம் சேர்வதைத் தவிர, சோஷலிஸ்டுகளுக்குங்கூட மாற்று வழி எதுவுமில்லை என்று அவர்களுக்குத் தோன்றியது. 1918 அக்டோபர் இறுதியில் அப்படித்தான் அவர்களுக்குத் தோன்றியது. ஆனால் அதற்குப் பின்னர் கழிந்திருக்கும் ஓராண்டில் உலக வரலாறு முன்பின் அறியாத நிகழ்ச்சிகளைக் கண்டுள்ளதைப் பார்க்கிறோம். பெரிய விளைவுகளை உண்டாக்கும் ஆழமான நிகழ்ச்சிகள் இவை.

பல சோஷலிஸ்டுகளின் கண்களை இவை திறந்திருக்கின்றன. ஏகாதிபத்தியப் போரின் போது, இவர்களில் பலர் தேச பக்தர்களாய் இருந்தனர், பகைவன் ஒருவனை தாம் எதிர் நோக்குவதாய்க் கூறித் தமது நடத்தைக்கு நியாயம் கற் பித்துக் கொண்டனர். ஜெர்மன் ஏகாதிபத்தியத்திலிருந்து விடுதலை பெற ஆங்கிலேய, பிரெஞ்சு ஏகாதிபத்தியவாதி கள் வழி செய்வதாய்க் காரணம் கூறி இவர்களுடன் தாம் கொண்ட கூட்டுக்கு நியாயம் கற்பித்துக் கொண்டனர். அந்தப் போரால் எத்தனை பிரமைகள் தகர்க்கப்பட்டன பாருங்கள்! ஜெர்மன் ஏகாதிபத்தியம் அழுகிக் கொண் டிருப்பதைக் கண்ணுறுகிறோம். இந்த அழுகல் குடியரசு வாதப் புரட்சிக்கு மட்டுமின்றி, சோஷலிசப் புரட்சிக்குங் கூட இட்டுச் சென்றுள்ளது. ஜெர்மனியில் இன்று வர்க்கப் போராட்டம் மேலும் கடுமையாகி இருப்பதும், உள் நாட்டுப் போர் — குடியரசுவாதக் கொடியை ஏற்றுக் கொண்டு, ஆனால் தொடர்ந்து ஏகாதிபத்தியவாதிகளாக வே இருந்து வரும் ஜெர்மன் ஏகாதிபத்தியவாதிகளுக்கு எதிரான ஜெர்மன் பாட்டாளி வர்க்கத்தின் போர் — மேலும் மேலும் நெருங்கி வருவதும் உங்களுக்குத் தெரிந் தவையே.

மேற்கு ஐரோப்பாவில் சமூகப் புரட்சி அதிவேகமாய் முற்றி வருகிறது; அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் இதுவே தான் நடைபெற்று வருகிறது. அமெரிக்காவும் இங்கிலாந்தும் கலாசாரத்தின், நாகரிகத்தின் பிரதிநிதி களாய் வேடம் பூண்டுள்ள நாடுகள்; ஜெர்மன் ஏகாதி பத்தியவாதிகளான ஹூனர்கள்மீது வெற்றி பெற்றவை. ஆயினும் வெர்சேய் ஒப்பந்தம்[89] முடிவானதும், ஜெர்மன் கொள்ளைக்காரர்கள் நம்மீது திணித்த பிரேஸ்த் உடன் படிக்கையைக் காட்டிலும் நூறு மடங்கு அது கொள்ளைக் காரத்தனமாய் இருந்ததையும், வெற்றி பெற்ற துர்பாக் கிய நாடுகளின் முதலாளிகளும் ஏகாதிபத்தியவாதிகளும் தமக்குத் தாமே கொடுத்துக் கொள்ளக் கூடிய மிகக் கடுமை யான உதையாய் அது அமைந்ததையும் எல்லோரும் கண்ணுற்றனர். வெர்சேய் உடன்படிக்கை வெற்றி பெற்ற

தேசங்களது மக்களின் கண்களைத் திறந்து விட்டது; பிரிட்டனையும் பிரான்சையும் பொறுத்தவரை இந்நாடுகள் ஜனநாயக அரசுகளே என்ற போதிலும் நாம் எதிர்நோக்குவது ஏகாதிபத்தியக் கொள்ளைக்காரர்கள் ஆட்சி புரியும் நாடுகளையே அன்றி கலாசாரம், நாகரிகம் இவற்றின் பிரதிநிதிகளையல்ல என்பதைத் தெளிவுபடுத்திற்று. இந்தக் கொள்ளைக்காரர்களிடையிலான உள்போராட்டம் அதிவேகமாய் வளர்ந்து வருகிறது. வெர்சேய் உடன்படிக்கையானது ஆனந்தப்பட்டுக் கொள்ளும் ஏகாதிபத்தியவாதிகளுக்குப் பகட்டு வெற்றியே ஆகுமென்பதையும், உண்மையில் ஏகாதிபத்திய உலகு அனைத்தின் கையாலாகாத்தனத்தையும் போரின் போது தம்மை அழுகிச் சிதையும் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதிகளுடன் இணைத்துக் கொண்டு ஒன்றோடொன்று போராடிய கொள்ளைக்காரக் கோஷ்டிகளில் ஒன்றைப் பாதுகாத்து நின்ற சோஷலிஸ்டுகளைத் தொழிலாளி மக்கள் தீர்மானமாய் விட்டொழித்து விட்டனர் என்பதையும் அறிந்து நாம் மனம் மகிழும் வண்ணம் அந்த உள்போராட்டம் அவ்வளவு வேகமாய் வளர்ந்து செல்கிறது. வெர்சேய் உடன்படிக்கை தீவட்டிக் கொள்ளையைக் குறிக்கும் சமாதானமாய் இருப்பதாலும், உண்மையில் இங்கிலாந்தும் பிரான்சும் காலனிகள்மீது தமது ஆட்சியைப் பலப்படுத்திக் கொள்ளவும் தமது ஏகாதிபத்திய வலிமையைப் பெருக்கிக் கொள்ளவும் தான் ஜெர்மனியை எதிர்த்துப் போராடின என்பதை இவ்வுடன்படிக்கை தெளிவுபடுத்துவதாலும் தொழிலாளி மக்களுடைய கண்கள் திறக்கப் பட்டிருக்கின்றன. அந்த உள்போராட்டம் காலத்துக்குக் காலம் விரிவடைந்து வளர்கிறது. நவம்பர் 21ஆம் தேதியிட்டு லண்டனிலிருந்து அனுப்பப்பட்ட வானொலிச் செய்தி ஒன்றை இன்று பார்த்தேன். அமெரிக்கப் பத்திரிகையாளர்கள்—புரட்சியாளர்களிடம் அனுதாபம் கொண்டவர்களாய்ச் சந்தேகிக்க முடியாதவர்கள்—வெர்சேய் உடன்படிக்கையை அங்கீகரிக்க அமெரிக்கர்கள் மறுப்பதால் பிரான்சில் அமெரிக்கர்கள்மீது என்றுமே கண்டிராத வெறுப்பு கிளர்ந்துள்ளதாய் இச்செய்தியில் கூறுகின்றனர்.

இங்கிலாந்தும் பிரான்சும் வெற்றிவாகை சூடியவை, ஆனால் கழுத்தளவுக்கு அவை அமெரிக்காவுக்குக் கடன் பட்டுள்ளவை. இங்கிலாந்தும் பிரான்சும் தாம்தான் வெற்றியாளர்கள் என்று எவ்வளவு வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும், ஆனால் வெண்ணெயைக் கடைந்து எடுத்துக் கொள்ளப்போவது தானேதான் என்றும், போரின்போது தான் அளித்த உதவிக்காகக் கடுவட்டி வசூலித்துக் கொள்வதென்றும் அமெரிக்கா தீர்மானம் செய்திருக்கிறது. அமெரிக்கக் கடற்படை இதற்குரிய உத்தரவாதமாய் அமையப் போகிறது. இந்த அமெரிக்கக் கடற்படை இப்பொழுது கட்டப்பெற்று வருகிறது, அளவில் ஆங்கிலேயக் கடற்படையை எட்டிப் பிடித்து மிஞ்சி வருகிறது. அமெரிக்க ஏஜண்டுகள் வெள்ளை அடிமைகளை, பெண்களையும் சிறுமிகளையும், விலைக்கு வாங்கி விபசாரம் வளர்த்திட அமெரிக்காவுக்குக் கப்பல்களில் அனுப்பி வைப்பதில் அமெரிக்கர்களது கொள்ளைக்கார ஏகாதிபத்தியத்தின் அப்பட்டமான உருவைக் காணலாம். சுதந்திர அமெரிக்கா, நாகரிக நயம் படைத்த அமெரிக்கா, வெள்ளை அடிமைகளை வாங்கி விபசார விடுதிகளுக்கு வழங்குவதைப் பாருங்கள்! அமெரிக்க ஏஜண்டுகளுடன் போலந்திலும் பெல்ஜியத்திலும் சச்சரவுகள் ஏற்பட்டு வருகின்றன. ஆன்டான்ட்டிடமிருந்து உதவி பெற்ற ஒவ்வொரு சிறு நாட்டிலும் மிகப் பெரிய அளவில் நடைபெற்று வருவதற்கு ஒரு சின்னஞ் சிறு எடுத்துக்காட்டே இது. உதாரணமாய்ப் போலந்தை எடுத்துக் கொள்ளுங்கள். அமெரிக்க ஏஜண்டுகளும் கொள்ளை லாபக்காரர்களும் அங்கே சென்று, இப்பொழுதுதான் ஒரு சுயேச்சை அரசென்று பெருமையடித்துக் கொள்ளும் போலந்தின் செல்வங்களை எல்லாம் வாங்கி மூட்டை கட்டுவதைக் காண்பீர்கள். அமெரிக்க ஏஜண்டுகளால் போலந்து விலைக்கு வாங்கப்படுகிறது. அமெரிக்கர்களுடைய சட்டைப் பைக்குள் அடைபடாத ஆலையோ தொழிற் பிரிவோ அங்கே ஒன்றுகூட இல்லை. அந்த ''மாபெரும் சுதந்திர வெற்றி நாடான'' பிரான்சையும் அடிமை செய்ய முற்படும் அளவுக்கு அமெரிக்கர்கள் ஆணவங்

கொண்டவர்களாகி விட்டனர். முன்பு லேவாதேவிக்காரர்களது நாடாயிருந்த பிரான்ஸ் இப்பொழுது அமெரிக்காவுக்கு மிகக் கடுமையாய் கடன்பட்டதாகி விட்டது. ஏனெனில் அது தனது பொருளாதார பலத்தை இழந்து விட்டது; சொந்தத்தில் போதுமான அளவு தானியமோ நிலக்கரியோ அதனிடம் இல்லை; பெரிய அளவில் அதனுல் தனது பொருள் வளச் செல்வாதாரங்களை வளர்த்துக் கொள்ள இயலவில்லை. தங்குதடையின்றி முழு அளவில் தனக்குக் கப்பம் கட்டிவர வெண்டுமென்று அமெரிக்கா வற்புறுத்துகிறது. இவ்விதம் பிரான்சும் இங்கிலாந்தும் சக்தி வாய்ந்த பிற நாடுகளும் பொருளாதார வழியில் போண்டியாகி இருப்பது மேலும் மேலும் பட்டவர்த்தனமாகி வருகிறது. பிரெஞ்சுத் தேர்தல்களில் பாதிரிமார் கட்சியினர் மேல்நிலை பெற்று விட்டனர். ஜெர்மனியை எதிர்த்து சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் பாதுகாப்பதாய்க் கூறப்பட்ட ஒன்றில் தமது பலம் அனைத்தையும் ஈடுபடுத்தும்படி ஏமாற்றப்பட்ட பிரெஞ்சு மக்களுக்கு முடிவில்லாக் கடனும், கொள்ளைவெறி கொண்ட அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளது ஏளனமும், இவை யாவற்றுக்கும் மேலாய் மிகவும் காட்டுத்தனமான பிற்போக்கின் பிரதிநிதிகளாலான பாதிரிமார் கட்சியினரது பெரும்பான்மையும் இப்பொழுது வெகுமதியாய்க் கிடைத்திருக்கின்றன.

உலகெங்குமே சூழ்நிலை சொல்ல முடியாத அளவுக்கு அதிகச் சிக்கலாகிவிட்டது. கல்ச்சாக்மீதும், யுதேனிச்மீதும் —சர்வதேச மூலதனத்தின் அந்த அடிவருடிகள்மீது— நாங்கள் பெற்றிருக்கும் வெற்றி மிகப் பெரிது. ஆனுல் இதைப் போல அவ்வளவு வெளிப்படையாய்த் தெரியா விட்டாலுங்கூட, சர்வதேச அளவில் நாங்கள் கண்டுவரும் வெற்றி இதனிலும் மிகப் பெரிது. ஏகாதிபத்தியத்தின் உள் அழுகலில் அந்த வெற்றி அடங்கியிருக்கிறது. ஏகாதிபத்தியத்தால் எங்களுக்கு எதிராய்த் தன் துருப்புக்களை அனுப்ப முடியவில்லை. ஆன்டான்ட் முயன்று பார்த்தது, ஆனுல் பயனில்லை. ஏனெனில் அதன் துருப்புக்களுக்கு எங்கள் துருப்புக்களுடன் தொடர்பு ஏற்பட்டு அவற்றின்

மொழிகளில் பெயர்க்கப்பட்ட எங்கள் ருஷ்யாவின் சோவியத் அரசியல் சட்டத்தைப் பற்றித் தெரிய வந்ததும் அவை சோர்வுற்றுத் தளர்ந்து விடுகின்றன. அழுகல் சோஷலிசத்தின் தலைவர்களுடைய செல்வாக்கையும் மீறி எங்கள் அரசியல் சட்டம் தொழிலாளி மக்களுடைய அனுதாபத்தை எப்பொழுதும் பெற்றுக் கொண்டுவிடுகிறது. ''சோவியத்'' என்னும் சொல் இப்பொழுது எல்லோரும் அறிந்த சொல்லாகிவிட்டது. சோவியத் அரசியல் சட்டம் எல்லா மொழிகளிலும் பெயர்க்கப்பட்டு ஒவ்வொரு தொழிலாளிக்கும் தெரிந்ததாகிவிட்டது. அது தொழிலாளி மக்களின் அரசியல் சட்டம், சர்வதேச மூலதனத்தின்மீது வெற்றி பெற அறைகூவல் விடுத்திருக்கும் தொழிலாளி மக்களது அரசியலமைப்பு என்பதும், அது சர்வதேச ஏகாதிபத்திய வாதிகள்மீது நாங்கள் சாதித்திருக்கும் ஒரு வெற்றி என்பதும் ஒவ்வொரு தொழிலாளிக்கும் தெரிந்ததே. எமது இந்த வெற்றி எல்லா ஏகாதிபத்திய நாடுகளிலும் எதிரொலிக்கிறது. ஏனென்றால் அவற்றின் சொந்தத் துருப்புக்களே அவற்றுக்குக் கிடைக்காதபடிச் செய்துள்ளோம், இத் துருப்புக்களை எங்கள் தரப்புக்கு வென்று கொண்டு விட்டோம், சோவியத் ருஷ்யாவுக்கு எதிராய் அந்தத் துருப்புக்களை உபயோகிக்கும் சாத்தியப்பாடு அவற்றுக்குக் கிடைக்காதவாறு செய்து விட்டோம்.

பிற நாடுகளின்—பின்லாந்து, போலந்து, லாத்வியா இவற்றின்—துருப்புக்களைக் கொண்டு யுத்தம் புரிய அவை முயற்சி செய்தன; ஆனால் பயன் ஏதும் இல்லை. இங்கிலாந்து அமைச்சர் சர்ச்சில் சில வாரங்களுக்கு முன்பு, காமன்ஸ் சபையில் பேசுகையில் சோவியத் ருஷ்யாவுக்கு எதிராய்ப் பதினன்கு தேசங்களது படையெடுப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டு விட்டது, இதன் பயனாய்ப் புத்தாண்டுக்குள் ருஷ்யாமீது வெற்றி கிட்டிவிடும் என்று ஜம்பமடித்துக் கொண்டார்—அனைத்து உலகுக்கும் இது தந்தி மூலம் பறைசாற்றப் பட்டது. பல தேசங்கள் அதில் பங்கு கொண்டது மெய்தான்—பின்லாந்து, உக்ரைன், போலந்து, ஜியார்ஜியா, மற்றும் செக்கோஸ்லோவாக்கியர்கள், ஜப்பானி

யர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஆங்கிலேயர், ஜெர்மானியர்கள் ஆகியோரும் பங்கு கொண்டது மெய்தான். ஆனல் அதன் முடிவு என்னவென்பது நமக்குத் தெரியும்! எஸ்தோனியர்கள் யுதேனிச்சின் படைகளை நட்டாற்றில் விட்டுச் சென்றது நமக்குத் தெரியும். இப்பொழுது பத்திரிகைகளில் ஆக்ரோஷமான சர்ச்சை நடைபெற்று வருகிறது. ஏனென்ருல் எஸ்தோனியர்கள் யுதேனிச்சுக்கு உதவ விரும்பவில்லை. பின்லாந்தும்—அதன் முதலாளித்துவ வர்க்கத்தார் எவ்வளவுதான் விரும்பிய போதிலும்—அவருக்கு உதவி செய்யவில்லை. நம்மைத் தாக்குவதற்கான, இந்த இரண்டாவது முயற்சியும் இவ்வாறு தோல்வியுற்று விட்டது. ஆன்டான்ட் அதன் சொந்தத் துருப்புக்களை அனுப்பியது முதற்கட்டமாகும். இந்தத் துருப்புக்கள் இராணுவ நுட்பமுறையின் எல்லா விதிகளின் பிரகாரம் படைச் சாதனங்கள் பெற்றிருந்தன; ஆகவே அவை சோவியத் குடியரசைத் தோற்கடித்து விடுமென்பதாய்த் தோன்றிற்று. ஏற்கெனவே காக்கசஸிலிருந்தும் அர்ஹான்கெல்ஸ்கிலிருந்தும் கிரீமியாவிலிருந்தும் அவை வெளியேறி விட்டன. இன்னும் அவை மூர்மன்ஸ்கில் இருந்து கொண்டிருக்கின்றன, அதே போல செக்கோஸ்லோவாக்கியர்களும் சைபீரியாவில் இருந்து வருகின்றனர், ஆனல் தனிமைப்பட்ட கோஷ்டிகளாகவே இருந்து வருகின்றனர். எங்களைத் தனது சொந்தப் படைகளால் தோற்கடிக்கலாமென்று ஆன்டான்ட் செய்த முதல் முயற்சி எங்களுக்கு வெற்றியாய் முடிவுற்றது. இரண்டாவது முயற்சி எங்களுடைய அண்டை அயலாரும், நிதித் துறையில் முற்றிலும் ஆன்டான்ட்டையே சார்ந்தவையுமான தேசங்களை எங்களுக்கு எதிராய் ஏவி விடுவதிலும், சோஷலிசத்தின் உறைவிடம் என்ற முறையில் எங்களை நசுக்கும்படி அவற்றை நிர்ப்பந்தம் செய்ய முயலுவதிலும் அடங்கியிருந்தது. ஆனல் அந்த முயற்சியும் தோல்வியில் முடிவுற்றது. இந்தச் சிறிய நாடுகளில் எதற்கும் இத்தகைய ஒரு போரை நடத்தும் வல்லமை கிடையாது என்பது தெரியலாயிற்று. அது மட்டுமல்ல, ஆன்டான்ட் மீது ஒவ்வொரு சிறு நாட்டிலும் வெறுப்பு வேர்விட்டு

வளர்ந்திருந்தது. யுதேனிச் ஏற்கெனவே கிராஸ்னுயே செலோவைப் பிடித்துக்கொண்டுவிட்ட ஒரு நேரத்தில் பின்லாந்து பெத்ரொகிராதைப் பிடிக்க முற்படவில்லை என்ருல், சோவியத் ருஷ்யாவின் பக்கத்தில் தன்ருல் சுயேச்சையாய் வாழ முடியும், ஆனல் தன்ருல் ஆன்டான்ட்டுடன் சமாதானமாய் வாழ முடியாது என்பதை உணர்ந்து கொண்டு, பின்லாந்து தயங்கியதுதான் அதற்குக் காரணம். சிறு தேசங்கள் யாவுமே இதை உணர்ந்து கொண்டன. பின்லாந்து, லித்துவேனியா, எஸ்தோனியா, போலந்து இவற்றில் எல்லாம் இது உணரப்படுகிறது. இந்நாடுகளில் தேசியவெறி தலை விரித்தாடுகிறது, ஆயினும் ஆன்டான்ட் மீது இவற்றுக்கு வெறுப்பு இருந்து வருகிறது. இந்நாடுகளில் ஆன்டான்ட் தனது சுரண்டலை விரிவாக்கி வருகிறது. ஆக இப்பொழுது நிகழ்ச்சிகளின் போக்கைத் துல்லியமாய் மதிப்பீடு செய்து, சோவியத் குடியரசுக்கு எதிரான சர்வதேச யுத்தத்தின் முதற் கட்டம் மட்டுமின்றி இரண்டாவதும் தோல்வியடைந்து விட்டதென்று மிகையின்றி நாம் கூறலாம். தெனீக்கினது படைகளை முறியடிப்பதுதான் தற்போது நாங்கள் செய்ய வேண்டியதெல்லாம். ஏற்கெனவே அவை பாதியளவுக்குத் தோற்கடிக்கப்பட்டு விட்டன.

எனது உரையில் நான் சுருக்கமாய்த் தொகுத்துக் கூறியுள்ள தற்போதைய ருஷ்ய, சர்வதேசிய நிலைமை இதுவே. முடிவில் கீழ்த்திசைத் தேசிய இனங்கள் குறித்து வளர்ந்து வரும் நிலைமையைப் பற்றிச் சிலவற்றைக் கூற அனுமதியளியுங்கள். கீழ்த்திசையின் பல்வேறு மக்களின் கம்யூனிஸ்டு நிறுவனங்கள், கம்யூனிஸ்டுக் கட்சிகளின் பிரதிநிதிகள் நீங்கள். ருஷ்ய போல்ஷிவிக்குகள் பழைய ஏகாதிபத்தியத்தில் உடைப்பை உண்டாக்குவதிலும், புரட்சிக்குப் புதிய பாதைகளை வகுக்கும் மிகமிகக் கடினமான, அதேபோதில் மிகமிகப் புனிதமான பணியைச் செய்வதிலும் வெற்றி ஈட்டியிருக்கிருர்கள். ஆனல் கீழ்த்திசை உழைப்பாளி மக்களது பிரதிநிதிகளான உங்கள் முன்ருல், இதனிலும் பெரிய, புதிய பணி ஒன்று இருக்கிறது. அனைத்துலகிலும் நடைபெற

விருக்கும் சோஷலிசப் புரட்சி ஒவ்வொரு நாட்டிலும் பாட்டாளி வர்க்கம் அதன் சொந்த நாட்டு முதலாளித்துவ வர்க்கத்தின் மீது பெறும் வெற்றியாய் இருப்பதோடு மட்டும் நின்று விடாது என்பது முற்றிலும் தெளிவாகி வருகிறது. புரட்சிகள் எளிதாகவும் விரைவாகவும் வருமாயின் அது சாத்தியமாயிருக்கும். ஏகாதிபத்தியவாதிகள் இதை அனுமதிக்க மாட்டார்கள், எல்லா நாடுகளும் தமது உள்நாட்டு போல்ஷிவிசத்துக்கு எதிராய் ஆயுதமேந்தி நிற்கின்றன, உள்நாட்டில் போல்ஷிவிசத்தைத் தோற்கடிக்க வேண்டுமென்பதே அவற்றின் சிந்தனை யெல்லாம். எனவேதான் ஒவ்வொரு நாட்டிலும் உள்நாட்டு யுத்தம் ஒன்று மூண்டு வருகிறது. பழைய சோஷலிஸ்டு - சமரசவாதிகள் இந்த யுத்தத்தில் முதலாளி வர்க்கத்தினரின் தரப்பில் அணி திரட்டப்பட்டிருக்கின்றனர். ஆகவே சோஷலிஸ்டுப் புரட்சியானது முற்றிலுமோ பிரதானமாகவோ அந்தந்த நாட்டின் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தினர் தமது முதலாளி வர்க்கத்தினரை எதிர்த்து நடத்தும் ஒரு போராட்டமாயிராது—இல்லை, ஏகாதிபத்தியத்தால் ஒடுக்கப்படும் எல்லாக் காலனிகளும், நாடுகளும், எல்லாச் சார்பு நாடுகளும் சர்வதேச ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடத்தும் ஒரு போராட்டமாய் இருக்கும். கடந்த மார்ச் மாதத்தில் நாங்கள் ஏற்ற கட்சி வேலைத்திட்டத்தில் உலகச் சமூகப் புரட்சி நெருங்கி வருவது பற்றி குண நிர்ணயம் செய்கையில், முன்னேறிய எல்லா நாடுகளிலும் ஏகாதிபத்தியவாதிகளுக்கும் சுரண்டலாளர்களுக்கும் எதிராய் உழைப்பாளி மக்கள் நடத்தும் உள்நாட்டுப் போர் சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கு எதிரான தேசிய யுத்தங்களுடன் இணையத் தொடங்குகிறது என்று கூறினோம். புரட்சியின் போக்கு இதை ஊர்ஜிதம் செய்திருக்கிறது; காலம் செல்லச் செல்ல மேலும் மேலும் இது ஊர்ஜிதம் செய்யப்படும். கிழக்கிலும் இது இப்படியேதான் இருக்கும்.

கீழ்த்திசை மக்கள் பெருந்திரள் புது வாழ்வில் சுயேச்சையாய்ப் பங்கு கொள்வோராய், அதன் நிறுவகர்களாய்க் கிளர்ந்தெழுவார்கள் என்பது நமக்குத் தெரியும். ஏனெனில்

கோடானு கோடியான மக்கள் சார்பு நிலையிலுள்ள முழு உரிமை பெருத தேசிய இனங்களைச் சேர்ந்தோராய் இருக்கிருர்கள். இதுகாறும் இவர்கள் ஏகாதிபத்தியத்தின் சர்வதேசக் கொள்கையின் இலக்குகளாகவே, முதலாளித்துவக் கலாசாரத்தையும் நாகரிகத்தையும் வளப்படுத்துவதற்கான உரமாகவே இருந்துள்ளனர். காலனிகள்மீதான தர்மகர்த்தா ஆட்சிவுரிமைக் கட்டளையை வினியோகிப்பது பற்றிப் பேசுகிருர்கள் என்ருல், சூறையாடும் உரிமையையும் கொள்ளைப் பொருளையும் பங்கிட்டுக் கொள்வதென்பதே — உலகின் பெரும்பான்மை மக்களைச் சுரண்டிக் கொழுக்கும் உரிமையை அற்ப சொற்பச் சிறுபான்மையோருக்கு அளிப்பதென்பதே—அதன் பொருள் என்று நமக்கு நன்ருகத் தெரியும். இந்தப் பெரும்பான்மை மக்கள் சுயேச்சையான புரட்சிகர சக்தியாய் அமைய முடியாத காரணத்தால், அதுவரை வரலாற்று முன்னேற்றத்தின் செயல் வரம்புக்கு முற்றிலும் அப்பாற்பட்டோராய் இருந்தவர்கள். இவர்கள் இது போன்ற செயலற்ற பாத்திரம் வகிப்பது இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் முடிவடைந்துவிட்டதை நாம் அறிவோம். 1905ஐத் தொடர்ந்து துருக்கியிலும் பாரசீகத்திலும் சீனுவிலும் புரட்சிகள் நடைபெற்றன என்பதும், இந்தியாவில் புரட்சிகர இயக்கம் வளர்ச்சியடைந்தது என்பதும் நமக்குத் தெரியும். ஏகாதிபத்தியப் போரும் இதே போல புரட்சி இயக்கத்தின் வளர்ச்சிக்குப் பங்காற்றியது. ஏனெனில், ஐரோப்பிய ஏகாதிபத்தியவாதிகள் தமது போராட்டத்துக்கு முழுமையான காலனிப் படைப் பிரிவுகளைத் திரட்டிக் கொள்ள வேண்டியிருந்தது. ஏகாதிபத்தியப் போர் கிழக்கு உலகையும் தட்டி எழுப்பி, அதன் மக்களை சர்வதேச அரசியலுக்குள் இழுத்துக் கொண்டது. இங்கிலாந்தும் பிரான்சும் காலனி நாடுகளின் மக்களை ஆயுதம் தரிக்கச் செய்து, அவர்களுக்கு இராணுவ நுட்பமுறைகளிலும் நவீன இயந்திரங்களிலும் பரிச்சயம் ஏற்பட உதவின. இந்த அறிவை அவர்கள் ஏகாதிபத்தியக் கனவான்களுக்கு எதிராய் உபயோகித்துக் கொள்வார்கள். தற்போதையப் புரட்சியில் கிழக்கு உலகு

விழிப்புற்று எழுந்த காலகட்டத்தைத் தொடர்ந்து, கீழ்த் திசை மக்கள் ஏனையோர் செல்வம் திரட்டுவதற்கான இலக்கு களாய் இருந்துவிடாமல், அனைத்து உலகின் எதிர்காலத் தையும் தீர்மானிப்பதில் பங்கெடுத்துக் கொள்ளும் கால கட்டம் வந்து கொண்டிருக்கிறது. கீழ்த்திசை மக்கள் நடை முறைச் செயலின் அவசியத்தை, மனிதகுலம் அனைத்தின் எதிர்காலத்தையும் உருவாக்குவதில் ஒவ்வொரு தேசமும் பங்கு கொள்வதன் அவசியத்தை உணர்ந்து வருகிறார்கள்.

எனவேதான், உலகப் புரட்சியின் வளர்ச்சி வரலாற் றில் — இப்புரட்சியின் துவக்கத்தைக் கொண்டு பார்க்கை யில் இது பல ஆண்டுகளுக்குத் தொடர்ந்து நடைபெறும், மிகுந்த முயற்சியைக் கோருவதாயிருக்கும் என்பது தெரி கிறது — இந்தப் புரட்சிகரப் போராட்டத்தில், புரட்சிகர இயக்கத்தில் நீங்கள் பெரிய பங்காற்ற வேண்டியிருக்கும், சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கு எதிரான எங்களுடைய போராட்டத்துடன் ஒன்று சேர வேண்டியிருக்கும் என்று நினைக்கிறேன். சர்வதேசப் புரட்சியில் நீங்கள் பங்கெடுத்துக் கொள்வதானது, ஒரு சிக்கலான, கடினமான பணியை உங்கள் முன்னே வைக்கும். இந்தப் பணி நிறைவேற்றப் படுவதானது நம் எல்லோரது பொது வெற்றிக்குரிய அடித் தளமாய் அமையும். ஏனெனில், முதன்முதலாய் இங்கு மக்களில் பெரும்பான்மையோர் சுயேச்சையாய்ச் செயல்பட முற்படுகின்றனர், சர்வதேச ஏகாதிபத்தியத்தை வீழ்த்து வதற்கான போராட்டத்தில் செயல் முனைப்புள்ள சக்தி யாய்த் திகழ்வார்கள்.

கீழ்த்திசை மக்களில் மிகப் பெருவாரியானோர் ஐரோப்பாவின் மிகவும் பிற்பட்ட நாடான ருஷ்யாவைக் காட்டிலும் மோசமான நிலையில் இருக்கிறார்கள். ஆனால் பிரபுத்துவ மீதமிச்சங்களுக்கும் முதலாளித்துவத்துக்கும் எதிரான எங்கள் போராட்டத்தில் நாங்கள் ருஷ்யாவின் விவ சாயிகளையும் தொழிலாளர்களையும் ஒன்றுபடச் செய்வதில் வெற்றி பெற்றோம். மூலதனத்தையும் பிரபுத்துவத்தையும் எதிர்த்து விவசாயிகளும் தொழிலாளர்களும் ஒன்றுபட்டதால் தான் எங்களுடைய வெற்றி அவ்வளவு சுலபமாய் இருந்

தது. இங்கே கிழக்கு உலகின் மக்களுடஞன தொடர்பு குறிப்பான முக்கியத்துவமுடையது. ஏனெனில் கீழ்த்திசை மக்களில் பெரும்பான்மையோர் உழைப்பாளி மக்களது மாதிரிப் பிரதிநிதிகளாவர் — முதலாளித்துவ ஆலைகள் மூலமான பயிற்சிக்கு உள்ளாகிய தொழிலாளர்களல்ல அவர்கள்; மாறாக மத்திய காலத்திய ஒடுக்குமுறைக்குப் பலியான உழைப்போரும் சுரண்டப்படுவோருமான விவசாயப் பெருங்குடி மக்களின் மாதிரிப் பிரதிநிதிகள் அவர்கள். ருஷ்யப் புரட்சியானது, பாட்டாளிகள் முதலாளித்துவத்தை தோற்கடித்த பின் கோடானு கோடியான உழைக்கும் விவசாயிகளாகிய மிகவும் சிதறுண்ட பெருந்திரளுடன் எப்படி ஒன்றுபட்டு வெற்றிகரமாய் மத்திய காலத்திய ஒடுக்குமுறையை எதிர்த்துக் கிளம்பினர் என்பதைக் காட்டிற்று. நமது சோவியத் குடியரசு இப்பொழுது விழித்தெழும் கீழ்த்திசை மக்கள் அனைவரையும் தன் பக்கத்தில் ஒன்று திரட்டி, அவர்களுடன் சேர்ந்து சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கு எதிராய்ப் போராட்டம் நடத்தியாக வேண்டும்.

இத்துறையில், உங்களை எதிர்நோக்கும் பணி உலகின் கம்யூனிஸ்டுகளை இதன்முன் எதிர்நோக்கி இராத ஒன்ருகும்: கம்யூனிசத்தின் பொதுத் தத்துவத்தையும் நடைமுறையையும் ஆதாரமாய்க் கொண்டு நீங்கள் ஐரோப்பிய நாடுகளில் இல்லாதவையான, பிரத்தியேகமான நிலைமைகளுக்கு உங்களைத் தகவமைத்துக் கொண்டாக வேண்டும்; அந்தத் தத்துவத்தையும் நடைமுறையையும் நீங்கள் பெருவாரியான மக்கள் விவசாயிகளாய் இருக்கும் நிலைமைகளுக்கு, மூலதனத்தை அல்ல, மத்திய காலத்திய மீதமிச்சங்களை எதிர்த்துப் போராட்டம் நடத்துவதே பணியாயுள்ள நிலைமைகளுக்கு ஏற்பச் செயல்படுத்திக் கொள்ளக் கூடியோராய் இருத்தல் வேண்டும். அது கடினமான, பிரத்தியேகமான பணி; ஆனுல் மிகுந்த நன்றிக்குரிய பணி, ஏனெனில் போராட்டத்தில் இது வரை பங்கெடுத்துக் கொள்ளாத வெகுஜனங்கள் அதனுள் ஈர்க்கப்பட்டு வருகிருர்கள், மற்றும் கிழக்கில் கம்யூனிஸ்டு கோஷ்டிகளை நிறுவுவதானது

மூன்றாவது அகிலத்துடன்[30] மிக நெருங்கிய தொடர்பு கொள்ளும் வாய்ப்பினை உங்களுக்கு அளித்திடுகிறது. உலகின் முன்னிலைப் பாட்டாளிகள் கீழ்த்திசை உழைப்பாளர்களும் சுரண்டப்படுவோருமான வெகுஜனங்களுடன், பல சந்தர்ப்பங்களில் மத்திய காலத்திய நிலைமைகளில் இருப்போரான இவர்களுடன் கூட்டணி கொள்வதற்கான பிரத்தியேக வடிவங்களை நீங்கள் கண்டறிந்து கொண்டாக வேண்டும். பெரிய அளவிலும் பெரிய நாடுகளிலும் நீங்கள் செய்யப் போவதை, நாங்கள் எங்கள் நாட்டில் சிறிய அளவில் செய்திருக்கிறோம். உங்களுடைய இந்தப் பணியை நீங்கள் வெற்றிகரமாய்ச் செய்திடுவீர்களென்று நம்புகிறேன். இங்குள்ள நீங்கள் பிரதிநிதிகளாயிருக்கும் கீழ்த்திசைக் கம்யூனிஸ்டு நிறுவனங்களின் பயனாய், நீங்கள் முன்னேறிய புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறீர்கள். ஒவ்வொரு நாட்டிலும் அந்நாட்டு மக்கள் புரிந்து கொள்ளும் மொழியில் கம்யூனிஸ்டுப் பிரசாரம் நடைபெறும்படித் தொடர்ந்து செய்து வரும்படி பார்த்துக் கொள்வது உங்கள் கடமையாகும்.

உலகின் முன்னேறிய நாடுகள் அனைத்தின் பாட்டாளி வர்க்கத்தால் மட்டும்தான் இறுதி வெற்றி கிட்டும்படிச் செய்யமுடியும் என்பது கூறாமலே விளங்கும் ஒன்று. ருஷ்யர்களாகிய நாங்கள் இவ்வேலையைத் துவக்கி வைக்கிறோம்; ஆங்கிலேய, பிரெஞ்சு அல்லது ஜெர்மன் பாட்டாளி வர்க்கம் இவ்வேலையை உறுதி பெறச் செய்யும்; ஆனால் ஒடுக்கப்பட்ட எல்லாக் காலனி மக்களின், முதன்மையாகவும் முக்கியமாகவும் கீழ்த்திசை உழைப்பாளி மக்களின், உதவி இல்லாமல், அவர்களால் வெற்றி பெற முடியாதென்பது தெரிகிறது. கம்யூனிசத்துக்கான மாற்றத்தினை முன்னணிப் படையினால் மட்டும் சாதித்துவிட முடியாது என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். உழைப்பாளி வெகுஜனங்களை — அவர்கள் வந்தடைந்துள்ள வளர்ச்சி மட்டம் எதுவாயினும் — தட்டி எழுப்பிப் புரட்சிகரச் செயற்பாட்டிலும் சுயேச்சையான செயல்களிலும் நிறுவன ஒழுங்கமைப்பிலும் ஈடுபடச் செய்தல்; அதிக

அளவு முன்னேறிய நாடுகளின் கம்யூனிஸ்டுகளுக்காக வகுக்கப்பட்ட மெய்யான கம்யூனிஸ்டுப் போதனையை ஒவ்வொரு நாட்டின் மக்களது மொழியிலும் பெயர்த்திடல், உடனடியாய்ச் செய்யப்பட வேண்டிய அந்த நடைமுறைப் பணிகளை நிறைவேற்றுதல், பிற நாடுகளின் பாட்டாளிகளுடன் ஒரு பொதுப் போராட்டத்தில் ஒன்று சேர்தல் ஆகிய இவையே நம் முன்னுள்ள பணிகள்.

பிரச்சினைகள் இத்தகையனவே. இவற்றுக்கான தீர்வை எந்தக் கம்யூனிஸ்டுப் புத்தகத்திலும் காண்பதற்கில்லை. ருஷ்யா துவக்கியுள்ள பொதுப் போராட்டத்திலே தான் நீங்கள் காண்பீர்கள். உங்களுடைய சொந்த அனுபவத்தின் வாயிலாகவே நீங்கள் இப்பிரச்சினைகளைச் சமாளித்துத் தீர்வு கண்டாக வேண்டும். அதில் ஒரு புறத்தில், பிற நாடுகளின் தொழிலாளி மக்கள் அனைவரது முன்னணிப் படையுடன் உள்ள நெருங்கிய கூட்டணியும், மறுபுறத்தில், இங்கே நீங்கள் பிரதிநிதித்துவம் செய்யும் கீழ்த்திசை மக்கள்பால் சரியான அணுகு முறையைக் கண்டு கொள்வதற்குரிய உங்கள் வல்லமையும் உங்களுக்குத் துணை புரியும். நீங்கள் முதலாளித்துவத் தேசியவாதத்தை உங்களுக்கு அடித்தளமாய்க் கொள்ள வேண்டியிருக்கும்; இந்த முதலாளித்துவத் தேசியவாதம் இம்மக்களிடையே விழிப்பூட்டி வருகிறது, விழிப்பூட்டியே ஆக வேண்டும். இந்த முதலாளித்துவத் தேசியவாதம் வரலாற்று வழிப்பட்ட நியாயமுடையதாகும். அதேபோதில் நீங்கள் ஒவ்வொரு நாட்டின் உழைப்பாளர்களும் ஒடுக்கப்பட்டவர்களுமான வெகுஜனங்களிடம் செல்வதற்கான உங்கள் வழியைக் கண்டு கொண்டாக வேண்டும்; சர்வதேசப் புரட்சியின் வெற்றிதான் அவர்கள் விடுதலை பெறுவதற்கான ஒரேயொரு நம்பிக்கைச் சுடராகும் என்பதையும், சர்வதேசப் பாட்டாளி வர்க்கம்தான் கீழ்த்திசை உழைப்பாளர்களும் சுரண்டப்பட்டோருமான கோடானுகோடியான மக்களுக்கு ஒரேயொரு கூட்டாளியாகும் என்பதையும் அவர்களுக்குப் புரியும்படியான மொழியில் சொல்லியாக வேண்டும்.

இதுவே உங்களை எதிர்நோக்கும் பிரம்மாண்டமான பணி. புரட்சிக்கும் புரட்சி இயக்கத்தின் வளர்ச்சிக்கும் — இது குறித்து ஐயப்பாட்டிற்கு இடமே இல்லை — உரிய இந்தச் சகாப்தத்தின் பயனாய் இந்தப் பணி கீழ்த்திசைக் கம்யூனிஸ்டு நிறுவனங்களது கூட்டு முயற்சிகளால் வெற்றிகரமாய்ச் செய்து முடிக்கப்பட்டு, சர்வதேச ஏகாதிபத்தியத்தின் மீதான முழுமையான வெற்றியினுல் முடிசூட்டப் பெறும்.

ருஷ்யாவின் கம்யூனிஸ்டு
கட்சியினது (போல்ஷிவிக்குகள்)
மத்தியக் கமிட்டியின்
இஸ்வேஸ்தியா, இதழ் 9,
1919, டிசம்பர் 20

நூல் திரட்டு,
தொகுதி 39,
பக்கங்கள் 318-331

## பதிப்பாளர் குறிப்புகள்

[1] ஃபி. எங்கெல்சின் நாடுவிட்டுச் சென்றோர் இலக்கியம். II. கம்யூனின் நாடுவிட்டுச் சென்ற பிளான்கியர்களது வேலைத்திட்டம் இங்கு குறிக்கப்படுகிறது.—7.

[2] அரசாங்க டூமா — 1905ஆம் வருடப் புரட்சிகர நிகழ்ச்சிகளின் விளைவுகளால் நிர்ப்பந்திக்கப்பட்டு ஜார் அரசாங்கம் கூட்டிய பிரதிநிதித்துவ சபை. பெயரளவில் சட்டமன்றமாய் இருந்த அரசாங்க டூமா உண்மையில் எந்தவிதமான அதிகாரமும் இல்லாமல் இருந்தது. அரசாங்க டூமாவுக்கான தேர்தல்கள் நேரடியாகவோ, சமத்துவ அடிப்படையிலோ, எல்லோருக்கும் வாக்குரிமை எனும் அடிப்படையிலோ நடைபெறவில்லை. உழைப்பாளி வர்க்கங்களுக்கும் ருஷ்யாவில் இருந்த ருஷ்யர்கள் அல்லாத தேசிய இனத்தவருக்கும் வாக்குரிமை வெகுவாகக் குறைக்கப் பட்டிருந்தது. தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோரில் கணிசமான பகுதியோருக்கு வாக்குரிமையே சுத்தமாக இருக்கவில்லை. 1905 டிசம்பர் 11 (24) தேதி சட்டத்தின்படி நிலப்பிரபுவின் ஓர் ஓட்டு நகர முதலாளிகளின் பிரதிநிதிகளது 3 ஓட்டுக்கும், விவசாயிகளின் 15 ஓட்டுக்கும் தொழிலாளர்களின் 45 ஓட்டுக்கும் சமமாய் இருந்தது.

முதல் அரசாங்க டூமாவும் (1906 ஏப்ரல்-ஜூலை) இரண்டாவது அரசாங்க டூமாவும் (1907 பிப்ரவரி-ஜூன்) அரசாங்கத்தால் கலைக்கப்பட்டன. 1907 ஜூன் 3ல் நிகழ்ந்த ஆட்சி மாற்றத்தின் பிறகு பிறப்பிக்கப்பட்ட புதிய சட்டத்தின்படி, தொழிலாளர்கள், விவசாயிகள், நகரத்துக் குட்டி முதலாளித்துவப் பகுதியோர் ஆகியோரின் வாக்குரிமை மேலும் குறைக்கப்பட்டு, மூன்றுவது (1907-1912), நான்காவது (1912-1917) அரசாங்க டூமாக்களில் நிலப்பிரபுக்கள், பெரு முதலாளிகளது

பிற்போக்கு கூட்டணியின் முழுநிறை ஆதிக்கம் உறுதியாக்கப்பட்டது.

மூன்றாவது, நான்காவது அரசாங்க டூமாக்களின் தேர்தல்களில் போல்ஷிவிக்குகள் பங்கெடுத்து அவற்றில் தமக்கு இடங்கள் வென்று கொண்டனர்.—8.

3 புரட்சிகர வளர்ச்சிப் போக்கினைத் துரிதப்படுத்திய 1917 ஏப்ரல்-ஆகஸ்டு அரசியல் சம்பவங்களை லெனின் இங்கு குறிப்பிடுகிறார். அயல் துறை அமைச்சர் மில்யுக்கோவ் இறுதி வெற்றி கிட்டும் வரை போர் நடக்கும் என்று அறிவித்ததைக் கண்டித்து ஏப்ரல் 21-22ல் (மே 4-5ல்) ஒரு லட்சம் தொழிலாளர்களும் படையாட்களும் ஆர்ப்பாட்டம் நடத்தினர். இந்த ஏப்ரல் ஆர்ப்பாட்டம் அரசாங்க நெருக்கடியை உண்டாக்கியது. இதைத் தொடர்ந்து, காடேட்டுகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் அடங்கிய கூட்டணி அரசாங்கம் அமைக்கப்பட்டது.

ஜூன் 10 (23)ல் ஆர்ப்பாட்டம் நடத்துவதென்று தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது மாநாடு ஒன்றில் போல்ஷிவிக் கட்சி முடிவு செய்தது. சோவியத்துகளின் கைகளில் அதிகாரம் அனைத்தையும் ஒப்படைக்க வேண்டும் என்று கோரிய பெத்ரொகிராத் தொழிலாளர்கள், படையாட்களின் சித்தத்தை சோவியத்துகளின் முதலாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் கூடுவதற்கு முன்பு வெளிப்படுத்திக் காட்டுவதே இந்த ஆர்ப்பாட்டத்தின் நோக்கம். மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் இந்த ஆர்ப்பாட்டத்தைத் தடுத்து விடுவதென்று முடிவு செய்தனர்; ஆர்ப்பாட்டத்துக்குத் தடை விதித்து சோவியத்துகளது காங்கிரசில் அவர்களது வலுக்கட்டாயத்தின் பேரில் ஜூன் 9 (22)ல் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சோவியத்துகளது காங்கிரசின் முடிவிற்கு விரோதமாகச் செல்ல விரும்பாமல் போல்ஷிவிக் கட்சியின் மத்திய கமிட்டி இந்த ஆர்ப்பாட்டத்தை ரத்து செய்தது.

சோவியத்துகளது காங்கிரசில் செயல்பட்ட மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் தலைமையானது ஜூன் 18ல் (ஜூலை 1) ஆர்ப்பாட்டத்திற்கு ஏற்பாடு செய்வதென்றும், இடைக்கால அரசாங்கத்திடம் நம்பிக்கை தெரிவிக்கும் ஆர்பாட்டமாக இதனை நடத்துவதென்றும் முடிவு செய்தது.

ஜூன் 18ம் தேதிய ஆர்ப்பாட்டத்தில் சுமார் 5 லட்சம்

பேர் கலந்து கொண்டனர். இவர்களில் பெரும்பாலோர் போல்ஷிவிக் முழக்கத்தையே எழுப்பினர்: ''முதலாளித்துவ அமைச்சர்கள் ஒழிக!'', ''அதிகாரம் அனைத்தும் சோவியத்துகளுக்கே!''. பொது மக்களின் புரட்சிகர நடவடிக்கைகள் தீவிரம் அடைவதையும், போல்ஷிவிக்குகளின் செல்வாக்கு வளர்ந்து வருவதையும் இந்த ஆர்ப்பாட்டம் எடுத்துக் காட்டியது.

*1917 ஜூலை 3-4 (16-17)* தேதிகளில் பெத்ரொகிராதில் தொழிலாளர்கள், படையாட்கள், கடற்படையினர் மத்தியிலிருந்து வெகுஜன நடவடிக்கைகள் தன்முனைப்பாகவே எழுந்தன. ஏகாதிபத்தியப் போரைத் தொடர்நது நடத்தி வந்த இடைக்கால அரசாங்கத்தின் கொள்கையானது மக்கட் பெருந்திரளினரிடையே ஆத்திரத்தைக் கிளர்த்திவிட்டது.

போல்ஷிவிக்குகளின் கட்சி இந்தக் காலத்தில் ஆயுதந் தாங்கிய போராட்டத்தை எதிர்த்து வந்தது, புரட்சிகர நெருக்கடி இன்னும் முதிர்ச்சி அடையவில்லை என்று அது கருதியது. ஆயினும் பொது மக்களின் மனநிலையைக் கருத்தில் கொண்டு, போல்ஷிவிக் கட்சியின் மத்திய கமிட்டியும் பெத்ரொகிராத் கமிட்டியும் கட்சியின் ராணுவ நிறுவனமும் ஜூலை 4 (17) ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டு அதை அமைதியாகவும் ஒழுங்கமைப்பு குலையாமலும் நடந்தேறச் செய்வதெனமுடிவு செய்தன. இந்த ஆர்ப்பாட்டத்தில் சுமார் 5 லட்சம் பேர் கலந்து கொண்டனர்.

மென்ஷிவிக்குகளாலும் சோஷலிஸ்டு - புரட்சியாளர்களாலுமான மத்தியச் செயற் குழுவின் ஆதரவுடன் இடைக்கால அரசாங்கம், அமைதியான ஆர்ப்பாட்டத்தின் மீது துப்பாக்கிப் பிரயோகம் நடத்தியது. ஆர்ப்பாட்டத்தை அடக்கிய பிறகும், இடைக்கால அரசாங்கம் அடக்குமுறையைத் தொடர்ந்து நடத்தி சென்றது. போல்ஷிவிக் கட்சியைத் தனது பிரதான இலக்காகக் கொண்டு அது தாக்கி வந்தது. மென்ஷிவிக்குகளையும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களையும் கொண்டமைந்த சோவியத்துகளின் தலைமை பகிரங்கமாக எதிர்ப்புரட்சியுடன் இணைந்து கொண்டுவிட்டதால், ''அதிகாரம் அனைத்தும் சோவியத்துகளுக்கே'' என்னும் முழக்கத்தை ஜூலை நிகழ்ச்சிகளுக்குப் பின்பு போல்ஷிவிக்குகள் நீக்கி கொண்டனர்.

பிப்ரவரியில் பொதுமக்களால் தகர்க்கப்பட்ட ஜார் முடியாட்சியை மீண்டும் நிலைநாட்டும் நோக்கத்துடன்

1917 ஆகஸ்டு 25ல் ஜெனரல் கர்னீலவ் எதிர்ப்புரட்சிக் கலகத்தை ஆரம்பித்து, புரட்சிகரப் பெத்ரொகிராதுக்கு எதிராகத் தமது சேனையுடன் வந்தார். போல்ஷிவிக்குகளின் தலைமையில் தொழிலாளர்களும் விவசாயிகளும் இக்கலகத்தை முறியடித்தனர். மக்கட் பெருந் திரளினரால் நிர்ப்பந்திக்கப்பட்டு இடைக்கால அரசாங்கம் கர்னீலவையும் அவரது ஆதரவாளர்களையும் கைது செய்து அவர்களை நீதிமன்ற விசாரணைக்குக் கொண்டு வருமாறு உத்தரவு இட்டது.—9.

4 சோஷலிஸ்டு - புரட்சியாளர்கள் — ருஷ்யாவில் இருந்த குட்டிமுதலாளித்துவக் கட்சி. 1901 இறுதியிலும் 1902 தொடக்கத்திலும் நரோத்னிக் வட்டங்கள், குழுக்கள் பலவற்றையும் இணைத்து இது நிறுவப்பட்டது.

பாட்டாளி வர்க்கத்தாருக்கும் விவசாயிகளுக்கும் இடையிலான வர்க்க வேற்றுமையை சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் பார்க்கத் தவறினர்; விவசாயிகளிடையே இருக்கும் வர்க்கப் பாகுபாட்டையும் முரண்பாடுகளையும் மூடி மறைத்தனர்; புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தை நிராகரித்தனர்.

முதல் உலகப் போரின் போது, சோஷலிஸ்டு-புரட்சியாளர்களில் பெரும்பான்மையினர் சமூக-தேசியவெறி நிலையை மேற்கொண்டனர்.

1917 பிப்ரவரியில் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி வெற்றி பெற்ற பின்பு, சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும், எதிர்ப்புரட்சித் தன்மை வாய்ந்த முதலாளித்துவ-நிலப்பிரபுக்களது இடைக்கால அரசாங்கத்தின் பிரதானமான ஆதரவாய் இருந்தனர். இக்கட்சியின் தலைவர்கள் (கேரென்ஸ்கி, அவ்க்சேன்தியெவ், செர்னோவ்) இவ்வரசாங்கத்தில் அமைச்சர்களாய் இருந்தார்கள். நிலப்பிரபுக்களின் நிலவுடைமையை ஒழிக்க வேண்டுமென்ற விவசாயிகளின் கோரிக்கைக்கு சோஷலிஸ்டு - புரட்சியாளர்கள் ஆதரவளிக்காமல், பிரபுக்களின் நிலவுடைமையைக் காத்து நின்றனர். இடைக்கால அரசாங்கத்திலிருந்த சோஷலிஸ்டு-புரட்சியாளர் அமைச்சர்கள், பிரபுக்களின் நிலங்களைக் கைப்பற்றிய விவசாயிகளுக்கு எதிராகத் தண்டப் படைகளை அனுப்பினர். ருஷ்யாவில் அன்னிய ராணுவத் தலையீடும் உள்நாட்டுப் போரும் நடந்த ஆண்டுகளில் சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் எதிர்ப்புரட்சிச் சதிவேலைகளை மேற்கொண்டனர். தலையீட்டாளர்களுக்கும் வெள்ளைப் படை

யினருக்கும் அவர்கள் முழு ஆதரவளித்தனர், சோவியத் அரசாங்கத்தின், கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைவர்களுக்கு எதிரான பயங்கரவாதத் தாக்குதல்களுக்கு ஏற்பாடு செய்தனர்.—9.

[5] மென்ஷிவிக்குகள்—ருஷ்ய சமூக-ஜனநாயகத்தின் சந்தர்ப்பவாதப் போக்கு. சர்வதேசச் சந்தர்ப்பவாதத்தின் ஒரு பிரிவு. ருஷ்யாவின் சமூக - ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் இரண்டாவது காங்கிரசில் லெனினது இல்க்ராவுக்கு எதிரானவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. கட்சியின் காங்கிரசில் மத்திய அமைப்புகளுக்காக நடந்த தேர்தல்களில் லெனின் ஆதரவாளர்கள் பெரும்பான்மை பெற்றனர். இவர்கள் போல்ஷிவிக்குகள் (பெரும்பான்மையோர்) என்று அழைக்கப்படலாயினர். சந்தர்ப்பவாதிகள் சிறுபான்மையினராகி, மென்ஷிவிக்குகள் (சிறுபான்மையினர்) என்று பெயர் பெற்றனர்.

கட்சியின் புரட்சிகர வேலைத்திட்டத்தையும், புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தையும், தொழிலாளி வர்க்கம் விவசாயிகளுடன் கூட்டுச் சேர்வதையும் மென்ஷிவிக்குகள் எதிர்த்தார்கள், மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தினருடன் சமரசம் செய்து கொள்ள வேண்டும் என்றனர்.

*1905-1907* புரட்சி தோல்வி அடைந்த பின், பாட்டாளி வர்க்கத்தின் சட்ட விரோதப் புரட்சிக் கட்சியைக் கலைத்து விட முயன்றனர். *1912* ஜனவரியில் நடந்த ரு.ச.ஜ.தொ. கட்சியின் ஆறுவது அனைத்து ருஷ்ய மாநாடு கட்சிக்கலைப்புவாதிகளாகிய மென்ஷிவிக்குகளைக் கட்சியிலிருந்து விலக்கியது.

*1917*ல் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் மென்ஷிவிக்குகள் பங்கு கொண்டனர். மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின்பு மற்ற எதிர்ப் புரட்சி கட்சிகளுடன் சேர்ந்து கொண்டு சோவியத் ஆட்சிக்கு எதிராகப் போராடினர்.—9.

[6] அரசியல் சட்ட ஜனநாயகக் கட்சி (காடேட்டுகள்)—*1905* அக்டோபரில் நிறுவப்பட்ட மிதவாத-முடியரசுவாத முதலாளித்துவ வர்க்கத்தினரின் தலைமையான கட்சி. இதில் முதலாளித்துவ வர்க்கத்தினரின், நிலப்பிரபுக்களின், முதலாளித்துவ அறிவாளிகளின் பிரதிநிதிகள் இருந்தனர். அரசியல் சட்ட முடியரசு வேண்டும் என்று கேட்பதற்கு மேல் எதுவும் கோரவில்லை காடேட்டுகள். முதல் உலகப் போரின் போது, ஜார் அரசாங்கத்தின்

ஆக்கிரமிப்புத் தன்மை கொண்ட வெளிநாட்டுக் கொள்கையைத் தீவிரமாக ஆதரித்தனர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக் காலத்தில் முடியரசைக் காப்பதற்காக அவர்கள் வெகுவாக முயன்றார்கள். முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் தலைமைப் பதவிகளில் இருந்த காடேட்டுகள் மக்கள் விரோத எதிர்ப் புரட்சிக் கொள்கையைக் கடைப் பிடித்தார்கள்.—11.

7 இங்கு கூறப்படுவது 1871ஆம் ஆண்டுப் பாரிஸ் கம்யூன் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை நிறுவுவதற்கு வரலாற்றில் முதன் முதலாக செய்யப்பட்ட முயற்சியாகும். பாரிஸ் கம்யூன் 1871 மார்ச் 18ல் இருந்து மே 28 வரை நீடித்தது. அரசாங்கத்திலிருந்து மதஸ்தாபனங்களையும் மதஸ்தாபனங்களிலிருந்து பள்ளிக்கூடங்களையும் பிரித்து வைத்தது பாரிஸ் கம்யூன். நிரந்தர சேனைக்குப் பதிலாக மக்கள் அனைவருக்கும் அது ஆயுதங்களை வழங்கியது. நீதிபதிகளையும் அதிகாரிகளையும் மக்கள் தேர்ந்து எடுக்க வேண்டும் என்று விதித்தது. அதிகாரிகளின் ஊதியம் தொழிலாளர்களின் ஊதியத்தை விட அதிகமாக இருக்கக் கூடாது என்று பணித்தது. தொழிலாளர்கள், நகரத்து ஏழைகள் ஆகியோரின் பொருளாதார நிலை மேன்மையுறுவதற்கு பல நடவடிக்கைகளைக் கம்யூன் மேற்கொண்டது. 1871மே 21ல் தியேரின் எதிர்ப்புரட்சி அரசாங்கப் படைகள் பாரிசுக்குள் நுழைந்து பாரிஸ் நகரத்துத் தொழிலாளர்களைக் கொடூரமாக நசுக்கின. சுமார் 30,000 பேர் கொல்லப் பட்டனர், 50,000 பேர் கைது செய்யப் பட்டனர். பல்லாயிரக் கணக்கானோர் கடுங்காவல் முகாமுக்கு அனுப்பப் பட்டனர்.—13.

8 வெர்சேய் — பாரிஸ் நகர் புறத்தில் ஒரு இடம். பாரிஸ் கம்யூன் அரசாட்சி நடத்திய நாட்களில், எதிர்ப் புரட்சிப் பிரெஞ்சு அரசாங்கம் தியேர் தலைமையில் இங்கு நிறுவப் பட்டது.—13.

9 1917 செப்டம்பர் 1 (14)ல் ஐவர் கொண்ட நெறியாளர் குழு ஒன்று அமைப்பது என்று இடைக்கால அரசாங்கம் முடிவு செய்தது. அரசாங்கத்தின் இந்தக் அமைப்பில் காடேட்டுகள் அதிகார பூர்வமாகப் பங்கு எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால், இவர்களுடன் ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்ட பின்னரே இந்த அமைப்பு

நிறுவப் பட்டது. மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் அரசாங்கத்தின் புதிய அமைப்புக்கு ஆதரவு தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றினர். இவ்வாருக, காடேட்டுகளுடன் முறித்துக் கொண்டதாக சொல்லளவில் அறிவித்துவிட்டு, திரும்பவும் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் நிலப்பிரபுக்கள், முதலாளிகளிடம் ஆட்சியதிகாரம் நீடிப்பதற்கு உதவி செய்தனர்.—16.

10 பிளான்கிவாதம் — புகழ் வாய்ந்த புரட்சி வீரரும், பிரெஞ்சுக் கற்பனுவாதக் கம்யூனிசத்தின் பிரபல பிரதிநிதியுமான லூயி ஒகுஸ்ட் பிளான்கி [Blanqui] (1805-1881) தலைமை தாங்கிய பிரெஞ்சு சோஷலிச இயக்கத்தில் ஒரு போக்கு. ''கூலி அடிமை நிலையிலிருந்து மனித இனத்தை விடுவிப்பதற்கான பாதை பாட்டாளிகளின் வர்க்கப் போராட்டம் அல்ல, சிறுபான்மையினரான அறிவுத்துறையினரது சிறு குழுவின் சூழ்ச்சிகளே'' என்று பிளான்கியர்கள் கருதினர் (லெனின்). புரட்சிகரக் கட்சியின் பணிகளுக்குப் பதிலாய் இரகசியச் சதிகாரக் குறுங்குழுவின் செயற்பாட்டை ஆதரித்த இவர்கள் எழுச்சியின் வெற்றிக்கு அவசியமான பிரத்தியேக நிலைமைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. பிளான்கியர்கள் வெகுஜனங்களுடன் தொடர்புகளைப் புறக்கணித்தனர்.—18.

11 அனைத்து ருஷ்யாவின் ஜனநாயக மாநாடு — ஆட்சியதிகாரப் பிரச்சினை குறித்து தீர்மானிப்பதற்காக சோவியத்துகளது—மென்ஷிவிக்குகளின், சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் பிடியிலிருந்த—மத்தியச் செயற்குழுவால் கூட்டப்பட்டது. இந்த மாநாடு பெத்ரொகிராதில் 1917 செப்டம்பர் 14-22ல் (செப்டம்பர் 27—அக்டோபர் 5) நடைபெற்றது. இந்த மாநாட்டில் தொழிலாளர்கள், விவசாயிகள் பிரதிநிதிகளது எண்ணிக்கையைக் குறைத்து, குட்டிமுதலாளித்துவ, முதலாளித்துவ அமைப்புகளின் பிரதிநிதிகளைக் கூடுதலாக்குவதற்காக மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு - புரட்சியாளர்களின் தலைவர்கள் எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டனர்.

மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் ஆகியோரின் முகமூடியைக் கிழித்தெறிய ஒரு மேடையாக இந்த மாநாட்டைப் பயன்படுத்தும் பொருட்டு போல்ஷிவிக்குகள் இதில் கலந்து கொண்டனர்.

ஆலோசனை அந்தஸ்து கொண்டு பூர்வாங்க நாடாளு

*மன்றத்தை (குடியரசின் இடைக்கால அவையை) அமைப்பது என்று ஒரு தீர்மானத்தை ஜனநாயக மாநாடு நிறைவேற்றியது. ருஷ்யாவில் நாடாளுமன்ற முறை நிறுவப்பட்டுள்ளதாய்க் காட்டிக் கொள்வதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சி இது.*

*அக்டோபர் 7 (20)ல் பூர்வாங்க நாடாளுமன்றம் ஆரம்பமாகியது, அன்றே போல்ஷிவிக்குகள் இதிலிருந்து வெளியேறினர். மேலும் தொடர்ந்து தாம் இதில் இருப்பதானது புரட்சியின் கடமைகளை இம்மன்றம் நிறைவேற்றும் என்ற பிரமையை உண்டாக்குவதற்கே பயன்படும் என்று அவர்கள் வெளியேறினர்.—22.*

12 **அலெக்சாண்டிரின்ஸ்கி அரங்கு** — *பெத்ரொகிராதில் ஜனநாயக மாநாடு நடைபெற்ற அலெக்சாண்டிரின்ஸ்கி நாடக அரங்கு.*

**பீட்டர்-பால் கோட்டை** — *குளிர்கால அரண்மனைக்கு எதிராய் நேவா ஆற்றின் எதிர்கரையில் அமைந்துள்ளது இது. ஜார் காலத்தில் அரசியல் கைதிகள் இங்கு அடைக்கப் பட்டிருந்தனர். இந்தக் கோட்டையில் ஏராளமான ஆயுத தளவாடங்கள் சேமித்து வைக்கப்பட்டிருந்ததால் இது பெத்ரொகிராதின் கேந்திர முக்கியத்துவமுள்ள இடமாக விளங்கியது. இப்போது புரட்சி வரலாற்றுக் காட்சிக்கூடமாய் இருக்கிறது.—27.*

13 **யூங்கர்கள்**—*ஜார் கால ருஷ்யாவில் இராணுவ அதிகாரிகளைப் பயிற்றுவித்து வந்த இராணுவப் பள்ளிகளின் மாணவர்கள்.—27.*

14 **கொடிய டிவிஷன்** *1914-1918ன் முதல் உலகப் போரின் போது அமைக்கப்பட்டது. காக்கஸஸ் மலைவாசிகளிடமிருந்து திரட்டப்பட்ட தொண்டர் படையினரைக் கொண்டது. இந்தக் ''கொடிய டிவிஷனைப்'' புரட்சிகரப் பெத்ரொகிராத் மீது தாக்குதல் நடத்த முக்கியமான படையாகப் பயன்படுத்துவதற்கு ஜெனரல் கர்னீலவ் முயன்றார்.—27.*

15 **ரேச்** *(''பேச்சு'')—காடேட்டுக் கட்சியின் மத்திய பத்திரிகை, நாளேடு. பெத்ரொகிராதில் 1906 பிப்ரவரி 23 (மார்ச் 8) முதல் 1918 ஆகஸ்டு வரை வெளி வந்தது. 1917 பிப்ரவரி முதலாளித்துவ - ஜனநாயகப் புரட்சிக்குப் பிற்பாடு இடைக்கால அரசாங்கத்தின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளைத் தீவிரமாக ஆதரித்து வந்தது. வி. இ. லெனினுக்கும் போல்ஷிவிக்கு*

களுக்கும் எதிராகப் பலாத்கார நடவடிக்கைகளை ஏவி விட்டு வந்தது.

நோவயா ஷீஸ்ன் (''புது வாழ்வு'') — அரைவாசி மென்ஷிவிக்குப் போக்குள்ள நாளேடு. பெத்ரொகிராதில் 1917 ஏப்ரல் 18 (மே 1) முதல் 1918 ஜூலை வரை வெளிவந்தது. இதன் ஆதரவாளர்களை லெனின் விமர்சனம் செய்கையில், ''கோட்பாடற்ற நிலையினை மூடி மறைத்தும் வெளியிட்டும் வரும் அறிவுத்துறை ஐயுறவு வாதமே இவர்களிடம் மேலோங்கியுள்ள மனப்பாங்காகும்'' என்று குறிப்பிட்டார்.—30.

16 லெனின் இங்கு குறிப்பிடும் நிகழ்ச்சி, தொழிலாளிகள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் முதலாவது அனைத்து ருஷ்யாவின் காங்கிரசின் ஓர் அமர்வின் போது, 1917 ஜூன் 4 (17)ல் நடைபெற்றது. இடைக்கால அரசாங்கத்தின் அமைச்சரான மென்ஷிவிக் தெஸெரெத்தேலி, நாட்டின் அதிகாரம் அனைத்தையும் ஏற்றுக் கொள்ளத் தயாராயுள்ள அரசியல் கட்சி ருஷ்யாவில் இல்லை என்று உறுதியான குரலில் கூறியதும், லெனின் தமது இருக்கையில் இருந்தபடி ''இருக்கிறதே!'' என்று போல்ஷிவிக் கட்சியின் சார்பில் பறைசாற்றினர். பிறகு அவர் மேடையிலே வந்து நின்று ''போல்ஷிவிக் கட்சி எந்த நிமிடமும் அதிகாரம் அனைத்தையும் ஏற்றுக் கொள்வதற்குத் தயாராய் இருக்கிறது'' என்று அறிவித்தார்.—31.

17 தியேலொ நரோதா (''மக்கள் இலட்சியம்'') — சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் நாளேடு. 1917 மார்ச் முதல் 1918 ஜூலை வரை பெத்ரொகிராதில் வெளிவந்தது. தாயகப் பாதுகாப்புவாத, சமரசவாத நிலையை ஏற்று, முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தை ஆதரித்து வந்தது.—33.

18 ரபோச்சி பூத் (''தொழிலாளர் பாதை'') — 1917ல் பிராவ்தாவின் பெயர்களில் ஒன்று.—35.

19 ருஷ்யக் கவிஞர் நி. அ. நெக்ராசவின் ''கருணை கொண்ட கவிஞர் அருட் பேறு பெற்றவர்'' என்ற கவிதையிலிருந்து தரப்படும் மேற்கோள்.—40.

20 ருஷ்ய எழுத்தாளர் நி. வ. கோகலின் மடிந்த ஆன்மாக்கள் என்ற நவீனத்தில் வரும் பாத்திரம்.—41.

[21] ஸ்நாமியா த்ருதா (''உழைப்புக் கொடி'') — சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் பெத்ரொகிராத் கமிட்டியினது நாளேடு. 1917 ஆகஸ்டு 23 (செப்டெம்பர் 5) முதல் 1918 ஜூலை வரை வெளிவந்தது.—44.

[22] வோல்யா நரோதா (''மக்கள் சித்தம்'') — வலதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் நாளேடு. 1917 ஏப்ரல் 29 முதல் நவம்பர் வரை பெத்ரொகிராதில் வெளிவந்தது.

யெதீன்ஸ்த்வோ (''ஒற்றுமை'')—மென்ஷிவிக் தற்காப்புவாதிகளின் கடைக்கோடியான வலதுசாரிக் குழுவின் பத்திரிகை. 1917 மார்ச்சு முதல் நவம்பர் வரை பெத்ரொகிராதில் வெளிவந்தது. 1917 டிசம்பர் முதல் 1918 ஜனவரி வரை நாஷே யெதீன்ஸ்த்வோ (''நமது ஒற்றுமை'') என்ற பெயரில் வெளிவந்தது. இடைக்கால அரசாங்கத்திற்கு ஆதரவு காட்டி, முதலாளித்துவ வர்க்கத்தினருடன் கூட்டுச் சேர்ந்து கொள்ள வேண்டும் என்றும், ''முழு வெற்றி பெறும் வரை'' ஏகாதிபத்தியப் போர் தொடர்ந்து நடக்க வேண்டும் என்றும் கோரியது.—49.

[23] 1917 ஏப்ரல் 4 குறித்துப் பேசுகையில் லெனின், ''இந்தப் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் கடமைகள் பற்றி'' (ஏப்ரல் ஆய்வுரைகள்) என்ற தமது கட்டுரையைக் குறிப்பிடுகிறார்.—52.

[24] மென்ஷிவிக்-சர்வதேசியவாதிகள் — மென்ஷிவிக் கட்சியில் ஒரு சிறு பிரிவினர். முதல் உலகப் போரின் போது முரண்பாடு மிக்க சர்வதேசியவாத, மையவாத போக்கை அனுசரித்தவர்கள். சமூக - தேசியவெறியர்களைக் கண்டனம் செய்து வந்த இவர்கள் நிறுவன வழியில் அவர்களிடமிருந்து முறித்துக் கொள்ள அஞ்சினார்கள். போர், சமாதானம், புரட்சி ஆகியவை பற்றி போல்ஷிவிக் கட்சி கடைப்பிடித்து வந்த லெனினியப் போர்த்தந்திரத்தின் அடிப்படைக் கூறுகளை எதிர்த்தவர்கள்.—54.

[25] தீத் தீத்திச் புருஸ்கோவ் — அ. நி. ஒஸ்திரோவ்ஸ்கியின் ''அயலார் தொல்லையைத் தனதாகக் கொள்ளுதல்'' எனும் நகைச்சுவை நாடகத்தில் வரும் முரட்டுப் பிடிவாத வியாபாரி. இந்தப் பெயர் இப்போது இவ்வியல்பைக் குறிக்கும் பொதுப் பெயராகி விட்டது.—62.

[26] *1870-1871ல் பிரெஞ்சு-பிரஷ்யப் போரின் போது செதான் நகருக்கு அருகில் மூன்றாவது நெப்போலியன் தலைமையில் பிரெஞ்சு சேனை அப்படியே சுற்றி வளைக்கப் பட்டுச் சிறைப் பிடிக்கப்பட்டது.—62.*

[27] இஸ்வேஸ்தியா—*நாளேடு. 1917 பிப்ரவரி 28 (மார்ச் 13)ல் வெளிவரத் தொடங்கி முதலில்* இஸ்வேஸ்தியா பெத்ரொகிராத்ஸ்கவோ சோவேத்தா ரபோச்சிஹ் இ ஸல்தாத்ஸ்கிஹ் தெப்புத்தாத்தவ் *(''தொழிலாளிகள், படையாட்கள் பிரதிநிதிகளது பெத்ரொகிராத் சோவியத்தின் செய்திகள்''), பிறகு* இஸ்வேஸ்தியா த்ஸெந்திரால்னவோ இஸ்பல்னீத்தெல்னவோ கமித்தேத்தா சோவேத்தவ் ரபோச்சிஹ் இ ஸல்தாத்ஸ்கிஹ் தெப்புத்தாத்தவ் *(''தொழிலாளிகள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்துகளின் மத்திய செயற் குழுவின் செய்திகள்'') என்ற பெயர்களுடன் வெளிவந்தது. இப்பத்திரிகை மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு - புரட்சியாளர்களின் பிடியில் இருந்தது. அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு இது சோவியத் ஆட்சியதிகாரத்தின் குரலாகியது.—68.*

[28] ''கூட்டில் அடைந்த மனிதர்'' — *இத்தலைப்பிலுள்ள சேகவ் சிறு கதையின் தலைமைப் பாத்திரம். புதியவற்றைக் கண்டதும் பயந்து நடுங்கும் குறுகிய மனப்பான்மையுள்ள நபரைக் குறிக்கும் தொடராக வழங்கி வருகிறது.—82.*

[29] *அரசியல் நிர்ணய சபை கூட்டப்படுவதாய் இடைக்கால அரசாங்கம் 1917 மார்ச் 2 (15)ல் அறிவித்தது. தேர்தல்களை 1917 செப்டம்பர் 17 (30)ல் நடத்துவது என்று நிர்ணயிக்கப் பட்டது. ஆனால் விரைவிலேயே தேர்தல்களை நவம்பர் 12 (25)க்கு ஒத்தி வைப்பதாய் அறிவிக்கப் பட்டது. அரசியல் நிர்ணய சபை சோவியத் அரசாங்கத்தால் 1918 ஜனவரி 5 (18)ல் பெத்ரொகிராதில் கூட்டப்பட்டது. மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்கு முன்பு தயாரிக்கப்பட்ட வாக்காளர் பட்டியலின்படியே தேர்தல்கள் நடந்தன. சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட சமாதானம், நிலம், சோவியத்துகளின் கைக்கு ஆட்சி மாறியது பற்றிய அரசாணைகளை அரசியல் நிர்ணய சபை ஏற்றுக் கொள்ள மறுத்ததால், அனைத்து ருஷ்யாவின் மத்தியச் செயற்குழுவின் தீர்மானத்தின்படி 1918 ஜனவரி 6 (19)ல் இச்சபை கலைக்கப்பட்டது.—89.*

30 **வாந்தே** — *பிரான்சில் ஒரு மாவட்டம். 18ஆம் நூற்றுண்டு பிரெஞ்சு முதலாளித்துவப் புரட்சியின் போது எதிர்ப்புரட்சியின் பிறப்பிடமாக விளங்கியது. இப்போது இது எதிர்ப்புரட்சிக்கு மறுபெயராக வழங்கப் படுகிறது.—91.*

31 **துருதொவிக்குகள்** *(உழைப்பாளர் குழு)—குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகள். அரசாங்க டூமாவில் 1906 ஏப்ரலில் அமைக்கப்பட்ட சிறு கோஷ்டியைச் சேர்ந்த விவசாயிப் பிரதிநிதிகள் இவர்கள். முதல் உலகப் போரின் போது, துருதொவிக்குகள் தேசியவெறிப் போக்கினை அனுசரித்தனர். 1917ல் ''மக்கள் சோஷலிஸ்டுகளின்'' கட்சியுடன் இணைந்து கொண்டு முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்துக்கு முழு ஆதரவளித்தனர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்பு முதலாளித்துவ எதிர்ப்புரட்சியாளர்களுடன் சேர்ந்து கொண்டனர்.—98.*

32 **''நிதானமும் ஒழுங்கும்''** — *அ. செ. கிரிபயேதவின் மதிநுட்பத்தால் விளைந்த வினை எனும் நகைச்சுவை நாடகத்தில் வரும் பதவி வேட்டையிலும் காக்காய் பிடிப்பதிலும் திறமை வாய்ந்த பாத்திரமாய் வரும் மொல்ச்சாலின் தனக்குரிய இரு சிறப்புகளையும் எடுத்துரைப்பதற்குக் கையாளும் சொற்கள் இவை. மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தினரையும் சமூக - சந்தர்ப்பவாதிகளையும் சித்திரிக்க லெனின் அடிக்கடி இச்சொற்களை எடுத்தாளுகிறுர்.—106.*

33 *இவ்வாசகத்தில் காணப்படும் தேதிகளின் மூலம் லெனின் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகிறுர்: பிப்ரவரி 28 (மார்ச் 13) — பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி நடந்த நாள்; செப்டம்பர் 30 (அக்டோபர் 13)— அரசியல் நிர்ணய சபை கூடுவதற்கு இடைக்கால அரசாங்கம் முதலில் நிர்ணயித்த நாள்; 1917 நவம்பர் 28 (டிசம்பர் 11)—அரசியல் நிர்ணய சபை கூடுவது இத்தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது.—111.*

34 *மென்ஷிவிக் சுகானவின் சொற்களை லெனின் இங்கு எடுத்துக் கூறுகிறுர். அனைத்து ருஷ்யாவின் மத்திய செயற்குழுவையும் பெத்ரொகிராத் பாட்டாளிகள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்தையும் சேர்ந்த போல்ஷிவிக் பிரிவு 1917 ஆகஸ்டிலிருந்து ஸ்மோல்னி கழகத்தின் கட்டிடத்தில் செயல்பட்டு வந்தது. அக்டோ*

பரில் புரட்சி இராணுவக் கமிட்டியும் இங்கு செயல்பட ஆரம்பித்தது.—*112*.

35 சோவியத் அரசாங்கத்தின் உடனடிப் பணிகள் என்ற லெனினது நூல் கையெழுத்துப் பிரதியில் தற்போது சோவியத் அரசாங்கத்தின் முன்னுள்ள பணிகளைப் பற்றிய ஆய்வுரைகள் என்பதாகக் குறிக்கப்பட்டது.

*1918* ஏப்ரல் *26*ல் நடந்த கட்சியின் மத்திய கமிட்டி கூட்டத்தில் லெனினது இந்த ஆய்வுரைகள் விவாதிக்கப் பட்டன. மத்திய கமிட்டி இவற்றை ஏகமனதாக அங்கீகரித்து பிராவ்தாவிலும் இஸ்வேஸ்தியாவிலும் கட்டுரையாக இவற்றைப் பிரசுரிப்பதென்றும் தனிப் பிரசுரமாக வெளியிடுவதென்றும் தீர்மானித்தது. *1918*ல் பத்துக்கும் அதிகமான பதிப்புகளில் இப்பிரசுரம் வெளிவந்தது. அதே ஆண்டில் நியூயார்க்கில் ஆங்கிலத்திலும் ஜினீவாவில் பிரெஞ்சு மொழியிலும் இது வெளியிடப் பட்டது. இந்த நூலின் சுருக்கம் ஜெர்மன் மொழியில் பிளாட்டனால் பதிப்பிக்கப்பட்டு *Am Tage nach der Revolution* (''புரட்சிக்கு அடுத்த நாள்'') என்ற தலைப்பில் ஜூரிச்சில் வெளிவந்தது.—*113*.

36 பிரேஸ்த் சமாதான ஒப்பந்தம் இங்கு குறிப்பிடப்படுகிறது. சோவியத் ருஷ்யாவிற்கும் நால்வர் கூட்டணிக்கும் (ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, பல்கேரியா, துருக்கி) இடையில் *1918* மார்ச் *3*ல் பிரேஸ்த்-லித்தோவ்ஸ்கில் கையெழுத்தான உடன்பாடு, சோவியத்துகளின் அனைத்து ருஷ்யாவின் நான்காவது சிறப்புக் காங்கிரசால் அங்கீகரிக்கப்பட்டது. சமாதான நிபந்தனைகள் சோவியத் ருஷ்யாவிற்கு மிகவும் பாதகமாய் இருந்தன. உடன்பாட்டின்படி போலந்தும் அனேகமாய் பால்டிக் பிரதேசம் அனைத்தும் பேலோருஷ்யாவின் ஒரு பகுதியும் ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரியின் கட்டுப்பாட்டில் விடப்பட்டன. சோவியத் ருஷ்யாவிலிருந்து உக்ரேனியா பிரிக்கப் பட்டு ஜெர்மனியின் சார்பு அரசாக மாற்றப் பட்டது. கார்ஸ், பத்தூம், அர்தகான் ஆகிய நகரங்கள் துருக்கியின் வசம் விடப்பட்டன. *1918* ஆகஸ்டில் கொள்ளைக்காரக் கோரிக்கைகள் அடங்கிய இன்னும் ஓர் உடன்பாட்டையும் நிதி ஒப்பந்தம் ஒன்றையும் சோவியத் ருஷ்யாவின் மீது ஜெர்மனி திணித்தது.

ஜெர்மனியில் *1918* நவம்பரில் புரட்சி நடைபெற்று, முடியாட்சி வீழ்த்தப்பட்டபின், *1918* நவம்பர் *13*ல் அனைத்து ருஷ்யாவின் மத்தியச் செயற்குழு அநியாய

மான, கொள்ளைக்கார பிரேஸ்த் ஒப்பந்தத்தை நிரா கரித்தது.—113.

[37] 1917 அக்டோபர் 26 (நவம்பர் 8)ல் வெளியிடப் பட்ட நிலம் பற்றிய அரசாணையை லெனின் இங்கு குறிப் பிடுகிருர். இந்த அரசாணை பிரபுக்களின் நிலங்களைப் பறிமுதல் செய்து நிலம் தனியார் உடைமையாக இருப்பதை ஒழித்தது.—120.

[38] 1793ஆம் ஆண்டு—பிரான்சில் முதலாளித்துவ வர்க்கத் தினரின் மிகவும் புரட்சிகரமான பகுதியோரது சர்வாதி காரமாகிய ஜாக்கோபின் சர்வாதிகாரம் நிறுவப்பட்ட ஆண்டு.

1871ஆம் ஆண்டு—வரலாற்றிலேயே முதன் முறை யாகப் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரமாய் அமைந்த பாரிஸ் கம்யூன் நிறுவப்பட்ட ஆண்டு.—123.

[39] மக்கள் கமிசார் அவை 1917 நவம்பர் 18 (டிசம்பர் 1)ல் லெனின் ஆலோசனைப்படி, ''மக்கள் கமிசார்களுக்கும் உயர் மட்டப் பணியாளர்களுக்கும் அதிகாரிகளுக்கு மான சம்பளம்'' பற்றிய தீர்மானம் நிறைவேற்றியது. இத்தீர்மானத்தின்படி மக்கள் கமிசார்களின் உயர்ந்த பட்ச சம்பளம் 500 ரூபிள் என்றும், குடும்பத்தைச் சேர்ந்த உழைக்க இயலா உறுப்பினர் ஒவ்வொருவருக் கும் 100 ரூபிள் கூடுதலாகத் தருவது என்றும் முடிவு செய்யப் பட்டது. இது ஏறத்தாழ தொழிலாளியின் சராசரி சம்பளத்துக்குச் சமமானது. 1918 ஜனவரி 2 (15)ல் தொழில் வல்லுனர்களுக்கு இந்த வரம்புக்கு மேல் ஊதியம் கொடுக்கலாகாதெனத் தடை விதிக்க வில்லை என்று மக்கள் கமிசார் அவை விளக்கம் தந்தது. இதன் மூலம் விஞ்ஞான, தொழில் நுட்ப வல்லுனர் களுக்கு மேலும் உயர்ந்த சம்பளம் கொடுப்பதற்கு வகை செய்யப்பட்டது.—130.

[40] அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு வேலை வீதக் கூலிக்குப் பதில் நேர வீதக் கூலி அனேகமாய் எங்கும் நடைமுறைக்கு வந்தது. இதனுல் உழைப்பின் உற்பத்தித் திறனும், உழைப்புக் கட்டுப்பாடும் பாதிக்கப் பட்டன.

உழைப்பின் அளவுக்கும் தரத்துக்கும் ஏற்ப வினியோகிப் பதென்ற சோஷலிசக் கோட்பாட்டுக்கு முற்றிலும் இசைவான வேலை வீத ஊதிய முறை நாட்டுடைமை யாக்கப்பட்ட தொழில் நிலையங்களில் முதலில் நடை

முறைக்குக் கொண்டு வரப்பட்டது; பிறகு இது தொழில் துறை பூராவிலும் விரிவாக அனுசரிக்கப்படலாயிற்று.— 146.

41 **இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள்**—இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் (சர்வதேசியவாதிகள்) கட்சியின் உறுப்பினர்கள். இக்கட்சி 1917 நவம்பர் 19-28 (டிசம்பர் 2-11)ல் நடந்த அதன் அனைத்து ருஷ்யக் காங்கிரசில் நிறுவன வடிவம் பெற்றது. இதற்கு முன்பு இவர்கள் சோஷலிஸ்டு - புரட்சியாளர் கட்சியில் (குறிப்பு 4ஐப் பார்க்கவும்) இடது சாரியாகச் செயல் பட்டு வந்தனர். உலக ஏகாதிபத்தியப் போரின் போது இந்த இடது சாரி உருவாகியது. இடதுசாரி சோஷலிஸ்டு - புரட்சியாளர்கள் சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசில் எல்லா முக்கியப் பிரச்சினைகளிலும் போல்ஷிவிக்குகளுடன் சேர்ந்து நின்று வாக்களித்தனர். ஆயினும், சோவியத் அரசாங்கத்தில் பங்கேற்றுக் கொள்ளும்படி போல்ஷிவிக்குகள் விடுத்த அழைப்பை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டனர்.

மிகுந்த ஊசலாட்டத்திற்குப் பிறகு, விவசாயிகளிடையே தமது செல்வாக்கைக் காத்துக் கொள்ள விரும்பி இவர்கள் போல்ஷிவிக்குகளுடன் உடன்பாட்டுக்கு வந்து மக்கள் கமிசார் அவையில் இடங்கள் பெற்றனர். போல்ஷிவிக்குகளுடன் சேர்ந்து பணியாற்ற வந்த இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், சோஷலிச நிர்மாணத்தின் அடிப்படைப் பிரச்சினைகள் பலவற்றில் அவர்களுடன் கருத்து வேறுபாடு கொண்டு, பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்திற்கு எதிராகப் போராடினர். 1918 ஜனவரி-பிப்ரவரியில் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் மத்திய கமிட்டி பிரேஸ்த் சமாதான உடன்படிக்கைக்கு எதிராகப் போராட்டம் துவக்கியது. உடன்பாடு கையெழுத்தாகி 1918 மார்ச்சில் சோவியத்துகளின் நான்காவது காங்கிரசால் அங்கீகரிக்கப்பட்ட பிறகு இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மக்கள் கமிசார் அவையிலிருந்து வெளியேறினர். ஆயினும் மக்கள் கமிசார் அவையின் குழுக்களிலும் மற்றும் வட்டார ஆட்சி உறுப்புகளிலும் தொடர்ந்து அவர்கள் செயல்பட்டு வந்தனர். கிராமங்களிலும் சோஷலிசப் புரட்சி வளர்ச்சியுற்ற போது, இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மத்தியில் சோவியத்-எதிர்ப்பு உணர்ச்சிகள் அதிகமாயின. 1918 ஜூலையில் இடதுசாரி

சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் மத்திய கமிட்டி, மாஸ்கோவிலுள்ள ஜெர்மன் தூதுவரைக் கொலை செய்ய ஏற்பாடு செய்தது. இதன் மூலம் சோவியத் ருஷ்யாவிற்கும் ஜெர்மனிக்கும் இடையில் போரைத் துவக்கிவிட அது முயன்றது. சோவியத் அரசுக்கு எதிராக அது ஆயுதந் தாங்கிய கலகத்தைத் துவக்கியது. கலகம் ஒடுக்கப் பட்ட பின்பு, சோவியத்துகளின் ஐந்தாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களில் அக்கட்சித் தலைமையின் கருத்துக்களை ஏற்றுக் கொண்டவர்களை சோவியத்துகளில் இருந்து வெளியேற்றுவதென்று முடிவு செய்தது.—162.

[42] வ்பெரியோத் ("முன்னேக்கி") — 1917-1919ல் விட்டு விட்டு வெளிவந்த மென்ஷிவிக்கு நாளேடு.—165.

[43] நாஷ் வெக் ("நமது யுகம்") — ரேச் என்ற பத்திரிகையின் பெயர்களில் ஒன்று (பார்க்கவும்: குறிப்பு 15).—165.

[44] முதல் ருஷ்யப் புரட்சியின் போது 1905 அக்டோபரில் நடந்த அனைத்து ருஷ்ய அரசியல் வேலைநிறுத்தமும், எதேச்சாதிகாரத்தை வீழ்த்தி ருஷ்யாவில் முதலாளித் துவக் குடியரசை உருவாக்கிய 1917 பிப்ரவரி முதலாளித் துவ-ஜனநாயகப் புரட்சியும், 1917 அக்டோபர் 25 (நவம்பர் 7) சோஷலிசப் புரட்சியும் இங்கு குறிப்பிடப் படுகின்றன.—168.

[45] டூரிங்குக்கு மறுப்பு எனும் எங்கெல்சின் நூலைக் குறிப் பிட்டு, அதிலிருந்து மேற்கோள் தருகிருர் லெனின்.—172.

[46] "இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்" — கட்சி விரோதக் குழுவினர். ஜெர்மனியுடன் சமாதான உடன்படிக்கை (பிரேஸ்த் சமாதானம்) செய்து கொள்ளும் பிரச்சினை சம்பந்தமாய் 1918ல் தோன்றிய குழு இது. புரட்சிகரப் போர் பற்றிய இடதுசாரி வாய்ச்சவடால்களின் மறைவில் "இடதுசாரிக் கம்யூனிஸ்டுக்" குழு, இன்னும் சேனை ஒன்றினை உருவாக்கிக் கொண்டிராத சோவியத் குடியரசை, ஏகாதிபத்திய ஜெர்மனியுடன் சண்டையில் இழுத்து விட்டு, அதன் மூலம் சோவியத் ஆட்சியையே அழிவுக்கு உள்ளாக்கும் அசட்டுத் துணிச்சல் கொள்கையைக் கடைப்பிடித்தனர். ஜெர்மனியுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டு இதன் மூலம் இளம் சோவியத் குடியரசை அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காக மத்திய கமிட்டியினுள் திரோத்ஸ்கியையும் "இடது

சாரிக் கம்யூனிஸ்டுகளேயும்'' எதிர்த்து லெனினும் அவரது ஆதரவாளர்களும் கடுமையான போராட்டம் நடத்த வேண்டியிருந்தது.

கம்யூனிஸ்ட்—கட்சி விரோத ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுக்'' குழுவின் வாரப் பத்திரிகை. 1918 ஏப்ரல் 20 முதல் ஜூன் வரை மாஸ்கோவில் (4 இதழ்கள்) வெளிவந்தது.—180.

47 ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) ஏழாவது சிறப்புக் காங்கிரசை லெனின் இங்கு குறிப்பிடுகிருர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின் கட்சியின் முதலாவது காங்கிரசான இது, பெத்ரொகிராதில் 1918 மார்ச் 6-8ல் நடைபெற்றது. ஜெர்மனியுடன் செய்து கொண்ட சமாதான ஒப்பந்தம் பற்றி கட்சிக்குள் கடுமையான போராட்டம் நடந்து வந்ததால், இப்பிரச்சினையை இறுதியாகத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இந்தக் காங்கிரஸ் கூட்டப்பட்டது.

காங்கிரசின் பணிகள் அனைத்தையும் லெனின் வழிநடத்திஞர். மத்திய கமிட்டியின் அரசியல் அறிக்கையை அவர் சமர்ப்பித்தார். மத்திய கமிட்டியின் அறிக்கையை ஏகமனதாகக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டது. பிரேஸ்த் சமாதான ஒப்பந்தத்தை அங்கீகரிப்பதின் அவசியத்தை எடுத்துரைத்து, போரையும் சமாதானத்தையும் பற்றி லெனின் வரைந்திருந்த தீர்மானம் ஏற்கப்பட்டது. தீர்மானத்துக்கு ஆதரவான வாக்குகள் 30, எதிரானவை 12, வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கியோர் 4 பேர்.

மார்ச் 14-16ல் நடைபெற்ற சோவியத்துகளின் அனைத்து ருஷ்யாவின் நான்காவது சிறப்புக் காங்கிரஸ், பிரேஸ்த் சமாதான உடன்படிக்கையை உறுதி செய்தது.—182.

48 சோவியத்துகளின் அனைத்து ருஷ்யாவின் நான்காவது சிறப்புக் காங்கிரசினது கம்யூனிஸ்டுகளின் பிரிவில் பிரேஸ்த் சமாதான ஒப்பந்தத்தை உறுதி செய்யும் தீர்மானம் குறித்து 1918 மார்ச் 13ல் நடைபெற்ற வாக்கெடுப்பில் ஆதரவாக 453 வாக்குகளும் எதிராக 36 வாக்குகளும் பதிவாயின.—182.

49 1918 மார்ச் 7ல் கட்சியின் ஏழாவது சிறப்புக் காங்கிரசில் தாம் சமர்ப்பித்த மத்திய கமிட்டி அரசியல் அறிக்கையிலிருந்து பின்கண்ட பகுதியை லெனின் குறிப்பிடு

*கிறார்: ''... அவர்களது செய்தியேடு* **கம்யூனிஸ்ட்** *என்னும் பெயர் தரித்துள்ளது. ஆனல்* **ஷ்லாஹ்திச்** *என்னும் பெயரே அதற்குப் பொருத்தமான பெயர். ஏனெனில் அது, மடியும் தருணத்தில் கையில் வாள் ஏந்தி எழிற் கோலம் காட்டி, 'சமாதானம் மனக்கேடானது, போர் தான் மாண்புக்குரியது' என்று கூறிய ஷ்லாஹ்திச்சின் பார்வை கொண்டல்லவா யாவற்றையும் உற்று நோக்குகிறது.''*

**கம்யூனிஸ்ட்**—*''இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்'' கோஷ்டியின் ஏடாக, ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் பெத்ரொகிராத் கமிட்டி, பெத்ரொகிராத் மாவட்டக் கமிட்டி ஆகியவற்றின் சார்பாக 1918 மார்ச் 5 முதல் 19 வரை வெளிவந்தது. பெத்ரொகிராத் அனைத்து நகரக் கட்சி மாநாட்டுத் தீர்மானத்தின் படி இது நிறுத்தப் பட்டது.—186.*

50 **நொஸ்திரியோவ்வாதம்** — *கோகலின்* **மடிந்த ஆன்மாக்கள்** *என்னும் நவீனத்தில் வரும் பாத்திரமான நொஸ்திரியோவ் என்பவரின் பெயரிலிருந்து வந்த சொல்; வாய்ச்சவடாலையும், தற்பெருமையையும் குறிப்பதாகும்.—189.*

51 **பிரான்சிலும் ஜெர்மனியிலும் விவசாயிப் பிரச்சினை** *என்னும் நூலில் எங்கெல்ஸ் தந்திருக்கும் மார்க்சின் வார்த்தைகளை லெனின் இங்கு மேற்கோள் காட்டுகிறார்.—210.*

52 *தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது பெத்ரொகிராத் சோவியத்தின் செயற்குழுக் கூட்டத்தில் 1917 ஜூன் 11 (24)ல் பேசிய தெசெரெத்தேலி, போல்ஷிவிக்குகளுக்கு ஆதரவான பெத்ரொகிராத் தொழிலாளர்களிடமிருந்து ஆயுதங்களைப் பறிப்பதற்குத் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என்று அறிவித்தார்.—219.*

53 **லீபெர்டான்கள்**—*எம். இ. லீபெர், எஃப். இ. டான் இவ்விரு மென்ஷிவிக்குத் தலைவர்களையும் அவர்களது ஆதரவாளர்களையும் குறிக்கும் கேலிப் பெயர்.* **லீபெர்டான்** *என்று தலைப்பிட்டு தெம்யான் பேத்னி எழுதிய கிண்டல் கதை வெளியானதைத் தொடர்ந்து இந்தக் கேலிப் பெயர் இவர்களுக்கு உரியதாகியது.—219.*

54 *வ.லி. புஷ்கின் எழுதிய அங்கதச் செய்யுள் ஒன்றிலிருந்து லெனின் இங்கு மேற்கோள் தருகிறார். பண்டைய*

கிரேக்க புராண மரபில் ஞாயிற்றுக் கடவுளும், கலைகளின் தேவனுமான ஃபேபசுக்கு மட்டரகக் கவிஞன் ஒருவன் தனது கவிதையைச் சமர்ப்பணம் செய்வதை புஷ்கின் இந்தச் செய்யுளில் கேலி செய்கிறுர். செய்யுளின் கடைசி வரிகள் வருமாறு:

கொட்டாவி விட்டுப் படித்தவாறே கேட்டான் ஃபேபஸ்:

''கவிஞனு இவன்? வயது என்ன சொல்லு
வெகுகாலமாய் இப்படியா கவி பாடுகிறுன் இவன்?''
''பதினைந்து நிரம்பியவன்'' என்றுள் எராதா.
''பதினைந்துதானு?''—''மூன்று ஐந்தேதான், அதிகமில்லை, தேவா.''
''அப்படியானுல் மிளாறுதான் இவனுக்குரிய சன்மானம்!''—*223.*

[55] புர்சாக்கி—மதப் பள்ளிகளின் மாணுக்கர்கள் இவர்களின் முரட்டுப் பழக்கங்களை எழுத்தாளர் பொமியலோவ்ஸ்கி புர்சா எழுத்தோவியம் என்னும் நூலில் சித்திரிக்கிறுர். புர்சா என்பது ஜார் கால ருஷ்யாவின் மதப் பள்ளி மாணவர் விடுதி.—*228.*

[56] அமெரிக்கத் தொழிலாளர்களுக்கு எழுதிய கடிதம் ஆங்கில மொழியில், *1918* டிசம்பரில் (சிறிது சுருக்கப் பட்டு), நியூயார்க்கில் அமெரிக்க சோஷலிஸ்டுக் கட்சியினது இடதுசாரியின் ஏடாகிய *The Class Struggle* (''வர்க்கப் போராட்டம்'') என்பதிலும், பாஸ்டனில் *The Revolutionary Age* (''புரட்சி யுகம்'') என்னும் வாரப் பத்திரிகையிலும் வெளிவந்தது. ஜான் ரீடும், சேன் காதயாமாவும் இந்த வாரப் பத்திரிகையின் ஆசிரியர் குழுவில் இருந்தனர். பின்னர் இது தனிப் பிரசுரமாக வெளியிடப்பட்டது. அமெரிக்க, மேற்கு ஐரோப்பியப் பத்திரிகைகளில் பன்முறை பிரசுரிக்கப்பட்டது.—*230.*

[57] கியூபாவிலும் ஃபிலிப்பைன் தீவுகளிலும் ஸ்பானியக் காலினியாதிக்கவாதிகளுக்கு எதிராய் நடைபெற்ற தேசிய விடுதலை இயக்கங்களைத் தமது நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் எண்ணத்துடன், *1898* ஏப்ரலில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் ஸ்பெயினுக்கு எதிராகப் போர் தொடுத்தனர். ஃபிலிப்பைனை ஒரு குடியரசாகப் பிரகடனம் செய்த ஃபிலிப்பைன் மக்களுக்கு ''உதவி புரிவதாகச்'' சொல்லி அமெரிக்கா தனது துருப்புகளை ஃபிலிப்பைன் தீவுகளில் இறக்கியது.

போரில் தோல்வியடைந்த ஸ்பெயின் 1898 டிசம்பர் 10ல் பாரிசில் கையெழுத்தான சமாதான ஒப்பந்தத்தின் படி அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் கையில் ஃபிலிப் பைனை ஒப்படைத்தது. 1899 பிப்ரவரியில் ஃபிலிப்பைன் குடியரசுக்கு எதிராக துரோகத்தனமாய் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் இராணுவ நடவடிக்கைகளை மேற் கொண்டனர். ஆக்கிரமிப்பாளருக்கு எதிராய் ஆரம்ப மான கொரில்லாப் போர் ஃபிலிப்பைன் தீவுகள் எங் கும் பரவியது. 1901ல் ஃபிலிப்பைன் தேசிய விடுதலை இயக்கம் நசுக்கப் பட்டது. ஃபிலிப்பைன் தீவுகள் அமெரிக்காவின் காலனியாய் மாறின.—232.

58 1917 அக்டோபர் 25 (நவம்பர் 7)ல் சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசால் ஏற்கப் பட்ட "சமாதான அரசாணை" இங்கு குறிப்பிடப்படு கிறது.—235.

59 அமெரிக்க உள்நாட்டுப் போர் (1861 - 1865) — தென் மாநில அரசுகளுக்கும் வட மாநில அரசுகளுக்கும் இடையில் நடைபெற்ற போர். அடிமை முறையைப் பாதுகாப்பதற்கும் அதனை மேலும் பரவச் செய் வதற்கும் முயன்ற அடிமையுடைமையாளராகிய தென் பகுதியை எதிர்த்து வடபகுதி போராடியது.—243.

60 *Appeal to Reason* ("பகுத்தறிவுக்கு வேண்டுகோள்")— அமெரிக்க சோஷலிஸ்டுகளின் பத்திரிகை. 1895ல் கான்சாஸ் மாநிலத்தின் ஜிரார்த் நகரில் தொடங்கப் பட்டது. சோஷலிசக் கருத்துக்களுக்காக இது பிரசாரம் நடத்திவந்தது, தொழிலாளர்களிடையே செல்வாக்கு பெற்றிருந்தது. ஏகாதிபத்திய உலகப் போரின் போது இப்பத்திரிகை சர்வதேசிய நிலையை அனுசரித்தது.

1915 செப்டம்பர் 11ல் யூ. டெப்சின் கட்டுரை ஒன்று இதில் பிரசுரிக்கப் பட்டது. தமது நினைவிலிருந்து லெனின் இந்தக் கட்டுரையின் தலைப்பைக் குறிப் பிட்டிருக்க வேண்டும். இக்கட்டுரையின் தலைப்பு: *When I Shall Fight* ("எப்போது நான் போராட வேண்டும்"). —244.

61 இங்கு குறிக்கப்படுவது 17ஆம் நூற்றாண்டில் நடந்த ஆங்கிலேய முதலாளித்துவப் புரட்சியும், 18ஆம் நூற்றாண்டு முடிவில் நடந்த பிரெஞ்சு முதலாளித்துவப் புரட்சியும்.—245.

[62] 1917 அக்டோபர் 26 (நவம்பர் 8)ல் பிறப்பிக்கப்பட்ட நிலம் பற்றிய அரசாணை நிலப்பிரபுக்களுடைய நிலங்களைப் பறிமுதல் செய்தது, நிலத்தில் தனியார் உடைமையை ஒழித்து, சோவியத் ருஷ்யாவில் நிலத்தை நாட்டுடைமையாக்கியது.—249.

[63] ஜூபிடரும் மினர்வாவும்—பண்டைய ரோமானியக் கடவுள்கள். ஜூபிடர்—ஆகாயம், ஒளி, மழை, இடி ஆகியவற்றின் தேவன்; பின்னர் ரோமானியர் பேரரசின் தலைமைத் தேவன். மினர்வா—போர், கைத்தொழில், விஞ்ஞானம், கலைகள் ஆகியவற்றின் தேவி. ஜூபிடரின் தலையில் இருந்து மினர்வா அவதரித்ததாகக் கூறுகிறது புராணம்.—251.

[64] 1918 ஜூலை 10ல் சோவியத்துகளின் ஐந்தாவது அனைத்து ருஷ்யாவின் காங்கிரஸ் ருஷ்யாவின் சோவியத் கூட்டாட்சி சோஷலிசக் குடியரசின் அரசியல் சட்டத்தை அங்கீகரித்தது. இந்த அரசியல் சட்டத்தை வகுத்தளிப்பதில் தலைமையான பங்கு லெனினுக்கு உரியதாகும்.—251.

[65] இரண்டாவது அகிலத்தின் சித்தாந்தத் தலைவராய் விளங்கிய காவுத்ஸ்கி பாட்டாளி வர்க்கப் புரட்சி பற்றிய மார்க்சியத் தத்துவத்தைத் திரித்துப் புரட்டிக் கொச்சைப்படுத்தியும், சோவியத் அரசை அவதூறு செய்தும் **பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்** என்னும் பிரசுரத்தை எழுதினார். லெனின் இதைப் படித்ததும் உடனே, 1918 அக்டோபர் தொடக்கத்தில் **பாட்டாளி வர்க்கப் புரட்சியும் ஓடுகாலி கவுத்ஸ்கியும்** என்னும் புத்தகத்தை எழுதத் தொடங்கினார்.—254.

[66] **பிராவ்தா** ("உண்மை") — சட்டபூர்வமான போல்ஷிவிக்கு நாளேடு. 1912 ஏப்ரல் 22 (மே 5)ல் இதன் முதல் இதழ் பீட்டர்ஸ்பர்கில் வெளிவந்தது. தொழிலாளர்கள் தம்மிடமிருந்து திரட்டித் தந்த நிதியைக் கொண்டு இந்த நாளேடு வெளியிடப் பட்டது. 40 ஆயிரம் பிரதிகள் அச்சாகி வந்தன. சில தனி இதழ்கள் 60 ஆயிரம் பிரதிகள் வரை அச்சாயின. தொழிலாளர் நாளேடு ஒன்றை ஆரம்பித்த பணி பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்களின் மகத்தான வரலாற்றுப் பணியாகுமென லெனின் குறிப்பிட்டார். கட்சிக்கும் மக்கட் பெருந் திரளினருக்கும் இடையே அன்றாடம் தொடர்பு அமைத்துத் தந்தது **பிராவ்தா**. தொழிலாளர் நிருபர்கள் பெரும் எண்ணிக்கையில் பத்திரிகைக்கு எழுதினார்கள். **பிராவ்தா**

வுக்கு லெனின் வழிகாட்டி வந்தார். அனேகமாய்த் தினசரி அவர் அதற்குக் கட்டுரைகள் எழுதினுர், அதன் ஆசிரியர் குழுவுக்கு ஆலோசனைகள் கூறினுர், அதை அவர் போர்குணம் கொண்ட புரட்சி ஏடாக்கினுர். கட்சியின் ஒழுங்கமைப்புப் பணிகளில் ஒரு கணிசப் பகுதி **பிராவ்தா** ஆசிரியர் குழுவின் மூலம் நடைபெற்றது.

**பிராவ்தா** போலீசாரின் தாக்குதலுக்குத் தொடர்ந்து இலக்காகி வந்தது. 1914 ஜூலை 8 (21)ல் பத்திரிகை மூடப்பட்டது. 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பின்புதான் அது மீண்டும் வெளியாகத் தொடங்கியது. இடைக்கால அரசாங்கம் அடக்குமுறையின் மூலம் அதை நசுக்க முயன்றது. இதனுல் பத்திரிகை பலமுறை தனது பெயரை மாற்றிக் கொண்டு வெளிவர வேண்டியதாயிற்று. 1917 அக்டோபர் 27 (நவம்பர் 9) முதல், இது மீண்டும் **பிராவ்தா** என்ற பெயரில் வெளிவரலாயிற்று. இப்போது இது சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்திய கமிட்டியின் ஏடாய் இருந்து வருகிறது.—254.

67 *The Socialist Review* (''சோஷலிஸ்டு விமர்சனம்'')—சீர்திருத்தவாத பிரிட்டிஷ் சுயேச்சைத் தொழிலாளர் கட்சியின் (குறிப்பு 70ஐப் பார்க்கவும்) மாதப் பத்திரிகை; லண்டனில் 1908 முதல் 1934 வரை வெளிவந்தது.—254.

68 **இரண்டாவது அகிலம்** — சோஷலிஸ்டுக் கட்சிகளின் சர்வதேச நிறுவனம், 1889ல் நிறுவப்பட்டது. ஏகாதிபத்திய சகாப்தம் தொடங்கியதும் இந்த நிறுவனத்தில் சந்தர்ப்பவாதப் போக்குகள் மேலோங்கின. 1914ல் உலகப் போர் மூண்ட போது இரண்டாவது அகிலத்தின் சந்தர்ப்பவாதத் தலைவர்கள் தத்தமது நாடுகளின் முதலாளித்துவ அரசாங்கங்களது ஏகாதிபத்தியக் கொள்கைக்குப் பகிரங்க ஆதரவு தெரிவித்தனர். அத்துடன் இரண்டாவது அகிலம் இறுதி எய்தியது.—254.

69 **ஃபேபியன்கள்** — 1884ல் நிறுவப்பட்ட பிரிட்டிஷ் சீர்திருத்தவாத நிறுவனமான ஃபேபியன் கழகத்தின் [Fabian Society] உறுப்பினர்கள். கி. மு. மூன்றும் நூற்றுண்டில் இருந்த ஃபேபியஸ் மாக்சிமஸ் என்ற ரோமானியப் படைத் தலைவனின் பெயரை இவர்கள் வைத்துக் கொண்டனர். இவன் ''குன்க்டேட்டர்'' (தாமதவாதி) என்று அழைக்கப் பட்டான். ஹனிபாலுக்கு எதிரான

போரில் முடிவுகட்டும்படியான சண்டையைத் தவிர்த்துக் கொண்டு காலம் கடத்தியதால் இவனுக்கு இந்தப் பெயர் வந்தது. ஃபேபியன் கழகத்தின் உறுப்பினர்களில் பெருவாரியானோர் விஞ்ஞானிகளும், எழுத்தாளர்களும், அரசியல்வாதிகளும் (சிட்னி வெபும், பீட்ரைஸ் வெபும், ராம்சே மாக்டொனல்டு, பர்னார்ட் ஷா போன்றோர்) ஆகிய முதலாளித்துவ அறிவுத்துறையினர் ஆவர். பாட்டாளிகளின் வர்க்கப் போராட்டம், சோஷலிசப் புரட்சி ஆகியவற்றின் அவசியத்தை அவர்கள் மறுத்தனர். முதலாளித்துவத்தில் இருந்து சோஷலிசத்திற்கு சமுதாயம் மாற்றமுறுவது சிறுச் சிறு சீர்திருத்தங்களின் மூலம் படிப்படியாகவே நடைபெற முடியுமென அவர்கள் அடித்துப் பேசினர். 1900ல் ஃபேபியன் கழகம் தொழிற் கட்சியுடன் இணைந்தது.—257.

70 பிரிட்டிஷ் சுயேச்சைத் தொழிற் கட்சி (The Independent Labour Party)—இங்கிலாந்தில் வேலைநிறுத்தப் போராட்டமும் தொழிலாளி வர்க்கம் முதலாளித்துவக் கட்சிகளைச் சாராது சுயேச்சையாகச் செயல்பட வேண்டுமென்ற இயக்கமும் வலுப் பெற்று வந்த காலத்தில், "புதுத் தொழிற் சங்கங்களின்" தலைவர்களால் 1893ல் நிறுவப்பட்ட சீர்திருத்தவாதக் கட்சி இது. "புதுத் தொழிற் சங்கங்களின்" உறுப்பினர்கள், பழைய தொழிற் சங்கங்கள் பலவற்றின் உறுப்பினர்கள், ஃபேபியன்களின் செல்வாக்கில் இருந்த அறிவுத்துறையினர், குட்டிமுதலாளித்துவப் பகுதியினர் ஆகியோரின் பிரதிநிதிகள் இக்கட்சியில் சேர்ந்தனர். முதலாளித்துவக் கட்சிகளிலிருந்து விடுபட்டு அரசியல் துறையில் சுயேச்சையாய் இயங்கும் கட்சி என்று உரிமை கொண்டாட்டிய போதிலும், "உண்மையில் சோஷலிசத்திலிருந்துமட்டும்தான் சுயேச்சையானதாய் இருந்தது, மிதவாதத்தை வெகுவாய்ச் சார்ந்து இருந்தது" என்று லெனின் குறிப்பிட்டார். முதல் உலகப் போரின் போது அது மையவாத நிலையை அனுசரித்தது, பின்னர் சமூக-தேசியவெறியர்களின் நிலைக்குச் சரிந்து சென்றது.—258.

71 1875 மார்ச் 18-28ல் பெபெலுக்கு எங்கெல்ஸ் எழுதிய கடிதம் இங்கு குறிப்பிடப்படுகிறது.—259.

72 செக்கோஸ்லோவாக்ப் படையினரது எதிர்ப்புரட்சிக் கலகம் இங்கு குறிப்பிடப்படுகிறது. மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டுப்-புரட்சியாளர்களின் தீவிரப் பங்குடன்

ஆன்டான்ட் ஏகாதிபத்தியவாதிகள் செக்கோஸ்லோவாக்கியப் படைகளின் இந்த எதிர்ப்புரட்சிக் கலகத்துக்கு ஏற்பாடு செய்தனர். ஆஸ்திரியா - ஹங்கேரிப் படைகளிலிருந்து போர்க் கைதிகளாகப் பிடிக்கப்பட்ட செக், ஸ்லோவாக் படையாட்களைக் கொண்டு, அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்கு முன்பு ருஷ்யாவில் செக்கோஸ்லோவாக்கியப் படைப் பிரிவு ஒன்று அமைக்கப் பட்டிருந்தது. இந்தப் படைப் பிரிவு ஆயுதங்களைச் சரணடைக்குமாயின், விளாதிவஸ்தோக் வழியாக ருஷ்யாவை விட்டு வெளியேறுவதற்கு சோவியத் அரசாங்கம் அனுமதி அளித்தது. ஆனால் படைப் பிரிவின் எதிர்ப்புரட்சித் தலைமை சோவியத் ருஷ்யாவுக்கு எதிராய் 1918 மே மாத முடிவில் ஆயுதமேந்திய கலகத்தைத் தூண்டிவிட்டது. வெள்ளைப் படையினரோடும் குலாக்குகளோடும் நெருங்கிய தொடர்பு கொண்டு, செக்குகளின் வெள்ளைப் படை யூரல், வோல்காப் பிரதேசம், சைபீரியா ஆகியவற்றில் கணிசமான பகுதியைக் கைப்பற்றி அங்கே முதலாளித்துவ ஆட்சியை மீண்டும் நிறுவியது. இப்படைப் பிரிவின் எதிர்ப்புரட்சித் தலைமையின் ஏமாற்று வேலைகளை உணர்ந்து கொண்ட படையாட்கள் பலரும் சோவியத் ருஷ்யாவிற்கு எதிராகப் போராட மறுத்துப் படைப் பிரிவை விட்டு வெளியேறினர். சுமார் 12 ஆயிரம் செக், ஸ்லோவாக் படையினர் செஞ்சேனையில் சேர்ந்து கொண்டார்கள்.

1919ல் செக்கோஸ்லோவாக் படைப் பிரிவின் கலகம் இறுதியாகத் தகர்க்கப்பட்டது.—262.

73 சிம்மர்வால்டிஸ்டுகள்—1915 செப்டம்பர் 5-8ல் சிம்மர்வால்டு நகரில் நடந்த முதலாவது சர்வதேச சோஷலிஸ்டு மகாநாட்டில் தோற்றுவிக்கப் பட்ட அமைப்பின் உறுப்பினர்கள். முதல் உலகப் போருக்கு எதிரான சர்வதேச இயக்கத்தின் வளர்ச்சியில் இந்த மாநாடு முதலாவது முன்னேற்றப் படியாகுமென லெனின் கூறினார். 11 ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த கட்சிகளில் இருந்தும் அமைப்புக்களில் இருந்தும் வந்திருந்த 38 பிரதிநிதிகள் இந்த மாநாட்டில் கலந்து கொண்டனர். ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் (போல்ஷிவிக்குகள்) கட்சி மத்திய கமிட்டியின் சார்பில் லெனின் இந்த மாநாட்டில் கலந்து கொண்டார்.

இந்த அமைப்புக்குள் போல்ஷிவிக்குகளின் தலைமையில் இருந்த சிம்மர்வால்டு இடதுசாரியினருக்கும் மாநாட்

டில் பெரும்பான்மையாய் இருந்த காவுத்ஸ்கிமையவாதிகளுக்கும் இடையில் போராட்டம் நடந்தது. சமூக-தேசியவெறியர்களுடன் சமரசம் செய்து கொள்ள வேண்டும் என்றும், இரண்டாவது அகிலத்தை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் என்றும் மையவாதிகள் கோரினர். சிம்மர்வால்டு இடதுசாரியினரோ சமூக-தேசியவெறியர்களுடன் முறித்துக் கொள்ள வேண்டும் என்றும், ஏகாதிபத்தியப் போருக்கு எதிராகப் புரட்சிகரப் போராட்டம் நடத்த வேண்டும் என்றும், புதிய புரட்சிகரப் பாட்டாளி வர்க்க அகிலம் அமைக்க வேண்டும் என்றும் கோரினர்.

1919 மார்ச்சில் கம்யூனிஸ்டு அகிலத்தின் முதல் காங்கிரஸ், சிம்மர்வால்டு அமைப்பு கலைக்கப் பட்டு விட்டதாகக் கருதுமாறு தீர்மானம் நிறைவேற்றியது.—264.

74 குறிப்பு 32ஐப் பார்க்கவும்.—266.

75 **லொங்கேயிஸ்டுகள்** — பிரெஞ்சுச் சோஷலிஸ்டுக் கட்சியில் சிறுபான்மைக் கோஷ்டியினராய் இருந்தவர்கள், ஜான் லொங்கேயின் ஆதரவாளர்கள். 1914-1918ஆம் ஆண்டுகளின் உலக ஏகாதிபத்தியப் போரின் போது இவர்கள் சமூக - தேசியவெறியர்கள்பால் இணக்கம் கொள்ளும் கொள்கையைப் பின்பற்றினர். புரட்சிகரப் போராட்டத்தைக் கைவிட்டு, ஏகாதிபத்தியப் போரில் ‘‘தாய்நாட்டுப் பாதுகாப்பு’’ நிலையை மேற்கொண்டனர். அக்டோபர் சோஷலிசப் புரட்சி வெற்றி பெற்ற பின்பு லொங்கேயிஸ்டுகள் சொல்லளவில் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்துக்கு ஆதரவு தெரிவித்துவிட்டு, உண்மையில் அதன் எதிரிகளாகவே செயல்பட்டனர். 1920 டிசம்பரில் பகிரங்க சீர்திருத்தவாதிகளுடன் சேர்ந்து கொண்டு கட்சியிலிருந்து வெளியேறி இரண்டரையாவது அகிலம் என்பதுடன் சேர்ந்து கொண்டனர்.—266.

76 **ஆன்டான்ட்** — இச்சொல் இருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் உருப்பெற்ற, ஏகாதிபத்திய அரசுகளது (பிரிட்டன், பிரான்ஸ், ருஷ்யா) கூட்டைக் குறிப்பதற்கு உபயோகிக்கப்படுகிறது. இது ஏகாதிபத்திய மும்முனைக் கூட்டுக்கு (ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, இத்தாலி) எதிராக அமைக்கப் பட்டது. ‘‘ஆன்டான்ட்’’ என்னும் பெயர் 1904ல் பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் இடையே ஏற்பட்ட "Entente Cordiale" (‘‘நேசக்

கூட்டு'') என்றழைக்கப்பட்ட ஒப்பந்தத்திலிருந்து வந்த தாகும். 1914-1918 உலக ஏகாதிபத்தியப் போரின் போது அமெரிக்காவும் ஜப்பானும் வேறு சில நாடு களும் ஆன்டான்டுடன் சேர்ந்து கொண்டன. மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்பு இந்தக் கூட்டின் பிரதான உறுப்பு நாடுகளான பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ஜப்பான் ஆகியவை சோவியத் நாட்டுக்கு எதிரான இராணுவத் தலையீட்டின் மூலவர் களாகவும், சூத்திரதாரிகளாகவும் செயல்பட்டன.—267.

77 ''சென்திரபெசாத்'' நிறுவனத்தால் லெனினது பேச்சுக் கள் இசைத் தட்டுக்களில் பதிவு செய்யப் பட்டன. 1919-1921ல் லெனினது 16 உரைகள் இவ்வாறு பதிவு செய்யப்பட்டன. இவற்றில் ''நடுத்தர விவசாயிகள் பற்றி'', ''பண்ட வடிவ வரி'' ஆகிய உரைகள் மிகவும் பிரபலமானவை.—270.

78 சோவியத் - எதிர்ப்புக் குழுக்களுக்கும் தலைமறைவாய் இயங்கிய ஒற்றர்களுக்கும் தலைமை தாங்கிய ''தேசிய மையம்'' என்ற எதிர்ப்புரட்சி அமைப்பின் மூலம் பெத் ரொகிராதைச் சரணடையச் செய்ய நடந்த சதியை லெனின் குறிப்பிடுகிறார். 1919 ஜூன் 13ஆம் நாள் இரவு பெத்ரொகிராதின் ஒரு முக்கிய தலைவாயிலாக இருந்த கிராஸ்னயா கோர்கா கோட்டையில் சதிகாரர்கள் கலகத்தைத் தூண்டி விட்டனர். கலகத்தை ஒடுக்குவதற் காகக் கடற்கரை காவற் படைகளும், பால்டிக் கப்பற் படையைச் சேர்ந்த கப்பல்களும், விமானப் படையும் தொண்டர் படைப் பிரிவுகளும் அனுப்பப் பட்டன. ஜூன் 15 இரவில் கடற்கரை காவற் படைகள் இந்தக் கோட்டையைக் கைப்பற்றின. இச்சதியினை நடத்திய அமைப்பு கண்டுபிடிக்கப்பட்டு ஒழித்துக் கட்டப்பட்டது. —288.

79 கருப்பு நூற்றுவர் — புரட்சி இயக்கத்தை நசுக்குவதற் காக ஜாரின் போலீசால் நிறுவப்பட்ட குண்டர் கும்பல். இவர்கள் புரட்சியாளர்களைக் கொலை செய்தனர், முற்போக்கு அறிவாளிகளைத் தாக்கினர், யூதர்களுக்கு எதிரான வன்முறைகளை நடத்தினர்.—288.

80 முதல் உலகப் போர் தொடங்கிய பின் மறைந்து போன இரண்டாம் அகிலத்திற்குப் பதிலாக மேற்கு ஐரோப் பிய சோஷலிஸ்டுக் கட்சிகளின் தலைவர்களால், 1919 பிப்ரவரியில் பேர்ன் நகரில் அமைக்கப்பட்ட இரண்

டாவது (பேர்ன்) அகிலத்தை லெனின் இங்கு குறிப்பிடுகிருர். பேர்ன் அகிலம், உண்மையில் சர்வதேச முதலாளித்துவத்துக்குச் சேவகம் புரிந்து வந்தது.—290.

81 சதோவா போர் — செக்கோஸ்லோவாக்கியாவின் கிராதெச்—கிராலவ் பிரதேசத்தில் சதோவா கிராமத்துக்கு அருகே (இப்போது இது ஒரு நகரம்) 1866 ஜூலை 3ல் நடைபெற்ற போரில் பிரஷ்யா முழு வெற்றி பெற்று ஆஸ்திரியாவை முறியடித்தது. ஆஸ்திரிய - பிரஷ்ய யுத்தத்தின் முடிவை நிர்ணயித்த போராகும் இது.—296.

82 பண்ணையடிமை முறை ருஷ்யாவில் 1861ல் ஒழிக்கபட்டது.—298.

83 ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) 8ஆவது காங்கிரசில் (1919 மார்ச்) ஏற்கப்பட்ட கட்சி வேலைத்திட்டம் இங்கு குறிப்பிடப்படுகிறது.—302.

84 1919 மார்ச் 16ல் மக்கள் கமிசார் அவை நிறைவேற்றிய அரசாணை, நுகர்வாளர் கூட்டுறவுச் சங்கங்களை ஒன்றிணைத்து ஒரே வினியோக அமைப்பாக்கி அதற்கு ''நுகர்வாளர் கம்யூன்'' என்று பெயர் சூட்டியது. ஆனால் இந்தப் புதிய பெயரால் குழப்பம் ஏற்பட்டு இந்த அரசாணை தவருகப் புரிந்து கொள்ளப் பட்டது. எனவே 1919 ஜூன் 30ல் அனைத்து ருஷ்ய மத்திய செயற்குழு நிறைவேற்றிய ''தொழிலாளர், விவசாயிகளது நுகர்வாளர் சங்கங்களைப் பற்றிய'' தீர்மானம் இந்த அரசாணையை அங்கீகரித்து, ஆனால் ''நுகர்வாளர் கம்யூன்'' என்ற பெயரை எல்லார்க்கும் தெரிந்த பெயரான ''நுகர்வாளர் சங்கம்'' என்று மாற்றியது.—309.

85 ருஷ்யாவின் சோவியத் சோஷலிசக் கூட்டாட்சிக் குடியரசின் அரசியல் சட்டம் 1918 ஜூலையில் சோவியத்துகளின் 5ஆவது அனைத்து ருஷ்யக் காங்கிரசால் ஏற்கப்பட்டது. இச்சட்டம் சோவியத்துகளுக்கான தேர்தல்களில் பாட்டாளிகளுக்கு முன்னுரிமைகளை வழங்கியது. அனைத்து ருஷ்ய காங்கிரசுக்குப் பிரதிநிதிகள் பின்கண்டவாறு தேர்ந்து எடுக்கப் பட்டனர்: நகர மக்கள் தொகையில் 25,000 பேருக்கு ஒரு பிரதிநிதி வீதம்; கிராம மக்கள் தொகையில் 125,000 பேருக்கு ஒரு பிரதிநிதி வீதம். சோவியத் யூனியனது சோவியத்துகளின் 8ஆவது காங்கிரஸ் (1936) வரை இத்தகைய பிரதிநிதித்துவம் அமுலில் இருந்தது. 8ஆவது காங்கிரசால் ஏற்கப்பட்ட

புதிய அரசியல் சட்டம், தேர்ந்தெடுக்கவும் தேர்ந்தெடுக்கப்படவும் மக்கள் அனைவருக்கும் சரிசமமான உரிமைகளை அளித்தது.—327.

86 கட்டுரை முடிவு பெறவில்லை.—332.

87 ருஷ்யாவின் கம்யூனிஸ்டு கட்சி (போல்ஷிவிக்குகள்) மத்திய கமிட்டியின் கீழ்த்திசை மக்களது கம்யூனிஸ்டு நிறுவனங்களது மத்தியக் குழுவால் கூட்டப்பட்ட கீழ்த்திசை மக்களது கம்யூனிஸ்டு நிறுவனங்களின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் 1919 நவம்பர் 22 முதல் டிசம்பர் 3 வரை மாஸ்கோவில் நடைபெற்றது. காங்கிரசின் முதல் நாள் அமர்வில் நடப்பு நிலைமை குறித்து லெனின் உரை நிகழ்த்தினார். கிழக்குப் பகுதியில் கட்சிக்கும் சோவியத்துகளுக்குமுள்ள பணிகளை காங்கிரஸ் வரையறுத்தது. ரு.க. கட்சி (போல்ஷிவிக்குகள்) மத்திய கமிட்டியின் கீழ்த்திசை மக்கள் கம்யூனிஸ்டு நிறுவனங்களுக்குப் புதிய மத்தியக் குழுவைத் தேர்ந்தெடுத்தது.—333.

88 அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்களின் கமிட்டி இங்கு குறிக்கப்படுகிறது. வெள்ளைப் படையினரையும், சோஷலிஸ்டு - புரட்சியாளர்களையும், மென்ஷிவிக்குகளையும் கொண்டமைந்தது இது, செக்கோஸ்லோவாக்கியப் படைப் பிரிவினரின் கலகக் கும்பல் சமாராவைக் (இப்பொழுது கூய்பிஷெவ்) கைப்பற்றியதும் 1918 ஜூன் 8ல் அமைக்கப்பட்டது. இந்த அரசாங்கம் செக்கோஸ்லோவாக்கியப் படைகளின் உதவியுடன் 1918 ஆகஸ்டில் வோல்காப் பிரதேசத்திலும், ஊரால் பிரதேசத்திலும் தனது ஆட்சியை நிறுவியது. அதே ஆண்டில் இலையுதிர் காலத்தில் செஞ்சேனை கொடுத்த அடியால் இந்த எதிர்ப்புரட்சி அரசாங்கம் இறுதி எய்தியது.—336.

89 **வெர்சேய் சமாதான ஒப்பந்தம்**—1914-1918ஆம் ஆண்டுகளது ஏகாதிபத்திய உலகப் போரை முடிவுறச் செய்த இந்த ஒப்பந்தம், வெர்சேய் நகரில் 1919 ஜூன் 28ல் அமெரிக்க ஐக்கிய நாடு, கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, ஜப்பான் ஆகியவையும் இவற்றுடன் இணைந்து போரிட்ட நாடுகளும் ஜெர்மனியுடன் செய்து கொண்டதாகும். வெற்றி பெற்ற முதலாளித்துவ நாடுகளுக்கு அனுகூலமாக முதலாளித்துவ உலகு மறுபங்கீடு செய்யப்பட்டதை உறுதி செய்வதும், சோவியத் ருஷ்யாவைத் திக்கு முக்காடச் செய்வதற்கும் உலக முழுதும்

மூண்டு வந்த புரட்சி இயக்கத்தை ஒழித்துக் கட்டு வதற்கும் ஏற்ற முறையில் நாடுகளிடையே உறவுகளை அமைத்திடுவதுமே வெர்சேய் ஒப்பந்தத்தின் நோக்கம். —340.

90 மூன்றாவது அகிலம், கம்யூனிஸ்டு அகிலம் — பல்வேறு நாடுகளின் கம்யூனிஸ்டுக் கட்சிகளை ஒன்றுபடுத்திய சர்வதேசப் புரட்சிகரப் பாட்டாளி வர்க்க நிறுவனம். 1919 முதல் 1943 வரை இது செயல்பட்டு வந்தது.

முதல் உலகப் போர் தொடங்கிய போது இரண்டாவது அகிலத்தின் சந்தர்ப்பவாதத் தலைவர்கள் சோஷலிசப் பணிகளுக்குப் புரிந்த துரோகத்தாலும், இதைத் தொடர்ந்து இரண்டாவது அகிலம் தகர்ந்து போனதாலும் தொழிலாளர் இயக்கத்தில் தோன்றிய பிளவின் காரணமாக மூன்றாவது அகிலத்தை நிறுவுவது வரலாற்று வழியில் அவசியமாயிற்று. கம்யூனிஸ்டு அகிலத்தை நிறுவுவதில் லெனின் மகத்தான பங்காற்றினார்.

கம்யூனிஸ்டு அகிலத்தின் முதலாவது காங்கிரஸ் 1919 மார்ச் 2-6ல் மாஸ்கோவில் நடைபெற்றது. அனைத்துலகப் பாட்டாளி வர்க்கத்தின் கொள்கை அறிக்கையை இந்தக் காங்கிரஸ் வரைந்து அளித்தது. மார்க்ஸ், எங்கெல்சால் வகுத்து அளிக்கப்பட்ட கம்யூனிஸ்டு கட்சி அறிக்கையில் கண்டுள்ள கருத்துகளின் வழி வந்ததே இந்த அகிலம் என்று இந்தக் கொள்கை அறிக்கை அறிவித்தது.

கம்யூனிஸ்டு அகிலம் எல்லா நாடுகளின் உழைப்பாளர்களுக்கும் இடையில் தொடர்புகளை உயிர்ப்பித்து உறுதிப்படுத்தியது; சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தில் தலைதூக்கிய சந்தர்ப்பவாதத்தின் முக மூடியைக் கிழித்தெறிவதற்கும் இளம் கம்யூனிஸ்டுக் கட்சிகளை வலிமை பெறச் செய்வதற்கும் சர்வதேசக் கம்யூனிச இயக்கத்தின் ஆதார நெறியையும் போர்த்தந்திரத்தையும் வகுத்திடுவதற்கும் துணை புரிந்தது.

கம்யூனிஸ்டு அகிலம் தொழிலாளர்களது சர்வதேச ஒற்றுமையின் தேவைகளுக்கு ஏற்ற நிறுவன வடிவமாய் அமைந்திருந்த காலகட்டம் கடந்து விட்டதென்று, கம்யூனிஸ்டு அகிலத்தின் செயற் குழு இவ்வகிலத்தைக் கலைப்பதென்று 1943 மே மாதத்தில் முடிவெடுத்தது.— 351.

## பெயர்க் குறிப்பகராதி

அலேக்ஸின்ஸ்கி, கி. அ. *(பிறப்பு: 1879) — சமூக-ஜனநாயக வாதி. 1917ல் எதிர்ப்புரட்சியாளர். 1918ல் நாட்டை விட்டு ஓடி, அதிதீவிரப் பிற்போக்குவாத முகாமில் சேர்ந்து கொண்டார்.—106.*

அவ்க்சேன்தியெவ், நி. தி. *(1878-1943) — சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களில் ஒருவர், அக் கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ - ஜனநாயகப் புரட்சிக்குப்பின் விவசாயிகள் பிரதிநிதிகளது அனைத்து ருஷ்ய சோவியத்தின் செயற்குழுத் தலைவர். முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் பொறுப்புவாய்ந்த பதவிகள் வகித்தவர். அக்டோபர் சோஷலிச புரட்சிக்குப்பின் எதிர்ப் புரட்சிக் கலகங்களுக்கு ஏற்பாடு செய்தவர்களில் ஒருவர். பின்னர் நாட்டை விட்டு வெளியேறினர்.—36.*

ஆட்லெர் [Adler], ஃபிரீட்ரிஹ் *(1879-1960)—ஆஸ்திரிய வலதுசாரி சமூக-ஜனநாயகவாதி.—316.*

இரூவ், இ. அ. *(1878-1920)—சமூக-ஜனநாயகவாதி, மென்ஷிவிக். 1917ல் மென்ஷிவிக்குகளின் மாஸ்கோ கமிட்டி உறுப்பினர், மாஸ்கோ சோவியத்தின் செயற்குழு உறுப்பினர்.—218, 219.*

எங்கெல்ஸ் [Engels], பிரெடெரிக் *(1820-1895)—விஞ்ஞானக் கம்யூனிசத்தின் மூலவர்களில் ஒருவர். சர்வதேசப் பாட்டாளி வர்க்கத்தின் தலைவரும் ஆசானும், கார்ல் மார்க்சின் நண்பரும் போராட்டத் தோழருமாவார். —7, 95, 172, 258, 263, 264, 332.*

ஒசீன்ஸ்கி, என். (ஒபலேன்ஸ்கி, வி. வி.) *(1887-1938)— 1907 முதல் போல்ஷிவிக் கட்சியின் உறுப்பினர்.*

அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்னர் சோவியத்துகளின் பணிகளிலும் கட்சி வேலையிலும் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டவர். 1918ல் ''இடதுசாரி கம்யூனிஸ்டு'' ஆனார். 1920-1921ல் கட்சி - விரோத ''ஜனநாயக மையவாதக்'' குழுவில் ஊக்கமாகப் பணியாற்றினார்; 1923ல் திரோத்ஸ்கிய எதிர்த்தரப்பில் சேர்ந்து கொண்டார்.—223.

**ஃபோஷ் [Foch], ஃபெர்டினண்டு** *(1851-1929)* — பிரெஞ்சு இராணுவத்தில் மார்ஷல். 1918-1920ல் சோவியத் ருஷ்யாவுக்கு எதிராக ஆயுதந் தாங்கிய தலையீட்டுக்கு ஏற்பாடு செய்தவர்களில் ஒருவர்.—297.

**கரேலின், வி. அ.** *(1891-1938)*—இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியை நிறுவியவர்களில் ஒருவர்; அக்கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினர். 1917 டிசம்பரில் மக்கள் கமிசார் அவையின் உறுப்பினரானார். 1918 மார்ச்சில் பிரேஸ்த் சமாதான ஒப்பந்தம் கையெழுத்தானதைத் தொடர்ந்து மக்கள் கமிசார் அவையிலிருந்து வெளியேறினார். இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் 1918 ஜூலையில் நடத்திய கலகத்துக்குத் தலைமை தாங்கியவர்களில் ஒருவர். கலகம் ஒடுக்கப்பட்ட பின்பு நாட்டை விட்டு ஓடினார்.—207, 218.

**கர்னீலவ், ல. கி.** *(1870-1918)* — ஜாரிஸ்டு ஜெனரல், முடியரசுவாதி. 1917 ஜூலை-ஆகஸ்டில் ருஷ்யாவின் தலைமைச் சேனாதிபதி. 1917 ஆகஸ்டில் நடந்த எதிர்ப்புரட்சிக் கலகத்திற்குத் தலைமை தாங்கினார். அக்கலகம் முறியடிக்கப்பட்டதும் கைதுசெய்யப்பட்டுச் சிறையிலிடப்பட்டார். சிறையிலிருந்து தப்பி தோன் பிரதேசத்துக்கு ஓடி, அங்கு எதிர்ப்புரட்சி ''தொண்டர் சேனை'' என்ற எதிர்ப்புரட்சி வெள்ளைப் படையை நிறுவி, அதன் தலைவரானார். எக்கதெரீனதார் (இப்பொழுது கிராஸ்னதார்) நகருக்கு அருகில் நடைபெற்ற போரில் கொல்லப் பட்டார்.—13, 21, 30, 88, 58, 86, 87, 101, 108, 139, 144, 152, 158, 166, 169.

**கல்ச்சாக், அ. வி.** *(1873-1920)* — ஜாரிஸ்டுக் கடற்படைத் தலைவர்; முடியரசுவாதி. 1918-1920ல் ருஷ்யாவில் எதிர்ப்புரட்சியின் முக்கிய தலைவர்களில் ஒருவர், ஆன்டான்ட் அரசுகளின் கையாள். அக்டோபர் சோஷலிசப்

புரட்சிக்குப் பின்பு அமெரிக்க ஐக்கிய நாடு, ஆன்டான்ட் நாடுகள் இவற்றின் ஏகாதிபத்தியவாதிகளது ஆதரவுடன் தன்னை ருஷ்யாவின் அதிபராகப் பிரகடனம் செய்து கொண்டு ஊரால் பிரதேசம், சைபீரியா, தொலைக் கிழக்கு ஆகியவற்றில் முதலாளிகள் நிலப்பிரபுக்களின் இராணுவ சர்வாதிகாரத்துக்குத் தலைமை தாங்கியவர். செஞ்சேனையின் தாக்குதல்களும் கொரில்லா இயக்கத்தின் வளர்ச்சியும் கல்ச்சாக் ஆதிக்கத்தை முறியடித்தன.—*272, 334, 336, 338, 343.*

**கவினுக்** [Cavaignac], **லூயி** எழேன் *(1802-1857)* — பிரெஞ்சு ஜெனரல். பிற்போக்கு அரசியல் பிரமுகர். *1848* பிப்ரவரிப் புரட்சிக்குப் பின்பு இராணுவ சர்வாதிகாரத்துக்குத் தலைமை தாங்கினுர். *1848* ஜூனில் பாரிஸ் தொழிலாளர் எழுச்சியை மிகக் கொடூரமாக நசுக்கியவர்.—*155, 202.*

**காவுத்ஸ்கி** [Kautsky], **கார்ல்** *(1854-1938)* — ஜெர்மன் சமூக-ஜனநாயகம், இரண்டாவது அகிலம் ஆகியவற்றின் தலைவர்களில் ஒருவர். ஆரம்பத்தில் மார்க்சியவாதி, பின்னர் மார்க்சியத்தை விட்டு துறந்த ஓடுகாலி. தொழிலாளர் இயக்கத்தில் சந்தர்ப்பவாதத்தின் மிகவும் ஆபத்தான போக்குகளில் ஒன்ருன மையவாதத்தின் (காவுத்ஸ்கிவாதத்தின்) சித்தாந்தவாதி.—*254-265, 293, 303, 316, 323-325.*

**கிராஸ்னேவ், பி. நி.** *(1869-1947)* — ஜாரிஸ்டு ஜெனரல். *1917* ஆகஸ்டில் நடந்த கர்னீலவ் கலகத்தில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டார், *1918 - 1919*ல் தோன் பிரதேசத்து எதிர்ப்புரட்சி கசாக்குப் படைகளுக்குத் தலைமை தாங்கினுர். *1919*ல் நாட்டை விட்டு ஓடினுர். —*126, 262.*

**களாவுசெவித்ஸ்** [Clausewitz], **கார்ல்** *(1780-1831)*—பிரஷ்ய ஜெனரல். பெயர் பெற்ற முதலாளித்துவ இராணுவத் தத்துவாதி. நெபோலியனது போர்களையும் ஏனைய போர்களையும் பற்றிய வரலாற்று நூல்கள் பலவும் எழுதியவர்.—*193.*

**கிஷ்கின், என். எம்.** *(1864-1930)* — காடேட்டுகளது கட்சியின் தலைவர்களில் ஒருவர். இடைக்கால முதலாளித்துவ அரசாங்கத்தில் அமைச்சர்.—*34, 50, 89, 117.*

**குவோஸ்தியேவ், க. அ.** *(பிறப்பு: 1883)* — மென்ஷிவிக் கட்சிக்கலைப்புவாதி. உலக ஏகாதிபத்தியப் போரின்

**கோம்பர்ஸ்** [Gompers], **சாமுவெல்** *(1850-1924)* — *அமெரிக்கத் தொழிற்சங்க இயக்கத்தின் பிரமுகர். அமெரிக்க உழைப்பாளர் சம்மேளனத்தின்* [American Federation of Labour] *நிறுவகர்களில் ஒருவர். முதலாளிகளுடன் வர்க்க ஒத்துழைப்புக் கொள்கையைக் கடைப்பிடித்தார், தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிப் போராட்டத்தை எதிர்த்தார். முதல் உலகப் போரின் போது சமூக-தேசியவெறியர்.—253.*

**கோல்ப்** [Kolb], **வில்ஹெல்ம்** *(1870-1918)* — *ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி, படுமோசமான சந்தர்ப்பவாதியும், சீர்திருத்தவாதியுமாவார்.—257.*

**சதூல்** [Sadoul], **ஜாக்** *(1881-1956)—பிரெஞ்சு இராணுவ அதிகாரி. பிரெஞ்சு இராணுவக் குழுவின் உறுப்பினராக 1917ல் ருஷ்யாவிற்கு வந்தார். அக்டோபர் சோஷலிஸ்டுப் புரட்சியால் ஈர்க்கப்பட்டு கம்யூனிஸ்டுக் கருத்துக்களின் ஆதரவாளரானார். ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்) பிரெஞ்சுப் பிரிவில் உறுப்பினரானார். பின்னர் செஞ்சேனையில் சேர்ந்தார்.—238.*

**சர்ச்சில்** [Churchill], **வின்ஸ்டன்** *(1874-1965)* — *பிரிட்டிஷ் அரசியல் தலைவர், கான்சர்வேட்டிவ். யுத்த அமைச்சராய் இருக்கையில், 1918-1921ல் சோவியத் ருஷ்யாவுக்கு எதிராய் ஆயுதமேந்திய தலையீட்டைத் தூண்டியோரில் ஒருவராகச் செயல்பட்டார்.—344.*

**சாய்கோவ்ஸ்கி, என். வி.** *(1850-1926)* — *நரோத்னிக்கு, பின்னர் சோஷலிஸ்டு - புரட்சியாளர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்னர் சோவியத்-எதிர்ப்புக் கலகங்களைத் தூண்டி விட்டவர். சோவியத் ருஷ்யாவிற்கு எதிரான ஆயுதந்தாங்கிய அன்னியத் தலையீட்டுக்கு ஆதரவு தந்தவர்.—36.*

**சாவின்கவ், ப. வி.** *(1879-1925)—சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் பிரமுகர்களில் ஒருவர். பயங்கரவாத செயல்களில் பங்கெடுத்துக் கொண்டவர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்பு எதிர்ப்புரட்சிக் கலகங்கள் பலவற்றைத் தோற்றுவித்தவர், சோவியத் குடியரசுக்கு எதிரான தலையீட்டுக்கு ஏற்பாடு செய்தவர்.—126, 158, 256.*

**செர்னிஷேவ்ஸ்கி, நி. க.** *(1828-1889)—ருஷ்யாவின் மாபெரும் புரட்சிகர ஜனநாயகவாதி, கற்பனாவாத சோஷலிஸ்டு,*

விஞ்ஞானி, எழுத்தாளர், இலக்கிய விமர்சகர். ருஷ்ய சமூக-ஜனநாயகத்தின் புகழ்வாய்ந்த முன்னோடிகளில் ஒருவர்.—*175, 241.*

செர்னொன்கோவ், பி. என். *(பிறப்பு: 1883)*—சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் உறுப்பினர்.—*313.*

செர்னோவ், வி. மி. *(1876-1952)* — சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களிலும், தத்துவவாதிகளிலும் ஒருவர். 1917 மே-ஆகஸ்டில் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் விவசாய அமைச்சராய் இருந்தார். நிலப்பிரபுக்களின் பண்ணைகளைக் கைப்பற்றிய விவசாயிகளை கொடிய முறையில் பழிவாங்கும் கொள்கையைக் கடைப்பிடித்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்பு சோவியத்-எதிர்ப்புக் கலகங்களைத் தூண்டி விட்டவர்களில் ஒருவர். 1920ல் நாட்டை விட்டு ஓடினார். வெளியிலிருந்து சோவியத்-எதிர்ப்பு நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபட்டு வந்தார்.—*21, 22, 50, 56, 96, 117, 155, 217.*

டான் (கூர்விச்), ஃபி. இ. *(1871-1947)*—மென்ஷிவிக்குகளின் தலைவர்களில் ஒருவர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்பு சோவியத் ஆட்சிக்கு எதிராகப் போராடியவர். சோவியத் அரசின் பரம வைரியாகச் செயல்பட்டதால் 1922ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் நாட்டை விட்டு வெளியேற்றப்பட்டார்.—*262.*

டிரைஃபஸ் [Dreyfus], ஆல்ஃபிரேட் *(1859-1935)*—பிரெஞ்சு இராணுவத் தலைமை அகத்தின் அதிகாரி, யூதர். அரசுத் துரோகப் பொய்க் குற்றம் சாட்டப்பட்டு 1894ல் கடுங்காவல் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டார். இதை எதிர்த்து பிரெஞ்சு நாட்டின் ஜனநாயகப் பிரிவினர் நடத்திய பரவலான இயக்கத்தின் விளைவாய் 1899ல் இவர் விடுதலை செய்யப்பட்டார். 1906ல் தம் பதவியையும் உரிமைகளையும் திரும்பப் பெற்றார்.—*262.*

டுராட்டி [Turati], ஃபிலிப்போ *(1857-1932)*—இத்தாலியத் தொழிலாளர் இயக்கத்தின் சீர்திருத்தவாதத் தலைவர். இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியை நிறுவியவர்களில் *(1892)* ஒருவர். பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ வர்க்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும் எனும் கொள்கையைக் கடைப்பிடித்தார். முதல் உலகப் போரின் போது மையவாத நிலை வகித்தார்.

அக்டோபர் சோஷலிசப் புரட்சியிடம் பகைமை பாராட்டினர். இத்தாலிய உழைப்பாளி மக்களது புரட்சிகர இயக்கத்தை எதிர்த்துப் போராடினர். —*266.*

டெப்ஸ் [Debs], யூஜின் விக்டர் *(1855-1926)*—அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தின் தலைசிறந்த பிரதிநிதிகளில் ஒருவர், சமூக-ஜனநாயகக் கட்சியை நிறுவியவர்களில் ஒருவர். உலக ஏகாதிபத்தியப் போரின் போது சர்வ தேசியவாதியாய் இருந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சியை வரவேற்றவர். ஏகாதிபத்திய-எதிர்ப்புப் பிரசாரம் புரிந்ததற்காக *1918*ல் *10* ஆண்டுச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார், ஆனல் *1921*ல் விடுதலை செய்யப்பட்டார்.—*244, 262.*

டெய்லர் [Taylor], பிரெடெரிக் வின்ஸ்லோ *(1856-1915)*— அமெரிக்கப் பொறியாளர். வேலை நேரத்திலிருந்து அதிகபட்ச பலன் கிடைப்பதற்கும், உற்பத்திச் சாதனங்களையும் உழைப்புக் கருவிகளையும் சிக்கனச் சிரமைப்பு வாய்ந்த முறையில் பயன்படுத்துவதற்குமான உழைப்பு ஒழுங்கு முறையை வகுத்தவர். முதலாளித்துவத்தில் இந்த உழைப்பு ஒழுங்கு முறை, உழைப்பாளர்களை மேலும் கடுமையான சுரண்டலுக்கு உள்ளாக்குவதற்காக உபயோகிக்கப்படுகிறது.—*146, 147, 218.*

டேவிட் [David], எடுவார்டு *(1863-1930)*—ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் வலதுசாரிப் பிரிவின் தலைவர்களில் ஒருவர்.—*257.*

தன்தோன் [Danton], ஜார்ஜ் ஜாக் *(1759-1794)*—*18*ஆம் நூற்றுண்டின் இறுதியில் நடந்த பிரெஞ்சு முதலாளித்துவப் புரட்சியின் முக்கிய தலைவர்களில் ஒருவர். —*105.*

தியாச்செங்கோ, அ. பி. *(1875-1952)* — *1917*லிருந்து போல்ஷிவிக் கட்சியின் உறுப்பினர். *1919*ல் மாஸ்கோ-கசான் இரயில் போக்குவரத்தில் மருத்துவராக இருந்தவர்.—*282, 287.*

திரோத்ஸ்கி (பிரான்ஷ்டைன்), லெ. த. *(1879-1940)* — லெனினியத்தின் கொடிய விரோதி. *1917*ல் ரு.ச.ஜ. தொ. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) ஆருவது காங்கிரசில் கட்சி உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப் பட்டார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்பு

அரசாங்கப் பதவிகள் பலவும் வகித்தார். 1923லிருந்து கட்சியின் பொதுக் கொள்கை வழியையும் சோஷலிச நிர்மாணத்திற்கான லெனினிய வேலைத்திட்டத்தையும் மூர்க்கமாய் எதிர்த்துக் கோஷ்டி கட்டிப் போராடினார். சோவியத் யூனியனில் சோஷலிசம் வெற்றிபெறுதெனப் பிரசாரம் செய்தார். திரோத்ஸ்கியமானது கட்சியினுள் செயல்படும் குட்டிமுதலாளித்துவப் போக்காகு மென்பதைக் கம்யூனிஸ்டுக் கட்சி அம்பலப்படுத்திக் கொள்கை வழியிலும் நிறுவன வழியிலும் அதனை முறியடித்தது. திரோத்ஸ்கி 1927ல் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார், சோவியத் - எதிர்ப்பு நடவடிக்கை களுக்காக 1929ல் நாட்டிலிருந்து வெளியேற்றப்பட் டார், 1932ல் அவர் சோவியத் குடியுரிமையை இழந் தார். சோவியத் அரசுக்கு எதிராகவும், கம்யூனிஸ்டுக் கட்சிக்கு எதிராகவும், சர்வதேசக் கம்யூனிச இயக்கத் திற்கு எதிராகவும் வெளிநாட்டில் இருந்தபடி அவர் தொடர்ந்து போராடி வந்தார்.—87.

துத்தவ், அ. இ. (1864-1921)—ஜாரிஸ்டு கர்னல், ஒரென்பூர்க் கசாக்குப் படைகளின் தலைவர். 1918-19ல் கசாக்கு எதிர்ப்புரட்சியின் தலைவர்களில் ஒருவர்.—126, 166, 169, 262.

துபாஸவ்—கட்சிசார்பற்ற போர்முனைப் படை அதிகாரி.—111.

துர்கேனிவ், இ. செ. (1818-1883) — மாபெரும் ருஷ்ய எழுத்தாளர்.—174.

தெனீக்கின், அ. இ. (1872-1947)—ஜாரிஸ்டு ஜெனரல். உள்நாட்டுப் போரின் போது வெள்ளைப் படைத் தலைவர்களில் ஒருவர். தெற்கு ருஷ்யாவில் சோவியத்-எதிர்ப்புப் படைகளின் சேனாதிபதி. சோவியத் படை களால் அவரது சேனை முறியடிக்கப்பட்டதும் நாட்டை விட்டு ஓடினார்.—272, 334, 339, 346.

தெஸெரெத்தேலி, இ. கி. (1882 - 1959) — மென்ஷிவிக் தலைவர்களில் ஒருவர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு பெத்ரொகிராது சோவியத்தின் செயற்குழு உறுப்பினர்; சோவியத்து களின் (முதலாவது காங்கிரஸ்) மத்தியச் செயற்குழு உறுப்பினர். 1917 மேயில் முதலாளித்துவ இடைக்கால

போக்கு முதலாளித்துவ அரசியல்வாதி ஆனர். *1913, 1915-1917, 1921-1922* ஆகிய ஆண்டுகளில் பிரெஞ்சுப் பிரதமர்.—*61.*

**பிரெஷ்கோ - பிரெஷ்கோவ்ஸ்கயா, எ. க.** *(1844-1934)* — சோஷலிஸ்டு - புரட்சியாளர் கட்சியின் அமைப்பாளர்களிலும் தலைவர்களிலும் ஒருவர். அதன் தீவிர வலது சாரிப் பிரிவைச் சேர்ந்தவர். *1917* பிப்ரவரி முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்குப் பின் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தை ஆதரித்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சோவியத் ஆட்சிக்கு எதிராகப் போராடினர்.—*49, 73, 96, 98, 101.*

**பிளெஹானவ், இ. வ.** *(1856-1918)* — ருஷ்ய, சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் முக்கிய தலைவர்களில் ஒருவர். ருஷ்யாவில் மார்க்சியத்தை முதல் முதலாகப் பிரசாரம் செய்தவர். ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் இரண்டாவது காங்கிரசுக்குப்பின் *(1903)* சந்தர்ப்பவாதத்துடன் இணக்கப் போக்கை அனுசரித்தார், பிறகு மென்ஷிவிக்குகளுடன் சேர்ந்து கொண்டார். முதல் உலகப் போரின் *(1914-18)* போது சமூக-தேசியவெறியராக இருந்தார். *1917* பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பின்னர் ருஷ்யாவிற்குத் திரும்பி வந்தார். முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்திற்கு ஆதரவு தந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சியின்பால் எதிர்மறைப் போக்கை அனுசரித்தார்.—*49, 96, 98, 101.*

**பீட்டர், முதலாம்** *(மகா பீட்டர்) (1672-1725)* — ருஷ்ய மன்னர் *(1682-1725)*, முதலாவது அனைத்து ருஷ்யப் பேரரசர்.—*207.*

**புகாரின், நி. இ.** *(1888-1938)*—பத்திரிகையாளர், பொருளியலாளர். *1906*லிருந்து ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் உறுப்பினர். அரசு, பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம், தேசங்களின் சுயநிர்ணய உரிமை போன்ற பல பிரச்சினைகளில் லெனினிய-விரோதக் கருத்து கொண்டிருந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின் கட்சியின் லெனினியக் கொள்கையை அடிக்கடி எதிர்த்தார். *1918*ல் பிரேஸ்த் சமாதான உடன்படிக்கை பற்றிய விவாதம் நடந்த போது கட்சி - விரோத ''இடதுசாரிக் கம்யூனிஸ்டுக்'' குழுவுக்குத் தலைமை தாங்கினர். கட்சியில் தொழிற்

*சங்கங்கள் பற்றிய விவாதம் நடைபெற்ற போது (1920-21), ஆரம்பத்தில் நடுநிலை வகித்தார், பிறகு லெனினிய - விரோத திரோத்ஸ்கிய கோஷ்டியில் சேர்ந்து கொண்டார். 1928 முதல் கட்சியின் வலதுசாரி எதிர்த்தரப்பினருக்குத் தலைமை தாங்கினார். 1929ல் கட்சியின் மத்தியக் கமிட்டிப் பொலிட் பியூரோவி லிருந்தும் கம்யூனிஸ்டு அகிலச் செயற்குழுவின் தலைமை குழுவிலிருந்தும் நீக்கப்பட்டார். கட்சி-விரோத நட வடிக்கைகளுக்காக 1937ல் கட்சியிலிருந்து நீக்கப்பட்டார். —210, 214, 215, 226, 227, 229.*

புரொக்கப்போவிச், செ. நி. *(1871-1955)—முதலாளித்துவப் பொருளியலாளர், அரசியல் கட்டுரையாளர். ''பொரு ளாதாரவாதத்தின்'' முக்கிய பிரதிநிதி. ருஷ்யாவில் பெர்ன்ஷ்டைனியத்தின் முதலாவது ஆதரவாளர்களில் ஒருவர். 1906ல் காடேட்டுக் கட்சியின் மத்திய கமிட் டியின் உறுப்பினரானார். 1917ல் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் உறுப்பினர். 1922ல் சோவியத்-எதிர்ப்பு நடவடிக்கைளில் ஈடுபட்டதற்காக நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டவர்.—58.*

புலீகின், அ. கி. *(1851-1919) — ஜார் கால ருஷ்யாவின் அரசியல் பிரமுகர், பெரிய நிலப்பிரபு. 1905 ஜனவரி 20 முதல் உள்துறை அமைச்சர். ஆலோசனை சபை யாகிய அரசாங்க டூமாவுக்கு ஜார் ஆணையின்படி நகல் சட்டம் தயாரிக்கும் பணிக்குத் தலைமை தாங்கினார்.— 43, 87.*

பெரிவேர்செவ், பி. என். *— வழக்கறிஞர், துருதொவிக். சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுக்கு நெருக்கமானவர். 1917 முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்குப்பின் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் சேர்ந்து கொண்டார்.—106.*

பெர்கென்ஹைம், அ. எம். *(1880-1932)—சோஷலிஸ்டு-புரட்சியாளர். கூட்டுறவுத் துறைப் பணியாளர். 1922ல் நாட்டை விட்டுச் சென்றார்.—36.*

பெர்ன்ஷ்டைன் [Bernstein], எடுவார்டு *(1850-1932)—ஜெர்மன் சமூக-ஜனநாயகம், இரண்டாவது அகிலம் ஆகிய வற்றின் படுமோசமான சந்தர்ப்பவாதப் பிரிவின் தலை வர். திருத்தல்வாதம், சீர்திருத்தவாதம் ஆகியவற்றின் தத்துவவாதி. மார்க்சியத்தின் புரட்சிகரச் சாரத்தை*

